# தமிழ் இலக்கிய வரலாறு

## பதினோராம் நூற்றாண்டு

மு. அருணாசலம்

**The PARKAR**

தமிழியல் ஆய்வு மற்றும் வெளியீட்டு நிறுவனம்

*293, அகமது வணிக வளாகம், இரண்டாவது தளம்*

*இராயப்பேட்டை நெடுஞ்சாலை*

*இராயப்பேட்டை*

*சென்னை - 14.*

தமிழ் இலக்கிய வரலாறு

பதினோராம் நூற்றாண்டு

மு. அருணாசலம்



முதற் பதிப்பு : சித்திரை 1971.
திருத்தப்பட்ட பதிப்பு : மார்கழி 2005.
பக்கம் : xxxvi + 368 = 400.

பதிப்பு :
**தி பார்க்கர்**
293, அகமது வணிக வளாகம்,
இராயப்பேட்டை நெடுஞ்சாலை,
இராயப்பேட்டை, சென்னை - 600 014.

**விலை : 295. 00**

வடிவமைப்பு :
**வே. கருணாநிதி**

அச்சிட்டோர்:
**தி பார்க்கர்**
293, அகமது வணிக வளாகம், இரண்டாவது தளம்,
இராயப்பேட்டை நெடுஞ்சாலை, சென்னை - 600 014.

# முகவுரை

திரு மு. அ. என்றே அழைக்கப்பட்ட இவ்வாசிரியர் ஒரு பன்முக எழுத்தாளர். அவருடைய வாழ்க்கையைப் பல கட்டங்களாகப் பிரிக்கலாம். அவருடைய எழுத்தும் அவ்வாறே. எனினும் 1930இல் சென்னையில் குடியேறியதில் இருந்து, தமிழ்ப் பெரியோர்களுடன் அவருக்கு இருந்த நெருக்கமான தொடர்பினால், அவரது தமிழ் ஆர்வமும் ஆராய்ச்சியும் வாழ்நாள் முழுவதும் அமைந்தன. ஐயங்களுக்கு விடைகாணவும், முடிவுகளை விவாதிக்கவும், பல நூலகங்களையும் அனேக தமிழ் அறிஞர்களையும் நாடிச் சென்றார்.

'தமிழ் இலக்கிய வரலாறு' என்பது ஒரு தனி மனிதனின் உழைப்பும், ஆழ்ந்த அறிவின் பயனும் ஆகும். இது 1969-முதல் பகுதி, பகுதியாக, 'காந்தி வித்தியாலயம்' சார்பில் வெளியிடப்பட்டது. அன்றைய தொழில் நுட்ப முறையில் பல அச்சகங்களை நாடி, பலவிதமான தாள்களில் வெளிவந்தன. இருப்பினும், பதினொரு தொகுதிகளுக்கும் வடிவம் ஒன்றே. சுமார் இருபதாண்டுகளாக இவற்றின் பிரதிகள் கிடைக்கப் பெறாமையால் தமிழ்ப் படிப்பவர்களுக்கு ஏமாற்றமளித்தது. இன்று மிக மிக முன்னேற்றம் அடைந்த அச்சுத்தொழில் முறையில் இவற்றை வடிவமைத்து மறுபதிப்புக்காக வெளியிட 'தி பார்க்கர்' பதிப்பகத்தார் முன்வந்துள்ளனர். அவர்களுக்கு நன்றி.

திருச்சிற்றம்பலம். அ. சிதம்பரநாதன்
15. 11. 2004.

# நன்றியுரை

தமிழ் இலக்கிய வரலாறு - நூற்றாண்டு முறை தொகுதிகள் அனைத்தையும் அறிஞர் மு. அருணாசலம் ஐயா அவர்கள் குறித்து வைத்திருந்த திருத்தங்களுடனும் புதிய கருத்துகளுடனும் புதிதாக வடிவமைத்து மறுபதிப்புச் செய்து வெளியிட எமது நிறுவனத்திற்கு அனுமதி அளித்த ஆசிரியரின் புதல்வர் திருமிகு அ. சிதம்பரநாதன் அவர்கள் மற்றும் அவரது சகோதரிகள் அனைவருக்கும் எமது மனப் பூர்வமான நன்றிகள்!

இம்முயற்சியில் என் துணை நின்று வழிநடத்தியவர் மனைவி இ.சா. பர்வீன் சுல்தானா அவர்கள்.

இத்தொகுதிகளின் உருவாக்கப்பணியில் என் அலுவலகப் பணியாளர்களுடன் சேர்ந்துகொண்டு என் சிந்தனைக்கு வலுச் சேர்த்து உழைத்தவர், மதுரை அமெரிக்கன் கல்லூரி, தமிழ்த்துறை விரிவுரையாளர் நண்பர் உல. பாலசுப்பிரமணியன் அவர்கள்.

உத்வேகம் கொடுத்து எம்மை உழைக்க வைத்தவர் தமிழக சட்டமன்ற சபாநாயகர் காளிமுத்து ஐயா அவர்கள். தோள்கொடுத்து உதவியவர்கள் : மதுரை வணிகவரி உதவி ஆணையர் திரு. தேவேந்திர பூபதி, நண்பர் சி. ஆறுமுகம், அமுத நிலையம் உயர்திரு வீரபாகு, மைத்துனர் காலிப் அல்தாப், மைத்துனர் முகமது தானியெல், திரு. முருகன் (முருகன் பேப்பர்ஸ்), எனது தம்பிகள் வே. உதயசூரியன், வே. சிற்றரசு, அண்ணன் கோணங்கி, நண்பர் பிரபாகர் ஜெயராஜ், எம். ஜெயசந்திரன், ஜெ. சந்திரா, நண்பர்கள் நாசர், சாகுல், ஆனந்த்.

எமது நிறுவனப் பணியாளர்கள் : ஜெ. கலைவாணி, அ. ஜெயந்தி, எஸ்.என். விஜயகுமார், ஜெ. சரவணன், ஜெயகுமார், தனசேகர், பால சுப்பிரமணியன், பஹிமா, மெஹபூப் சுபுஹானி, சைதாபானு, கயல் விழி, தேன்மொழி, பாத்திமா, சுகுணா, அனுராதா, சுமதி, தேவி, ஜாய்ஸ், நஸ்ரின், நஜீலா, சரஸ்வதி, தமிழ்ச்செல்வி, ஈஸ்வரி, திலகவதி, சித்ரா, கவிதா, வசந்தி, ராஜேஸ்வரி, ஷமா, கல்பனா, சையதுஅலி பாத்திமா, ஜோதி, நிஷா, கலா, பவானி, ராணிசித்ரா, மல்லிகா, அம்மு, ரதிதேவி - இதனால் சகலமானவருக்கும் எமது நன்றிகள்.

# பதிப்புரை

தமிழ் இலக்கிய வரலாறு - நூற்றாண்டு முறை அடிப்படையிலான தொகுதிகளின் வெளியீட்டுத் திட்டத்தில், இது 11ஆம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கிய வரலாறு. எண்ணிக்கை அடிப்படையில் இது நான்காவது நூல்.

இவ்வரலாற்றுத் தொகுதிகள் மொத்தம் 14 நூல்களாக வெளிவருகின்றன. 14வது தொகுதியாக மேற்படி நூல்களில் உள்ள வரலாற்று அட்டவணைகள் முன்னுரைகளுடன் சேர்த்துத் தொகுக்கப்பட்டுள்ளன. ஆசிரியரின் கருத்துப்படி நாம் இம் முயற்சியை மேற்கொண்டுள்ளோம்.

இப்பதிப்பு முயற்சிக்கு 1992ஆம் ஆண்டளவிலேயே என் சிந்தனையில் வித்திட்டவர் எனது ஆய்வு மேற்பார்வையாளர் முனைவர் வீ. அரசு அவர்கள்.

திருச்சிற்றம்பலத்திலுள்ள ஆசிரியரது வீட்டில் இப்பணி தொடர்பாக நாம் சில காலம் தங்கியிருந்தோம். அங்குள்ள அவரது நூலகத்தில் அவரால் எழுதி வெளியிடப்பட்ட இலக்கிய வரலாற்றுத் தொகுதிகள் அனைத்தும் பக்கத்துக்குப் பக்கம் வெள்ளைத்தாள் இடையிட்டு, கட்டமைப்புச் செய்யப்பட்ட ஒரு தொகுப்புக் காணப்பட்டது. இத்தொகுதிகளில் புதிய செய்திகளும் திருத்தங்களும் ஆசிரியரால் குறித்து வைக்கப் பட்டிருந்தன. அவற்றை நாம் ஒவ்வொரு தொகுதியிலும் சேர்த்தும் திருத்தியும் முறைப்படுத்தியுள்ளோம். இதனால் ஆசிரியரால் வெளியிடப்பட்ட முதல் பதிப்பிற்கும் எமது இத்திருத்தப்பட்ட பதிப்பிற்கும் இடையில் பக்க அளவிலும் வேறுபாடு காணப்படும்.

தன் தந்தையாரின் இவ்விலக்கியப் பணியை மீண்டும் தமிழ் மக்கள் மத்தியில் வெளிக்கொணர எமக்கு அனுமதியளித்து, தனது வீட்டில் தங்கவைத்து எம்மை ஊக்கப்படுத்திய அவர் மகனார், உணவளித்து எம்மை உபசரித்த அவர் மருமகளார் இருவரும் மிகுந்த போற்றுதலுக்கு உரியவர்கள்.

ஆசிரியர் இந்நூலின் முகவுரையில் பின்வருமாறு குறிப்பிடுகிறார்: "15ஆம் நூற்றாண்டு தொடங்கிக் காலத்தில் பின்னோக்கிச் சென்று வரலாற்றை எழுதிக் கொண்டு போகிறோம்.... 9ஆம் நூற்றாண்டு வரலாறு எழுதி முடிகிறது; அடுத்து 8, 7 எழுதி நிறைவேறும். ஆனால் ஏழுக்கும் பழமையான நூற்றாண்டு வரலாறுகள் இவ்வாறு தனித்தனி நூற்றாண்டு வரலாறாக எழுத முடியுமென்று இப்போது தோன்றவில்லை. காலத்தில் பின்நோக்கிச் செல்லச்செல்ல நூலையும் ஆசிரியரையும் குறித்த செய்திகள் கிடைப்பது அருமை. காலத்தை வரையறை செய்வது அனேகமாய் முடியாத காரியம்... ஆகவே, ஏழுக்கு முன்னுள்ள நூற்றாண்டு இலக்கிய வரலாறுகளைத் தனி நூற்றாண்டு வரலாறாக எழுத முயலாமல், சில தொகுப்புக்களாக எழுதி வெளியிட எண்ணியுள்ளோம். இவற்றை முடித்த பிறகு, காலத்தில் முன்நோக்கி வந்து, 16, 17, 18, 19, 20 ஆகிய நூற்றாண்டு வரலாறுகளை எழுதி, இவ்வரிசை நிறைவு பெறுவிக்க எண்ணியுள்ளோம். எப்படியும் இந்நூற்றாண்டு வரலாற்று வரிசை 18 புத்தகங்களுக்குக் குறையாது; இருபதும் ஆதல் கூடும்."

எனக் குறித்துள்ளார். 9ஆம் நூற்றாண்டு முற்றும் வெளிவரவில்லை. இருபது தொகுதிகள் வரை அவர் வெளியிட எண்ணியிருந்தும் அவரால் 11 தொகுதிகளே வெளியிடப்பட்டன. அவர் குறிப்பிட்ட வகையில் 7, 8ஆம் நூற்றாண்டு வரலாறுகளும் பின்னுள்ள தொகுதிகளான 17, 18, 19, 20ஆம் நூற்றாண்டு வரலாறுகளும் ஆசிரியரால் வெளியிடப்படவில்லை. எழுதப்பட்டதற்கான விபரங்களும் எமக்குக் கிடைக்கவில்லை.

ஒரு தனி மனிதன் தனது வாழ்நாளில் முப்பது ஆண்டுகளுக்கு மேலாக தமிழ் இலக்கிய வரலாற்றை எழுதுவதற்காகவே செலவிட்டிருக்கிறார். இத்தொகுதிகளை அவர் வெளியிட்ட அன்றைய காலகட்டத்தில் இருந்த அச்சமைப்பு வசதிகள் அவரது பாரிய சிந்தனைக்கு ஈடுகொடுக்காமையினால் அவரது விருப்பப்படி இத்தொகுதிகளை அவரால் வடிவமைக்க முடியவில்லை; இக்குறைபாட்டை நீக்கும் முகமாகவும் அவரது பணியைப் போற்றும் விதமாகவும் அன்னாரின் மகனார் ஒத்துழைப்பின் அடிப்படையில் எமது நிறுவனம் இவற்றை வெளியிட்டு மகிழ்கிறது.

சென்னை
25. 12. 2005.

**வே. கருணாநிதி**

## முதல் பதிப்பின் முகவுரை

செம்மனக் கிழவோர் அன்புதா என்றுன்
　　சேவடி பார்த்திருந் தலச,
எம்மனங் குடிகொண்டிருப்பதற்கு யானார்?
　　என்னுடை அடிமைதான் யாதே?
அம்மனங் குளிர்நாட் பலிக்கெழுந் தருள
　　அரிவையர் அவிழ்குழல் சுரும்பு
பொம்மென முரலும் ஆவண வீதிப்
　　பூவணம் கோயில்கொண் டாயே. — கருவூர்த்தேவர்.

### இவ்வரலாற்று நூல்கள்

*தமிழ் இலக்கிய வரலாற்றையும் புலவர் வரலாற்றையும் நூற்றாண்டு முறையில் ஆராய்ந்து கூறும் எமது முயற்சியில் இது நான்காவது புத்தகமாக இப்போது வெளிவருகின்றது. முன்னமே 15, 14, 13, நூற்றாண்டுகளுக்குரிய இலக்கிய வரலாறுகள் தனிப்புத்தகங்களாக வெளிவந்துள்ளன. 12, 10ஆம் நூற்றாண்டுகளுக்குரிய வரலாறுகள் அச்சாகி வருகின்றன. 11ஆம் நூற்றாண்டுக்குரிய இப்புத்தகம் முன்னதாக அச்சு முடிந்து விட்டமையால் முதலில் இது வெளியாகின்றது.*

*இந்நூல் வரிசையின் விளக்கத்துக்காக முன்னமே சொல்லியுள்ள செய்திகளை இங்கு மீண்டும் நினைவூட்டுகிறோம். 16, 17 ஆகிய இரு நூற்றாண்டுப் புலவர் வரலாறுகளை மட்டும், காலஞ்சென்ற சோமசுந்தர தேசிகர் 1936, 1937ஆம் ஆண்டுகளில் எழுதி வெளியிட்டிருக்கிறார். அடுத்த நூற்றாண்டுகளாகிய 18, 19 ஆகிய இரண்டும் நமக்கு நெருங்கிய காலமாகும்: இக்காலத்தில் தமிழில் புத்தகம் அச்சிடும் தொழில் வழக்கத்துக்கு வந்துவிட்டது. இக்காலப் பகுதிகளுக்குரிய செய்திகள் எளிதில் கிடைக்கக் கூடும். 20ஆம் நூற்றாண்டு நமக்கு உடன் காலமாகும். ஆகவே, இங்கு சொல்லிய காரணங்களால் 16 - 20 நூற்றாண்டுகளின்*

தமிழ் இலக்கிய வரலாற்றைக் கடைசியில் எழுதுவதாக ஒதுக்கி வைத்து, இக்காலப் பகுதிக்கும் பழமையான நூற்றாண்டாகிய 15ஆம் நூற்றாண்டு தொடங்கிக் காலத்தில் பின்னோக்கிச் சென்று வரலாற்றை எழுதிக் கொண்டு போகிறோம். 15, 14, 13, 12, 11, 10 என்ற ஆறும் நிறைவேறி, நான்கு அச்சு முடிந்து ஏனைய இரண்டும் முன்கூறியபடி அச்சாகின்றன; உடன் வெளியாகும். 9ஆம் நூற்றாண்டு வரலாறு எழுதிமுடிகிறது; அடுத்து 8, 7 எழுதி நிறைவேறும்.

ஆனால் ஏழுக்கும் பழமையான நூற்றாண்டு வரலாறுகள் இவ்வாறு தனித்தனி நூற்றாண்டு வரலாறாக எழுத முடியுமென்று இப்போது தோன்றவில்லை. காலத்தில் பின்நோக்கிச் செல்லச் செல்ல நூலையும் ஆசிரியரையும் குறித்த செய்திகள் கிடைப்பது அருமை. காலத்தை வரையறை செய்வது அனேகமாய் முடியாத காரியம். ஏனெனில், அவற்றை ஆராய்ந்த ஒவ்வோர் ஆசிரியரும் ஒவ்வோர் விதமாய் கூறியுள்ளனர்; நாம் கூறப்போவது மற்றுமொரு விதமாய் அமைந்தாலும் அமையலாம். பழமையே பெருமை என்ற கருத்தில், ஆராய்ச்சிக்குச் சம்பந்தமில்லாமலே, அபிமானம் பற்றிக் காலத்தில் பின்னோக்கிச் செல்வது ஒரு புறம். எல்லாம் வடமொழியிலிருந்து தான் வந்தது என்று கூறுவோர் கருத்துக்கள் மறுபுறம். இரண்டுக்கும் இடைப்பட்டும் அப்பாற்பட்டுமுள்ள மெய்யைக் கண்டுணர்வது பெரிதும் கடினமானது. ஆகவே, ஏழுக்கு முன்னுள்ள நூற்றாண்டு இலக்கிய வரலாறுகளைத் தனி நூற்றாண்டு வரலாறாக எழுத முயலாமல், சில தொகுப்புக்களாக எழுதி வெளியிட எண்ணியுள்ளோம். இவற்றை முடித்த பிறகு, காலத்தில் முன்நோக்கி வந்து, 16, 17, 18, 19, 20 ஆகிய நூற்றாண்டு வரலாறுகளை எழுதி, இவ்வரிசை நிறைவு பெறுவிக்க எண்ணியுள்ளோம். எப்படியும், இந்நூற்றாண்டு வரலாற்று வரிசை 18 புத்தகங்களுக்குக் குறையாது; இருபதும் ஆதல் கூடும்.

மேற்காட்டியவாறு நூற்றாண்டு வரலாற்றை முறைப்படுத்தி எழுதும்போது, இலக்கிய அனுபவம் விரிவதோடு, திட்டமான கால அறிவும் வளர்ந்து உறுதி பெறுகிறது. மற்றப்படி, சில பொருள்களைப் பற்றி மட்டும் துண்டாகப் பேசியும் ஆராய்ந்தும் குறிப்பிடும்போது, அக்குறிப்பு திட்டமாகவோ திருத்தமாகவோ அமைய முடியாது என்பதை அனுபவத்தில் கண்டு

வருகிறோம். இவ்வரலாற்று நூல்களிலேயே இதற்குச் சான்று காட்டமுடியும். பெரும்பான்மையான பெருநூல்களுக்கு இது வரை ஆராய்ச்சியாளர் திருத்தமான கால வரையறை செய்ய வில்லை. அதனாலேயே சென்ற இடமெல்லாம் இடர்ப்பட வேண்டியிருக்கிறது. பல நூல்களைக் குறித்து ஆராய்ந்த அறிஞர் கருத்தைக் கொண்டு அப்படியே எழுதிய இடங்களை இப்போது எமது ஆராய்ச்சியால் மாற்றிக்கொள்ள நேருகிறது. உதாரணம் தமிழ் நெறிவிளக்கம் 11ஆம் நூற்றாண்டு; பன்னிரு பாட்டியல் 11ஆம் நூற்றாண்டு; புராணசாகரம் என்ற இன்று கிடைக்காத நூல் 10ஆம் நூற்றாண்டு - என முன்னமே வேறிடங்களில் குறிப்பிட்ட கருத்துக்களை, திட்டமான ஆதாரங்களால் மாற்றி, இப்போது முறையே 9, 10, 9 நூற்றாண்டுகள் என்று குறிப்பிட நேர்கிறது. இவைபோல்வன இன்னும் பல. இவை ஆராய்ச்சி வளர்ச்சியால் விளைந்த செம்மை என்று கருதவேண்டும். இவ்வாறு காலம் குறிப்பிடும் போது, முரண் போலத் தோன்றுவது இயற்கை; முதலில் தெளிவாகாமல் ஆதாரம் இல்லாமல் இருந்தது, பின்னால் ஆராய்ச்சியின் விளைவாய் ஆதாரம் கண்டு தெளிவு செய்யப் பெற்றுள்ளமையால், பின் சொல்வதே திருத்தமும் உறுதியும் உடையது.

குறித்த ஒரு நூலை ஆராயத் தொடங்கிய போது விளங்கா தன பல. தொடர்ந்து அதே பொருளைச் சிந்தித்தால், பல கருத்துக் கள் தொடர்பு பெறுகின்றன. உள்ளத்தில் எந்த நேரமும் ஊறிக் கிடக்கும் வரலாறும், கதையும் கவிதையும் மூன்றும் சேர்ந்து புதியதோர் உருக்கொண்டு உள்ளத்தில் உண்மையொளியாய் விளக்கம் பெறுகிறது. இத்தன்மைக்கு எடுத்துக்காட்டாய்ப் புத்தகந்தோறும் பல பொருள்கள் உள்ளன.

### இந்நூற்றாண்டு வரலாறு

இந்த நூலும், முன்பு வெளியான மூன்று நூல்களைப்போல, நூலாசிரியர் பற்றிய இலக்கிய வழக்காறுகள், வாழ்க்கைச் சரித் திரம், நூலாராய்ச்சி, காலவரையறை என்ற பொருள்களை ஒவ் வொரு தலைப்புப் பற்றியும் கூறுவதாய் இருக்கும். வரலாறு ஆரா யப் பெறுகின்ற ஆசிரியர்களின் தொகை இங்கு இருபத்தைந் துக்கு மேல் உள்ளது. இவர்களில் வரலாறறிந்த பெயர்கள் மிகச் சிலவே - ஒன்பதாந் திருமுறையாசிரியர் சிலர். நம்பியாண்டார் நம்பி, கல்லாடர், இளம்பூரணர், யாப்பருங்கல ஆசிரியர், சில

உரைகள், ஏனையோர் பற்றி வரலாற்று நூல்களில் விளக்கம் காண்பது அரிது. மேற்குறிப்பிட்ட பெயர்கள் யாவற்றுக்கும் உரிய காலவரையறை இப்போதுதான் ஆய்ந்து தெளிவு செய்யப் பெறுகிறது. திருமுறையாசிரியர் வரலாற்றிலும், பிறவற்றிலுங் கூட, வரலாற்றை இயன்றவரை நாட்டு வரலாற்றுடன் அமைதியாக்கிச் செல்லும் முயற்சியைக் காணலாம். இளம்பூரணர், நம்பியாண்டார் நம்பி போன்றார் வரலாறுகளில், முரண்பட்ட கருத்துக்களையும் போலிச் செய்திகளையும் சீர்தூக்கிப் பார்க்கிறோம்.

முன் வரலாறுகளுள் குறிப்பிட்டது போலவே, இங்கும் இலக்கியம், இலக்கணம், உரை, சைவம், வைணவம், சைனம் என்ற முறையில் அத்தியாயப் பாகுபாடு மேற்கொள்ளப்பட்டிருக்கிறது. இலக்கியம் என்று பிறர் ஒப்புக் கொள்ளாத நூல்கள் சில பற்றி, பிற ஆசிரியர் என்ற அத்தியாயத்தில் முந்திய நூல்களில் ஆராய்ந்திருந்தோம்; அவற்றை ஒட்டியே இங்கும் ஆராய்ந்திருக்கிறோம். இவை குறித்த ஒரு விளக்கக் குறிப்பும் அட்டவணையும் எமது பத்தாம் நூற்றாண்டு இலக்கிய வரலாற்றில் வெளிவருகிறது.

உரைநடையைக் குறித்த ஒரு புது அத்தியாயம் இறுதியில் சேர்க்கப்பட்டுள்ளது. அதில் இக்காலத்து உரைகளின் நடைக்கு எடுத்துக்காட்டோடு, சாசனத்திலிருந்து எடுத்துக்காட்டுக்களும் சேர்க்கப்பட்டுள்ளன.

நூலகத்துப் பலவிடத்தும், வரலாற்றறிவுக்கும் நூலறிவுக்கும் இலக்கியவுணர்வுக்கும் அவசியமான அனேகம் பாடல்களைப் பயன் கருதிச் சேர்த்திருக்கிறோம். கால ஆராய்ச்சி என்பது ஒரு வறண்ட முயற்சி என்று பலர் நினைப்பதற்கு மாறாக, அது சுவையும் உணர்வும் ததும்பும் ஒரு சிறந்த தனியுலகு என்று காட்டும் ஒரு சிறு பலகணியாக இவற்றைக் கருதலாம். காலத்தில் பின்னோக்கிச் செல்லச்செல்ல, 'இனி நினைந்து இரக்கமாகின்று' என்று புலவர் பாடியதுபோல, கையறுநிலையும் அவலவுணர்வுமே மேலோங்குகின்றது.

கால விளக்கம் பெறாத பகுதிகள் இதனுள்ளும் பல உள்ளன. இழந்துபோன பழந்தமிழ் நூல்கள், பல துறைகளுக்குரியவை, எத்துணை அதிகம் என்பதையும், இங்கு காண்கிறோம்;

இவற்றால் மனம் பெரிதும் வருந்தாமலிருக்க முடியாது. எனினும் கிடைத்தவற்றைத் தொகுத்து இந்த அளவாவது விளக்கம் தர இயன்றமை குறித்து எமக்கு மகிழ்ச்சி.

### ஆராய்ச்சியின் தன்மை

இலக்கியம் என்பது யாது என்ற ஆராய்ச்சியில் யாம் இறங்கவில்லை. தமிழில் எழுதப்பெற்ற எல்லா நூல்களையுமே இங்கு தெரிந்து குறிப்பிட முயல்கிறோம். தெ.பொ. மீனாட்சி சுந்தரனார் ஆங்கிலத்தில் எழுதிய தமிழ் இலக்கிய வரலாற்றில் தனி இலக்கியம், நீதிநூல், அருட்பாசுர நூல்கள் என்பன மட்டுமே கொண்டுள்ளார்; இலக்கணம் நிகண்டு சமயநூல் முதலியவற்றை விலக்கிவிட்டார். யாம் முன்னமே சொன்னபடி எல்லா நூல்களையுமே பார்க்கிறோம். இந்த நூலில் ஆராயப் பெற்றுள்ள யாப்பருங்கல விருத்தியுரைக்காரர் எமது கருத்துக்கு ஆதரவு தருகிறார்: "அறம் பொருள் இன்பம் வீடு பெறுமாறு சொன்ன நூல்களிலும், அவை சார்பாக வந்த சோதிடமும் சொகினமும்*, வக்கின கிரந்தமும், மந்திரவாதமும், மருத்துவ நூலும், சாமுத்திரியமும்❖, நிலத்து நூலும், ஆயுதநூலும், பத்து வரிசையும், ஆடை நூலும், அணிகல நூலும், அருங்கல நூலும் முதலியவற்றுள் மறை பொருளுபதேசமும் வல்லாராயும் கவிப் பெருமையும் சாவவும்கெடவும் பாடுமாறும், பாடப்படுவோர்க்கு வரும் நன்மையும் தீமையும் அறியுமாறும், வல்லார்வாய்க் கேட்டுணர்ந்து கொள்க." வேறிடங்களிலும் இவர் அனேக வகை நூல்களைக் குறிப்பிடுகிறார். எனவே, வரலாற்றாராய்ச்சியில் இவையனைத்தையும் நூலென்று கொள்வதில் இழுக்கில்லை. இவையும் தமிழே, செய்தோரும் தமிழரே அல்லவா?

ஆராய்ச்சி என்பது கிடைக்கின்ற கருவிகளைக் கொண்டு உண்மை காணும் ஒரு முயற்சி. தமிழ் இலக்கியங்களை ஆராய்ந்தோர், கருவிகள் எவ்வாறு பிழைபாடு உடையன என்பதை நன்கறிவர். இந்த நிலையில் உணர்ச்சி வசப்படாமல் ஆராய்ச்சியில் ஈடுபட வேண்டியிருக்கிறது. ஆராய்ச்சியே சுவையுடையது என்பதில் ஐயமில்லை. புதிய செய்திகளைக் கண்டறியவும் பழைய செய்திகளைப் பொருத்தமற்றன எனக் காணவும் நேரும்போது

---

* சகுன சாஸ்திரம்.

❖ பிற்காலத்தில் சாமுத்திரிகா லக்ஷணம் என்ற பெயரால் அச்சிடப் பட்ட நூல் இவ்வகைக்குரியது.

இது ஒரு தனியான சுவை தருகிறது. இது அறிவுத் தெளிவினால் வருகின்ற இன்பம். ஆனால், நல்ல கவிதையைக் காணும்போதும், அதுகூறும் பொருள்களைச் சுவைக்கும் போதும், நாம் உணர்ச்சி வசப்படாமல் இருக்க முடியாது. இந்த உணர்ச்சியால் வரும் இன்பம் நம்மை வேறோர் உலகத்தில் கொண்டுபோய் நிறுத்து கிறது. அறிவினால் பெறுகின்ற இன்பத்திற்கும் உணர்ச்சி வசப் பட்டு நிற்கின்ற இன்பத்திற்கும் வேறுபாடு மிகப்பெரிது. ஆயி னும், இவ்விரு வகை இன்பத்தையும் ஓரளவு இங்கு சுட்டிச் செல்ல முயன்றிருக்கிறோம்.

பல நூற்றாண்டுகளின் இலக்கிய வரலாறுகளுக்குத் தனித் தனியாக முழு வடிவம் கொடுத்து இந்த நூல்கள் எழுதப் பெற் றுள்ளன. ஒவ்வொன்றின் முகவுரையிலும் புதிய சில கருத்துக் களைத் தெளிவுபடுத்தியிருக்கிறோம்; அந்தந்த நூல் அமைதி காரணமாகவும் சூழ்நிலையின் விளைவாகவும் சில கருத்துக்கள் அவ்வப்போது முன்வந்து நிற்கும். பலவகையான கருத்துக்களை இவையனைத்திலும் காணலாம். எனினும், ஒன்றுக்கொன்று முரணாய் இருக்காது. இவையனைத்தையும் தொகுத்து நோக்கு வது, ஆராய்ச்சியாளருக்கும், கற்போருக்கும் பயனுடையதாய் இருக்கும்.

ஒரு கருத்தை இங்கு குறிப்பிட்டு மேற்செல்வோம். பொது வாக எந்த மொழியிலுமே, இலக்கிய வரலாற்று ஆராய்ச்சி என்பது, தனிப்பட்ட ஓர் ஆராய்ச்சியாக இருத்தல் இல்லை; மக்கள் வரலாற்றை யொட்டியே இலக்கியமும் வளர்ந்து வரும் தமிழிலும் இதுவே இயல்பு. முக்கியமாக இங்கு, மக்கள் வரலாறு என்பது, நாட்டு வரலாறு, சமய வரலாறு என்ற இரண்டும் கொண்டதாகும். சமயத்தோடு சேர்ந்தே தமிழ் வளர்ந்திருக்கிறது. ஆதலால், தமிழ் இலக்கிய வரலாறு ஆராய முற்படும்போது, நாட்டின் சரித்திரமும், சமயத்தின் வரலாறும், மொழியின் வர லாறு அறிந்தால்தான் இலக்கிய வரலாறு உண்மையாகக் காண முடியும். இருப்பினும் நம் நாட்டில், இம்மூன்று பிரிவுகளும் ஒன்றையொன்று நெருங்குவதில்லை. ஒன்றில் வல்லவரானால் மற்றொன்றைத் தேடுவதில்லை. ஒன்றைக்கண்டார் அதையே கண்டார் என்னும் படியாகி விட்டது. இதனோடு, மொழியிலும் இனத்திலும் மாறுபாடான எண்ணங்கள் மனத்தில் புகுந்து உண்மை காணும் வழியை விட்டு வேறு நெறியில் ஆராய்ச்சி

யைத் திருப்பி விடுகின்றன. சமயம் அறியாதார், அறிய வேண்டு மென்று எண்ணாமல், அதுவே வேண்டாம், அது கூடாது என்று கூறத் தலைப்படுகின்றனர். சமயம் வந்ததுமே ஆராய்ச்சி பழுது படும் என்கின்றனர். சமயச்சார்பு உடையவற்றையும் வேற்றுக் கண்கொண்டு கண்டு, இல்லாததை உள்ளதாகவும் உள்ளதை இல்லாததாகவும் காணும் நிலை ஏற்படுகிறது. சீர்தூக்கி உண்மை காணும் திறன் குன்றிப்போகிறது. இதுபோலவே மொழிப் பற் றும் இனப்பற்றும், உண்மையைக் காணத் துணைபுரியாமல் ஒன்றை உயர்த்தவும் ஒன்றைத் தாழ்த்தவும் இடமளிக்கின்றன. அரசியற் சார்பைப் பற்றிச் சொல்வது அவசியமில்லை. இந்த நிலைமைகள் காரணமாகவே நம்மிடையில் அடிப்படையான வரலாறுகளில் பெருத்த கருத்து வேற்றுமை நிலவுகிறது. இங்கு இந்த நிலைகளை எடுத்துக்காட்டுவது மிகை. நூலகத்துப் பல இடங்களில் இதைச் சுட்டிக்காட்டுகிறோம். எச்சார்பையும் ஒதுக்கி, நாம் பார்க்கும் இடமெங்கும் அதுவதுவாகவே நின்று செய்திகளைக் கண்டு ஆராய முற்பட்டிருக்கிறோம்.

**விளக்கங்கள்**

ஒவ்வொரு தலைப்பிலும் ஆசிரியர் வரலாறு, நூல்கள், நூலாராய்ச்சி, காலம் என்ற பொருள்கள் சொல்லப்படும். 11ஆம் நூற்றாண்டானது முதல் இராசராச சோழனோடு தொடங்கி முதல் குலோத்துங்க சோழனோடு முடியும் அரசியற் பெருஞ் சிறப்பு பெற்றதாயினும், இதன் இலக்கிய வரலாற்றில் கால உணர்வு மிகவும் குறைவு. ஆதலால் காலவரையறையை முக்கிய மாய்க் கருதியிருக்கிறோம். அதுபோல, நூல் ஆய்வையும் மிகவும் முக்கியமாய்க் கருதியிருக்கிறோம். சில நூல்களால் விளைந்த பயன் மிகவும் பெரிது. அன்றியும், யாப்பருங்கல விருத்தி போன்ற சில உரைநூல்கள் 8-10 நூற்றாண்டுகளின் இலக்கியச் செல்வத் தைச் சிறிதே திறந்து காட்டுகின்ற ஒரு பலகணி போல் உதவு கின்றன. ஆதலால், அவை பற்றிய விளக்கமும் அவ்வுரைகள் தரும் மேற்கோள் நூல்கள் முதலியனவும் விரிவாகவே சொல் லப்பட்டிருக்கும்.

இவற்றுள் குறிப்பிடத்தக்க சில பின்வருவன: நூல் பற்றிய விளக்கம் - திருவள்ளுவமாலை, பாண்டிக்கோவை, நிகண்டு, பன்னிருபடலம், பெரும்பொருள் விளக்கம், காலம் பற்றிய விளக்கம் - சிலப்பதிகார அரும்பதவுரை, கனாநூல், நம்பி

யாண்டார் நம்பி, கருவூர்த்தேவர் வரலாறு பற்றிய விளக்கம் - ஐந்திலக்கணம், தொல்காப்பியவுரைகள், நக்கீரர், இளம்பூரணர் கருத்து விளக்கம். - ஒன்பதாந் திருமுறை, கருவூர்த் தேவர்.

பரந்த நூல் வரலாறு எழுதுகின்ற காலத்தில் புதிதான கருத்துக்கள் தொகுப்புணர்வால் தோன்றக்கூடும். பழமையாய்ப் போற்றி வந்த சில கருத்துக்கள் கைவிடப்பட்டிருக்கலாம், அல்லது மறுக்கவும் பட்டிருக்கலாம். திருவள்ளுவமாலை பற்றிய கூற்றுகளை எடுத்துக்காட்டாய்க் கூறலாம். இங்கு ஆட்சேபகரமானவை என்று பிறருக்குத் தோற்றக்கூடிய குறிப்புகள் உள்ளன. அறிஞர் இவற்றை நன்கு சிந்தித்தே ஒரு முடிவுக்கு வரவேண்டும். 9,11 திருமுறையாசிரியரைக் குறித்த விளக்கங்களும் இவை போன்றனவே. காய்தல் உவத்தல் இன்றிக் காண்போருக்கு, யாம் கூறும் கருத்துகள் நடுநிலையில் நின்றே சொல்லப் பெற்றமை நன்கு புலனாகும்.

### பிற்சேர்க்கைகள்

பிற்சேர்க்கைகளாகப் பல செய்திகளும் அட்டவணைகளும் உள்ளன. நூலகத்து இருக்கத்தக்க குறிப்புகள் சில ஆங்கு விட்டுப் போனபடியால் முதற் பிற்சேர்க்கையாகப் பின்னே சேர்க்கப் பெற்றுள்ளன. அவற்றை உரிய இடத்தில் பொருத்தி வாசித்துக் கொள்க. நூல்களும் விளக்கமில்லாமல், ஏடுகளும் கிடைக்காமல் இருந்த காலத்தில், மிகவும் முயன்று வருந்தி நூல் அச்சிட்டோரது உழைப்பைப் பிற்காலத்தோர் போற்றாமல், பெயரும் சொல்லாமல், பொருள் சேர்ப்பதொன்றையே நோக்கமாய்த் தாங்கள் எடுத்து வெளியிட்டுக் கொள்வதற்குத் தமிழ்த்தொண்டு என்று பெயர் சூட்டுவது இன்று வழக்கமாகிவிட்டது. இது தகாது என்று உணர்த்த, சிதம்பரம் பிள்ளை இளம்பூரணம் அச்சிட்டது பற்றிய குறிப்பொன்றைச் சேர்த்திருக்கிறோம். வைணவ குருபரம்பரை கூறும் நூல்களின் அட்டவணை யொன்றும், 11 - 12 நூற்றாண்டுக் கால வைணவ ஆசாரியர்களின் அட்டவணையொன்றும் சேர்த்துள்ளோம். அன்றியும், ஆங்காங்கு பொருள் விளக்கத்துக்காக ஐந்திலக்கண வளர்ச்சியைக் காட்டும் அட்டவணையும் திருவிசைப்பா ஆசிரியர் காலம் முதலியன காட்டும் அட்டவணையும், நூலினிடையில் இணைக்கப்பட்டுள்ளன. வழக்கமாயுள்ள பிற அட்டவணைகளும், அகராதிகளும் இறுதியில் உள்ளன.

## ஆதார நூல்கள்

• காலத்தில் பின்நோக்கிச் செல்லும்போது ஆதார நூல்கள் கிடைப்பது மிகவும் அரிது. இந்த நூற்றாண்டைப் பொறுத்த வரையில் பண்டைய நூல்களோ பிறர் ஆராய்ந்தவைகளோ பெரும்பயன் தரவில்லை. எனினும், ஐயரவர்கள் பதிப்புகளும், மு. இராகவையங்கார் நூல்களும், காசி மடத்துத் திருக்குறள் உரைக்கொத்தும் பயன்பட்டிருக்கின்றன. சமீபத்தில் வெளி வந்த பன்னிரு திருமுறை ஆசிரியர் வரலாறு (க. வெள்ளை வார ணனார்) இரண்டாம் பாகம் என்ற நூலும் (1969) பய்ன்பட்டது. பிற பதிப்புக்கள் முதலியவற்றையும் பிற நூல்களையும், அந்தந்த அத்தியாயத்திலும், பின் இணைப்பாக உள்ள ஆதார நூல்கள் என்ற அட்டவணையிலும் தந்திருக்கிறோம். இங்கு சொல்லி யுள்ள செய்திகள் அனைத்தையுமே, இலக்கியப் பரப்பின் மூலை முடுக்குக்களிலெல்லாம் யாமே புகுந்து பார்த்து முடிவு கண்டு எழுதுகிறோம்; பிறர் சொன்னதற்காக எதையும் சொல்லவில்லை; யாமாகக் கண்டே சொல்கிறோம்.

இந்நூற் பகுதிகளைப் படிக்கும்போது, முன்னதாக 13, 14 நூற்றாண்டு வரலாற்று நூல்களின் முகவுரையையும் முன்னுரை யையும் படித்தறிந்து கொள்வது பயனுடையதாயிருக்கும்.

## தமிழ் அச்சு

பொதுவாக பழைய பைகா எழுத்தும் அதுபோன்ற புது எழுத்துக்களும், வலப்புறம் சிறிதே சாய்ந்திருக்கும். இது கண் ணுக்கு ஓர் ஓட்டங் கொடுத்து, எவ்வளவு நேரம் படித்தாலும் சோர்வு தோன்றாதபடியும், படிக்க வசதியாயும் இருந்தது. எழுத் திலுள்ள இயல்பான மென்மை - தடிப்பு ஆகிய கோடுகள் கண் ணுக்கு இதமாயிருக்கும். இதைவிட்டு அனேகர், சிறந்த இலக் கியங்களைக்கூட, மெலிந்த எழுத்திலும் (தின் டைப்), சுருங்கிய எழுத்திலும் (கண் டென்ஸ்டு டைப்), தடித்த எழுத்திலும் (போல்டு) அச்சிட்டிருக்கிறார்கள். இந்த மூன்றும் படிக்க வசதி தராதவை. தினசரிப் பத்திரிகை எப்படி வேண்டுமானாலும் அச் சிடலாம்; இது பார்த்தபின் தூக்கி எறிய வேண்டியது. ஆனால் உண்மை இலக்கியங்கள் இப்படியல்ல: நீண்ட நாள் சோர்வு அடையாமல் பலமுறை படித்தற்குரியவை. படிப்பதற்கு அச்சு முறையும் துணைபுரிய வேண்டும்.

ஆங்கில எழுத்து செங்குத்தாயிருக்கிறதேயென்று சொல் லிப் பயனில்லை. ஒவ்வொரு மொழிக்கும் தனியான ஒரு பண்பு

உண்டு. ஒன்று மற்றதற்குப் பொருந்தாது. தமிழ் எழுத்துச் சிறிது சாய்ந்திருப்பதே அழகு, படிக்க வசதி.

புது மோகம் எங்குமே பெருகிவிட்டது. இது அவசியமா, இது நல்லதா என்று ஆராய்ந்து பார்க்கும் விவேகத்தை எல்லாத் துறையிலும் எல்லா நிலையிலுள்ள மக்களும் கைவிட்டார்கள். புதுமை என்பதற்காக ஒன்றை மக்கள் விரும்புகிறார்கள். அச்சுத் துறையிலும் இப்படியே, தமிழறிஞர், இந்தப் புது எழுத்து நல்லதா, படிப்பதற்குக் கண்ணை உறுத்தாமலிருக்குமா, சோர்வு விளைக்காமலிருக்குமா என்று நிதானித்துப் பார்ப்பதில்லை. பலருக்கு இப்படி பார்க்கத் தெரியாதென்பது உண்மை. ஆனால் பார்க்கத் தெரிந்தவர்கூட நிதானித்துப் பார்ப்பதில்லை. எப்படியோ புத்தகம் வெளிவந்தால் சரிதான் என்ற மனப்பான்மை. காலவேகம் அப்படி. பாடப்புத்தக நிர்ணயக்குழு தரும் தேதியை முன்வைத்துத்தான் அனேகர் புத்தக அச்சு வேலையை முடிக்கிறார்கள். அச்சு எப்படியிருக்க முடியும்? எழுத்தின் அமைப்பை அறிஞர் நிர்ணயிப்பதற்குப் பதிலாக, அச்சு வார்ப்பவர் தருவது எவ்வளவு மோசமாயிருந்தாலும் அதுவே போதும் என்று ஒப்புக் கொள்ளும் நிலையைத் தமிழ் படித்தவர்களே உண்டாக்கிக் கொண்டிருக்கிறார்கள்.

நல்ல நூல்கள் மட்டமான எழுத்தில் அச்சிடப் பெற்றிருத்தலைக் காண்கிறோம். திருஞானசம்பந்தர் தேவாரத் திருமுறை, படிப்பதற்கே தகுதியில்லாத ஓர் எழுத்தில் அச்சிடப் பெற்றிருக்கக் காண்கிறோம். காகிதமும் அப்படியே. அப்பர் தேவாரம் நியூஸ் பிரிண்ட் என்ற மட்டமான காகிதத்தில் அச்சிடப்பெற்று உலவியதையும் கண்டோம். இந்தநிலை சென்ற நூற்றாண்டில். அல்ல: இருபதாம் நூற்றாண்டின் இடைப்பகுதியில்! தரமில்லாத கீழ்த்தர நூல்கள் எல்லாச் சிறப்புடனும் அச்சிடப் பெறுகின்றன. ஆனால் அடுத்த மாதம் இவற்றை யாரும் தேடப் போவதில்லை. இந்த நிலைக்குப் பொருள் வசதி மட்டும் காரணமன்று அச்செழுத்தைச் சீர்தூக்கிப் பார்க்கும் நோக்கமும், திறனும் கல்வியாளரிடை மறைந்து போனமையும் ஒரு காரணம். யாரைக் குறை சொல்வது?

இந்த நிலையில், படிப்பதற்குச் சோர்வளிக்காத அழகான நல்ல எழுத்தைப் படைத்து அதில் தொடர்ந்து எமது புத்தகங்களை அச்சிட்டு வருகின்ற மாணிக்கம் அச்சகத்தாரை மிகவும்

*பாராட்டுகிறோம். ஆறு மாதங்களுக்கு முன்னமேயே அச்சு வேலை பூர்த்தியான இப்புத்தகம் வெளிவரத் தாமதமானதும் காலத்தின் கோளாறேயாகும்.*

*முந்திய பதிப்பாசிரியர்களுக்கும், ஆராய்ச்சியாளருக்கும் எமது நன்றி உரியது. இப்புத்தகம் எழுதிவந்த காலத்தில் எமது மாணாக்கர் பலர், சொல்வதெழுதியும் பிரதி செய்தும் உதவி யிருக்கிறார்கள். அவர்களுக்கு இறைவன் எல்லா நலங்களும் அருள்வானாக!*

*இலக்கிய வரலாற்றைக் காலப் பகுதிகளாகப் பிரித்து எழுதக்கூடும் என்று சில அன்பர் யோசனை சொல்வதுண்டு. சங்க காலம், காவிய காலம், அருட்பாசுர காலம், சோழர் ஆட்சிக் காலம், சமய நூற்காலம், பிரபந்த காலம், தற்காலம் என்ற தலைப்புக்களை எளிதாக யாரும் சொல்வார்கள். இவ்வாறு எழுதுவது குறித்த ஓர் இலக்கியப் பகுதி எவ்விதம் தொடங்கி விரிந்து வளர்ந்தது என்பதை நன்கு எடுத்துக்காட்டுவதாய் இருக்கும் என்பது உண்மை. ஆனால் எமது நோக்கம் அதுவன்று. தமிழ் இலக்கியப் பரப்பில் எண்ணற்ற நூல்களின் காலம் இதுவரை நன்கு வரையறை செய்யப் பெறவில்லை. இவ்வரையறை இருந்தால்தான் சொல்லாராய்ச்சியும், மொழி ஆராய்ச்சியும், இலக்கிய ஆராய்ச்சியும் உண்மையான பொருளுடையனவாக அமைதல் கூடும். எமது நோக்கம் இத்தகைய காலவரையறை அமைத்துத் தருவதாகும். யாம் அமைக்கின்ற அடிப்படையில் பிறவகைக் கட்டிடங்களான பலதுறை ஆராய்ச்சிகள் எழுதல் கூடும். இதுவே யாம் நூற்றாண்டு முறையில் இலக்கிய வரலாற்றை எழுதுவதற்குக் காரணமாகும்.*

*எம்மை இத்துறையில் ஈடுபடுத்தி நடத்தி வருகின்ற இறைவன் திருவருளை எந்த நேரமும் சிந்திக்கின்றோம்.*

அத்தேவர் தேவர் அவர் தேவர் என்றிங்ஙன்
பொய்த்தேவு பேசிப் புலம்புகின்ற பூதலத்தே
பத்தேதும் இல்லாதென் பற்றற நான் பற்றி நின்ற
மெய்த்தேவர் தேவுக்கே சென்றூதாய் கோத்தும்பீ. – திருவாசகம்

*திருச்சிற்றம்பலம்* மு. அருணாசலம்
*14 - 4 - 71.*

# பொருளடக்கம்

ooo

# இவ்வரலாற்றில் ஆராய்ந்த நூல்கள்



○○○

# அட்டவணை

இந்நூலகத்தும் இறுதியிலும் பல்வேறு அட்டவணைகள் பயன்கருதி அமைத்துக் காட்டப்பட்டுள்ளன. அவற்றின் பட்டியலைக் கீழே காண்க.



○○○

# முன்னுரை

## அரசியல் – சோழர் பேரரசு

பதினொராம் நூற்றாண்டானது தமிழ்நாட்டின் வரலாற்றில் ஒரு சிறந்த பொற்காலம் ஆகும். பல்லவரும் பாண்டியரும் ஒடுங்கி மறைய, சோழர் பேரரசு கால்கொள்ளத் தொடங்கி வளரும் நிலையில் இந்நூற்றாண்டு ஆரம்பிக்கிறது. பேரரசனாகிய முதலாம் இராசராசன் கி.பி 985ஆம் ஆண்டில் பட்டம் ஏற்று 1014 வரையில் அரசாண்டிருந்தான். பிறகு அவனுடைய புதல்வன், அவனுடைய புதல்வர்கள் என்று ஆட்சி வளர்ந்துகொண்டே போய், சோழ பரம்பரையில் ஆண் சந்ததி இல்லாமல், பின்னர் இராசேந்திரனுடைய பெண் வயிற்றுப் பேரனும் கீழைச்சாளுக்கிய மரபில் அரசுரிமை பெற்ற அரசகுமாரனுமான குலோத்துங்கனது சிறப்பான ஆட்சியில் வந்து இந்நூற்றாண்டு முடிகிறது. இக்காலத்தில் ஆட்சி செய்த அரசர் அனைவரும் மிகச் சிறந்த புயபல பராக்கிரமம் பெற்றவர்கள்.* சாசனங்களால் தெரிய வருகின்ற இவர்களுடைய போர்களையும் வெற்றிகளையும், வீரச் செயல்களையும் ஆட்சித் திறனையும் சிவாலயத் திருப்பணிகளையும் அறியும்போது தமிழராய்ப் பிறந்த எவரும் தலைநிமிர்ந்து நிற்கச் செய்யும்.

இராசராச சோழன் தஞ்சைப் பெருங்கோயிலையும், அவன் மகன் இராசேந்திரன் அதற்குச் சமமான கங்கைகொண்ட சோழ புரக் கோயிலையும் கட்டினர். இராசாதிராசன் காலத்தில் எந்த நேரமும் போர்கள் மலிந்திருந்தன. இராசாதிராசன் போர்க் களத்திலேயே உயிர்துறந்து ‘ஆனைமேல் துஞ்சினதேவர்’ என்று பெயர் பெற்றான். இவன் துஞ்சின அதே போர்க்களத்தில் அதே நேரத்தில் இவன் தம்பியாகிய இரண்டாம் இராசேந்திரன், படைத்

---

* விசயாலயன் முதல், முதல் குலோத்துங்கன் வரை அரசு புரிந்த சோழர் பரம்பரையைப் பிற்சேர்க்கையில் காணலாம்.

தலைமையையேற்று, அப்போரில் வெற்றிபெறச் செய்த பெரும் வீரத்தை எவ்வளவு போற்றினாலும் தகும். இவ்வீர நிகழ்ச்சிகள் உலக சரித்திரத்திலும் காண்பதற்கரியன. அவன் தம்பி வீரராசேந்திரன் பெயருக்கேற்ப பெருவீரனாகி விளங்கியதோடு, தமிழ் வளர்ச்சிக்கு ஆக்கமும் தந்தவன்.

வீரராசேந்திரனுக்குப் பின் அவன் மகனான அதிராசேந்திரன் சில மாதங்களே ஆட்சி புரிந்தான். அவனுக்குப் பிறகு இந்தப் பரம்பரையில் ஆண் சந்ததி இல்லாமையால், வீரராசேந்திரனுடைய புதல்வி வழியாக சாளுக்கிய மரபில் வந்த முதற் குலோத்துங்கன் பட்டம் புனைந்து, 1070 முதல் 1120 முடிய, மிக நீண்ட காலம் அரசாண்டான். இவனே கலிங்கப்போர் வென்று கலிங்கத்துப்பரணி கொண்டவன். இவ்வாறு முதல் இராசராசன் தொடங்கி முதல் குலோத்துங்கன் வரையில் ஆட்சிபுரிந்த சோழ மன்னர்களுடைய காலப்பகுதியே நாம் இங்கு கருதும் பதினொராம் நூற்றாண்டு ஆகும். சிறப்பாக இவ் ஆட்சிக் காலத்தில் சொல்லத் தகுந்தது, தமிழ்நாடு எங்கும் சோழமன்னர் பெருங் கற்கோயில்கள் கட்டிவைத்த அருஞ்செயலும் சைவ இலக்கியத்தை வளர்த்த பெருஞ்செயலும் ஆகும்.

### சைவ இலக்கிய வளர்ச்சி

பொது நோக்காக இந்த நூற்றாண்டைப் பார்க்கும்போது, தனித்துக் குறிப்பிடத்தகுந்தது, சைவ சமயத்துக்கு விளைந்த ஏற்றமாகும். இராசராச மன்னன் காலத்துக்கு முன் தமிழ்நாட்டில் பல இடங்களில் பல கோயில்களில் தேவாரப் பதிகங்கள் பாடிவரப்பெற்றன என்பதைப் பல்லவர் சோழர் கல்வெட்டுகளால் அறிகிறோம். தேவார அடங்கன் முறையில் காணப்படாமல் கல்வெட்டில் மட்டும் காணப்பட்டுக் கிடைத்துள்ள திருவிடைவாய்த் தேவாரம் இந்த நிலைமைக்குச் சான்று பகரும். ஆனால், ஆங்காங்கு தனிப் பதிகங்கள் இவ்வாறு பாடப்பட்டு வந்தனவேயன்றி, தேவாரத் தொகுப்பு முழுமையும் கொண்ட அடங்கன் முறை எங்கும் வழங்கவில்லை. நம்பியாண்டார் நம்பியின் உதவியினால் தேவாரப் பதிகங்கள் இருக்குமிடம் கண்டுபிடித்து வெளிபடுத்திச் செப்பேட்டில் எழுதித் தமிழ்நாடு எங்கும் பரவச் செய்த பெருமை இராசராசனுக்கு உரியது. நம்பியாண்டார் நம்பியைக் கொண்டு பல பிரபந்தங்களைப் பாடுவித்தான்.

கருவூர்த்தேவர் இவன் காலத்தில் வாழ்ந்து, திரைலோக்கிய சுந்தரம், தஞ்சை இராசராசேச்சுரம், பின்னர் கங்கை கொண்ட சோழேச்சுரம் ஆகிய கோயில்கள் கட்டிக் குடமுழுக்கு நிகழ்ந்த காலத்தில் அக்கோயில்களுக்கும், வேறு பல கோயில்களுக்கும் சென்று திருவிசைப்பாப் பாடினார். இவ்வாறு பாடுவித்தும், பதினொரு திருமுறைகளைத் தொகுப்பித்தும், சைவத்தை வளர்த்த பெருமை இம்மன்னனுக்கு உரியது.

இனி, இந்த நூற்றாண்டில் விளைந்த இலக்கிய வளத்தைக் காணப் புகுவோமானால், தனி இலக்கியமாக நாம் காண்பதும் கல்லாடம் ஒன்றே ஆகும். இது மதுரை சோமசுந்தரக் கடவுளுடைய திருவிளையாடல்களைக் குறிப்பிட்டு அகவற்பாவில் அகத்துறைப் பாடல்களாக அமைந்த சிறு நூல். இந்நூலைத் தவிர வேறு எந்தத் தனி இலக்கியமும் இந்த நூற்றாண்டில் எழவில்லை. சங்க காலத்துக்குப் பின் பிற்காலப் புலவர் ஒருவர் இந்த நூற்றாண்டில் வாழ்ந்து, திருவள்ளுவமாலை என்ற பெயரால் பல பாடல்களைப் பாடி, இது ஒரு பழந்தொகுப்பு என்று தோற்றும்படி மிகத் திறமையாகச் செய்திருக்கிறார்.

இக்காலப் பகுதியில் புராணம் என்று எந்த இலக்கியமும் தோன்றியதாக வரலாறு இல்லை.

### இலக்கண வளர்ச்சி

இலக்கண வளர்ச்சித்துறையில் இந்நூற்றாண்டு சிறப்பான இடம் பெறுகிறது. தொல்காப்பியத்திற்குப்பின், ஐந்திலக்கணங்களும் தனித்தனியே எழுத வேண்டும் என்ற ஒரு முயற்சி தொடர்ந்து வளர்ந்து வந்திருக்கிறது. ஒன்பதாம் நூற்றாண்டில் தமிழ்நெறி விளக்கம் என்ற அகப்பொருள் இலக்கணம் எழுந்தது. பத்தாம் நூற்றாண்டில் இறையனார் களவியல் உரை எழுதி வைக்கப்பட்டது. தண்டியலங்காரத்திற்கும் முற்பட்டதாகிய அணி இயல் என்ற ஒரு பழைய அணி இலக்கணமும் பதினொராம் நூற்றாண்டுக்கு முன்பே (ஒன்பதாம் நூற்றாண்டில்) தோன்றியது போலும். இந்த நூற்றாண்டில் அமிதசாகரர் என்ற ஒரு சைனப் புலவர் தோன்றி யாப்பருங்கலம், யாப்பருங்கலக்காரிகை என்ற இரு யாப்பிலக்கண நூல்கள் எழுதினார். அவருடைய மாணாக்கர் இருவர் இவ்விரு நூல்களுக்கும் தனித்

தனியாக உரை எழுதினார்கள். இங்ஙனமாக எழுத்து, சொல், பொருள் என்ற மூன்று பிரிவுகளாக இருந்த தொல்காப்பிய இலக்கணமானது, இக்காலப் பகுதியில் தனியான யாப்பு, அணி என்ற இரு பகுதிகளையும் பெற்று ஐந்திலக்கண நிறைவு பெறுகிறது. (யாப்பதிகாரத்தைக் களவியலுரை குறிப்பிட்ட போதிலுங்கூட, முந்திய தனி யாப்பிலக்கண நூல்கள் கிடைக்க வில்லை.)

இந்த நிலையில் எழுந்தது வீரசோழியம் என்ற இலக்கண நூல் ஆகும். இன்றும் இந்நூல் இருக்கிறது. ஆனால் அன்று ஆட்சியில் இல்லை போலும். அதனால் தான் கந்தபுராண அரங்கேற்றக் காலத்தில் முருகக் கடவுளே ஒரு புலவன் வடிவத்தோடு இந்த நூலைக் கொண்டுவந்து காட்டினான் என்ற கதையும் எழுந்தது. எனினும், இந்த நூலுக்கு மூன்று சிறப்புக்கள் உரியன. ஒன்று இது ஐந்திலக்கணமும் கூறுகிறது என்பது. முன்சொல்லியவாறு அமிதசாகரர் நூலோடு ஐந்திலக்கண நிறைவு அமைந்தபின், இந்த நூல் தானே ஐந்து இலக்கணங்களும் கொண்டு இயன்றிருக்கின்றது. இரண்டாவது, வடமொழி மரபை ஒட்டித் தமிழ் இலக்கணம் சொல்லுகிறது. மூன்றாவது, இதன் ஆசிரியர் ஒரு புத்த சமயத்தார். புத்த சமயத்தார் செய்த நூல்கள் தமிழில் இரண்டே உள்ளன; ஒன்று மணிமேகலை; இரண்டாவது இந்த வீரசோழியம். வேறெந்த நூலும் இல்லை.

**உரைகள்**

சிறப்பான இரண்டு இலக்கிய உரைகள் இக்காலத்தே எழுந்தன. சைவர் ஒருவர் சிலப்பதிகாரத்துக்கு எழுதி வைத்த குறிப்புக்களும் விளக்கங்களும், சிலப்பதிகார அரும்பதவுரை என்ற பெயரால் இன்று வழங்குகின்றன. இக்காலத்துக்கு முன்னதாகவே முத்தமிழ் என்ற தமிழ்ப் பிரிவுகள் வழக்கு ஒழிந்தன என்று இவர் குறிப்புக்களால் அறிகிறோம். இவரது அரும்பதவுரையே அடியார்க்கு நல்லாருக்குக் கண் கொடுத்தது. திருக்குறளை விளக்கி உரைத்து மக்களிடையே பரப்பும் முயற்சி முந்திய நூற்றாண்டில் மணக்குடவர் உரையுடன் தொடங்கியிருக்கிறது. அவரைத் தொடர்ந்து இந்த நூற்றாண்டில் பரிப்பெருமாள் தாமும் ஒரு விளக்க உரையை எழுதினார்.

முற்கூறிய திருவள்ளுவமாலையும் கூட, இவ்விளக்க முயற்சியின் ஓர் அங்கமாகவே கருதவேண்டும்.

உரைகளைப் பற்றிப் பேசும்போது, இளம்பூரணரைத் தனியே குறிப்பிட வேண்டும். தொல்காப்பியத்துள் புகுத்து மிகப் பல வான மாணிக்கங்களையும், முத்துக்களையும் தமிழருக்குக் கொண்டுவந்து காட்டிய பெருமை இவருக்கு உரியது. பின்னால் பலர் இவர் உரையைப் பயின்று இவர் கருத்தை ஒட்டியும், மறுத்தும், விளக்கியும் எழுதிய போதிலும் கூட, அரும்பாடு பட்டுச் செய்த முதல் உரை என்ற சிறப்பு இவருக்கே உரியது. வழியும் நெறியும் மறைந்துபோன காலத்தில் செப்பமான பாதை போட்டுத் தந்தவர் இவர். இவர் உரை வகுத்துத் தந்தபிறகு மேலும் செப்பம் செய்வது யாருக்கும் எளிது.

தமிழிலக்கியப் பரப்பினுள், சிலர் எழுதிய உரைகளைப் படிக்கும்போது, பல சமயம் படிப்பதை நிறுத்திவிட்டு, சிந்தனையில் ஆழ்கிறோம். காரணம், அவ்வுரைகள் நம் கண்முன் கொண்டுவந்து நிறுத்தும் நாடு, மொழி, இலக்கியம், ஒழுக்கம், மக்கள் வாழ்வு, கலைகள் ஆகிய பொருள்களின் சிறப்பு. 'இப்படியா நம் பண்டைத் தமிழ்நாடு இருந்தது!' என்று எண்ணி வியக்கிறோம். அவ்வளவும் நாம் அறிய முடியவில்லையே என்று அயர்ந்தும் போகிறோம். அத்தகைய உரையாசிரியர்கள் சிறப்பாக மூவர். காலமுறைப்படி அவர்கள், யாப்பருங்கல விருத்தியுரை செய்த பெயர் தெரியாத உரைகாரர், சிலப்பதிகார உரைசெய்த அடியார்க்கு நல்லார், பல இலக்கியங்களுக்கும் தொல்காப்பியம் முழுமைக்கும் உரைசெய்த நச்சினார்க்கினியர் என்போராவர். இவர்களுள், அடியார்க்கு நல்லார் உரை முழுமையும் கிடைக்கவில்லை. ஏனையோர் உரைகள் ஓரளவு முழுமையும் கிடைக்கின்றன.* யாப்பருங்கல விருத்தியுரை, நாம் ஆராயும் காலப்பகுதிக்கு உரியது. இது யாப்பிலக்கணம் ஒன்றே பேசுவதாயினும், கடல்போல் பரந்த நூல் பரப்பை நம் கண் முன்னே காட்டுகிறது. பல சரிதச் செய்திகள், சமயப் பொருள்கள், வாழ்க்கை முறைகள், இலக்கியங்கள் - இதனால் விளக்கமாகின்றன. ஆனால் இவை யாவுமே நமக்கு இன்று கிடைக்கவில்லை என்று எண்ணும்போது நம் மனம் ஏங்காமலிருக்க வியலாது.

---

* நச்சினார்க்கினியர் குறுந்தொகையுரையும், தொல்காப்பியப் பொருளதிகாரம் மூன்று இயல்களுக்கு உரையும் கிடைக்கவில்லை

### வைணவர் நிலை

இக்காலம் வைணவத்தில் ஒரு புது மலர்ச்சி தோன்றுகின்ற காலம். ஆழ்வார் காலத்து அருட்பாசுரங்கள், நாதமுனிகள் ஆள வந்தார் காலங்களில் அரும்பாகவும் போதாகவும் இருந்து, இக் காலத்தே இராமானுசர் என்ற மலராக விரிகின்றன. 1017இல் பிறந்தார் என்று கருதப்படுகின்ற இராமானுசர் இந்த நூற் றாண்டு முழுமையிலும் வளர்ந்து, கல்வியாலும், அப்பியாசத் தாலும், பக்திப் பரவசத்தாலும் தம்மைத் தகுதியாக்கிக் கொள் கிறார். அடுத்த நூற்றாண்டிலும் 37 ஆண்டுகள் அவர் வாழ்ந்து சமயம் வளரவும் சமய நூல்கள் எழவும் ஆதாரமாய் இருக் கிறார். இந்த நூற்றாண்டில் வளர்ச்சி ஏற்பட்டதேயன்றி, நூல் கள் எழவில்லை.

வைணவர்கள் இக்காலத்தில் செய்த நூல்கள் எல்லாம் வடமொழியில் இருந்தனவேயன்றித் தமிழில் எதுவுமில்லை. இதற்கு ஒரு காரணம், வடமொழி ஒன்று தான் தங்களுக்கு உய்வு தந்து பரமபதத்தில் கொண்டுபோய்ச் சேர்க்கும் என்று அக்காலத்துப் பிராமண சமயத் தலைவர்கள் கொண்டிருந்த எண்ணம். வைணவர்கள், அடியாருக்குள் சாதி வேற்றுமையை இல்லை என்று சொல்லிய போதிலும்கூட, தங்கள் ஆசாரிய பரம்பரையில் சாதி வேற்றுமையையே கடைப்பிடித்து வந்தார் கள். அவர்கள், திருக்கச்சி நம்பி, பிள்ளை உறங்கா வில்லிதாசர், விளாஞ்சோலைப் பிள்ளை முதலிய வைணவப் பெரியார்கள் பிராமணர் அல்லாதவர், பிந்திய இருவர் தீண்டாதார் என்றும் சொல்லுவர். ஆனால், இவர்கள் பெயர் ஆசாரியர் பரம்பரை யில் இடம்பெறவில்லை என்பது அறியத்தக்கது. இந்தப் பிரா மண ஆதிக்கத்துக்கும் வடமொழி மோகத்துக்கும் வித்து, ஆதி சங்கரருடைய பிரசாரம். இராமானுசர் போன்றார் இவ்வாதிக் கத்தை வீழ்த்தச் சிறிதளவு முயன்றனர்; வெற்றி பெறவில்லை. இதை வேறு இடத்தில் விளக்கியிருக்கிறோம்.

### சைனர் நிலை

பதினொராம் நூற்றாண்டில் சைனர் நிலை குறித்துப் பொது வாக ஒரு கருத்துச் சொல்லத் தகுந்தது. இக்காலத்தும் இதற்கு முந்திய நூற்றாண்டிலும் சைனர் பெரும் புலவர்களாய் வாழ்ந்து, பல இலக்கண நூல்கள் செய்தனர் என்று அறிகிறோம். இந்நூற்

றாண்டில் அமிதசாகரர் யாப்பருங்கலமும் யாப்பருங்கலக் காரிகையும் செய்தார். இளம்பூரணர் தொல்காப்பிய முழுமைக்கும் சிறப்பான முதல் உரையை எழுதினார்.

பெரும்பான்மையான சைன ஆசிரியர்கள் இலக்கண நூல்களைச் செய்திருப்பதை நாம் ஊன்றி நோக்கும்போது, ஒரு கருத்தைக் கூறாமல் இருக்க முடியவில்லை. இந்நூல்கள் செய்த சைனப்புலவர் துறவியராயினும் இல்லறத்தாராயினும், ஒதுங்கிய தனித்த வாழ்க்கை வாழ்ந்து வந்தார்கள். யாப்பருங்கல ஆசிரியர் வாழ்ந்த காலத்தில் தமிழ்நாட்டில் ஒரு பெரும் வீரசக்தி ஆரவாரித்தெழுந்தது. எட்டுத்திசையும் முட்டித் ததும்பிக் கோலாகல வெற்றியோடு வளர்ந்து கொண்டிருந்தது. ஒன்பதாம் நூற்றாண்டிலிருந்து இச்சக்தி வளர்ந்தோங்கிப் பிறவற்றை எல்லாம் முறியடித்துத் தமிழ் மக்களுக்கு முன் என்றும் கண்டிராத சிறப்புடைய ஒரு பொற்காலத்தை உருவாக்கித் தந்தது. இச்சக்தியையே சோழர் பேரரசு என்கிறோம், இவ்வரசில் சைவசமயம் உன்னதமான நிலைக்கு வந்து நாளுக்கு நாள் வளர்ந்து ஓங்கிற்று. சைன சமயப் பெரியராயிருந்தோர் பிற உலக வாழ்க்கையிலிருந்து தங்களை அடியோடு ஒதுக்கிக் கொண்டு, தங்கள் பள்ளிகளுள் புகுந்து அடங்கிவிட்டார்கள்; உலகத்தையே மறந்துவிட்டார்கள் என்று சொல்லவேண்டும். இல்லையானால் பதினோராம் நூற்றாண்டில் பெருஞ்சிறப்புடன் தஞ்சையிலும் கங்கை கொண்ட சோழபுரத்திலும், இராசராசமன்னனும் அவன் மகன் இராசேந்திரனும் நிலைபெறுத்திய சோழர் ஆட்சியைப் பிரதிபலிக்கும் குறிப்போ பாடலோ ஒருவரி கூட இவர்கள் நூல்களிலும் உரைகளிலும் காணப்படாததற்குக் காரணம் சொல்ல முடியாது. சைனம் ஒடுங்கிய உடனே, இவ்வாசிரியர்கள் அனைவரும் தாங்களாகவே உலகத்தைப் பார்க்க விரும்பாத காந்தாரி போல் ஆகிவிட்டார்கள். நாட்டின் பெருக்கத்தை - சைவசமயப் பெருக்கத்தையும் அரசியல் வாழ்வில் பெருக்கத்தையும் - கண்கொண்டு காண விரும்பாதபடி கண்ணைக் கட்டிக்கொண்டு, இவர்கள் தங்கள் சொந்த வேலையாகிய இலக்கண வரம்பு கோலுதல் என்ற ஒன்றையே மேற்கொண்டார்கள் போலும். இலக்கியத்தினுள் இவர்கள் பிரவேசிக்கவில்லை. பிரவேசித்தால் சைவர் தங்களைப் பாதிக்கும் என்ற அச்சம் போலும்! ஆகவே இந்த நூற்றாண்டில் சைன இலக்கியம் என்று தனியாகச் சொல்லுவதற்கு எதுவும் காணப்படவில்லை.

எனினும், ஒரு நிலைமையை குறிப்பிட்டாக வேண்டும். சைனர் தங்கள் சமய தத்துவங்களை விளக்கும் நூல்கள் சில இக் காலப் பகுதியில் செய்திருக்கக்கூடுமென்று தெரிகிறது. 10ஆம் நூற்றாண்டில் எழுந்த நீலகேசிக்கு 15ஆம் நூற்றாண்டில் விருத்தி யுரை எழுதிய சமய திவாகர வாமன முனிவர் பல தத்துவ சூத் திரங்களை மேற்கோளாகக் காட்டுகிறார். (நீலகேசி உரைப் பதிப்பு. சக்கரவர்த்தி நயினார், பக்கம் 46 - 47.)

பெயரினும் பிழம்பினும் பொருளினுங் குறிப்பினும்
செப்புவ தொன்றினை வைப்பின தியல்பே.

என்ற சூத்திரத்தைத் தந்து, 'இது தத்துவார்த்த சூத்திரம் 1ஆம் அத்தியாயம் 5ஆம் சூத்திர மொழிபெயர்ப்பு; தமிழ்நூல் விளங்க வில்லை' என்று நயினார் குறிப்பிட்டுள்ளார். அவ்வட நூலுக் குத் தமிழ் மொழிபெயர்ப்பாக இக்காலத்தில் ஒரு தத்துவ நூல் தமிழில் செய்யப்பட்டிருந்தது போலும். பிற்காலத்தில் தமிழ் நூல் இல்லாது போய்விட்டது. நீலகேசி உரையில் இதுபோன்ற பின்னும் பல சூத்திரங்கள் காணப்படுகின்றன. ஒருகால் இத் தகைய சமய தத்துவ நூல்கள் 11ஆம் நூற்றாண்டில் செய்யப் பெற்றன போலும். 12ஆம் நூற்றாண்டில் அருங்கலச்செப்பும், 13இல் அறநெறிச்சாரமும் 14இல் சீவசம்போதனையும் பிற் காலத்தில் பின்னும் பல நூல்களும் கிடைக்கின்றன. 11இல் எந்த நூலும் கிடைக்கவில்லை. பெயரும் தெரியவில்லை.

'தொல்காப்பியர் காமத்துப் பயனின்மையை உய்த்து உணர வைத்தார்' என்று சொல்லுகின்ற சிறந்த உரையாசிரியரான இளம் பூரணரே 'களவென்றோதப்படுகின்ற ஒழுக்கம் அறம் பயவாத புறநெறியன்று; வேதவிதியாகிய தந்திரம் என விகற்பமாகிய நெறி கூறியவாறு' என்று கூறுவது கருதத்தக்கது. வைதிகம் என்றத னாலேயே வெறுக்கவேண்டும் என்று கருதி எழுதுபவர்கள் சைனரான இவரது கூற்றை நன்கு சிந்திக்க வேண்டும்.

### சிற்றிலக்கியம்

இந்த நூற்றாண்டில் இராசேந்திர சோழனுக்குப் பின் போர் களும் வெற்றிகளும் மலிந்து இருந்தன. இக்காலத்தில் சிறப்பு மிக்க இரு பரணிப் பிரபந்தங்கள் எழுந்தனவென்று இலக்கிய வாயிலாக அறிகிறோம். இப்பிரபந்தங்கள் பற்றிய வேறு எந்த

விளக்கமும் தெரியவில்லை. இவைகளையன்றி மேலும் எந்தப் பிரபந்தங்களும் கிடைக்கவில்லை. பிரபந்தங்களின் இலக்கணத்தை விரித்துக்கூறும் பன்னிரு பாட்டியல் என்ற இலக்கண நூல் பத்தாம் நூற்றாண்டில் தோன்றியிருந்தது. அதற்கு முன் சில பிரபந்தங்களேனும் தோன்றியிருக்க வேண்டும் என்பது அதன் பொருளாகும்.

உண்மையும் அதுவே. எனினும், அடுத்த நூற்றாண்டாகிய 11ஆம் நூற்றாண்டில் நம்பியாண்டார் நம்பி செய்த பிரபந்தங்களைத் தவிர, வேறு எந்தப் பிரபந்தங்களும் கிடைக்கவில்லை, எழுதப்பட்டதாகவும் தெரியவில்லை.

இலக்கியத்துறையைக் கடந்து சென்று பார்க்கும்பொழுது, கனா நூல், ஓவிய நூல் ஆகியவற்றை அறிகிறோம். கனா நூல் முழுதும் கிடைக்கிறது, ஓவிய நூல் கிடைக்கவில்லை. பின்னும் பல வகை நூல்கள் இருந்திருக்கவேண்டும் என்று அடியார்க்கு நல்லார் உரையால் கருத இடமுண்டு.

## முத்தமிழ்

ஒரு கருத்தைக் குறிப்பிட எண்ணுகிறோம். முத்தமிழ் என்று முழங்காத காலம் இல்லை, நூலில்லை, புலவரில்லை. ஆனால் காலந்தோறும் முத்தமிழ் வளர்ந்து வந்ததா என்று ஆராய்ந்தால், அதற்குச் சரியான விடை கிடைக்கவில்லை. சிலப்பதிகாரம் வரையில் முத்தமிழின் உச்சநிலையைக் காண்கிறோம். பின்னர்க் காண்பதெல்லாம் இயற்றமிழ் ஒன்றுதானே தவிர ஏனைய இரண்டையும் காண்பதற்கில்லை. சம்பந்தராதியோர் ஏழாம் நூற்றாண்டிலும், திருவிசைப்பாக்காரர் 10 - 11ஆம் நூற்றாண்டுகளிலும் தங்கள் இசைப்பாடல்களால் இசைத்தமிழை வளர்த்தார்கள். (இது சைவம். வைணவத்தில் நாலாயிரம் வளர்ந்தது, ஆனால் அது இசைத்தமிழை வளர்க்கவில்லை.) தமிழுக்குப் பெருந்தொண்டு செய்தவராகப் பலரும் ஏத்துகின்ற சைனர் இசைத் தமிழை அழித்தார்கள். (இதற்குச் சான்று யசோதர காவியம்) களப்பிரரும் அவர் மூலம் வந்த சைனமும் தமிழை அழித்து வந்தார்கள். இசையும் நாடகமும் அடியோடு அழிந்தன. இசைத்தமிழை அழியாது காக்கும் பொருட்டே திருஞானசம்பந்தர் சமணத்தை வேரறுக்க வேண்டியதாயிற்று. அவர் நாடகத்துறையுள் புகவில்லை. நெடுங்காலம் கழித்து, இராசராச மன்னன் காலத்தில்

நாடகத் தமிழுக்கு ஒரு புதிய எழுச்சி ஏற்பட்டது. ஆனால் அதுவும் ஒரு நூற்றாண்டுக்குள் மங்கிவிட்டது. பின்னர் 17 - 18 நூற்றாண்டுகளில்தான் மீண்டும் நாடகமும் இசையும் தலையெடுக்கலாயின.

இந்த முறையில் பார்த்தால், முத்தமிழ் வளர்ச்சி தொடர்பாக இல்லை. இயற்றமிழ் ஒன்றுதான் வளர்ந்து கொண்டு வந்திருக்கிறது. சிலப்பதிகார அரும்பதவுரையாசிரியரும் அடியார்க்கு நல்லாரும் காட்டுகின்ற இசை நாடக இலக்கிய வளமெல்லாம் சம்பந்தரையடுத்து 8-10 நூற்றாண்டுகளில் செய்யப்பெற்ற இலக்கிய வளமே. திருஞானசம்பந்தரை நினைக்கும்போது, அவர் தேவாரம் பாடிச் சைவத்தை வளர்த்தார் என்று மட்டும் நினைத்தால் போதாது. தம்முடைய பாடலைப் பண்ணியல் பாடல், இசைத்தமிழ் என்று எங்கும் அவர் சொல்லக் காண்கிறோம். பின்னர் சில நூற்றாண்டுகளில் இசைத்தமிழ் இலக்கியம் பெருகி வளர்வதற்கு அவர் பாடல்களே வித்திட்டன என்று கருதுதல் வேண்டும்.

வைணவத்தில் நம்மாழ்வார் தம் பாடல்களைப் பண்ணார் பாடல் என்றெல்லாம் சொல்வது உண்மையே. நாதமுனிகள் தம் மருகர் இருவரைக்கொண்டு நாலாயிரத்துக்கும் இசையமைத்தார் என்பதும், பிற்காலத்தில் திருவரங்கப் பெருமாளரையர் தம் இசையில் இராமானுசரை ஈடுபடச்செய்து காஞ்சியை விட்டு அவரைத் திருவரங்கம் அழைத்து வந்தார் என்பதும் வரலாறுகள். எனினும் சைவத்தில் சம்பந்தர் இசை வளர்த்த பெருமையொன்றே தமிழுலகில் வழங்குவது. இதற்கிணையாக வேறொன்றும் இல்லை.

## முடிவுரை

இலக்கிய வரலாற்றாராய்ச்சியாளர் பலர் இருளில் மிக்க மோகம் கொண்டிருக்கிறார்கள். தங்களுக்கு விளங்காதன இருண்ட காலம் என்று பட்டம் சூட்டுகிறார்கள். நூற்றாண்டு நூற்றாண்டாக நாம் ஆராய்ந்து வரும்போது, எந்தக் காலமும் இருண்ட காலமாகத் தெரியவில்லை.

பத்தாம் நூற்றாண்டு தொடங்கிப் பதினைந்தாம் நூற்றாண்டு வரை ஆறு நூற்றாண்டுகளின் வரலாறுகளை எழுதி முடித்து இப்போது ஒன்பதாம் நூற்றாண்டினுள் புகுகிறோம். நூல்கள்

காலகதியில் இறந்துவிட்டனவே என்று வருந்தவேண்டியிருக் கிறதேயன்றி, இருண்ட காலமெதையும் யாம் காணவில்லை. எங்கும் பேரொளியைக் காணும் பேற்றையே இறைவன் எமக்கு அருளியிருக்கிறான்.

இராசராசன் போன்ற ஒரு பெருஞ் சக்கரவர்த்தியின் ஆதர வில், திருமுறைகள் தேடி வெளிப்படுத்தித் தொகுத்துப் பண் ணடைவு செய்த காலத்தை, திருவிசைப்பாப் பாடல்கள் பலவும், நம்பியாண்டார் பாடல்கள் யாவும் தோன்றிய காலத்தை, யாப் பருங்கலமும் அதன் விருத்தியுரையும், தொல்காப்பியம் முழு மைக்குமான இளம்பூரணருரையும் தோன்றிய காலத்தை - யாரே இருண்டகாலம் எனச் சொல்லுவர்?

தமிழ்த் தெய்வத்தின் 'சீரிளமைத்திறம் வியந்து செயல் மறந்து வாழ்த்துதும்' என்று பாடினாரல்லவா? அவ்விளமைத்திறம் பல எழில் நலங்களைக் காட்டுகிறது. ஒவ்வொரு நூற்றாண்டும் வெவ்வேறு நலங்களைக் காட்டுகிறது. இது உயர்வு அது தாழ்வு என்று சொல்லுதல் பொருந்தாது; நலம் இல்லை என்று சொல் லுதல் அறிவுடைமையன்று.

OOO

அத்தியாயம் 1

# இலக்கிய ஆசிரியர்

## முன்னுரை

இருபது நூற்றாண்டுகளாகத் தமிழிலக்கியம் தொடர்பாக வளர்ந்து வந்திருக்கிறது என்பதில் ஐயமில்லை. காலந்தோறும் சூழ்நிலையை ஒட்டி இலக்கியத்தின் தன்மையும் போக்கும் மாறிக்கொண்டு வருகின்றன. தமிழில் காப்பியங்களும், காப்பியங்களையொத்த பிற இலக்கியங்களும், சில காலங்களில் தோன்றுகின்றன. அரசியல் நிலையும், சமூக நிலையும், சமய நிலையும் இத்தோற்றத்தை நெறிப்படுத்துகின்றன. எல்லா வகையான இலக்கியச் சிறப்பும் எல்லாக் காலத்துக்கும் உரியது என்று சொல்வது பொருந்தாது.

காப்பியம் என்ற நெறியைப் பேசுவோமானால், 9 - 10 நூற்றாண்டுகளில் மிகப்பல பெரிய காப்பியங்களைச் சொல்ல முடியும். சீவக சிந்தாமணி, கம்பராமாயணம், சூளாமணி போன்ற சிறப்பான காப்பியங்களும், ஒருகால் குண்டலகேசி, வளையாபதி, நீலகேசி போன்ற மற்றக் காப்பியங்களும் இக்காலத்தே தோன்றினவாகும். இத்தகைய நூல்களின் அளவும் மிகப் பெரியது.

இவை போலவே, இந்த நூற்றாண்டுக்கு (11ஆம் நூற்றாண்டு) அடுத்த நூற்றாண்டாகிய பன்னிரண்டாம் நூற்றாண்டிலும் பெரும் புலவர்களான சயங்கொண்டார், சேக்கிழார், ஒட்டக் கூத்தர் போன்றார் தோன்றி, பேரிலக்கியங்களும் சிற்றிலக்கியங்களும் செய்திருக்கிறார்கள். அதே விதமான தொடர்ந்த வளர்ச்சி பிந்திய நூற்றாண்டிலும் காண்கிறோம்.

ஆனால் 11ஆம் நூற்றாண்டைப் பொறுத்தவரையில் இத்தகைய பெருஞ்சிறப்பு காண்பதற்கில்லை. பேரிலக்கியங்களோ பிரபந்தங்களோ தோன்றியவை இல்லை. சைவ இலக்

கியங்கள் (அருள் நூல்கள்) சில மட்டுமே உள்ளன. வைணவ இலக்கியம் இல்லை; சைன இலக்கியம் இல்லை. இப்படி பார்க்கும்போது, என்ன இலக்கியந்தான் தோன்றிற்று என்ற கேள்வி எழும். சைவ இலக்கியம் தவிர, வேறு இலக்கியம் காணப்படவில்லை.

எனினும், கல்லாடம் என்ற ஒரு நூலை மட்டுமேனும் இவ் வத்தியாயத்தில் ஆராய்வோம். இது ஒரு சைவ அகப்பொருள் நூலேயாகும். இந்த நூல் தனிச்சிறப்பு வாய்ந்தது; பழைய சங்க நூலுக்கும், பிற்காலத்துத் தோன்றிய விருத்தப்பாவில் அமைந்த காப்பியங்களுக்கும் இடையிலமைந்து, தனக்கென்று தனித்த சிறப்புடையதாய் விளங்குகிறது. இந்த நூல் இல்லையானால் இக்காலத்துக்குரிய இலக்கியம் என்று எதுவும் சொல்வதற் கில்லை.

திருவள்ளுவமாலை என்ற பாடல் தொகுப்பு யாவரும் அறிந்தது. இதுபற்றிச் சில கருத்துக்களை இங்கு கூறி, இது ஒருவரே செய்த நூல், இக்காலத்தே செய்யப்பட்டது என்ற கருத்தையும் குறிப்பிட்டுள்ளோம்.

## கல்லாடர்

கல்லாடர் என்ற புலவர் தம் பெயரால் கல்லாடம் என்ற ஒரு சிறந்த அகப்பொருள் இலக்கியம் செய்தார். சங்க நூல்களில் நற்றிணை, குறுந்தொகை, அகநானூறு, ஐங்குறுநூறு என்ற நான்குமே அகவற்பாவால் அகப்பொருள் கூறும் இலக்கியங் களாய் உள்ளன. கலித்தொகை வேறு யாப்பினால் இயன்ற அகப்பொருள் நூல், இவற்றின் நெறியில் பின்வந்த ஒரு சிறந்த நூல், கல்லாடம்.

### ஆசிரியர்

கல்லாடர் செய்தமையால் நூல் கல்லாடம் என்று பெயர் பெற்றது. இப்பெயருடைய புலவர் அனேகர் இருந்திருக்கிறார் கள். சங்க நூல்களில் ஒரு கல்லாடர் இருந்து, 14 பாடல் பாடி யிருக்கிறார் (அகம் 7, புறம் 5, குறுந்தொகை 2). சங்கப்பாடல் பாடிய கல்லாடரும், கல்லாடம் பாடிய கல்லாடரும் ஒருவரா? என்ற ஐயத்தை ஒரு பதிப்பு எழுப்பியுள்ளது; இது வேண்டாத ஐயம். சங்கக் கல்லாடர் காலம் கி.பி. இரண்டாம் நூற்றாண்டுக்கு

முன்பு இருக்கலாம். திருவள்ளுவ மாலையில் கல்லாடர் பெய ரால் ஒரு பாடல் உள்ளது. ஆனால் இந்நூலே போலியாதலால், இதை நாம் இங்கு கருத வேண்டியதில்லை. அடுத்து, நம்பி யாண்டார் நம்பி தொகுத்த பதினொராந் திருமுறையில் திருக் கண்ணப்பதேவர் திருமறம் என்ற ஓர் அகவற்பா, கல்லாட தேவ நாயனார் பாடியதாகக் காணப்படுகிறது. இவரும் ஒரு கல்லாடரே; தேவ நாயனார் என்ற சொற்கள் அடியவர் என்ற குறிப்புத் தோன்ற வந்த மரியாதை குறிக்கும் சொற்கள். மற்றொ ருவர் கல்லாடம் பாடிய கல்லாடர். இவர்களேயன்றி, தொல் காப்பியச் சொல்லதிகாரத்துக்கு உரையெழுதியவர் பிறிதொரு கல்லாடர். அவருரை அச்சாகாமலிருந்து சமீபத்தில் அச்சாகி யிருக்கிறது; அக்கல்லாடர் நச்சினார்க்கினியரைத் தழுவியிருப் பதாக தெரிவதால், அவருக்குப் பின் வாழ்ந்து, 15ஆம் நூற்றாண் டின் முற்பாதியில் அவர் நூல் செய்திருக்கிறார். கல்லாடம் செய்த கல்லாடர்போல, அவரும் சைவரே.

கல்லாடர் பலர் என்ற கருத்து இங்கு சொல்லப்பட்டது. இவர்களை அன்றிப் பின்னும் ஒருவர் இருந்திருக்கிறார் என்று தெரிகிறது. முன்னம் இருந்த நால்வரும் சங்கப்பாடல்களும், திருக்கண்ணப்பதேவர் திருமறமும், கல்லாடமும், தொல் காப்பியச் சொல்லதிகார உரையும் முறையே செய்தனர் என்று குறிப்பிட்டோம். மற்றொருவர் பாட்டியல் பாடினார் என்று அறிகிறோம். பாட்டியல் ஒரு புது இலக்கண நெறி. பொதுவாக இது 9ஆம் நூற்றாண்டில் மிகுதியாகப் பெருகுகிறது. ஆதலால் இது செய்த கல்லாடர் முன்னையோரிலும் வேறாவர் என்று கருதுகிறோம். இவர் செய்தனவாகப் பன்னிரு பாட்டியலில் 45 சூத்திரங்கள் காணப்படுகின்றன. இவையன்றி, நவநீதப் பாட்டி யலின் பழைய உரையானது கல்லாடம் எனப் பெயர் குறிப்பிட்டு இரண்டு நூற்பாக்களையும், ஓர் உரைநடைப் பகுதியையும் தருகிறது. இவற்றால் கல்லாடர் இருந்து பாட்டியல் செய்தது உண்மை என்று புலப்படுகிறது. இவரைக் குறித்து வேறு எந்தச் செய்திகளும் தெரியவில்லை. இவர் செய்த பாட்டியலும் கிடைக்கவில்லை.

மேலும், கல்லாடனார் கலாவியல் என்ற சூத்திரம் ஒன்றும், கல்லாடனார் வெண்பா என்ற பாடல் ஒன்றும் நவநீதப் பாட்டியல் உரையில் காணப்படுகின்றன.

*சாதுரங்க ஒளியைக் குறிப்பிடும் பொருட்டு, சிலப்பதிகார ஊர்காண் காதையுரையில் அடியார்க்கு நல்லார் காட்டும் மூலம் தெரியா மேற்கோளின் வரிகளை அப்படியே எடுத்துரைத்தது போல் கல்லாட வரிகள் (பாடல் 47) உள்ளன.*

**தாமரை கழுநீர் சாதகப் புட்கண்**
**கோப மின்மினி கொடுங்கதிர் விளக்கு**
**மாதுளைப் பூவிதை வன்னி யீரைந்தும்**
**ஒது சாதுரங்க ஒளியா கும்மே.**

*என்பது மேற்கோள் பாடல்; கல்லாட வரிகள் பின்வருவன:*

**சாதகப் புட்கண் தாமரை கழுநீர்**
**கோப மின்மினி கொடுங்கதிர் விளக்கு**
**வன்னி மாதுளம் பூவிதை யென்னும்**
**பன்னு சாதுரங்க ஒளிக்குணம் பத்தும்.**

*வரிகளின் ஒற்றுமையைக் காணும்போது, இக்கருத்துடைய தொடர்கள் கற்றோர் கல்லாதோரிடம் சாமானிய வழக்கில் இருந்தன என்று நினைக்க வேண்டியிருக்கிறது.*

*இவ்வாறு காணப்படுகின்ற நான்கு ஆசிரியர்களுள், கல்லாடம் செய்த கல்லாடரையே இங்கு நாம் கருதுகிறோம். கண்ணப்ப தேவர் திருமறம் பாடிய கல்லாடர்; இவருக்கு ஒரு நூற்றாண்டு முற்பட்டவர்.*

**கல்லா டத்துக் கலந்தினி தருளி**
**நல்லா ளோடு நயப்புற வெய்தியும்.**

*என்ற திருவாசக வரிகள், கல்லாடம் என்பது ஓர் ஊர் என்பதைத் தெரிவிக்கும். கல்லாடம் என்ற ஊர் பாண்டி நாட்டுச் சிற்றூர் என்றும், மேல்கடற்கரைக் கண்ணதோரூர் என்றும், பலவாறாகச் சொல்லுவர். இதுபற்றி வேறு விளக்கமில்லை. சிலர், கல்லட என்ற பெயர் மம்மட பம்மட என்ற சொற்கள் போல, வேற்று நாடுகளில் ஹல்லட என்று வழங்கியிருந்து, மீண்டும் தமிழ்நாட்டில் கல்லாடம் என்ற திரிபான வடிவத்தில் புகுந்திருக்கலாம் என்று கருதுவர். பல்லடம் என்ற தமிழ்நாட்டு ஊர், கல்லடன் என்ற காசுமீரப் புலவன் - போன்ற பெயர்களோடு இப்பெயர் இணையத்தக்கது என்று கருதுவோர் உளர். காசுமீரத்தில் கல்லடர் என்ற பெயருடைய சைவ சமய நூலாசி*

அத்தியாயம் 2

# இலக்கிய உரையாசிரியர்

## முன்னுரை

இருபது நூற்றாண்டுகளுக்கு மேலாக வளர்ந்து வந்துள்ள தமிழ் இலக்கிய வரலாற்றில் உரையாசிரியர்களுக்கும் சிறப்பான இடம் உரியது. எமது 13ஆம் நூற்றாண்டு வரலாற்றில் உரையாசிரியர்களின் தமிழ்த் தொண்டைக் குறித்து விரிவாக உரைத்திருக்கிறோம்.* இங்கு உரையாசிரியரைக் குறித்த மூவகைப் பாகுபாட்டை உணர்த்தி மேற்செல்ல எண்ணுகிறோம்.

இலக்கிய உரையாசிரியர், இலக்கண உரையாசிரியர், ஞான சாத்திர உரையாசிரியர் என இவர்களை மூவகையாக நாம் பாகுபடுத்தி ஆராய எண்ணுகிறோம். தமிழைப் பொறுத்த வரையில், இலக்கணமும் சமய சாத்திரங்களும் பண்டைக் காலத்தில் செய்யுளாகவே செய்யப் பெற்றிருந்த காரணத்தால், இலக்கியத்தின் பகுதிகள் என்றே இவை கருதப்பட்டு வந்திருக்கின்றன. எனவே, இவற்றுக்கு எழுந்துள்ள உரைகளை நாம் பார்க்கும்போதும், இவற்றால் விளைந்த தமிழ் வளர்ச்சியைக் கருதி ஆராய்தல் பொருத்தமாகும். பொதுவாகச் சொல்லுமிடத்து, இறையனார் களவியல் உரை, தொல்காப்பிய உரைகள், யாப்பருங்கல உரை போன்றன இலக்கண உரைகளாகும். சங்க நூல் உரைகள், குறள் முதலான பதினெண்கீழ்க்கணக்கு உரைகள், சிலப்பதிகாரம் சிந்தாமணி திருக்கோவையார் போன்ற நூல் உரைகள் இலக்கிய உரைகளாகும். சிவஞான போதம், சிவஞான சித்தியார் போன்ற சைவ சாத்திர உரைகள், நாலாயிரப் பிரபந்த வியாக்கியானங்கள் போன்றன சாத்திர உரைகளாகும்.

இலக்கண உரைகளில் முதலாவதாகத் தோன்றியது, இறையனார் களவியல் உரை. இதன் காலம் 10ஆம் நூற்றாண்டு

---

* 13ஆம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கிய வரலாறு காண்க.

(அல்லது வாய்மொழியாக வழங்கிய இந்த உரை 10ஆம் நூற்றாண்டில் எழுத்தில் வடிக்கப்பட்டது என்பார்கள்). இதற்கு முந்தி அகத்தியம் என்ற இலக்கணநூல் இருந்தது என்று மட்டும் நாம் அறிகிறோம்; நூலே கிடைக்காமையால், அதற்கு உரை இருந்ததா, இருந்தால் அதன் காலம் என்ன என்ற பொருள்கள் இப்போது ஆராய்ச்சிக்கு இடமாகா. அடுத்து, இலக்கிய உரைகளைப் பார்த்தால், திருக்குறளுக்கு மணக்குடவர் எழுதிய உரையே முதல் உரை என்று தெரிகிறது. இதற்கு முன் எந்த இலக்கிய உரையும் இருந்ததாகத் தெரியவில்லை. ஞானசாத்திரம் என்று பார்த்தால் திருவாய்மொழிக்குத் திருக்குருகைப் பிரான் பிள்ளான் என்பவர் இராமானுசர் உத்தரவின்படி எழுதிய ஆறாயிரப் படி என்ற வியாக்கியானமே முதன் முதலில் எழுந்த உரையாகும்; காலம் 12ஆம் நூற்றாண்டு.

இந்த முறையில், இந்த 11ஆம் நூற்றாண்டு நூல்களில், இலக்கியங்களுக்கு எழுந்த உரைகளை மட்டும் இவ்வத்தியாயத்துள் ஆராய்வோம்; இரண்டு பேருரைகள் இக்காலத்துக்குரியன. ஒன்று சென்ற (10ஆம்) நூற்றாண்டில் மணக்குடவர் திருக்குறளுக்கு எழுதிய உரையை அப்படியே கொண்டு, அதற்கு மேலும் சில விளக்கங்கள் சேர்த்துப் பரிப்பெருமாள் என்பவர் இக்காலப் பிற்பகுதியில் எழுதிய உரையாகும். மற்றது, சிலப்பதிகாரத்திற்குப் பெயர் தெரியாத ஆசிரியர் ஒருவர் இக்கால முற்பகுதியில் எழுதி வைத்த அரும்பதவுரையாகும்; இவ்வுரை எல்லாச் சிறப்புக்களையும் தன்னகத்தே கொண்டு, முக்கியமாக இசைத்தமிழ் நாடகத் தமிழ் என்ற பகுதிகள் பற்றிய கருத்துக்களை நன்கு விளக்கி, அடுத்த நூற்றாண்டில் அடியார்க்கு நல்லார் இதை நன்கு பயின்று மேலும் பேருரை எழுத உதவி அளித்திருக்கிறது. இந்த முறையில் இவ்வுரை முத்தமிழுக்கும் செய்துள்ள உதவி வேறு எவ்வுரைகாரரும் செய்யாத உதவியாகும். முத்தமிழ்க் காப்பியமாக இருப்பது சிலப்பதிகாரம் ஒன்றே. அதற்கு அமைந்த பேருரை அடியார்க்கு நல்லார் உரையாகும்; எனினும், அவ்வுரை முழுமையும் இல்லை. எனவே இவ்வரும்பதவுரையானது நூல் முழுமைக்கும் உள்ள ஒரே உரையாக அமைந்து, அடியார்க்கு நல்லாருக்கும் வழிகாட்டிய பெருஞ்சிறப்புடையது. இவ்விரு உரைகளையும் - குறள் பரிப்பெருமாள் உரை, சிலப்பதிகாரம் அரும்பதவுரை - இந்த அத்தியாயத்தில் ஆராய்கிறோம். அடுத்த நூற்றாண்டு தொடங்கி மிகப் பலவான இலக்கிய உரைகள் எழுந்தன என்பதை வரலாற்றில் காண்கிறோம்.

## சிலப்பதிகார அரும்பதவுரையாசிரியர்

சங்கத் தமிழ் மூன்று என்று நாம் பெருமையோடு போற்று கின்ற முத்தமிழ்க் காப்பியங்களில் இசை, நாடகம் எவையும் கி.பி. 5 - 6 நூற்றாண்டுகளுக்குப் பிறகு தமிழ்நாட்டில் நிலவ வில்லை; சிலப்பதிகாரம் ஒன்றுதான் தோன்றிய நாள் தொடங்கி எல்லாச் சிறப்புக்களும் பொருந்திய நூலாக இன்றும் விளங்கி வருகிறது. இதன் ஆசிரியர் சேர மரபில் செங்குட்டுவன் இளவ லாகத் தோன்றித் துறவு பூண்ட இளங்கோவடிகள் என்பது வரலாறு. இவர் செய்த நூல், முத்தமிழ்க் காப்பியம் என்பது போலவே, தமிழ்நாட்டு முடியுடை மன்னர் மூவரையும் ஏற்றத் தாழ்வின்றிச் சிறப்பிக்கின்ற நூல். அப்படியே அது, சிவபிரான், திருமால், முருகன், அருகன் ஆகிய சமயக்கடவுளர் அனை வரையும், சைன சமயத்தினர் என்று சிலரால் கருதப்படுகின்ற* ஆசிரியரால் சமயக் காழ்ப்பின்றிச் சமமாகப் போற்றப் பெறும் பெருமை வாய்ந்தது.

### ஆசிரியர்

இச்சிறந்த நூலுக்குப் பண்டைய உரைகள் இரண்டு உள் ளன. அவற்றுள் காலத்தால் முந்தியது அரும்பதவுரை என்று வழங்குவது. இவ்வுரையையே நாம் இப்பொழுது ஆராய்ச்சிக்கு எடுத்துக் கொள்கிறோம். இரண்டாவது உரை அடியார்க்கு நல்லாரால் எழுதப்பெற்ற பேருரை. இவ்விரு உரைகளையும் ஐயரவர்கள் மிகவும் அருமையாக மூன்று முறை பதிப்பித்திருக் கின்றார்கள். இவ்விரு உரைகளையும் குறித்துச் சில சொற் களைச் சொல்லி மேற்செல்வோம்.

காலத்தால் முதல் உரையாகிய அரும்பதவுரை என்று இப்பொழுது சொல்லப்படுகின்ற உரையின் ஆசிரியர் பெயர் முதலியன தெரியவில்லை. இந்த உரை, நூல் முழுமைக்கும் உள்ளது. பிந்தியதாகிய பேருரை, அடியார்க்கு நல்லார் என்ற பெரும்புலவரால் இதன்பின் சுமார் நூறு ஆண்டுகள் கழித்துச் செய்யப்பட்டது. ஆனால் அவ்வுரை முழுமையும் ஐயரவர் களுக்குக் கிடைக்கவில்லை. தமிழகத்தில் எங்கேனும் ஏடு இருக்கும் என்று இனி நம்பவும் இடமில்லை. சிலப்பதிகாரக்

---

* இக் கருத்திலும் வேற்றுமை உள்ளது.

காண்டங்கள் மூன்று: புகார், மதுரை, வஞ்சி எனப்படும். இவற்றுள் அடியார்க்கு நல்லார் உரையானது, புகார்க் காண்டத்தின் ஏழாம் காதையாகிய கானல் வரி ஒன்று நீங்கலாக ஏனைய காதைகளுக்கும், மதுரைக் காண்டத்தில் ஊர்சூழ் வரி என்ற 19ஆம் காதை வரையிலும் உள்ளது. இதன் பின்புள்ள நான்கு காதைகளுக்கும், வஞ்சிக்காண்டத்தின் ஏழு காதைகளுக்கும், முதல் காண்டத்தின் கானல் வரிக்கும், அடியார்க்கு நல்லார் உரை கிடைக்கவில்லை. அரும்பதவுரை ஒன்றே சிலப்பதிகாரம் முழுமையும் பொருள்செய்து கொள்வதற்கு உதவுகின்ற கருவியாக அமைந்திருக்கிறது. 'இவ்வுரையிலுள்ள முடிபுகளும் பொருளும் இல்லையாயின், அடியார்க்கு நல்லாருடைய உரை கிடையாத பாகங்களுக்குப் பொருள் காண்பது அரிது' என்று ஐயரவர்கள் குறிப்பிட்டிருப்பது உண்மையே.

இவரைப்பற்றி எதுவும் தெரியவில்லை என்று தொடக்கத்தில் குறிப்பிட்டோம். இவரை அரும்பதவுரையாசிரியர் என்று முதன் முதல் அடியார்க்கு நல்லாரே பெயர் சூட்டி வழங்கினார். இந்திர விழவூர் எடுத்த காதை என்ற ஐந்தாம் காதையில் (வரி 150) 'ஐம்பெருங் குழுவும் எண்பேராயமும்' என்பதற்கு,

சாந்து பூக் கச்சாடை பாக்கிலை கஞ்சுக நெய்
ஆய்ந்த இவரெண்மர் ஆயத்தார் – வேந்தர்க்கு
மாசனம்பார்ப் பார்மருத்தர் வாழ்நிமித்த ரோடுஅமைச்சர்
ஆசில் அவைக்களத்தார் ஐந்து.

என்று அரும்பதவுரைகாரர் எழுதுகின்றார். ஆனால் அடியார்க்கு நல்லார்,

அமைச்சர் புரோகிதர் சேனா பதியர்
தவாத்தொழில் தூதுவர் சாரணர் என்றிவர்
பார்த்திபர்க்கு ஐம்பெருங் குழுஎனப் படுமே.

கரணத்து இயலவர் கரும காரர்
கனகச் சுற்றங் கடைகாப் பாளர்
நகர மாந்தர் நளிபடைத் தலைவர்
யானை வீரர் இவுளி மறவர்
இனைய எண்பே ராயம் என்ப.

என்ற இரு நூற்பாக்களையும் ஐம்பெருங் குழுவுக்கும் எண் பேராயத்துக்கும் மேற்கோளாகக் காட்டி, பின் "சாந்துபூ - அவைக் களத்தார் ஐந்து" எனக்காட்டுவர் 'அரும்பதவுரையாசிரியர்'

என்று கூறுகின்றார். அடியார்க்கு நல்லாரே தமக்கு முன்பு உரை எழுதியவரை அரும்பதவுரையாசிரியர் என்று குறிப்பிடுகின்றார். ஒருகால் அவர் காலத்தில் அரும்பதவுரைகாரரின் பெயர் முதலான வரலாறுகள் நன்கு விளக்கம் பெற்றிருந்தன போலும். இன்று சிந்தாமணிக்காரர், குறளாசிரியர் என்ற தொடர்கள் பொருளுடையனவாய் இருத்தல் போல, நல்லார் காலத்தில் அரும்பதவுரைகாரர் என்ற பெயரும் இருந்திருக்கலாம். பிற் காலத்தில் எத்தனையோ நூல்களும் வரலாறுகளும் செய்திகளும் மறைந்து போயினமை போல, இவர் வரலாறும், பெயர் கூட அறிய இயலாதபடி, மறைந்து போயிற்றுப் போலும்.

அவ்வாறின்றி, அடியார்க்கு நல்லார் காலத்திலேயே அரும்பதவுரைகாரருடைய பெயர் முதலான வரலாறுகள் மறைந்து போயின என்று கருதுவதற்கும் இடமுண்டு. எனினும், சிலப்பதிகாரப் பயிற்சி குன்றிய பிற்காலத்தில் தான் அரும்பதவுரைகாரர் வரலாறு மறைந்து போயிற்று என்று நாம் கருதவேண்டும். அடியார்க்கு நல்லார் பெயர், சிறப்புப் பாயிரம் முதலான பாடல்களில் ஏறினமையாலும், நன்கு தெரிந்த ஒரு வள்ளலுடைய ஆதரவை அவர் பெற்றிருந்தமையாலும், அவருடைய வரலாறு இலக்கியச் சரித்திரத்தில் விளக்கம் பெற்றிருக்கிறது. ஆனால் அரும்பதவுரைக்குச் சிறப்புப் பாயிரம் இன்மையாலும், பிற வரலாறுகள் இன்மையாலும், அடியார்க்கு நல்லார் உரை போல எல்லோரும் படித்துப் பயனடையுமாறு இல்லாது கற்றோர்க்கு மட்டுமே பயன்படத்தக்க சுருக்கவுரையாக இருத்தலாலும், இவருடைய வரலாறு விளக்கம் பெறவில்லை என்று நாம் கருதுகின்றோம்.

இவ்வுரையாசிரியர் தம் உரைத் தொடக்கத்தில் விநாயகர் காப்பாக ஒரு வெண்பாச்-சொல்லித் தொடங்குகிறார்:

**கரும்பும் இளநீரும் கட்டிக் கனியும்**
**விரும்பும் விநாயகனை வேண்டி – அரும்பவிழ்தார்ச்**
**சேரமான் செய்த சிலப்பதிகா ரக்கதையைச்**
**சாரமாய் நாவே தரி.**

இது கொண்டு இவர் சைவ சமயத்தினர் என்று சொல்லலாம். இதற்கேற்ப, சைவத்தலங்கள் முதலியவற்றை மிக்க பக்தியோடு குறிப்பிடுவார்: ஊழ்க் கோட்டம் - ஸ்ரீ கைலாயம் நிற்கும் கோயில். வாரணம் - ஸ்ரீ வாரணாசி. நெடுவேலோன் குன்று -

திருச்செங்கோடு. சைவ சமயத்தார் வினையைப் பிராரத்தம் சஞ்சிதம் ஆகாமியம் என மூன்றாகச் சொல்லுவர். இம்மூன்றினுள், பிராரத்தம் என்ற வினைப் பகுதியே ஊழ்வினையாகிய பழவினை எனப்படும். இந்நூற் பதிகவுரையில் இவ்வுரைகாரர் ஊழ்வினை - முறைமையாகிய பழவினை என்று எழுதியிருப்பது இச்சைவ தத்துவத்தை உணர்ந்து எழுதியதுபோல் தோன்றுகிறது. ஆயினும், இவர் சமயக் காழ்ப்பில்லாதது மட்டுமல்ல, பிற சமயத்தெய்வங் களைக் குறிப்பிடும்போது உரிய பக்தியோடு குறிப்பிடுவதும் பாராட்டத்தக்கது. நெடுமால் - ஸ்ரீ இருந்த வளமுடையார்* அரங்கம் - திருவரங்கம். அருகன் கோயிலை எங்கும் ஸ்ரீகோயில் என்றே குறிப்பிடுவார். அறிவன் - உறையூர் ஸ்ரீ கோயில் நாயனார். கந்தன்பள்ளி - ஸ்ரீ கந்தன் பள்ளி. இறையகம் - ஸ்ரீ கோயிலின் ஒரு பக்கத்தே பள்ளியகம் (அருகன்கோயில்). மங்கல மடந்தை கோட்டம், ஆயிழை கோட்டம்❖ என்றே எழுதுகிறார்.

இவ்வாறு இவர் விரிந்த சமய நோக்குடையவராயிருந் தமையால் போலும், இளங்கோவடிகள் சைனத் துறவி என்று கருதப்பட்டிருந்தும், அவர் நூலைத் தாம் உரையெழுதத் தேர்ந்து கொண்டார். இவர் தோன்றிய காலம், சைவ சமயம் பெரு மலர்ச்சி பெற்று வந்த காலம். முத்தமிழிலும் பெரும்புலமை எய்தியிருந்த இப்பேராசிரியர், தம் புலமை வெளிப்பாட்டுக்குத் தக்க முத்தமிழ்த் திறம் வாய்ந்த காப்பியமெதுவும் வேறு இல்லாமையால், இந்நூலைத் தாம் உரை இயற்றுவதற்கு உரியதாய்க் கொண்டார். சோழன் கரிகாற் பெருவளத்ததான் என்றதனாலும், வேறு பலவகைச் சொல்லாட்சியாலும், இவர் சோழ நாட்டினர் என்றே கருத இடமுண்டு. இச்செய்திகளன்றி, இவரைக் குறித்த வேறு எச்செய்தியும் புலப்பட்டிலது.

நீர்ப்படைக் காதையில்,

செயிர்த் தொழில் முதியோன் செய்தொழில் பெருக
உயிர்த்தொகை உண்ட ஒன்பதிற் றிரட்டியென்று
யாண்டும் மதியும் நாளும் கடிகையும்
ஈண்டுநீர் ஞாலம் கூட்டி எண்கொள.

---

* இருந்த வளமுடையார் மதுரைக் கூடலழகராவார் என்பது மு. இராகவையங்கார் குறிப்பு: ஆராய்ச்சித் தொகுதி, பக்கம் 241 - 44.

❖ மங்கலாதேவி கோட்டமுடைமையால் ஊர் மங்களூராயிற்று என்பது ஐயரவர்கள் குறிப்பு.

என்று வரும் வரிகளுக்கு இவ்வரும்பதவுரைகாரர் உரிய விளக்கம் தந்திருக்கிறார்: கூற்றுவன் செல்கின்ற உயிரைக் கவரும் தொழில் பெருகும்படியாக, "உயிர்த்தொகை உண்டனவாகிய ஆண்டும் மதியும் நாளும் கடிகையும் ஒன்பதிற் றிரட்டியென்று அவற் றோடே கூட்டி யெண்ண; தேவாசுர யுத்தம் பதினெட்டாண்டி லும், இராம ராவண யுத்தம் பதினெட்டு மாதத்திலும், பாண்டவ துரியோதன யுத்தம் பதினெட்டு நாளிலும், செங்குட்டுவனும் கனகவிசயரும் செய்த யுத்தம் பதினெட்டு நாழிகையிலும் முடிந்தவென்றெண்ண". இந்த யுத்தங்களை இதே முறையில் கலிங்கத்துப் பரணியில் சயங்கொண்டார் கலிங்கப்போரைச் சார்த்திச் சொல்லுகிறார்:

தேவாசுர ராமாயண மாபாரதம் உளவென்று
ஒவாஉரை ஓயும்படி உளதப்பொரு களமே.

இதைக் கண்டதனாற் போலும் ஒருவர், கலிங்கத்துப் பரணி பாடிய கவிச்சக்கரவர்த்தி சயங்கொண்டாரே இவ்வரும்பதவுரை செய்தார் என்று சொன்னார்.* ஆனால் இது பொருத்தம் அன்று. சயங்கொண்டார் முதற்குலோத்துங்கன் காலத்து வாழ்ந்தார்; அரும்பதவுரைகாரர் இராசராசன் காலம் என்று முடிவு செய் கிறோம். இருவரும் ஏறக்குறைய 80 - 100 ஆண்டு இடைவெளி விட்ட காலத்தில் வாழ்ந்தவர்கள். அன்றியும், தேவாசுர யுத்தம் என்ற கருத்து, தமிழிலக்கியப் பரப்பில் சிந்தாமணியிலும் வேறிடங்களிலும் வருவது.

## அரும்பதவுரை

பொதுவாக அரும்பதம் என்ற தொடர் வைணவ மரபில் ஆட்சியிலுள்ளது. ஜீயர், அரும்பதம் என்பது போன்ற சொல் லாட்சிகள் அங்கு அதிகம். நாலடியார் மதிவரர் உரை பற்றிய சிறப்புப் பாயிரம், 'அரும்பதமிட்ட அழகு'❖ என்று குறிப்

---

* தஞ்சைத் தமிழ்ப் பேரறிஞர் சீனிவாசபிள்ளை எழுதினார். இவர் கருத்தைச் சேகரித்து, தஞ்சை சரஸ்வதி மகால் நூல் நிலையப்பட்டியல் தயாரித்த பண்டித உலகநாதபிள்ளை 'ஜெயங் கொண்டார் செய்த அரும்பதவுரை' (முதல் தொகுதி 1925, பக்கம் 149) என்றே எழுதினார்; இப்பட்டியல் சீனிவாசபிள்ளையால் திருத்திக் கொடுக்கப்பட்டது என்பதும் அறியத்தக்கது. சயங்கொண்டார் என்ற கருத்துக்கு ஆதார மில்லை, கால வேறுபாட்டால் இது பொருந்தவும் பொருந்தாது.

❖ எமது தமிழ் இலக்கிய வரலாறு 13ஆம் நூற்றாண்டு காண்க.

பிடும். எனினும், இவை தோன்ற நெடுங்காலம் முன்னமேயே, அடியார்க்கு நல்லார் 'அரும்பதவுரைகாரர்' என்று குறிப்பிட்டதனாலும், ஐயரவர்கள் இப்பெயரையே கொடுத்துப் பதிப்பித்ததனாலும் அரும்பதவுரை என்ற அரும்பதம் நிலைத்துவிட்டது. இனி இவ்வுரையை ஆராய்ந்து வரும்போது காணும் செய்திகள் மிகப் பல. அவற்றுள் சிறப்பான சிலவற்றைத் தொகுத்து உரையின் இயல்பு, முந்தைய உரைகள், பாடபேதம், மேற்கோள், சொற்பொருள், கருத்து விளக்கம், வடமொழி ஆட்சி, சில வாழ்க்கை முறைகள், இவர் உரையும் அடியார்க்கு நல்லார் உரையும் என்ற பகுதிகளாக இங்கு கூறுவோம்.

### உரை இயல்பு

முத்தமிழ் இலக்கிய இலக்கண நூல்கள் பல இவர் காலத்துக்கு முன்னமேயே மறையத் தொடங்கின போலும். இதை நன்குணர்ந்த இவர் தாம் அறிந்த வரையில் இசை, நாடகம் ஆகிய பகுதிகளில் பல மேற்கோளையும் மரபுகளையும் உணர்த்தி வருகிறார். பொதுவாக மிகவும் சுருக்கமாகவே உரை எழுதுகின்ற இவர், அரங்கேற்றுக்காதை, கானல்வரி முதலிய இடங்களில் மிக விரிவாக எழுதுவதற்கு இவ்வுணர்வே காரணமாகும். அடியார்க்கு நல்லார் காலத்திற்குள்ளாகவே இவை பின்னும் மறைந்து போயின என்று யூகிக்க முடிகிறது.

அரும்பதவுரை என்று அடியார்க்கு நல்லார் சொல்லியதைப் பின்பற்றி ஐயரவர்களும் நாமும் கூறிய போதிலும், இவ்வுரை அரும்பதவுரை மட்டுமன்று. வினைமுடிபு காட்டுதல், பொருள் தொடர்பு காட்டுதல், அரங்கேற்றுக் காதையிலும் கானல் வரியிலும் இன்று அடியார்க்கு நல்லார் உரை இல்லாத பிற பகுதிகளிலும் பேருரையும் பெருவிளக்கமும் கூறுதல், மேற்கோள் தருதல் முதலிய பகுதிகளைப் பார்க்கும்போது, இவ்வுரை அரும்பத உரையன்று, அரியவுரை என்றே கருதத் தோன்றும். சில இடங்களில் விரிவாகப் பொழிப்புரையே கூறியிருக்கிறார் (3: 26 - 36 பார்க்க); இதைத் தொடர்ந்து அரும்பதவுரை மட்டுமல்லாமல் விளக்கவுரையே கூறிவருகிறார். இவற்றால் இவர் மிக்க விரிவு பெற்ற உரை எழுதவல்ல முத்தமிழாசிரியர் என்பது நன்கு விளங்கும். எங்ஙனம் இளங்கோவடிகள் முத்தமிழ்ப் புலமை வாய்ந்த பேராசிரியரும் பெரும்புலவருமாவாரோ, அப்படியே இவ்வரும்பதவுரை எழுதிய உரைகாரரும் முத்தமிழ்ப்

புலமை பெற்றிருந்தமை இளங்கோவடிகளின் நூல் செய்த பாக்கியம்; துர்ப்பாக்கிய வசத்தால் அடியார்க்கு நல்லார் உரை முழுவதும் கிடைக்கவில்லை என்று மட்டும் இப்போது வருந்த வேண்டியுள்ளது.

மிகவும் அபூர்வமாய், உரையிடத்தே செய்யுளோசை அமையும்படி இவர் எழுதியிருப்பதும் குறிப்பிடத்தக்கது (3 : 26): 'மிடறும்* என்றது -

மூலா தாரந் தொடங்கிய மூச்சைக்
காலாற் கிளப்பிக் கருத்தா லியங்கி
ஒன்றெனத் தாக்கி இரண்டெனப் பகுத்துப்
பண்ணீர் மைகளைப் பிறப்பிக்க பட்ட

பாடலியலுக்கு அமைந்த மிடற்றுப் பாடலும் என்றவாறு'. "வாக்கியங்களின் முதலிறுதிகளையேனும், முதலை மட்டுமேனும், சொற்களையேனும் எழுதிப் பொருளெழுதுவதும், ஒன்றையும் எழுதாது பொருளை மட்டும் எழுதிக்கொண்டு போவதும், இவ்வுரையாசிரியருடைய கொள்கையாக இருக்கின்றன" என்பது ஐயரவர்கள் குறிப்பு.

இவர் காலத்திலேயே தொழில்களின் பெயரும், தொழில் செய்வோர் பெயரும் மாறிக் கொண்டு வந்த நிலையைக் கண்டுணர்ந்து இவர் எழுதுகிறார். காருகர், காழியர், பாசவர், ஓசுநர், பரிகடவுநர் என்ற தொழிலாளர் பெயர்களின் உரைகளை காண்க. காருகர் - நெய்வோர்; அச்சுக்கட்டிகள் முதலாயினோருமாம். பரிகடவுநர் - அசுவவாரியர்; பண்ணுவாருமாம். பிறவும் இப்படியே. இவ்வாறு இவர் இரு பெயர்களைச் சொல்வது நமக்கு ஒரு நிலையை உணர்த்துகிறது. நூலின் காலம் அதில் சொல்லியபடி சோழர் ஆட்சி மிகச் சிறந்திருந்த காலம். அப்போது சோழ மன்னன் பேரரசனாக இருந்தபடியினால் அரச பதவியை அடுத்து எண்ணற்ற தொழில்கள் வளர்ந்திருந்தன. இடையில் சோழர் ஆட்சி வீழ்ந்து 'களப்பிரன் என்ற கலியரசன்' நாட்டுள் புகுந்து பாண்டியர் ஆட்சியை வீழ்த்திக் கலைகளையும் நாகரிகத்தையும் சிதைவித்தபோது, தமிழ் நாகரிகத்தின் பகுதியாகச் சிறப்புற்று விளங்கி இருந்த தொழில்கள் அழிந்தன.

---

* பிற்காலத்தில் அவ்வையார் பாடிய விநாயகரகவலில், 'மூலாதாரத்தின் மூண்டெழு கனலைக் - காலால் எழுப்பும் கருத்தறிவித்து' எனவரும் அடிகள் இங்கு நினைவு கூரத்தக்கன.

தொழிலாளரின் பெயரோ அப்பெயர்கள் எதைச் சுட்டுகின்றன என்ற பொருளோ, தெரிய முடியாத காலமாக இருந்தது. சில நூற்றாண்டுகளின் பின்னர் சோழப் பேரரசு மீண்டும் ஓங்கிய காலத்தில், இவ்வரசர்கள் சிவபக்தர்களாக விளங்கி அரச பதவிக்கு உரிய சிறப்புக்கள் அனைத்தையும் சிவாலயத்துக்கே செய்தார்கள். தொழில்கள் மீண்டும் தலையெடுத்தன. இத்தகைய நிலையில் தோன்றி உரை எழுதியவர் அரும்பத உரைகாரர். பண்டைப் பெருமையை உணர்ந்ததோடு, அதே பெருமை தம் காலத்திலும் நிலவியதைக் கண்டார். ஆகவே, இலக்கிய வாயிலாகவும் தம்முடைய பயிற்சியினாலும், தாம் அறிந்த பொருள்களையும் தம் காலத்தில் அவற்றிற்கு வழங்கிய புதுப்பெயரையும் நன்கு நினைந்து குறிப்பிடுகின்றார். இதுவே இவர் முற்காட்டிய இடங்களில் 'என்றுமாம்' என்று இரண்டாவது பெயரைக் குறிப்பிடுவதற்குக் காரணம்.

இராசராச சோழன் காலத்தில்தான் சோழநாடு மாத்திரம் அல்லாமல் தமிழ் நாடே மிக்க சிறப்புப் பெற்றது என்பது எல்லோரும் அறிந்தது. நம் ஆசிரியர் இம் மன்னன் காலத்தில் வாழ்ந்தார் என்று நாம் கூறுவதற்கு இக்கருத்தும் ஆதரவு தருகிறது.

### வேறு உரை

தமக்கு முன்னம் சிலப்பதிகார உரைகள் இருந்தனவென்று இவர் பல இடங்களில் குறிப்பிட்டுச் செல்கிறார். அடைக்கலக் காதையில், ஐயவித்துலாம், கைபெயரூசி, பனை (முரசென்பாருமுளர்) என்பவற்றுக்கு வேறுரை சொல்வாருமுளர் என்று குறிப்பிடுகிறார். 'ஆடக மாடம் - திருவனந்தபுரம்; இரவிபுரம் என்பாருமுளர்': அரங்கேற்றுக் காதையில் எழுத்தை இசைக்கும் குழலோன் என்றவிடத்து, 'அன்றியும் சரிகம பதநி என்பாருமுளர்' என்று எழுதுகிறார்'. 'அரங்கம் - திருவரங்கம்; ஆற்றிடைக் குறை என்பாருமுளர்'. இவையிரண்டும் பொதுவாக இசையுலகிலும் இலக்கியவுலகிலும் நிலவும் கருத்துக்களைக் குறித்தனவாகலாம். இவை போல்வன பின்னும் பல.

### பாடங்கள்

மேலும், வேறு பாடங்களையும் இவர் குறிப்பிடுகிறார். 'கைபெயரூசி - கையின் கட் பொதுக்கும் ஊசி; பொய்யூசி என்று பாடமோதி, மாற்றாரைக் கையைப் பொய்யாக்குமூசி என்பாரு

முளர்', 'கூற்றக் கொண்டிச் சேனை - கூற்றங் கொண்டிச் சேனை என்பது பாடமாயின், கூற்றம் பின் செல்ல இப்படை செல்லு கிறபடியை என்க', 'விலங்கி நிமிர் நெடுங்கண்: விலங்கு பாட மாயின் பக்கமென்க' - என்றெழுதுமிடங்கள் காண்க. நவைநீர் - குற்றத்துக்காகக் கண்ணீர் உகுக்கையால் நவைநீர் என்றார்; நவநீர் என்று பாடமோதி புதிய நீர் என்பாருமுளர். பன்மல ரோங்கி (13: 162) - பன்மரமோங்கி என்றும் பாடம். அருளால் என்று பாடமோதி, அருளாற் சாபம் நீங்கிய என்றுமாம் (3:1); 'தன் கணவனை எங்கணா என்ன' என்று அடியார்க்கு நல்லார் பாடம் கொண்டிருக்க, இவர் எங்கணாய் என்று கொண்டு, எங்குற்றாய் என்று உரை கூறுகிறார். காணிகா என்று ஒரு சொல் மட்டும் அடியார்க்கு நல்லார் கொள்ள, இவர் காணிகா காணிகா என இருமுறை கொண்டு, இரண்டும் விரைவின்கண் வந்தன என்பார். விரைவால் சொல் இரட்டித்தல் வேறிடத்தி லும் குறிப்பிடுவார்.

சில சமயம் இவர் ஒருரையை கூறிவிட்டுப் பின்னர் மற்றோர் உரையைக்கூறுதலும் உண்டு. வழக்குரைகாதையில் 'சொற்றனள் போலும் செயிர்த்தனள் போலும்' என்ற வரிக்குப் பின்வருமாறு எழுதுவார். 'செறுகை - முகக் கோட்டம். செயிர்க்கை - மனக் கோட்டம். அன்றி, செற்றனன் போலும் - மாற்சரியமுடையாள் போலும், செயிர்த்தனள் போலும் - மிக்க கோபமுடையாள் போலும் என்றுமாம்' வழங்கு வில் தடக்கை - வில் வழங்கு தடக்கை; வழங்கு வில் - அம்பை வழங்கும் வில்லென்றுமாம். ஆரம் - சந்தனம், ஆத்தியுமாம். ஐந்து கேள்வி - திதி, வாரம், நட்சத்திரம், யோகம், கரணம் என்று சொல்லிவிட்டுப் பின், நட்பு, ஆட்சி, உச்சம், பகை, நீசக்கோளுமாம் என்றும் கூறுகிறார்.

### மேற்கோள்

இவர் மேற்கோள் காட்டிய நூல்கள் மிகப்பல. இசைத் தமிழ், நாடகத்தமிழ் பற்றி இவர் காட்டும் மேற்கோள் செய்யுட்கள் எண்ணிறந்தன. இவை எந்த நூல்களில் உள்ளன என்று அறிய வழியே இல்லை. அகத்தியச் சொல்லதிகாரச் சூத்திரம், இசைத் தமிழ் பதினாறு படலத்துள் கரணவோத்து, செயிற்றியனார் என்பன பெயர் குறிப்பிட்டுச் சொல்கிறார்; நூல்கள் இல்லை. இவர் காட்டும் நூல்களுள் தெரிந்தவை பின்வருவன: கலித் தொகை, புறநானூறு, திருமுருகாற்றுப்படை, திருக்குறள்,

புறப்பொருள் வெண்பாமாலை, திவாகரம், நான்மணிக்கடிகை, பழமொழி நானூறு, சினேந்திரமாலை. இவர் பெயர் குறிப்பிடு கின்ற மேற்கோள் நூல்கள் நற்றிணை, மதுரைக்காஞ்சி, சிந்தா மணி. பெயர் தெரிந்தும் கிடைக்காத நூல்கள்: ஆசிரியமாலை, வளையாபதி, திருக்குறள் முதலான நூற்கருத்துக்களை, நூற் பெயர் குறிப்பிடாமலே தம் உரைநடையில் எழுதிக்கொண்டு செல்வது இவர் இயல்பு.

இவர் முத்தமிழ்ப் புலமை உடையவரென்பது மட்டுமல்ல, பொருளிலக்கணமும் நன்றாய் அறிந்தவர்; தக்க இடங்களில் பொருள் இலக்கணக் குறிப்புக்கள் தருகிறார்: (3:16) கானல் வரியில் ஒரு பாடலை, 'குறியிடத்துச் சென்ற பாங்கன் தலை மகனது காதல் மிகுதிக் குறிப்பினால் அறிந்து கூடியது' என்று எழுதுகிறார் (துறை மேய் வலம்புரி என்ற பாடல்). குன்றக் குரவை - எற்றொன்றும் முதலாக மூன்று பாடல் - சிறைப்புறம்: தோழிக்குத் தலைமகன் சொல்லியது. முன்னிலைப் புறமொழியு மாம் என்பார். அகப்பொருள் துறைகளை இவ்வாறு விளக்கு கின்ற இவர் காட்சிக்காதையில் தொடர்பாகச் சொல்லப்பட் டுள்ள புறத்துறைகள் பத்துக்கு எந்த விளக்கமும் எழுதவில்லை.

"ஈங்குச் சிங்களமென வழங்கி வருகின்ற கூத்துச் சொல் விற்றிலரெனின், 'சிங்களம் இருவகை நிலையினும் எய்தும்' என்னுஞ் சூத்திரத்தால் அதற்கு வேறு கால்களின்மையி னென்பது; பாலைக்கு நிலமில்லாதது போல வென்க' என்று எழுதுகிறார். 'காமஞ்சாலா இளமையோள் வயின் - ஏமஞ் சாலா இடும்பை எய்தியோன்' சொல்லியது என இவர் தொல் காப்பிய அகத்திணையியல் சூத்திரத்தை இங்கு எடுத்துக் கூறு கிறார். தாலப்புல் - பனையாகிய புறக்காழ் மரம் என்று கூறு மிடத்து, 'புறக்காழனவே புல்லென மொழிப' என்ற தொல் காப்பியக் கருத்தைக் கொண்டு எழுதுகிறார்.

களவுக் கலையை விளக்கி முதல் நூல் செய்தார் முருகன். அவரைப் பின்பற்றி கனக சக்தி, பாஸ்கர நந்தி, யோகாசிரியன் மூவரும் வழிநூல் செய்தார்கள் என்று சருவிலகன் என்ற பாத்திரம் வாயிலாகச் சொல்கிறது மிருச்சகடிகம். கரவடநூல் (களவுநூல்) என்றும் குறிப்பிடுகிறார். கரவட சாத்திரம் - களவு நூல், தந்திர கானம், ஸ்தேய சாத்திரம் கசரினி ஆசிரியர் கர்ணீ கதர் செய்தார் என்று சொல்கிறது தக்கயாகப் பரணி (25) உரை.

வடமொழி நூல்களில், ஐந்திரவியாகரணம், மயமதம்* என்னும் சிற்ப நூல் ஆகியவற்றைக் குறிப்பிடுகிறார். வேனிற் காதை உரையில், அகநிலை மருதமும் புறநிலை மருதமும் அருகியல் மருதமும் நால்வகைச் சாதியும் என்ற வரிகளுக்கு இவர் இலக்கண மேற்கோளைத் தந்து அதன்மேல் அழகிய இலக்கிய மேற்கோளும் தருகிறார்.

ஊர்க திண்தேர் ஊர்தற் கின்னே
நேர்க பாக நீயா வண்ணம்.

அங்கட் பொய்கை யூரன் கேண்மை
திங்க ளோர்நா ளாகுந் தோழி.

வந்தா னூரன் மென்தோள் வளைய
கன்றாய் போது காணாய் தோழி.

மல்லூர் ..... நோவ எம்முன்
சொல்லற் பாண சொல்லுங் காலை
யெல்லி வந்த நங்கைக் கெல்லாஞ்
சொல்லுங் காலைச் சொல்லு நீயே.

இப்பாடல்களை முறையே நால்வகைச் சாதிக்கும் பாட்டாகக் காட்டிய பிறகு, ஓர் அழகிய விருத்தப் பாடலைத் தனியே தந்துள்ளார்.

மன்னு மளிகண் மலர்தேடி மதுவையுண்டு வரைதோறும்
பன்னு சாரலவையெங்கும் பற்றி யார்க்கும் வகையேபோன்
முன்ன மோசை பலவாகி முழுவதும் வேறாய் மிட றொன்றாய்த்
தென்ன வென்னுமிசை வளர்த்துப் பண்ணாமாறு தேன்போல.

வழக்கமாக இவர் உரையையும் மேற்கோளையும் அப்படியே எடுத்தெழுதி மேலும் விரிவு சொல்லுகின்ற அடியார்க்கு நல்லார் இந்த இடத்தில் எந்த விளக்கமும் தரவில்லை; அரும்பத உரைகாரர் காட்டிய மேற்கோள்களைக் கூடச் சொல்லவில்லை.

ஊர்க பாக ஒருவினை கழிய — அகம். 44, வரி. 6

இவர் காட்டிய பழமொழிகள்: தான் சாக உலகு கவிழும்; மறக்குடி அறம் செய்யக் கெடும்.

---

* மயமதம் என்ற வடமொழி நூல் தமிழ் உரையுடன் இருபாகங்களாகத் தஞ்சை சரசுவதி மகால் வெளியீடாக 1966, 1968இல் அச்சிடப்பட்டுள்ளது.

## சொற்பொருள்

சில சொற்களுக்கு இவர் விளக்கம் கூறுவது மிக்க சுவைபட உள்ளது. ஒழியா விளக்கு - விடிவிளக்கு. தெய்வ உத்தி - சீதேவி என்னும் ஓர் அணிகலன். தர்ச்சனிவிரல் - சுட்டாமுட்டி. கொச்சகம் - முகநிலை; முரிகளாற் பயந்த வேறுபடு பொருண்மையெல்லாம் தன்னகத்தடக்கி ஒரு நெறிப்படுத்தலாற் கொச்சகமெனப்படும். வம்பப் பரத்தை, வம்பு - புதுமை; பரத்தைத் தன்மைக்குப் புதியவள். தவ்வை - தமக்கை, தாய்; முறையன்று என்று எழுதுவது விளக்கமாயுள்ளது. தீவினைச் சிலம்பு - தீவினை விளைதற்குக் காரணமான சிலம்பு. நிரயத் தானை - மாற்றார்க்கு நரக வேதனையைச் செய்யுந் தானை. காட்சி - கற்கொள்ள மனத்தால் நிச்சயித்தல். காவிரிப் பாவை தன் புதல்வர் - வேளாளர். சிங்காமை - சுருங்காமை. குரவை - கைகோத்தாடல். பரதர் - கடலோடிகள். வெண்குன்றம் - சுவாமி மலை என்பார்: ஏரகத்துக்கு இவர் சொல்லும் உரை ஏட்டில் பொடிந்துபோய் விட்டது. குயிலுவர் - தோற்கருவி, துளைக்கருவி, நரப்புக் கருவி, உருக்குக் கருவியாளர். (உருக்குக் கருவி என்பது உலோகத்தை உருக்கி வார்த்த வெண்கலத் தாளம் போன்ற இசைக் கருவியாகலாம்) பன்முறைக் கருவியர் - படைக்கும், விழவுக்கும் கொட்டுவார். (இவர் குறிப்பிடாவிடில் இப்பொருள் விளங்காது) பாரதி அரங்கம்: பாரதி - பைரவி; அரங்கம் - சுடுகாடு. இவள் ஆடுதலால் பாரதியரங்கென்று சுடுகாட்டுக்குப் பெயராயிற்று. ‘அத்திரி கோவேறு கழுதை; குதிரையில் ஒரு சாதி’ - என்று எழுதுகிறார். இதை இவர் விளக்கியுரைக்க வேண்டிய நிலையைக் காணும் போது, ஒரு கால் இவர் காலத்தையொட்டியே இப்பிராணி தமிழ்நாட்டுக்கு வந்தது போலும். (பின்னே பார்க்க). கன்றிய கள்வன் - களவில் தழும்பினவன். செய்யாக் கோலம் - பிறவி யழகு. வீரபத்தினி - சீறிய கற்புடையாள் என்று இவர் சொல்கிறார்; இத்தொடர் பின்னர் அடியார்க்கு நல்லார் ஆறிய கற்பும் சீறிய கற்பும் எனச் சொல்வதற்கு அடி எடுத்துக் கொடுத்ததாகும். அனுட்டான ஓசை - இவரே இச்சொல்லை முதலில் சொல்லுகிறார் போலும். இவர் சந்தானரல்லர், சைவர்.

## கருத்து விளக்கம்

சொற்பொருள் விளக்குவது போல, கருத்தை விளக்குவதும் மிக்க அருமையாயுள்ளது. “கண்ணகி கருங்கண் - கண்ணகிக்குப் புணர்ச்சியில்லாமையால் நிறை கரந்து துன்பத்தாற் கண்கள்

நீருகுத்தன். மாதவி செங்கண் என்றுரைத்தது மாதவிக்குப் புணர்ச்சி விதும்பலால்; அகத்து நிறை கரந்தொளித்து இன்பத் தாற் கண்கள் நீருகுத்தன. கண்ணகிக்கு நிறை கரத்தல், கற்பாற் பரிகரப்பட்டாதாதல்; ஆற்றாமை மிகுதி கூறிற்று. மாதவிக்கு நிறை நிறுத்தலைக் கரந்து காமத்தாலே நீருகுத்தன. கண்ணகிக்கு அழுகைக் கண்ணீர். மாதவிக்கு உவகைக் கண்ணீர்". நடையால் வருந்திய கண்ணகி மதுரை எவ்வளவு தூரம் எனக்கேட்க, கோவலன் 'ஆறைங்காதம்' என்று கூறுகிறான்; உலக இயல்பை யொட்டி, தூரம் குறைவெனத் தோற்றும்படி சொன்னான் என்று உரைகாரர் நயமாகக் கூறுகிறார். ஆறைங்காதம் - முப்பது காதம்; ஆறைங்காதம் என்றான், அவட்கு அறுகாதம் ஐங்காதம் என்றாற் போலத் தோன்ற. "வரைபொருள் வேட்கையேன் - பொருளீட்டும் வேட்கையேன். பொருள் வரைதல் வேட்கை யென்க; வரைதல் தன்னிடத்து ஆக்குதல்; இன்னதற்கு மேற் பட்டது தானத்துக்கே என்று வரைந்திடுதலுமாம்" என்று உரைப்பதும் காணத்தக்கது. கோழி உறையூர் என்பது எல்லோரும் அறிந்த செய்தி. இவர் விசேடக் கருத்துக்களைக் குறிப்பிடுகி றார்: 'புறத்தே சிறையையுடைய கோழி உறையூர் ... வாரணம்: ஆகுபெயர் யானையைக் கோழி முருக்கலால் கோழியென்று பெயராயிற்று. யானையைச் சயித்த கோழி தோன்றினவிடம் வலியுடைத்தென்று கருதி அவ்விடத்து அதன் பெயராலே சோழன் ஊர் காண்கின்ற பொழுது, சிறையும் கழுத்துமாக ஆக்கியவதனால் புறம்பே சிறையையுடைய கோழியென்றா யிற்று.' கோவலனும் கண்ணகியும் கவுந்தியடிகளோடு, ஓடமேறி வையை கடந்தார்கள் என்ற இடத்து மரப்புணை என்ற தொட ருக்குக் கூறும் விளக்கம் பொருளுடையது. 'மரப்புணை - கட்டுப் புணையில் ஓடத்தில் பலருமேறுவராதலால், தாங்கள் மூவரும் தனியே மரப்புணையிலே போனார்கள் எனக் கொள்க'. அதே இடத்தில் வையையாற்றை நூலாசிரியர் ஒரு பெண்ணாக உவமித்துக் கூறிய கருத்துக்களை இவர் தொகுத்து முடித்துக் காட்டுவது மிக்க அழகுடையது. 'கொடுங்கரையாகிய அல் குலையும், துருத்தியாகிய முலையினையும், கவிராகிய வாயையும், முல்லையாகிய நகையையும், கயலாகிய கண்ணையும், அறலாகிய கூந்தலையுமுடைய வையையென்னு மகள் மலராகிய ஆடையை முட்டாக்கிட்டு' - (13: 159 - 173). பொது நீங்கு திருநிழல் - பிறிது மரம்போல ஆதித்தனுடன் திரியாது நிற்கும் நிழல்; ஆவது ஆதித்தன் கிரணத்தாற் சாயாதே நிற்றல். புலம்பெயர் புலவன் -

வேறொரு தேசத்திலிருந்து வந்தவன், பரதேசி; இன்று சாமானியமாய்ப் பிச்சைக்காரரைக் குறிக்க வழங்கும் பரதேசி என்ற சொல்லின் உண்மைப் பொருளை இது காட்டுகிறது. ஆம்பலந் தீங்குழல் - ஆம்பல் முதலான சில கருவி. ஆம்பல் பண்ணுமாம். மொழியாம்பல், வாயாம்பல், முத்தாம்பல் என்று சொல்லுவர் பண்ணுக்கு. மூவாக் கடம்பு: வஞ்சத்தால் நின்றதாதலின், மூப்பின்றி ஒரு நாளைப் போல நின்ற கடம்பு.

தலைக்கோலுக்கு, அரசர் பொருதுடைந்து புறங்கொடுக்கப் பறிக்கப்பட்ட கொற்றக் குடையின் காம்பைக் கொள்ளுதல் என்று மூலத்தையொட்டி எழுதிவிட்டு, மேலும் விளக்கம் கூறுகிறார்: "தலைக்கோல் கொள்ளுமிடத்து, மாற்றுவேந்தர் எயிற்புறத்து வெட்டின மூங்கிலும், புண்ணிய வரையின் மூங்கிலும், மாற்றரசர் குடைக்காம்பும் ஆம்." இதனால் பண்டைய மரபுகள் நன்கு தெரிய வருகின்றன. வாழ்த்துக் காதையில், 'செங்குட்டுவற்குக் கண்ணகியார் கடவுள் நல்லணி காட்டியது' என்ற தலைப்புடைய பாடலில், 'தென்னவன் தீதிலன், தேவர் கோன் தன் கோயில், நல்விருந்தாயினான், நான் அவன் தன் மகள்' என்றவிடத்து, 'முன் மானிட யாக்கையிற் கொண்ட சிவப் பாறித் தேவயாக்கை பெறுதற்குக் காரணமாயினான் என்பது பற்றி நான் அவன் மகள் என்றாள்' என்று விளக்குகிறார்.

'கணவனை யிழந்தோர்க்குக் காட்டுவது இல்' என்ற தொடருக்கு இவர் கூறும் விளக்கம் நன்கறிந்தது: "தந்தை தாய் முதலாயினோரை இழந்தார்க்கு அம்முறை சொல்லிப் பிறரைக் காட்டலாம். இஃது அவ்வாறு வரக்காணும் சொல்லாகாமையின் காட்டுவதில் என்றாள்".

'தமிழாவது, வடவெழுத்து ஒரீஇ வந்த எழுத்தானே கட்டப் பட்ட வாக்கியக் கூறுகளும் இயலிசை நாடகமென்று சொல்லப் படுகின்ற மூன்று தமிழ்களும்.'

புராணக் கதைகளைச் சில இடங்களில் இவர் விளக்கிக் கூறுவதும் பயனுடையதாக உள்ளது. சுடரொடு திரிதரு முனிகள் - ஆதித்தன் வெப்பம் தணிதல் காரணமாக அவனுடனே கூடித் திரியும் முனிவர். மரக்கால் - அவுணர் தன்மேல் பாம்புந் தேளும் மாயத்தினாலே வர விடுகையாற் காலிலே மரத்தைக் கட்டி வாளையெடுத்து (துர்க்கை) நின்றாடுங் கூத்து. கோழி என்பதன் விளக்கம் முன்னே சொல்லப்பட்டது.

நூலாசிரியர் பாடலிலுள்ள சிலேடைப் பொருளைச் சில இடங்களில் உணர்த்துகிறார். 'காதற் கொழுநனைப் பிரிந்தல ரெய்தா மாதர்க் கொடுங்குழை மாதவி' என்றது சிலேடை; காதலிக்கப்பட்ட தன் கொழுநனைப் பிரிந்து வேறுபட்டு அலருறாத அழகிய வளைந்த மகரக் குழையையுடைய மாதவி என்றும், எல்லோரும் காதலிக்கும் கொழுவிய நனையாந் தன்மையை விட்டு முதிர்ந்த அலராகாத வளைந்த தளிரை யுடைய குருக்கத்தி என்றும் சொல்லுக,' 'மலர்ப் பூந்துருத்திப் பால்புடை கொண்டு பன்மலரோங்கி - எதிரெதிர் விளங்கிய கதிரிள வனமுலை' (13: 161 - 3) என்ற வரிகளின் உரையும் காண்க: பால்புடை கொண்டு பன்மலரோங்கி எதிரெதிர் விளங்கிய வாலுகங் குவைஇய மலர்ப் பூந்துருத்தியாகிய கதிரிளமுலை; பக்கம் புடை கொண்டு மலரோங்கி ஒன்றையொன்று நெருங்கு கின்ற துருத்தி.

## வடமொழி

இவ்வரும்பத வுரைகாரர் வடமொழி வல்லுநர். அது காரணமாக வடமொழியின் சொற்களும் தொடர்களும் எளி தாக இவர் நூலில் பயில்கின்றன. பின்வருவன சில எடுத்துக் காட்டுக்கள். கையுறை - பாகுடம். வஞ்சமோ - கிருத்திரிமமோ. கள்வரிக் கோலம் - கிருத்திரிம வேடம். கருணை மறவ - கிருபா வீரனே. வெள்வேற் கொற்றம் - இராசநீதி; கோமுறை - இராச நீதி. படிப்புறம் - அர்ச்சனா போகம். வானவர் போற்றும் வழி - மோட்ச மார்க்கம். வேளாவிக்கோ மாளிகை - வேளாவிக்கோ மந்திரம். நூற் கிடக்கை - வேத விதி. பெற்றோரை மாதா பிதாக் கள் என்றே கூறுவார்; கோவலன் மாதா, செங்குட்டுவன் மாதா என்றே எழுதுகிறார். கதிரொழி காறும் - சந்திராதித் தருள்ளள வும். மங்கல வணி - மாங்கல்ய சூத்திரம். அந்திவிழவு - சீபலி. நீரணி விழவு - திருவபிடேக விழவு.

நான்மறை யந்தணர் நவின்ற ஓசை என்றவிடத்து, முனிவர் சத்திரமோதுகின்ற ஓசை என்று குறிப்பிட்டு எழுதுகிறார்; 'சத் திரமாவது யசுர்வேத சாகையில் அருணத்தில் ஐந்தாம் பிரிவு' என்பது ஐயரவர்கள் குறிப்பு.

அடைக்கலக் காதையில் வரும் 'வடமொழி வாசகம் செய்த நல்லேடு' என்ற இடத்தில், 'வடமொழி வாசகமாவது ஒரு கிரந்தம்; அது,

அபரீக்ஷ்ய ந கர்த்தவ்யம் கர்த்தவ்யம் ஸுபரீக்ஷிதம்
பச்சாத் பவதி ஸந்தாபம் ப்ராஹ்மணீ நகுலம் யதா.

என்பது' என்று பஞ்ச தந்திரப் பாடலைத் தெரிந்து இவர் குறிப்பிடுகிறார். கிரந்தம் என்பது வடமொழியில், 32 எழுத்துக் கொண்ட ஒரு செய்யுள். இப்பாடல் ஒரு கிரந்தம் என்று இவர் தெரிந்து கூறுவதும் இவருடைய வடமொழிப் பயிற்சியை நன்கு புலப்படுத்தும்.

**வாழ்க்கை முறை**

இவர் ஆங்காங்கு சிற்சில சுவையான வாழ்க்கை முறைகளையும் புலப்படுத்துகிறார். வெள்ளயிர் - புகைக்கும் கண்டு சருக்கரை; கண்டு சருக்கரையோடு அகிலைப் புகைத்தல் மரபு என்கிறார். வேயா மாடம் - தட்டோடிட்டுச் சாந்து வாரப் பட்டன (சுண்ணாம்பு பூசப் பெற்றன என்பது போலும்); நிலா முற்றமுமாம்; இங்கு நிலா முற்றம் என்பது மட்டும் அடியார்க்கு நல்லார் கொண்டார். தட்டோடு இடுதல், சாந்து பூசுதல் என்ற இன்றைய கட்டிட அமைப்பும் சொல் வழக்காறும் அன்றும் இருந்தமை இதனால் பெறுகிறோம். அணிகலன் செய்யும் வேலை பல பிரிவுகளாக இருந்தது; பொன்வேலை செய்வோர் தனி; மணிவேலை செய்வோர் வேறு; இவர்கள் முறையே உருக்குத் தட்டார், இரத்தினப் பணித்தட்டார் என்று பெயர் பெற்றனர். ‘மறக்குடி அறஞ் செய்யக் கெடும்' என்பது ஒரு வழக்கு. இதனால் மறக்குடியினருக்கு மறமே இயல்பு. அறம் இயல்பன்று என்ற கருத்து பெறப்படுகிறது; அறம் செய்ய முற்பட்டால் மறம் ஆகிய வீரத்தன்மை பாழ்படும் என்பது இவர் கருத்துப் போலும். ஊர்காண் காதையில் எட்டு வரிகளில் குறிப்பிடப்பட்டுள்ள உடையும் மலரலங்காரமும், ‘கார் காலத்துப் பரக்க அணிவர்' என்று கூறுகிறார். சங்குவளை கைக்கு இடும்போது ஒரோவொன்று இடுவதே வழக்கம் என்பார். கண்ணகி சமையல் செய்தலைக் குறிப்பிடும் இடத்தில் கொம்மட்டி மாதுளங்காய் புளித்த கறி ஆக்குதற்குச் சிறக்கும் என்கிறார். மதுரை நகரில் பொற்கொல்லன் கோவலன் எதிரே வந்ததைக் கூறுமிடத்து, அவன் சட்டையணிந்து கொண்டு தன் பின்னே நூறு நுண்வினைக் கொல்லர் வந்தபோதிலும், அவன் ‘விலங்குநடைச் செலவுடையவன்' என்று நூலாசிரியர் சொன்னார்; ‘இழிகுலத்தோனாதலின் உயர்ந்தோர் வந்த இடமெங்கும் விலங்கி நடத்தல்' என்று அக்கால ஒழுகலாற்றைக் குறிப்பிட்டு இவர் உரை எழுதுகிறார்.

பாண்டியன் முன்னர்ச் சென்று கண்ணகி வரவை அறிவிக்கின்ற வாயிலோன் வணங்கும் நிலையில் ஆறுமுறை வாழி என்று சொல்லுகிறான். இதற்கு உரைகாரர் வாழ்த்துப் பலவாயின, வணங்கும் தோறும் சொல்லுதலின் என்று எழுதுகிறார் இதனால் நாம் பெறுவது அரசரை வணங்கினோர் பலமுறை பணிந்தெழுதல் வழக்கமாய் இருந்தது என்பது. கடலாடுகாதையுரையில் இவர் தரும் குறிப்புக்களால் அக்காலத்து அணிகலன்கள் பற்றிய மிகச் சிறந்த விளக்கம் கிடைக்கிறது.

## அடியார்க்கு நல்லாரும் இவரும்

பொதுவாக, அடியார்க்கு நல்லார் உரையே மிக்க பிரசித்தி பெற்றிருக்கிறது; முத்தமிழுக்குமுரிய பேரிலக்கியமாக, தமிழர் பெருமை கூறிக் கொள்ளும் தமிழ்க் கதை கொண்ட மூல இலக்கியமாக, விளங்கும் சிலப்பதிகாரத்துக்கு உரை செய்யும் எல்லாத் தகுதியும் அவருக்கு உண்டென்பது கற்றோர் நன்கு கண்டது: கற்றோர் இதயம் களிக்குமாறு அவர் சிறப்பான உரை எழுதியுள்ளார். அவருக்குக் கருவியாகவும் வழிகாட்டியாகவும் ஆதரவுமாகவும் இருந்த அரும்பதவுரையின் சிறப்பை எல்லோரும் அவ்வளவு நன்றாக உணரவில்லை. அடியார்க்கு நல்லார் ஒவ்வொரு தொடருக்கும் அரும்பத உரையைச் சொல்லியே மேல் எழுதுகிறார். காரணம், அதைவிடச் சிறப்பாகச் சொல்வதற்குச் சொற்கள் இல்லை, சொல்ல இயலாது என்பது ஒன்று; மற்றது அரும்பதவுரையின் காலத்தில் இருந்த பொருள்களும் மரபுகளும் நூல்களும் அடுத்த நூறு ஆண்டுகளில் மறைந்துவிட்டன என்பது மற்றொன்று. சில எடுத்துக் காட்டுக்கள்: கண்ணகியை முன் கூறிற்று, கதைக்கு நாயகியாதலின் (1 : 29), மண்தேய்த்த புகழ் - பூமி சிறுகும்படி வளர்ந்த புகழ் (1 : 36) - புகழ் வளரப் பூமி சிறுகலான். செம்பியனையும் புகாரினையும் சிறப்பித்தன; செம்பியன் சிறப்பும் புகார்ச் சிறப்பும் கூறிய வாறாயிற்று என்பர் அடியார்க்கு நல்லார்; செம்பியன் என்ற சொல்லைக் கூட அவர் மாற்றவில்லை. அருள - அவன் சாபமிட்டருள (3 : 1). இளவரசாளன் - நெறிபட்டுச் செய்யாத ஒருவன் (8 : 5) நெறிபடச் செய்யான். கண் கூடுவரி - ஒருவர் கூட்டவன்றித் தானே வந்து நிற்கும் நிலைமை (8 : 77). பனித்தென்றார், மாலைக் காலத்துப் பனியுமுண்டாகலான் (4 : 6); பனி பெய்யப்பட்டு, அக்காலத்தில் பனி பெய்யுமாகலின் என்பது

அடியார்க்கு நல்லார். மண்ணீட்டாளர்: சுதையாற் பாவை யுள்ளிட்டன பண்ணுவார்; மண் - சுதை. மண்ணோடியைந்த மரத்தனையர் (குறள்) என்றாராகலின்; குயவருமாம் (5 : 30, அரும்பத.); சிற்பாசாரிகளுமாய் ....... அடியார்க்கு நல்லார். மாலையைக் குறும்பு என்றார், இடைநின்ற காலத்துப் புகுந்து வருத்துதலின் (4 : 24). மறையோரி ருக்கை - பஞ்சக்கிராமிகள் இருப்பு (5 : 42) இவ்வண்ணமே இவர் உரை எழுதியுள்ள இடங் கள் முழுமையும் அரும்பத வுரையாகிய அடிப்படையின் மேல் எழுப்பிய கட்டிடம் போல் அமைந்திருக்கக் காணலாம்.

சில இடங்களில் அரும்பதவுரை காரரினும் வேறுபட்ட உரையை அடியார்க்கு நல்லார் தருகிறார்; (5 : 40) கோவியன் வீதி - செண்டு வெளிப்புறத்தெரு - இராசமார்க்க மெனினுமாம் (அரும்.); இராசப் பெருந்தெரு; செண்டு வெளிப்புறத் தெரு என்பாருமுளர் (அடியார்.) துணங்கை - சிங்கி என்று கூறி, ஒரு திவாகரச் சூத்திரத்தைத் தருகிறார் அரும்பதவுரைகாரர். அடியார்க்கு நல்லார் இச்சூத்திரத்தைத் தந்து பின் சிங்கி என் பாருமுளர் என்றெழுதுகிறார் (5 : 70) காவற் கணிகையர் இராக் கடை வேசியர் (அரும்); களத்தாடும் கூத்திகள்; இராக் கடைப் பெண்டுகள் என்பாருமுளர் (அடி).

**காலம்**

இவ்வுரையாசிரியர் காலத்தை அறிவதற்குத். திட்டமான ஆதாரங்கள் இல்லை. புறப்பொருள் வெண்பா மாலையை இவர் காட்டுவதால், அந்நூலின் காலமாகிய ஒன்பதாம் நூற் றாண்டுக்கு இவர் பிற்பட்டவராகிறார். ஆராய்ச்சியாளர் ஒரு கருத்தைக் கூறுவர். நரசிம்ம வர்மனுடைய படைத்தலைவராக மேலைச் சாளுக்கியர் மீது படை நடத்திச் சென்று வெற்றி பெற்று, வாதாபியை அழித்து வெற்றித் தம்பம் நாட்டிய தளபதி யான சிறுத்தொண்டர் வாதாபியிலிருந்த விநாயகரைக் கொண்டு வந்து தம் ஊராகிய திருச்செங்காட்டங்குடியில் பிரதிட்டை செய்தார்; அவ்விநாயகர் வாதாபி கணபதி என்ற பெயரால் இன்றும் வழங்கப் பெறுகிறார்; அக்காலம் முதற்கொண்டே தமிழ்நாட்டில் தனி விநாயகர் வணக்கம் ஏற்பட்டது என்பது அவர்கள் கருத்து. (இது முழுமையும் ஏற்றுக் கொள்ளக் கூடியது அன்று. சங்க நூல்களிலேயே விநாயகர் பற்றிய குறிப்புக்கள் மிகப் பல காணப்படுகின்றன. அன்றியும், அப்பர் காலத்துக்கும் சம்பந்தர் காலத்துக்கும் நெடுநாள் முன்னமேயே, இருக்கிலங்கு

திருமொழிவாய் எண் தோள் ஈசற்கு, உலகம் ஆண்ட திருக் குலத்து வளச் சோழன் எழில் மாடக் கோயில் எழுபது செய்த காலத்தில், மூல லிங்கத்துக்கு மட்டும் நிழல் அமைக்கவில்லை; விநாயகருள்ளிட்ட பிரதான தெய்வங்களுக்கெல்லாம் பெருங் கோயிலாக, மாடக்கோயில் அமைத்தான் என்பதே வரலாறு) அவர்கள் கருத்தின்படி ஏழாம் நூற்றாண்டில் சிறுத்தொண்டர் விநாயகர் படிமத்தை முதன் முதலில் தமிழ்நாட்டில் பிரதிட்டை செய்தாரென்றால், நூல் முகப்பில் விநாயக வணக்கம் (காப்பு) கூறுவது நீண்ட நாள் பிற்பட்டே ஏற்பட்டிருக்கும்; எட்டு ஒன்பது நூற்றாண்டுகளுக்கும் பின்னரே இவ்வமைப்பு ஓர் இலக்கிய மரபாகிவிட்டது என்பதாகும். இதன்படி பார்த்தாலுங் கூட, விநாயகர் காப்புச் சொல்லி உரை செய்யத் தொடங்கும் இவ் வரும்பத வுரைகாரர் 10 அல்லது 11 ஆம் நூற்றாண்டினராகலாம்.

இவர் காலத்தைக் குறிப்பிட்ட போது, அத்திரி என்ற ஒரு புதுச்சொல்லை ஆராய்ந்தோம். அத்திரி - கோவேறு கழுதை என்ற பொருள் பிங்கல நிகண்டிலும் காணப்படுகிறது (2493) விரை ஐந்து என்பதற்கு எடுத்துக்காட்டாக இவர் பிங்கலச் சூத்திரத்தைத் தருவதாலும் இச்சொல்லை இப்பொருளில் விளக்குவதாலும் இவர் பிங்கலத்துக்குப் பிற்பட்டவர் என்ற கருத்து வலியுறுகிறது.

இவரையடுத்து அடியார்க்கு நல்லார் தோன்றி, இவர் உரையை நன்கு பயின்று தாமும் சிலப்பதிகார விரிவுரையொன்று எழுதினார். அவர் காலம் 1150 - 1175 ஆதல் பொருந்தும் என்று முடிவு செய்திருப்பதால்,* அவருக்கு முந்தியவராகிய அரும்பத வுரைகாரர் காலம் பதினொராம் நூற்றாண்டென்று கொள்வது பொருந்தும்.

இக்கருத்தை .வலியுறுத்தும் வகையில் கிடைக்கும் இரு குறிப்புக்களை இனிக் கூறுவோம். அத்திரி என்ற ஒரு சொல்லை இளங்கோவடிகள் உபயோகிக்கிறார். கடலாடச் சென்ற கோவலன் அத்திரி மீது இவர்ந்து சென்றான் என்கிறார். 'வான வண் கையன் அத்திரி ஏற' என்பது அவர் கூற்று. அத்திரி என்பது மூலம் விளங்காத ஒரு சொல். கழுதை என்று திவாகரமும், ஒட்டகம் என்று பிங்கலமும் கூறுகின்றன. 'மனப் பேரத்திரி'

---

* எமது தமிழ் இலக்கிய வரலாறு, 12ஆம் நூற்றாண்டு காண்க

என்ற இடத்து, மனமென்னும் குதிரை என்று ஞானாமிர்த வுரை (12ஆம் நூற்றாண்டு)கூறுகிறது. திவாகரமும், பிங்கலமும், 9, 10 ஆம் நூற்றாண்டுகள் ஆகலாம். அரும்பதவுரைகாரர், அத்திரி என்பது கோவேறு கழுதை, குதிரையில் ஒரு சாதி என்று எழுது கிறார். இதை அடியார்க்கு நல்லார் அப்படியே ஏற்றுக் கொண்டு, கோவலன் இராசவாகனத்தின் மீது சென்றான், அத்திரி - கோவேறு கழுதை என்று எழுதுகிறார். இராச வாகனம் என்ற பெயர் கோ ஏறு கழுதை என்பதன் வடமொழிபெயர்ப்பு என்று தெளிவாகப் புலப்படும். 9ஆம் நூற்றாண்டில் கழுதையாக இருந்த அத்திரி என்ற சொல், 12ஆம் நூற்றாண்டில் குதிரையாக மாறிய போது, இடையில் கோவேறு கழுதை நிலை வழியாக வளர்ந்திருந்தது என்று நாம் கொள்வது பிழையாகாது. அப்படி யானால் கோவேறு கழுதை என்று பெயர் சொல்லுகிற அரும்பத வுரைகாரர் காலம் 9க்கும் 12க்கும் இடைப்பட்ட காலம்: 11ஆம் நூற்றாண்டு என்று கருதலாம். (கோவேறு கழுதை என்பது ஆண் கழுதைக்கும் பெண் குதிரைக்கும் பிறந்த பிராணி; ஆங்கிலத்தில் ம்யூல்) நாம் இங்கு கூறிய கருத்து முடிவான கருத்தல்லவாயினும், ஆராய்ந்து கொள்ளத்தக்கது.

இரண்டாவதாக, அர்ச்சனா போகம் என்ற தொடரும் இங்கு கருதற்குரியது. கண்ணகிக்குச் செங்குட்டுவன் கோயில் அமைத்து அருச்சருக்கு மானியம் அளித்தான் என்று கூறு மிடத்து, இளங்கோவடிகள், 'பத்தினிக் கோட்டப் படிப்புறம் வகுத்து' என்று கூறுகிறார். பத்தினிக் கோட்டம் - கண்ணகி கோயில். படிப்புறம் - அர்ச்சனா போகம் என்று அரும்பத வுரைகாரர் எழுதுகிறார். அர்ச்சனா போகமாவது, கோயில் அர்ச்சகருக்கு மானியமாக அளிக்கும் நிலம். படிப்புறம் என்ற இளங்கோவடிகள் தொடருக்கு, இவர் அர்ச்சனா போகம் என்று உரை எழுதுகிறார். இத்தொடர் இவர் காலத்தில் நன்கு பழக்க மான, பெரிதும் வழக்கிலுள்ள, ஒரு தொடர் போலும். இவர் காலத்தில் சோழ மன்னர் ஆட்சி பொன்னி நாட்டில் நிலை பெற்று வளர்ந்து வந்தது. இவர்கள் எண்ணற்ற கற்கோயில்கள் கட்டி, அவற்றில் வழிபாடு முதலியவற்றுக்காக அளவில்லாத பொருளும் நிபந்தங்களும் நிலங்களும் அளித்தார்கள். முதன் முதலாக நாம் அறிவது, முதற் பராந்தக சோழன் (907 - 953) தனது 28ஆம் ஆட்சியாண்டில் இன்றைய தென்னார்க்காடு ஜில்லா செம்பியூரில் உள்ள கடம்பவனேசர் கோயிலில் அர்ச்சனா போகம் அளித்தான் என்பது கல்வெட்டுச் செய்தி; இதன்

காலம் கி.பி. 935. இதன் பின்னர் கி.பி. 1118 - 35 இல் அரசாண்ட விக்கிரம சோழ மன்னனது நான்காம் ஆட்சியாண்டில் (1122), திருக்கடவூர் மகாசபையார் மூன்று வேலி நிலம் அர்ச்சனா போகமாக அளித்தனர் என்று சாசனம் கூறுகிறது. 1129இல் திருக்கண்ணபுரத்திலும் 1144இல் உத்திரமேரூரிலும் அர்ச்சனா போக இறையிலி அளிக்கப் பெற்ற செய்திகள் தெரிகின்றன.

முதற் பராந்தகன் காலத்தில் 935இல் முதலாவதாக அர்ச்சனா போகம் குறிப்பிடப்பட்டுள்ளது. இக்காலத்தின் பின் இத் தொடர், சோழ மன்னர் அளித்த நிபந்தங்களால் நன்கு ஆட்சி பெற்றிருக்கிறது. இதைத் தெரிந்து குறிப்பிடுகிற அரும்பதவுரை காரர் அடுத்து வாழ்ந்திருக்கலாம்; அதாவது 11ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் - எனல் பொருந்துமென்று தோன்றுகிறது. பெருஞ்சிறப்போடு சோழ சாம்ராஜ்யத்தை நிலை நாட்டிப் பரப்பிக் கோயில் திருப்பணிகளை வளர்த்த பேரரசன் இராச ராசன். இவன் காலம் 985-1014. இவனுக்குப் பின்னரே நாட்டில் சிவாலய தருமங்கள் அதிக வழக்குப் பெற்றன; இவை பற்றிய சொல்லாட்சிகளும் பெருகின. எனவே, படிப்புறம் - அர்ச்சனா போகம் என்ற குறிப்பிடுகின்ற நம் ஆசிரியர், பராந்தகனுக்கு ஒரு நூற்றாண்டுக்குப் பின்னரும், இராசராசன் காலத்தில் அல்லது அதையடுத்தும் வாழ்ந்தார் என்று நாம் கருதுகிறோம். ஆதலால், இவர் காலம் சுமார் 1025ஐ ஒட்டி இருத்தல் கூடும் என்று கொள்வது பொருத்தமாயிருக்கும்.

## பரிப்பெருமாள்

### முன்னுரை

திருக்குறளுக்கு உரை செய்தார் பதின்மர் என்பது வரலாறு. தொண்டை மண்டல சதகம் 41ஆம் பாடல் உரையின் மேற்கோளாகக் காணப்படுகிற பின்வரும் வெண்பா இப்பதின்மர் பெயரையும் கூறுகிறது:

தருமர் மணக்குடவர் தாமத்தர் நச்சர்
பரிதி பரிமே லழகர் – திருமலையர்
மல்லர் பரிப்பெருமாள் காலிங்கர் வள்ளுவர் நூற்கு
எல்லையுரை செய்தார் இவர்.

இவர்கள் தருமர், மணக்குடவர் (மணக்குடையர்), தாமத்தர், நச்சர், பரிதி, பரிமேலழகர், திருமலையர், மல்லர், பரிப்

பெருமாள், காளிங்கர் என்போர். இவர்களுள் மணக்குடவர், பரிமேலழகர், பரிதியார், கவிப்பெருமாள் என்னும் பரிப்பெரு மாள், காலிங்கர் ஆகிய ஐவர் உரைகளே கிடைத்து அச்சிடப் பெற்றுள்ளன. ஏனையோர் உரைகள் கிடைக்கவில்லை. தரும புரம் உரைவளப் பதிப்பில் பிற உரைகளின் பாட பேதங்களே தாமத்தர், நச்சர், தருமர் உரைகளாகச் சில பாடல்களுக்கு மட் டும் அச்சிடப்பட்டுள்ளன.

பரிப்பெருமாள் பெயர் கவிப்பெருமாள், கலிப்பெருமாள் என்றும் வழங்குவதுண்டு. தொண்டை மண்டல சதகப் பாடல் வள்ளல் சிலைப் பெருமாள் என்று சொல்வது பரிப்பெருமாள் என்றே அறிஞர் கருதுவர். சாத்தனார் வழுதி என்னும் பெயர் களையும் அப்பாடல் குறிப்பிடுகிறது.

காலமுறைப்படி சொல்வதானால் மணக்குடவர், பரிப் பெருமாள், காலிங்கர், பரிமேலழகர், பரிதியார் என்று இவ் வைவரையும் குறிப்பிட வேண்டும்.

### ஆசிரியர்

இவரைக் குறித்துச் சிறப்பாக எந்தச் செய்தியும் விளங்க வில்லை. ஏடுகளில் காணப்படுகின்ற பாடல்கள் ஓரளவு இவர் ஊர் இன்னது என்று குறிப்பிடுகின்றன. பின்வருவது இவர் உரைக்குச் சிறப்புப் பாயிரம்:

தெள்ளி மொழியியலைத் தேர்ந்துரைத்துத் தேமொழியார்
ஒள்ளிய காமநூல் ஓர்ந்துரைத்து – வள்ளுவனார்
பொய்யற்ற முப்பாற் பொருளுரைத்தான் தென்செழுவைத்
தெய்வப் பரிப்பெருமாள் தேர்ந்து.

இதனால் இவர் தென் செழுவை என்ற ஊரினர் என்று அறி கிறோம். இவ்வூர் பாண்டி மண்டலத்துச் சேது நாட்டில் உள்ளது என்பர். கி.பி. 1268இல் பட்டமேற்ற மாறவர்மன் குலசேகர பாண்டியனுடைய மெய்க்கீர்த்தி இவனைப் "பழுதறு சிறப்பின் செழுவை காவலன்" என்று கூறுகிறது. எனினும் இவ்வூர் இன்ன தென்பது விளங்கவில்லை. இவர் உரையில் 'வைத்து' என்ற அசைச்சொல் பல இடத்தும் காணப்படுகிறது. இச்சொல் தென்பாண்டி நாட்டில் மட்டும் இவ்வாறு இன்றுங்கூட ஆட்சி யிலுள்ளது. ஆதலால், ஆசிரியரின் ஊரான செழுவை பாண்டி மண்டலத்துச் சேது நாட்டிலுள்ளது என்ற கருத்து, பொருந்தக் கூடியதே.

இனி, இப்பாடலில் காணப்படுகின்ற மொழியியலைத் தேர்ந்துரைத்து, காமநூல் ஓர்ந்துரைத்து என்ற தொடர்களால், இவ்வுரையாசிரியர் மொழியியல் என்ற சொல்லிலக்கண நூல் ஒன்றும், காமநூல் என்ற இன்பத்துப்பாலைக் குறித்த மற்றொரு நூலும் செய்திருக்கலாம் என்று ஆசிரியர் கூறுகிறார்கள். இது பெரிதும் ஐயத்துக்கிடமானது. தமிழிலக்கிய வரலாற்றில் இப்படிப்பட்ட ஒரு செய்தி கேட்டதில்லை. சிறப்பாகப் பிற் காலத்தில் காமம் பற்றியும், மொழி பற்றியும் இவர் நூல் செய் திருந்தால், அவை மறைந்து போயின என்று எண்ண இட மில்லை. மொழியியலைத் தேர்ந்து வைத்து, காமநூல் ஓர்ந்து வைத்து என்ற பாடம் இருக்கலாமோ என்ற ஐயம் உண்டு. அப்படியிருக்குமாயின் பொருளில் இடர்ப்பாடு இல்லை. மொழி யிலக்கணம், இன்பவிலக்கணம் என்பன இவர் நன்கு ஆராய்ந்து, முப்பால் பொருளுரைத்தார் என்பதே நேர் பொருளாகும். ஏடு களில் இப்பாடம் காணாதவரையில் இதுபற்றி ஒன்றும் சொல் வதற்கில்லை.

இவர் வேளாள வகுப்பில் பிறந்து சிறந்த இல்லற வாழ்க்கை மேற்கொண்டவர் போலும். இவர் உரையில் காணும் சில கருத்துக் கள் இக்கூற்றுக்கு ஆதரவு தருகின்றன. உரையாராய்ச்சியில் இதைக் குறிப்பிட்டிருக்கிறோம்.

இனி, மற்றொரு பாடல் இவர் உரைசெய்ய நேர்ந்த நிலைமையை நன்கு விளக்குகிறது:

மாயிரு ஞாலத்து மன்பொருள் விளக்கும்
ஆயிரம் கதிரும் ஆழ்கடல் மறைந்த பின்,
விரிகதிர் மதியும் விளங்காக் காலத்து
எரிதலைக் கொளீஇய சில்திரி விளக்கின்
அரியவும் பெரியவும் அறிந்தோர் போல,
வசையில் வள்ளுவன் வாய்மொழிப் பொருளை
நன்மதி யுடையோர் நாடார் ஆதலின்,
என்மதி யளவில் யானறிந் துரைத்த
மழலைக் கிளவியை மதியோர் ஆராய்ந்து
இகழ்தல் இன்றியே யாவையும் இயைத்துத்
திருத்தி உரைத்தல் வேண்டும்:
அருத்தம் பயில்வோர் அருங்கடன் எனவே.

இப்பாடல் பரிப்பெருமாள் தாமே செய்த உரைப்பாயிரம் என்று கருதப்படுகிறது. 'வள்ளுவருடைய நூற்கருத்தை நன்கு ஆராய்ந்து சொல்வோர் காலமாயினர்; பின்னர் நன்மதி உடையவர்கள் ஆராயும் தன்மை அற்றவர்; ஆதலால் அவர்களுக்கு ஏற்ற உரை ஒன்று தேவை என்று நான் புதியவுரை ஒன்று செய்கிறேன்' என்று இவர் கூறுகிறார். இவருக்கு முன் மணக்குடவர் உரை இருந்தது. அதை விரித்தே இவர் உரை செய்தார். தம்முடைய உரை பற்றி இவர் கூறுகின்ற இரண்டு பாடல்கள் கருதத்தக்கன. முதற்பாடல் பின்வருவது:

புதியது தீது பழையதுநன் றென்றல் பூமியுள்ளோர்
விதியது வேபொரு ளென்னன்மின் நல்லோர் விருப்பமுண்டேல்
புதியது நன்று பழையது தன்னினும் பூ மடந்தை
பதியதின் மேவிற் பருமுத்தொ டாடையைப் பார்மின்களே.

இக்கருத்து, புதியதெல்லாம் சிறப்புடையதன்று என்று சொல்வார் கருத்தை மறுத்து இவர் உரைப்பதுபோல அமைந்துள்ளது. புது வகையான ஆடை, அணி முதலியவற்றை நகரங்களில் புதியதென வெறுக்கமாட்டார்கள், விரும்பி அணிவார்கள்; அதுபோல் எனது புதிய உரையும் மக்கள் விரும்பத்தக்கது என்று இவர் கூறுவது காணத்தக்கது. பிற்காலத்தில், உமாபதி சிவாசாரியார் தமது சிவப்பிரகாசப் பாயிரத்துள் அவையடக்கமாக 'தொன்மையவாம் எனும் எவையும் நன்றாகா; இன்று தோன்றிய நூல் எனும் எவையும் தீது ஆகா' என்று கூறுவதில் இதே கருத்து அமைந்திருத்தலையும் காணலாம். மற்றொரு பாடல் பின்வருவது:

கண்ணும் முகமும் கருங்குழலும் செவ்வாயும்
வண்ண முலையும் வனப்புடைத் தென்று – எண்ணிக்
கருத்தறியார் சாரலுறும் காளையர்நேர் முப்பால்
கருத்தறியா துட்பொருள்காண் பார்.

**காலம்**

பரிப்பெருமாளின் காலம் அறிவதற்குச் சில குறிப்புகள் உள்ளன. இவர் மணக்குடவர் உரையை அப்படியே கொண்டு, வேண்டிய இடத்துத் திருத்தியும் மாற்றியும், கூற்று, மெய்ப்பாடு என்பன குறிப்பிட்டும், ஆங்காங்கு விளக்கவுரை எழுதி அமைத்திருக்கிறார். ஆதலால் பரிப்பெருமாள் மணக்குடவர் காலத்துக்குப் பிற்பட்டவர் என்பதற்கு ஐயமில்லை. மணக்குடவர்

காலம் கி.பி. பத்தாம் நூற்றாண்டின் பிற்பகுதியாகும்; எனவே இவருடைய காலம் அடுத்த நூற்றாண்டு ஆகலாம்; சுமார் 1025-1050 எனல் பொருந்தும். பரிமேலழகர் இவர் உரையைத் தழுவிச் சில குறிப்புக்கள் காட்டுகின்றார் என்று சொன்னோம். எனவே, அவர் காலமாகிய 13 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதிக்கும் முற்பட்டவர் இவர் என்பதும் பொருந்தும். மேலும், இவர் இறையனார் களவியலைப் பல இடங்களில் எடுத்து எழுதுகிறார். களவியல் உரை எழுத்து வடிவத்தில் முதன் முதல் அமைக்கப் பட்ட காலம் 10ஆம் நூற்றாண்டு என்பது அறிஞர் பலர் கொண்டுள்ள கருத்து. பரிப்பெருமாள் இதற்கு அடுத்து வந்தவர். ஆகவே, பதினொராம் நூற்றாண்டின் இடைப்பகுதி எனல் பொருந்துவதே.

இனி, முதன் முதலாகப் பரிப்பெருமாள் உரையைப் பதிப்பித்த தெ. பொ. பழனியப்ப பிள்ளை அவர்கள், வடநூற்களின் குறிப்பைக்கொண்டு பரிப்பெருமாளின் உரையின் காலத்திற்கு மேலெல்லை 11ஆம் நூற்றாண்டு என்று குறித்திருக்கிறார். பின் வரும் பகுதி அறியத்தக்கது.

'பரிப்பெருமாள் காமத்துப்பால் உரைத் தொடக்கத்தில் வாற்சாணியம் என்ற காம தந்திர நூலைக் குறித்துள்ளார். இவ்வட நூற் கால முதல் "சுவை அலங்காரங்களின் இலக்கணங்களை ஆய்ந்த வடநூற் புலவர் இன்ப ஒழுக்கத்தைச் சம்போக சிருங் காரம் என்றும், விப்ரலம்ப சிருங்காரம் என்றும் இரு பகுதியினதாகவே வகைப்படுத்தி இலக்கணமுரைத்துச் செல்ல, தச ரூபகம் என்ற வடநூலாசிரியராகிய தனஞ்சய கவி என்பார் தம் நூலின் கண் இரசங்களின் இலக்கணம் உரைக்கும் நான்காம் பிரிவின்கண் சிருங்கார பாகங்களைக் கூறுங்கால், 'அயோகோ விப்ரயோகஸ்ச சம்யோகஸ்சேதிக த்ரிதா' என்று சூத்திரித்துள்ளார். இதன் கருத்து, சிருங்காரம் என்பது அயோகம் என்றும், விப்ரயோகம், என்றும், சம்யோகம் என்றும் மூன்று பாகுபாடுறும் என்பது. இவர் வகுத்துக் காட்டிய இவ்வியல்பினைப் பரிப் பெருமாள் தழுவிக் கூறுகின்றார். ஆதலின், அந்நூற் காலத் திற்குப் பிற்காலத்தவர் பரிப்பெருமாள் எனத் தெளியலாம். இத்தனஞ்சயகவி கி.பி. 974 முதல் 995 வரை ஆண்ட மாளவ நாட்டுப் பரமார குலத்து மன்னனாகிய இரண்டாம் வாக்பதி ராசன் காலத்தவர் என்று வடநூற் புலவர் முடிவு செய்துள் ளனர். ஆதலின் 11ஆம் நூற்றாண்டில் அந்நூல் விளக்கம் எய்திய

தென அறியலாம்.' இங்ஙனமாக, தமிழ் நூல் தொடர்புகளாலும் வடநூலின் மரபினாலும் ஆராயும்போது, பரிப்பெருமாள் உரை செய்த காலம் 11ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி என்பது நன்கு விளங்குகின்றது.

## திருக்குறள் உரை

தெ.பொ. பழனியப்ப பிள்ளையால் பரிப்பெருமாள் உரை, பொருட்பால், காமத்துப்பால் இரண்டுக்கும் வெளியிடப் பட்டது. தருமபுரத்துத் திருக்குறள் உரைவளப் பதிப்பிலும் (1950) தண்டபாணி தேசிகர் வெளியிட்ட தனித் திருக்குறள் உரைவளப் பதிப்பிலும் (1957) அறத்துப் பாலுக்குப் பரிப்பெரு மாள் உரை காணப்படவில்லை. அப்படியே திருப்பனந்தாள் காசி மடத்துத் திருக்குறள் உரைக்கொத்துப் பதிப்பிலும் அறத் துப் பாலுக்குப் பரிப்பெருமாள் உரை இல்லை. ஒருகால் மணக் குடவர் உரையும் பரிப்பெருமாள் உரையும் ஒன்றென்றுகருதி, மணக்குடவர் என்றே அச்சிடப் பெற்றதோ என்று எண்ண வேண்டியிருக்கிறது. பின்னே காணும் குறிப்புக்கள் பொருட் பால், காமத்துப்பால் இரண்டிலும் கண்ட பொருள்களைக் கொண்டே தொகுக்கப் பெற்றனவாகும்.

பரிமேலழகர் என்ற சொல்லுக்கு ரா. இராகவையங்கார், பரிப்பெருமாளின் உரையினும் (பரியினும்) மேலான உரையைச் செய்தவர் பரிமேலழகர் என்று நயமாகக் குறிப்பிட்டிருப்பது கருதத்தக்கது. இது அப்படியே ஆதாரமென்று நாம் கூறா விட்டாலும், சுவைபடக் கூறியிருப்பதை மட்டும் சுட்ட விரும்பு கிறோம். குறள் உரைகளுள், பரிமேலழகர் உரைக்கு அடுத்த சிறப்புடையது பரிப்பெருமாள் உரையே.

இவர் உரையானது முதலில் தோன்றிய உரையாகிய மணக்குடவர் உரையைத் திருத்தியமைத்த புதியவுரையாகும். அவதாரிகை கூறியும், விளக்கம், கூற்று மெய்ப்பாடு முதலியன தந்தும், இவர் எழுதிச் செல்வார். மணக்குடவர் உரையை நன்று என்று கண்டே அதை இவர் விரித்துரைத்தார் எனக் கருத வேண்டும். பொருட்பாலில் 514, 551, 557, 558, 560, 712 ஆகிய குறட்பாக்களுக்கு இவர் உரை பிரதிகளில் காணப்படவில்லை. பெரும்பான்மையும் இவர் கொண்ட குறட்பாக்களின் வைப்பு முறை மணக்குடவர் வைப்பு முறையே. சில இடங்கள் மாறியும்

உள்ளன. சில இடங்களில் அவரினும் வேறு பாடமும் இவர் கொண்டுள்ளார். மேலும், 'வேறு பாடம் ஓதுவாரும் உளர்' என்று சில இடங்களில் இவர் குறிப்பிட்டுள்ளார். இவற்றுட் சில, மணக்குடவராலும் சுட்டப்பட்டவை (389). பின்னும் சில இவர் மட்டுமே கூறியவை. இதனால் இவருக்கு முன் மணக்குடவ ருரையன்றி வேறு உரை இருந்ததென்று கருதலாம்.

### திருமுருகாற்றுப்படையுரை

காசிமடத்துத் திருமுருகாற்றுப்படை உரைக்கொத்துப் பதிப்பில் கவிப்பெருமாள் பொழிப்புரை பதிப்பிக்கப் பெற் றுள்ளது. இது பரிப்பெருமாள் உரையாகும். இவ்வுரை பதவுரை யாகவே இருந்தது. இதை இடச்சுருக்கம் கருதிப் பொழிப்பாக்கிப் பதிப்பித்துள்ளனர். இவ்வுரை ஏட்டைத் தந்து பதிப்பித்தவர் வேலம்பாளையம் ரா. தெய்வசிகாமணிக் கவுண்டர். 'இது திருச்செங்கோடு நல்லையன் கோவில் பெரிய பூசாரியார் வீட்டுப் பிரதி' என்று அவர் குறித்துள்ளார்.

திருமுருகாற்றுப் படைக்கு இன்று கிடைக்கும் உரைகள் ஐந்து. இவை செய்தார் கால முறைப்படி கவிப்பெருமாள் (பரிப்பெருமாள்), பெயர் புலப்படாத உரையாசிரியர், பரி மேலழகர், நச்சினார்க்கினியர், பரிதியார் என்பவராவர். கவிப் பெருமாள் உரையே முதல் உரையென்றும் அதையறிந்தே ஏனையோர் உரையெழுதினர் என்றும் நன்கு தெரிகின்றது. திரு முருகாற்றுப்படை பத்துப்பாட்டின் முதற்பாடலாதலால், பத் துப் பாட்டுக்கும் உரையெழுதிய நச்சினார்க்கினியர் உரையில் முதலாவதாக இவ்வுரை உள்ளது.

'வரிப்புனை பந்தொடு பாவை தூங்க' (68) என்பதற்கு, 'பகைவரை மகளிராக்கி அவர் கொண்டு விளையாடுதற்குப் பந்தும் பாவையும் தொங்க விடுவர்' என்று இவர் கூறியிருப் பதை, நச்சினார்க்கினியர் அப்படியே 'பகைவரை மகளிராக்கி அவர் கொண்டு விளையாடுதற்குத் தூக்கின என்றவாறு' என்றே எழுதியுள்ளார். மார்பொடு விளங்க ஒரு கை (112): ஒரு கை திருமார்பிலே யோக முத்திரையைக் கொடா நின்றது என்று இவர் எழுதியதை நச்சினார்க்கினியர் மோன முத்திரை என்றார். இவ்வாறு பரிப்பெருமாளைப் பின்வந்த பலர் எடுத்தாளக் காணலாம்.

வேறுபாடுகளுக்குப் பின்வரும் குறிப்புக்கள் எடுத்துக் காட்டுக்களாகும் 'வெள்ளில் குறுமுறி கிள்ளுபு தெறியா' என்ற விடத்து, பின்வந்த உரையாசிரியர் நச்சினார்க்கினியர் இருவரும், 'விளவின் சிறிய தளிரைக் கிள்ளி ஒருவர் மேலொருவர் தெறித்து' என்று பொருள் செய்துள்ளனர். இவரோ 'விளாவின் இளந் தளிரையும் கிள்ளிப் பிள்ளையார் சீர் பாதங்களுக்கு பத்திரி யாகத் தெறித்து' என்றெழுதுகிறார். (பத்திரி - பூசை செய்யும் இலையாகிய பத்திரம்)

'சின்னாள் - ஆவினன் குடி உறைதலும் உரியன்' (175-6) என்ற இடத்தில், பிறர் சில நாள் என்றே எழுதியுள்ளனர். இவர், சின் அசை; நாள் - எந்நாளும் என்று உரை எழுதியிருப்பது கருதத்தக்கது. எந்நாளும் என்ற உரை சிறப்பானது என்பது தெளிவு. மேலும், பழமுதிர் சோலைமலை கிழவோனே என்பதைப் பழங்கள் முற்றப்பெற்ற சோலை மலைக்குரியவன் என்று வழங்கு கின்றார். சோலைமலை என்பதே தலப்பெயர் என்பது இவர் கருத்தாகிறது. சோலைமலை என்ற பெயரே திருவாய்மொழி யிலும் பரிபாடலிலும் காணப்படுவது.

பின்வரும் பாடல் கவிப்பெருமாள் உரைச் சிறப்புப் பாயிரமாகும்:

> வண்தமிழ் தேர்கீரன் வளமறையாய்ச் சேந்தன்மேல்
> தண்டமிழாற் றுப்படையாத்தானுரைத்தான் — ஒண்தமிழின்
> தெய்வக் கவிப்பெருமாள் தேன்போல் உரைசெய்தான்
> கைவந்த நூல் முறைமை கண்டு.

தேன் போல் உரை செய்தான் என்பது இவ்வுரையுள் தோய்ந் தவர் கூறும் கூற்று. இவ்வுரையால் உரையாசிரியரான பரிப் பெருமாள் சிவபக்தி மிக்கவர் என்பது நன்கு புலனாகின்றது.

## குறள் உரை ஆராய்ச்சி

பரிப்பெருமாள் உரையை ஆராயுமிடத்து திருவள்ளுவ மாலையைக் குறிப்பிடும் அவசியம் உள்ளது. பொருட்பாலின் அவதாரிகையில், "படையியல் அரணியல் என வகுத்தார் உளரால் எனின், அவையெல்லாம் ஒருவனால் ஆக்கப்படும் பொருளா தகலின், பொருளியல் என அடங்கும். துன்பவியல் என்பது எற்றுக்கு, அதனையும் நட்பியலுள் அடக்கினார் உளரால் எனின்,

அவையெல்லாம் நட்கப்படாது என்னும் கருத்தினால் கூறினார் என்க. ஆயினும், அவற்றினிடைக் கிடந்த பேதைமை புல்லறிவாண்மை என்னும் அதிகாரங்கள் நட்கப் படாததும் நட்கப் படுவதுமன்றி ஒருவற்குத் துன்பத்திற்குக் காரணமாம் என்று கூறுதலால், துன்பவியல் என வேண்டும் என்க" என்று கூறுகிறார். இவர் மறுப்புக்கு மூலமாயுள்ளது திருவள்ளுவமாலையில் போக்கியார்* என்பவர் பெயரிலுள்ள பின்வரும் பாடல்:

அரசியல் ஐயைந்து அமைச்சியல் ஈரைந்து,
உருவல் அரணிரண்டு, ஒன்(று) ஒண்கூழ், இருவியல்
திண்படை, நட்புப் பதினேழ், குடி பதின்மூன்று:
எண்பொருள் ஏழாம் இவை.

இங்கு படையியல் அரணியல் என்ற பாகுபாடு காணப்படுகிறது. பரிப்பெருமாள் இப்பாடலைக் கருதிக் கூறினார் என்று கொள்ள வேண்டுவதில்லை. மணக்குடவருரையன்றி வேறு உரையும் முன்னம் இருந்த செய்தியைத் தொடக்கத்தில் குறிப்பிட்டிருக்கிறோம். ஆகவே இங்கு பரிப்பெருமாள் கூறும் கருத்து அவ்வுரையுள் காணப்படுதல் கூடும். திருவள்ளுவமாலையின் காலம் கி. பி. 1000ஐ ஒட்டியிருக்குமென்று வரையறுத்தோம். இதைப் பார்த்துப் பரிப்பெருமாள் கூறினார் என்று கருதுவதும் பிழையாகாது. திருவள்ளுவ மாலையைப் பற்றிய முடிவு எவ்விதமிருந்தாலும், பரிப்பெருமாள் தமக்குமுன் வந்த உரையைக் குறிப்பிட்டார் என்று கருதுவது எல்லா வகையிலும் பொருத்தமாகும்.

இனி, பரிப்பொருளுக்குப் பின்வந்த பரிமேலழகர் இவர் உரையைப் பயின்று, பல இடங்களில் பயன்படுத்தியிருக்கிறார் என்பது நன்கு தெரிகிறது. 407ஆம் பாடலுரையில் 'அறிவிற்கு மாட்சியாவது கடிதிற்காண்டலும் மறவாமையும் முதலாயின' என்று இவர் எழுதியிருப்பதைப் பரிமேலழகர் அப்படியே அமைத்துக் கொண்டிருக்கிறார். 'வேந்தன் மேய தீம்புனல் உலகம்' என்று 'வேந்தனும் வேந்து கெடும்' (899) என்பதன்

* போக்கியார் என்பவர் பெயர் சங்கப்புலவர் பெயரில் இல்லை. ஒருகால் ஓரம்போகியாரைப் போக்கியார் என்று நினைத்தாரா, அல்லது பொத்தியார் என்ற புலவர் பெயரை இவ்வாறு எழுதி விட்டாரா என்பது விளங்கவில்லை; திருவள்ளுவமாலை முழுமையும், சில தனிப் பாடல்கள் நீங்க, ஒரே ஆசிரியர் செய்தார் என்று முன்னமே விளக்கியிருக்கிறோம்.

உரையில் இவர் காட்டிய மேற்கோளையே பரிமேலழகரும் காட்டுதல், வரைவின் மகளிரைச் சேர்வார் கெடுவார் என்று 'நான்கு பாட்டானும் கூறப்பட்டது' (920) என்ற கருத்து, மாறல்ல (944) என்பதை விளக்குமிடத்து 'மாறுகோடலாவது நெய்யும் தேனும் இனியவை யாயினும் தம்மில் அளவொக்கு மாயின் கொல்லும்; அது போல்வதாம்' என்ற பரிப்பெருமாள் கூற்றை அப்படியே எடுத்துப் பரிமேலழகர் 'தேனும் நெய்யும் தம்முள் அளவொத்து நஞ்சாதல் போல்வனவுமாம்' என்று கூறுதல், கடாஅக் களிற்றின்மேற் கட்படாம் (1087) என்ற குறள் உரையில் 'துகில் நீக்கின் கொல்லும்' என்று இவர் எழுதியதைப் பரிமேலழகர் 'சிறிது மறையாவழி உவை கொல்லும்' என்று கூறுதலும், நோக்குதல் உரை (1099) என்ற விடத்துப் பன்மை வினையின் பொருத்தம், நல்ல படாஅபறை (1115) என்றவிடத்து நெய்தற்பறை எனல், அரிதாற்றி அல்லல் நோய் நீக்கி என்ற குறளில் (1160) 'பொழுதும் குழலும் முதலாயின வற்றான் வருந்துன்பம்' என இவர் கூறியதை 'யாழிசை மதி தென்றல் என்று இவை முத லாக வந்து காமநோயை வளர்ப்பன' என்றல், காலை அரும்பி என்ற குறளில் (1227) 'விடியலும் கங்குலும் ஆற்றி இப்பொழுது வேறுபட்டாய்; இதற்குக் காரணம் என்?' என்ற இவர் கூற்றை 'இனையையாதற்குக் காரணம் என்ன?' என்று வினாவாகவே அமைத்திருத்தல் - முதலான இடங்கள் காணத்தக்கன.

காலிங்கரும் இவர் உரையைப் பல இடங்களில் அப்படியே எடுத்தமைத்துக் கொண்டிருக்கிறார். துனியும் புலவியும் என்ற 1306ஆம் குறளில், துனி இல்லையாயின் பழம்போல இனிமை தரும், புலவி இல்லையாயின் காய்போலத் துவர்க்கும் என்ற கருத்து, 1324 உரை முதலியன காண்க. பரிப்பெருமாள் வட மொழிப் புலமையுடையவர். காமத்துப்பால் அவதாரிகையில், இப்பால் தமிழ்மரபு பற்றி அல்லாது வடமொழி மரபுபற்றி வந்தது என்று இவர் கூறுவதாலும் இவருடைய வடமொழிப் புலமை விளங்கும். வடமொழி இதிகாசங்களில் கண்ட அனே கக் கதைகளைக் குறிப்பிடுகின்றார். பாடல்: 431 பிறர் மனை நயத்தலால் கெட்டான் இராவணன்; வெகுளியால் கெட்டான் சனமேசயன்; காம நுகர்ச்சியால் கெட்டான் சச்சந்தன். 202-432: நன்மை பயவாத வினையினால் கெட்டான் துரியோதனன்; எளியாரை அடர்க்கையால் பிறந்ததொரு மகிழ்ச்சியால் வலி யார் மாட்டும் சென்று கெட்டான் வாதாபி; பிறர் பொருளை

விரும்பிக் கெட்டான் கார்த்த வீரியார்ச்சுனன். 439: வத்தராயன் யானை பிடிக்கப் போய்ச் சிறைப்பட்டான். இங்கு கூறப்பட்ட சச்சந்தன் வரலாறு தமிழ்ச் சீவகசிந்தாமணியுள் வருவது.

பிறர் மதங்களைப் (கொள்கைகளைப்) பல இடங்களில் குறிப்பிடுகிறார் 502. இது சுக்கிர மதம் 503. இது துரோணா சாரியார் மதம் 504. இது கௌடில்யர் மதம் 505. நாரதர் மதம் உடன்பாடு 506. மகேச்சுரர் மதம், இது குற்றம் 507. பாரசரர் மதம், இது குற்றம் 508. வியாசர் மதம். இது குற்றம் 510. உத்தவா சாரியார் மதம், இது குற்றம். இக்குற்றங்களைக் களையவே இக்குறட்பாக்கள் எழுந்தன என்று இவர் கூறுகிறார். அன்றியும், இங்கு மகேச்சுரர் ஒரு கால் தமிழில் மயேச்சுரர் யாப்பு என்ற இலக்கண நூல் செய்த ஆசிரியர் தாமோ என்ற ஐயம் எழுகின்றது.

இவர் உரை பல இடங்களில் பொருளுரையும் நயமும் கொண்டிருக்கும், 'ஓம்பா மெலியார்மேல் மேக பகை' என்ற 861ஆம் குறளில் இவரும் மணக்குடவரும் தம்மைப் போற்றாத எளியாரிடத்துப் பகை கோடலை மேவுக என்று நேரிடையா கவே சொல்லுகிறார்கள். ஆனால், பரிமேலழகர் சொற்களை மாற்றி மெலியார் மேல் பகை ஓம்பா மேக - ஏனை மெலி யார்க்குப் பகையாதலை ஒழியாது விரும்புக என்று எழுதுகிறார். பரிப்பெருமாள் உரையே தருமநெறிக்குப் பொருந்துவதாய் உள்ளது. 'அரம் போலும் கூர்மையர்' என்றவிடத்து (97) அரம் போலும் தனக்குள்ள கூர்மை பிறர்மாட்டு மடியாமையும் தான் பிறரைக் கூரியர் ஆக்குதலும் ஆம் என்று நயம்படக் கூறுகிறார். 'அச்சமுடையார்க்கு அரணில்லை' என்ற பாடலுக்கு இவர் எழுதியுள்ள விசேடக்குறிப்பு சிறப்புடையது; அச்சம் புகுந்துழி எல்லாம் புகுதும் ஆதலின் அதனைக் காப்பது ஓர் அரணில்லை என்றார்; மறந்தார் செய்வதோர் பொருளில்லையாதலின் நன்மை இல்லை என்றார். இது, பொச்சாப்புடையார்க்குக் காவலில்லை என்றது. கண்ணோட்டம் என்ற அதிகாரத்தின் முதற் பாடல் செங்கோன்மை கூறுகின்ற வழிக் கண்ணோடாது முறை செய்க என்று கூறி, ஈண்டுக் கண்ணோடுக என்று கூறுதல் மாறுபடக் கூறுதலாம் பிற எனில், அற்றன்று: அது முறை செய்யும் திறன் கூறிற்று; இஃது 'உலகத்தார் பலர் ஆதலால் குற்றம் செய்வார் மிகுந்திருப்பர்; அதற்கெல்லாம் தண்டம் செய்யின் உலகம் என்பது ஒன்று இல்லையாம்; அதற்காகப்

பொறுக்க வேண்டுவன பொறுக்க வேண்டும்' என்று கூறிற்று 571. 'கேட்டார்ப் பிணிக்கும் தகையவாய்' (643) என்ற குறளில் கேட்டார் என்பதனைக் கேள்வி உடையார் எனினும் அமையும் என்று இவர் மற்றோர் உரை கூறுகின்றார்; உண்மையில் இதுவே சிறப்பான உரை. கேட்டார், இங்கு வினாவினார் என்றதும், நட்பாய் ஏற்றுக்கொண்டார் என்று பரிமேலழகர் கூறியதும் ஆகிய உரையெல்லாம் பொருந்தும் உரையல்ல. 'கற்றிலனா யினும் கேட்க' என்ற குறளின் பொருள் இங்கு சிந்திக்கத்தக்கது.

இவர் உரையில் பல அருஞ்சொற்கள் பயிலும்; பெண்மை நிரப்பம் - கற்பு 1273, நெத்தம், அடியொட்டி முதலான சொற்கள் காண்க. மலையரண் காட்டரண் என்ற இவற்றோடு இவர் சேற்று அரணையும் குறிப்பிடுகிறார்.

பழமொழி போல உலகியற் கருத்துக்களை இவர் தெரி விப்பது மிகவும் அழகாக உள்ளது: பிரிதலும் ஆற்றுதலும் உலகியல் 1156; காதலர் பிரிந்துழி ஆற்றியிருத்தல் பெண் கடன் 1181; இன்பமுற்றார் துன்பமுறுதல் உலகியல் 1106; தனித்திருந்து துயருறுதல் காமத்தியற்கை 1256. சில இடங்களில் இதுவும் ஒரு கூற்று, அல்லது இயைபு இன்று என்பார் (1143).

உழவுத் தொழில் பற்றிப் பல இடத்தும் இவர் கூறும் விளக்கங்கள் இவர் சிறந்த வேளாளர் வகுப்பில் வந்தவர் என்பதைப் புலப்படுத்துகின்றன. 512ஆம் குறளில், வாரி பெருக்கி என்ற தொடருக்கு இவர் கூறும் விளக்கம்: 'பொருள் வருவதற்கு இடமாவது, நிலம் முதலான இடம்; அதனைப் பெருக்குதலாவது, காடு கெடுத்து நாடாக்குதல் முதலாயின. வளம் படுத்தலாவது, பயிர் ஏற்றுங்கால் வான் பயிர் ஏற்றுவித்தலும், பாழான இடங் களிலே குடியேற்றி ஆயம் பொருள் உண்டாக்குதலும். இது செய்வானை நோக்கிற்று.' காடு கெடுத்து நாடாக்குதல், பாழான இடங்களில் குடியேற்றி ஆயம் பொருள் உண்டாக்குதல் என்பன இன்றைய நிலமீட்பு என்பது பற்றிய மிகவும் முற்போக்கான கருத்துக்கள். அப்படியே, உழவு என்ற (104) அதிகாரத்தின் அவ தாரிகையைக் காண்க: "உழவு தொழில் வரைவு வாணிகம் சிற்பம் வித்தை என்று சொல்லப்பட்ட அறுவகைத் தொழிலும், குடி செய்வார்க்கு வேண்டும் அன்றே; அவை எல்லாவற்றின் இயல்பு கூறாதார், உழவு ஒன்றும் கூறியது எற்றுக்கு எனின், அவற்றுள் கல்வி பொருள் தரும் என்பது முன்பே கூறப்பட்டது.

தொழிலாவது, ஒருவன் ஏவல் செய்தல். அரசர் ஏவலால் அமைச்சர் செய்யும் தொழில் அமைச்சியலுள் கூறப்பட்டது. ஏனையோர் செய்யும் தொழிலும் வரைவும் வாணிகமும் சிற்பமும் மேலை அதிகாரத்தில் 'ஆள்வினையும் ஆன்ற அறிவும் என இரண்டின் நீள்வினையால் நீளும் குடி' (குறள் 1022) என்றதனாலே சொன்னாராம்; என்னை? அவையெல்லாம் முயற்சியானும் அறிவானும் வருதலின். ஆயின் உழவும் அதனுள் அடங்காதோ எனின், அடங்கும்; அஃது ஈண்டுத் தொழிலை நோக்கிக் கூறப்பட்டது அன்று, முயன்று பொருளீட்டினார் எல்லாரும் குடி ஓம்புங்கால், தானியத்தால் ஓம்ப வேண்டுதலின் அதனை உண்டாக்க வேண்டும் என்று கூறப்பட்டது." தானிய உற்பத்தி ஒன்றே உண்மையான செல்வத்தை உண்டாக்கும் தொழில் என்ற இக்காலக் கருத்தையும், சிறந்த பொருளாதாரத் தத்துவத்தையும், மிக அழகாக இவர் எடுத்துரைக்கிறார்.

காமத்துப் பாலில் இவர் தொல்காப்பியச் சூத்திரங்களையும் இறையனார் களவியல் சூத்திரங்களையும் மேற்கோளாக எடுத்துத் தருகிறார். ஓரிடத்தில் புறநானூற்று வரியைக் குறிப்பிடுகிறார். 'அரங்கின்றி வட்டாடியற்றே' (401) என்ற குறளுரையில் நாலடி வரியை உதாரணம் காட்டுகிறார். தூது என்ற அதிகாரத்தின் ஏழாம் பாட்டுரையில் (687) மணக்குடவர் தலையான தூதன் என்று மட்டும் சொல்ல, இவர் தலை இடை கடை என்று மூவகைத் தூதர் இயல்பையும் சுட்டிப் பின் வருமாறு எழுதுகிறார்: 'தலை, இடை, கடை என மூன்று வகையருள் மேற்கூறின எல்லாம் இடையும் கடையும் ஆகிய தூதர் இயல்பு கூறினார்; இது தலையான தூதர் இலக்கணம் கூறிற்று. தலையான தூதன் தானே காரியம் அறிந்து சொல்லும்; இடையான தூதன் சொன்ன மாற்றத்தைச் சொல்லும்; கடையான தூதன் ஓலை காட்டும்.' மூவகைத் தூதரிலக்கணம், பாரத வெண்பாவில் சொல்லப்பட்டது:

தானறிந்து கூறும் தலை; மற் றிடையது
கோனறைந்தது ஈதென்று கூறுமால்;— தானறியாது
ஓலையே காட்டும் கடை: என்றொரு மூன்றும்
மேலையோர் தூதுரைத்த வாறு.

பாரத வெண்பா இவருக்கு இரு நூற்றாண்டுகள் முற்பட்டதாதலின், அந்நூலை இவர் உட்கொண்டு கூறுதல் இயல்பே.

இவர் கருத்தைத் தழுவியே பரிமேலழகர் இப்பாடலுக்கு உரை யெழுதியிருப்பதும் குறிப்பிடத்தக்கது.

இவர் உரையிறுதியில் காணப்பட்ட 'தெள்ளி மொழி யியலைத் தேர்ந்துரைத்து' என்ற பாடலில் கண்ட 'ஒள்ளிய காமநூல் ஓர்ந்துரைத்து' என்ற தொடரில் வரும் காமநூல் என்பது பற்றிக் குறிப்பிட்டோம். எனினும், இவர் எழுதியுள்ள காமத்துப்பால் முழுமையும் நன்கு ஆய்ந்து பார்க்கும்போது, அங்கு இவர் குறிப்பிடும் செய்திகளாலும், விளக்கங்களாலும், கூற்றுக்களாலும் உண்மையிலேயே ஒரு காமநூல் செய்வதற்கான புலமைத் தகுதி இவரிடம் இருந்தது என்று துணிந்து கூறலாம். காமநூல் என்றால், காமத்தைக் கூறுவதன்று; காமத்துப்பால் போன்ற ஓர் அகப்பொருள் நூல். இத்துறையில் இவரது அறிவையும் உரையாற்றலையும் விளக்கும் சில செய்திகளை இங்கு காண்போம்.

காமத்துப்பாலின் அவதாரிகையில் நயமான பல செய்தி களை நன்கு கூறுகிறார். ஒருவனுக்கு இன்பம் நுகர்தற்கு இடம் கன்னியரும் கணிகையரும் பிறர் தாரமும் என மூவகையல்லது இல்லை; அவற்றுள், பிறர் மனைக்கூட்டம் பாவம் தருமென்று அறத்துப் பாலுள் கூறிக் கணிகையர் கூட்டம் பொருட்கேடு தரும் என்று பொருட்பாலுள் கூறினாராதலின், அறனும், பொருளும், இன்பமும் வழுவாமல் வருவது கன்னியர்கூட்டம் என்று அஃது ஈண்டு கூறப்பட்ட தென்க. அதுதான் எட்டு வகைப் படும். "இக்காமப் புணர்ச்சியை வடநூலாசிரியர் அராகத்தார் கூடுங்கூட்டம் என்ப. இதுதான் மூவகைப்படும், அருமையிற் கூடலும், பிரிந்து கூடலும், ஊடிக் கூடலுமென. அருமையிற் கூடுதலாவது, எளிது அன்மையால் ஒருவர் ஒருவரைக் கண்ட காலந் தொட்டும் ஒத்த நினைவினராய் நின்று கூடுதல். பிரிந்து கூடுதலாவது, இவ்வாறு கூடினார் பின்பு ஒரு காரணத்தால் பிரிந்து அதன் பின்பு கூடுதல். ஊடிக் கூடுதலாவது, தலைமகன் மாட்டுத் தவறு கண்டு புலந்த தலமகளைப் புலவி நீக்கிக் கூடுதல். இவை மூன்று கூட்டமும் இவற்றது நிமித்தமும் இக்காமத்துப் பாலுள் கூறுவது தமிழ்நடை யன்றாதலின், இதற்கு இலக்கணம் யாங்ஙனம் பெறுதுமெனின், இவ்விலக்கணம் தமிழ் நடையா யின், அகப்புறமென்று கூறுதல் வேண்டும்; அவ்வாறு கூறாது அறம், பொருள், இன்பம் என வடநூல் வழியே கூறினாராதலின்,

இதற்கு இலக்கணம் வாத்ஸ்யாயனம் என்னும் காமதந்திரத்துச் சுரத விகற்பம் என்னும் அதிகரணத்துள் கண்டு கொள்க. அன்றியும், 'புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல் இவற்றின் நிமித்தம் என்றிவை, தேருங்காலைத் திணைக் குரிப் பொருளே' என்றாராதலின். அவற்றுள் இருத்தலும் இரங்கலும் பிரிந்துழி நிகழுமன்றே; அவற்றைப் பிரிவினுளடக்கிப் புணர் தலும், பிரிதலும், ஊடலும் எனத் தமிழ் நடையிற் கூறினும் இழுக்காகாது."

இங்ஙனமே இவர் ஒவ்வொரு பாடலுக்கும் கூற்று, மெய்ப் பாடு, விளக்கம் முதலியன தனித்த முறையில் ஒரு நாடகம் போலவே எழுதிச் செல்வது படித்து இன்புறத்தக்கது. குறிப் பறிதல் என்ற 110ஆம் அதிகாரத்தின் அவதாரிகை காண்க: "குறிப்பறிதலாவது, தலைமகள் உள்ளக் கருத்து தலைமகன் அறிதல். இது தலைமகற்கே உரித்து. பெண்டிர் நாணமுடைய ரன்றே! அவருடைய உள்ளக் கருத்து வெளிப்படுமாறு என்னை யெனின், மேலை அதிகாரத்துத் தலைமகனைக் கண்ட தலை மகள், 'காமம்போல் கண்டார் மகிழ்செய்தல் இன்று' (1090) என்று நினைத்தாளாகக் கூறினாரன்றே; அதனானே கண்ணும் முகமும் வேறுபடும்; அதனானே அறியலாகும். மனக்குறிப்பு அறிதல் கூறியது எற்றுக்கு? பிறவாற்றானுங் கூடுதற்கு நெறியுள வாலெனின், பிறவாற்றாற் கூடுங்கால், கரவாற் கூடின் பெருந் திணையாம்; பொருள் கொடுத்துச் சாரின் அசுரமாம்; வலியிற் சாரின் இராக்கதமாம்; மறவியில் சாரியின் பசாசமாம்; ஆதலின் இக்கூட்டத்துக்குக் குறிப்பறிந்தே புணர வேண்டுதலின் இது கூறப்பட்டது. மேலதனோடு இயைபும் இது". இங்ஙனமே நலன் புனைந்துரைத்தல் என்ற 112ஆம் அதிகார அவதாரிகையும் குறிப்பிடத்தக்கது. 'ஊடல் உணர்தல் புணர்தல்' என்ற 1109ஆம் பாடல் உரையும் காண்க.

இவர் கூறும் விளக்கங்களுக்குச் சில உதாரணம் காட்ட லாம். நாணொடு நல்லாண்மை பண்டையேன், இன்று மடல் உடையேன் (1133) என்ற குறளுரையில் பரிப்பெருமாள் ஒருவரே இவையிரண்டும் இப்பொழுது இல்லேன் என்று தெளிவுபடுத்து கிறார். 'கோலம் செய்யாதது என்னை' - என்றவாறு ஆயிற்று (1127). பிரியாரென அறிவுரைக்கும் தோழிக்கு, "நீ சொல்ல வேண்டா, யானறிந்தேன்" என்று தலைமகள் கூறியது (1157);

'நின்கண் கலங்கிற்று, அஃது எனக்கு இன்னாதாயிற்று' என்ற தோழிக்கு, 'அது மிகவும் இனிது' என்று தலைமகன் கூறியது (1176); 'யான் பிரிவதாக நினைத்து முயக்கத்தின் கண்ணே உடம்பை அகற்ற, அதனையறிந்து கண் பசந்தது; அதன்பின் முயங்கிக்கொண்டு கிடந்த கைகளை விடுவிக்க, நுதல் பசந்தது. அவ்வளவேயன்றி நுதல் பசந்த பின்பு கண்ணின் பசலை போய், மற்றொன்று ஆம்படியாயிற்று; ஆதலான் யான் செல்லும் அளவும் ஆற்றுங்கொல்லோ' என்று வினை முற்றி மீண்ட தலைமகன் தேர்ப்பாகன் கேட்பச் சொல்லியவாறு (1240) - முதலான இடங்கள் காண்க.

தரும் விளக்கத்தை நன்கு சுவைத்துக் கூறுவார். எடுத்துக் காட்டாக ஒன்று மட்டும் காட்டலாம்: சேய்மைக் கண் பிரிதலேயன்றி அண்மைக் கண் பிரியும் பிரிவும் உள; அவையாவன: அவைக்களனும் அரசவையும் அத்தாணியும் புகுதவும், நல்லிசை நயந்து வந்தோர் காணவும், பணைநிலைப் புரவி காணவும், வாரியுள் யானை காணவும், நாட்டகத்துப் பிரியும் பிரிவு. அவற்றுள் யாதானும் ஒன்றனால் தலைமகன் பிரிந்துழி ஆற்றாளாகிய தலைமகள் தன் நெஞ்சிற்குச் சொல்லிற்று. சேய்மைக் கண் பிரிந்தான் ஆயின் பருவம் காணின் அல்லது இக்கூற்றினால் பயன் இல்லை. பரத்தையிற் பிரிவு ஆயின் புலவி தோன்றும். ஆதலான் அண்மைக்கண் பிரிந்தானைப்பற்றிக் கூறப்பட்டது என்று கொள்ளப்படும்; 1197.

சில குறள் உரையில் மெய்ப்பாடு இன்னது என்று இவர் உரைத்திருப்பது சிறப்புடையது; 1126, எதிர்பெய்து பரிதல்; 1127. இன்பத்தை வெறுத்தல்; 1128. பசியடர நிற்றல்; 1129. கண் துயில் மறுத்தல்.

காமத்துப் பாலில் இவர் கூறும் கருத்துக்களை ஒரு தொகுப்பாக நோக்கும்போது, இவர் வள்ளுவர்போல, சிறந்த இல்வாழ்க்கை வாழ்ந்தாரென்பது நன்கு புலப்படும். உழவின் கீழ் (1035), 'உழவினால் பயன்கூறுவர், முற்பட இல்லறம் செய்வது இவர் கண்ணது என்று கூறினார்' என்று உரைத்திருப்பதும் காண்க. இல்லறமாகிய குடும்ப வாழ்க்கையை நன்கு உணர்ந்தவர் ஆதலினாலே, இஃது ஒரு குடிப் பிறந்தார் பலருளர் ஆயினும், அவருள் மூத்தவருக்குக் கடனேயென்று ஐயுற்றார்க்குக் கூறப் பட்டது (1027) என்று இவரால் எழுத இயன்றது. குடும்பம்

பிரியக்கூடாது, ஒரே குடும்பமாயிருத்தல் வேண்டும் என்பது இவர் கருத்து: "பிள்ளைகளை வேறு வேறு இடத்து நிறுத்த வேண்டும் என்பது சில ஆசாரியர் மதம். அதனை மறுத்து மக்களை ஓரிடத்தே கொண்டிருக்க வேண்டும் என்பதூஉம், அதனானே குலம் வளரும் என்பதூஉம் கூறிற்று" (522). பின் வரும் பகுதிகளையும் நோக்கியறிக. "மக்கள் பலர் உண்டா னால் எல்லாரையும் ஒக்கப் பாராது நீதிமான் ஒருவனை இளவரசு ஆக்கவேண்டும்" 529. வரைவின் மகளிர் என்ற 92 அதிகாரத்தில் 4, 5, 6 பாடல்களில், இவரை அறன் அறிவார் சாரார், பொருள் கருதுவார் சேரார், இன்பம் நுகர வல்லார் சாரார் என்று கூறி, இவை மூன்றாலும் அறம் பொருள் இன்பம் வேண்டுவார் சாரார் என்று எடுத்துக்காட்டியது மிக்க அழகாக உள்ளது. பரிமேலழகர் உரை தோன்றுமுன் இவர் உரையே சிறப்பு மிக்க உரையாயிருந்தது. இன்றும் கூட, காமத்துப் பாலைப் பொறுத்தவரையில் அவர் உரை இலக்கணக் குறிப்பு கள் நிரம்பியதாயிருக்க, பரிப்பெருமாள் உரையே சுவை தருவ தாய்ப் பொருளை நேரே கண்முன்னே எடுத்துக் காட்டுவது போல் உணர்த்துவதாய் உள்ளது. பரிப்பெருமாள், தம் குறளு ரைப் பாயிரமாகவும் திருவள்ளுவர் வணக்கமாகவும் கூறியுள்ள பின்வரும் பாடல், இவருக்கு ஆசிரியரிடத்துள்ள ஈடுபாட்டை நன்கு புலப்படுத்தும்:

நல்வினை செய்பவர் நாள்தொறும் வந்திக்க, நான்முகனார்
சொல்லுரை யைத்தென்தமிழா லறியத் துகள்தபுசீர்
இல்லறமும் துறவும் பொருட்பக்கமும் இன்பமுமாம்
பல்வகை யால்அரு ளும்திரு வள்ளுவன் பாதங்களே.

○○○

அத்தியாயம் 3

# இலக்கண ஆசிரியர்

## முன்னுரை

இன்று கிடைக்கின்ற தமிழ் இலக்கண நூல்களுள் மிகவும் பழமையானது தொல்காப்பியம். தொல்காப்பியர் அகத்தியரின் மாணாக்கர். அவரோடு பயின்றவர்கள் பின்னும் பதினொருவர். அவர்களுள் அறுவர் தங்கள் பெயரால் சிறப்பான இலக்கண நூல்கள் செய்தனர் என்பது வரலாறு. இவற்றுள் இன்று நமக்குக் கிடைப்பது, தொல்காப்பியர் தம் பெயரால் செய்த நூல் ஒன்றே.

தமிழ் இலக்கணம் ஐந்து (பஞ்ச அதிகாரம்) எனப்பட்ட போதிலும், தொல்காப்பியர் செய்தனவாக இன்று நமக்குக் கிடைப்பன, எழுத்து, சொல், பொருள் என்ற மூன்றே. அவர் பொருளின் பிரிவுகளில் மற்ற இரண்டாகிய யாப்பையும் அணி யையும் அடக்கிச் சொன்னார் என்று ஆன்றோர் கருதுவர். தொல்காப்பியருக்குப் பின் அவர் நூலைத் தழுவியும், காலத் துக்கு ஏற்ப மாற்றியும், ஒவ்வொரு பிரிவிலும் நூல் செய்தார் பலர். இவர்களைக் குறித்த விரிவான அட்டவணையை இதன் பின் காணலாம். இந்த அட்டவணையில், தொல்காப்பியத்தைச் சொல்லவில்லை. இவ்வட்டவணையுள் சிறப்பான நூல்களாகிய அவிநயம், காக்கைபாடினியம், செயிற்றியனார் கூற்றியல் போன்ற இயற்றமிழ் நூல்களையும், திவாகரம் பிங்கலம் போன்ற நிகண்டுகளையும் குறிப்பிடவில்லை. இவை 9-10 நூற்றாண்டு களில் தோன்றினவாகலாம். அப்படியே இசை, நாடகத் தமிழ் இலக்கண நூல்களைச் சொல்லவில்லை. முற்சொன்ன இரு நிகண்டுகள் தவிரப் பிற யாவும் இறந்து போயின.

பொருள் இலக்கண நூல்கள் பல, அகமும் புறமும் பற்றிச் செய்யப் பெற்றிருந்தன. வேறு எந்த அதிகாரம் பற்றியும் தனி இலக்கணங்கள் எழவில்லை. இந்த 11ஆம் நூற்றாண்டில் இலக்கணம் செய்யும் முயற்சிகள் இரண்டு. ஒன்று ஐந்திலக்கணமும் செய்யும் முயற்சி. அதுவும் வடசொல்லையும் மொழியையும் தழுவி இலக்கணம் செய்யும் முயற்சி. இந்த முயற்சியே வீர சோழியம் என்ற இலக்கண நூலாகும். இந்நூலுக்குப் பின்னும் இரு சிறப்புக்கள் உள்ளன. ஒன்று, இது ஒரு புத்த மதத்தினரால் செய்யப் பெற்றது என்பது. இலக்கணங்கள் எல்லாம் பொது வாகச் சைனரே செய்தார்கள் என்ற ஒரு கருத்துத் தவறு என்று காட்டுவதற்குச் சைவ நூல்கள் பல உள்ளன. அப்படிக் காட்டும் ஒரே பௌத்த நூல் இந்த நூல்.

மற்றச் சிறப்பு, செய்வித்தோனால் இது சிறப்புப் பெற்றது. அதாவது, சிறப்பு வாய்ந்த வெற்றி வீரனாக விளங்கிய வீர இராசேந்திரன் என்ற சோழமன்னன் பெயரால் செய்யப் பெற்றது. இம்மன்னன் சிறந்த சிவபக்தன்: நூலாசிரியர் புத்த மதத்தினர். எனவே, சோழ மன்னர்களுடைய பொதுவான சமயப்பொறைக்கு இது சிறந்த எடுத்துக்காட்டாக விளங்கு கிறது.

யாப்பிலக்கணத்துக்குத் தனியாக நூல்கள் முன்னும் எழ வில்லை, பின்னும் எழவில்லை; இந்த நூற்றாண்டில்தான் எழுந்தன. இவை நூற்பாவினால் ஆன யாப்பருங்கலமும் கட்டளைக் கலித்துறையாலான யாப்பருங்கலக் காரிகையும். இரண்டையும் செய்தார் அமிதசாகர முனிவர் என்ற சைனத் துறவி. இவ்விரு நூல்களும் மிகச் சிறந்த நூல்கள். இந்நூல்களின் காலம், இந்த நூற்றாண்டின் தொடக்கமாகும். முன்கூறிய வீர சோழியம் செய்த புத்தமித்திரனார் காலம் இந்த நூற்றாண்டு பிற்பாதியின் தொடக்கமாகும்.

இந்த அத்தியாயத்துள் இவ்வாசிரியர் இருவர் வரலாறு களையும், நூல்களையும் ஆராய்கிறோம்.

## ஐந்திலக்கண நூல் அட்டவணை

க = கட்டளைக் கலித்துறை. நூ = நூற்பா. வெ = வெண்பா.

| எண் | இலக்கணப் பிரிவு | நூற்பெயர் | ஆசிரியர் – யாப்பு | காலம் நூற்றாண்டு | விளக்கம் |
|---|---|---|---|---|---|
| 1 - 5 | ஐந்திலக்கணம் | வீரசோழியம் | புத்தமித்திரனார் க | 11 | வடமொழியைத் தழுவிச் செய்தார். தமிழுலகத்தில் ஆட்சி இல்லை. |
| | ஐந்திலக்கணம் | இலக்கண விளக்கம் | வைத்தியநாத தேசிகர் நூ | 17 | முந்திய நூல்களைத் தழுவிச் செய்தார். குட்டித் தொல்காப்பியம் என்று பெயர் பெற்றதாயினும், ஆட்சி இல்லை. |
| 1 - 2 | எழுத்தும் சொல்லும் | நேமிநாதம் | குணவீர பண்டிதர் க | 12 | சின்னூல் என்று பெயர் பெறும். ஆட்சி இல்லை. |
| | எழுத்தும் சொல்லும் | நன்னூல் | பவணந்தி முனிவர் நூ | 13 | மிகச் சிறந்த நூல். இன்றுவரை ஆட்சியிலுள்ள பெருநூல் இதுவே. |
| 3 | பொருள் இலக்கணம் - புறப்பொருள் | பன்னிரு படலம் | பன்னிரு ஆசிரியர் நூ | ? | தொல்காப்பியர் முதலான பன்னிருவர் ஆசிரியர் என்பர்; நூல் இல்லை; இதை இளம்பூரணர் மறுப்பர். |
| | பொருள் இலக்கணம் - புறப்பொருள் | புறப்பொருள் வெண்பாமாலை | ஐயன் ஆரிதனார் வெ | 9 | அதிகம் ஆட்சியிலுள்ளது. பன்னிருபடலத்தின் வழி செய்யப்பட்டது என்பர். |
| | பொருள் இலக்கணம் - அகப்பொருள் | களவியல் | இறையனார் நூ | 10 | நூல் சங்க காலம் என்பர்; உரையாசிரியர் நக்கீரனார் என்பர். ஆனால் உரை ஏட்டில் எழுதப் பெற்ற காலம் பத்தாம் நூற்றாண்டு. |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| | பொருள் இலக்கணம் - அகப்பொருள் | தமிழ்நெறி விளக்கம் | தெரியவில்லை நூ | 9 | பொருளியல் என்ற ஒரு பகுதி மட்டும் அச்சாகியுள்ளது. |
| | பொருள் இலக்கணம் - அகப்பொருள் | அகப்பொருள் விளக்கம் | நாற்கவிராச நம்பி நூ | 13 | மிகச் சிறந்த அகப்பொருள் இலக்கணமாக இன்றுவரை ஆட்சியிலுள்ளது. |
| | பொருள் இலக்கணம் - அகப்பொருள் | களவியற் காரிகை | தெரியவில்லை க | 14 | சிறந்த உரை, பெரிதும் சிதைவு. |
| | பொருள்இலக்கணம் - அகப்பொருள் | மாறனகப் பொருள் | திருக்குருகைப் பெருமாள் கவிராயர் | 16 | இலக்கியமாக, திருப்பதிக்கோவை என்ற நூலை உடையது. |
| 4 | யாப்பிலக்கணம் | யாப்பருங்கலம் | அமித சாகரர் நூ | 11 | விரிந்த நூல், மிக விரிந்த உரையுடையது. சிறப்பான ஆட்சி இல்லை. |
| | யாப்பிலக்கணம் | யாப்பருங்கலக் காரிகை | அமித சாகரர் க | 11 | சுருங்கிய நூல் இன்றுவரை சிறந்த ஆட்சி பெற்றிருக்கிறது. |
| | யாப்பிலக்கணம் | பாப்பாவினம் | திருக்குருகைப் பெருமாள் கவிராயர் | 17 | நூல் உள்ளது, ஆட்சி இல்லை. |
| 5 | அணி இலக்கணம் | அணியியல் | தெரியவில்லை நூ | ? | நூல் இல்லை. சில மேற்கோள் மட்டும் காணப்படுகின்றது. |
| | அணியிலக்கணம் | தண்டியலங் காரம் | தண்டியாசிரியர் நூ | 12 | இன்று வரை ஆட்சியிலுள்ள மிகச் சிறந்த நூல். |
| | அணியிலக்கணம் | மாறன் அலங்காரம் | திருக்குருகைப் பெருமாள் கவிராயர் | 16 | மிக விரிந்த நூல், ஆட்சியில்லை. |

இவ்வட்டவணையில், இறந்துபோன நூல்களான அவிநயம் முதலியவற்றைச் சொல்லவில்லை. பாட்டியல் வளர்ச்சி, உவமான சங்கிரகம், நிகண்டுகளின் வளர்ச்சி, முத்துவீரியம் போன்ற பிற்கால நூல்கள் ஆகிய பொருள்களைக் குறிப்பிடவில்லை.

## அமிதசாகரர்

### ஆசிரியர்

அமிதசாகர முனிவர் செய்த நூல்கள் இரண்டு என்பது வரலாறு. இரண்டில் விரிந்த நூல் யாப்பருங்கலம்; சுருங்கிய நூல் யாப்பருங்கலக் காரிகை என்பது. இவர் காலத்துக்கு முன் மிகப் பலவான யாப்பிலக்கண நூல்கள் இருந்தன என்று இவர் நூல்களின் உரையால் அறிகிறோம்; ஆனால், அவற்றுள் ஒன்றும் இன்று வழக்கில் இல்லை. நூல்கள் இறந்தன போலும்.

இவர் தீபங்குடி அருங்கலான்வயத்தைச் சேர்ந்தவரென்றும், வேளாள மரபினர் என்றும் கூறுவர். ஆதாரம் விளங்கவில்லை. இவ்விரண்டு நூல்களுள் யாப்பருங்கலம் முதலில் செய்யப் பட்டது. காரிகை பின்னால் செய்யப்பட்டது. இதைக் காரிகை உரைகாரர் பாயிரத்துள் "வேதத்திற்கு நிருத்தமும், வியாகரணத் திற்குக் காரிகையும், அவிநயர் யாப்பிற்கு நாலடி நாற்பதும் போல, யாப்பருங்கல மென்னும் யாப்பிற்கு அங்கமாய், அலங் காரமுடைத்தாகச் செய்யப்பட்டமையால், யாப்பருங்கலக் காரிகை யென்னும் பெயர்த்து" என்று கூறுவதால் விளங்கும். இவ்வாசிரியர் பெயர் அமிர்தசாகரர் என்றும் அமுதசாகரர் என்றும் முதலில் வழங்கப்பெற்றது. 1916இல் யாப்பருங்கலம் அச்சிட்ட பவானந்தம் பிள்ளை அமிர்த சாகரர் என்றே பெயர் குறிப்பிட்டார். பிற்காலத்தில் காரிகை அச்சிட்டோரும் கூட அமுத சாகரர் என்றே எழுதினார்கள். ஆனால் யாப்பருங்கலத் தின் சிறப்புப் பாயிரப் பாடலின் இறுதி இருவரிகள் இவருடைய பெயரின் வடிவம் அமிதசாகரர் என்று நன்கு உணர்த்துகின்றன.

துளக்கருங் கேள்வித் துகள்தீர் காட்சி
அளப்பருங் கடற்பெயர் அருந்தவத் தோனே.

அளப்பரும் - அமிதம்; கடற்பெயர் - சாகரம்; அருந்தவத்தோன் - முனிவர் எனப் பொருள் அமைவது காண்க. இதைத் தெளிவு படுத்தி முதன்முதலாக 1919இல் அனவரத விநாயகம் பிள்ளை அவர்கள் எழுதினார்.

வீரசோழிய உரைகாரரான பெருந்தேவனார் அலங்காரப் படல உரையில், "யாப்பருங்கலத்தின் இறுதிச் சூத்திரமாகிய சித்திரக் கவியாலை கூறும் மாலை மாற்றே சக்கரம் சுழிகுளம்

என்று அமித சாகரனார் கூறியது காண்க" என்று எழுதுகிறார். இதனால் இந்நூலாசிரியரின் இயற்பெயர் தெளிவாகத் தெரிகிறது. (ஆனால் இங்கு இரண்டு இடங்களில் அமுத சாகரர் அமிர்த சாகரர் என்றுதான் பெயர் அச்சிடப்பட்டுள்ளது. ஏடு படித்தோர் அமுத - அமிர்த என்று எண்ணிக் கொண்டதனால் வந்த பிழை போலும்)

அமிதசாகருடைய ஆசிரியர் குணசாகரர் என்பவர். சிறப்புப் பாயிரத்துள் இவர் குணக்கடற் பெயரோன் என்று குறிப்பிடப் படுவதால் தெரிகிறது. இவர் குணசாகர பட்டாரகர் என்ற பெயரால் வழங்கிய ஆசாரியராவர் என்பது பின்வரும் காலக் குறிப்பினால் விளங்கும். அமிதசாகரர் அருக தேவனுக்கு வணக்கம் கூறி நூலைத் தொடங்குவதால், அவர் சைனர் என்று தெளிவு.

யாப்பருங்கலம் என்பது யாப்புக்கு அணிகலமாகிய ஒரு நூல் என்றே பொருள்படும். யாப்பாகிய கடலைக் கடத்தற்கு உதவும் அரிய மரக்கலம். ஆனால் ஆன்றோர், அருங்கலம் என்பது தீபங்குடியில் வாழ்ந்த சைன சமயத்துத் தனிக் குழுவாகிய அருங்கலான்வயம் என்று கூறியுள்ளனர். இதற்கு ஆதாரமில்லை. அமிதசாகரரே காரிகையும் செய்தார் என்பதை விருத்தியுரைகாரர் "இந்நூலுடையாரும் மாஞ்சீர் கலியுட்புகா என விளங்கக் கூறினார்" என்று காரிகை 38ஆம் பாடலை எடுத்துக் காட்டுவதால் தெளிவாக அறியலாம்.

**காலம்**

யாப்பருங்கலத்தின் இறுதிச் சூத்திரம், சித்திரக் கவிமாலையைச் சொல்லுகின்ற 'மாலை மாற்றே சக்கரம் சுழிகுளம்' என்ற 29 அடி கொண்ட நூற்பாவாகும். இது வீரசோழிய உரையுள் அப்படியே எடுத்தாளப்பட்டிருக்கின்றது. வீரசோழியமானது கி.பி. 1063 - 1070இல் அரசாண்ட வீரராசேந்திர சோழனுடைய ஆதரவில் செய்யப்பட்ட ஐந்திலக்கண நூல். இதற்கு உரை செய்தார் ஒரு பெருந்தேவனார். இவர், தம் உரையைக் 'கடனாகவே நவின்றான்' என்று சிறப்புப் பாயிரத்துள் வருவதால், ஆசிரியரது மாணாக்கர் என்பது புலப்படும். இவர் காலம் 1080 - 1110 எனக் கொள்ளத்தகும். எனவே, யாப்பருங்கலத்தை இவர் மேற்கோள் காட்டுவதால் இந்நூல் காலத்தால் முற்பட்டது என்பது தெளிவு.

விசயாலயனால் தோற்றுவிக்கப்பட்ட சோழ மரபானது இராசராசன் காலத்தே மிக்க உன்னதமான நிலையை யடைந்தது.

அவன் காலத்தே நம்பியாண்டார் நம்பி தோன்றித் தேவாரப் பதிகங்களை வெளிப்படுத்தி, சைவத் திருமுறைகளை வகுத்தார். அக்காலத்திலும், பின்னரும், சைன பௌத்த இலக்கண ஆசிரியர் சிலர் தோன்றியிருந்தார்கள். அக்காலப் பகுதியில் யாப்பருங்கலம் செய்த அமிதசாகரனார் தோன்றினார் என்பதற்கும் சில குறிப்புக்கள் சாசனங்களில் கிடைக்கின்றன.

மாயூரத்துக்கு அருகிலுள்ள பாடல் பெற்ற தலமாகிய திருநீடூர்க் கோயில் கல்வெட்டுக்கள் சில செய்திகளை உணர்த்துகின்றன. இக்கோயில் சுமார் ஐம்பது ஆண்டுகளுக்கு முன் புதுத் திருப்பணி செய்யப்பட்டது; செய்தபோது கோயில் சுவரில் கல்வெட்டுக்கள் அடங்கிய கற்கள் கலைக்கப்பட்டன. கலைப்பதற்கு முன் அங்கிருந்த கல்வெட்டுக்களைச் சாசன இலாகாவினர் பிரதி செய்திருக்கிறார்கள். அவற்றுள் இரண்டு செய்யுள் வடிவத்தில் உள்ளன. அவை முதற்குலோத்துங்கன் ஆட்சிக் காலத்தில் (1070 - 1120) பொறிக்கப்பட்டவை. முதல் செய்யுட் சாசனம் அவனது 38ஆம் ஆட்சியாண்டில் (1108) எழுந்தது.

எண்டிசை யுலகை ஒருகுடை நிழற்கீழ்
    இருத்திய குலோத்துங்க சோழற்கு
யாண்டொரு முப்பத் தெட்டினிற் சோணாட்டு
    இசைவளர் இந்தளூர் நாட்டுள்
உண்டைநீ டியநீ டூர்உமை யோடும்
    உலாவிய சிவபெரு மானுக்கு
உவந்து வெண்கயிலை மலைஎனச் சிலையால்
    உத்தம விமானமிங் கமைத்தான்
தண்டமிழ் அமித சாகர முனியைச்
    சயங்கொண்ட சோழமண் டலத்துத்
தண்சிறு குன்ற நாட்டகத்து இருத்திச்
    சந்தநூற் காரிகை அவனால்
கண்டவன் மருமான் காரிகைக் குளத்தூர்க்
    காவலன் நிலாவினான் எவர்க்கும்
கருணையும் நிதியும் காட்டிய மிழலை
    நாட்டுவேள் கண்டன் மாதவனே.*

* இப்பாடலில் ஆசிரியர் பெயர் அமிதசாகரர் என்றிருப்பது காணத்தக்கது. மற்றப் பாடல் அமுதசாகரர் என்று கூறும்; கல்வெட்டினோர் பிழையாகும். இந்தளூர் நாடு ஆழ்வார் மங்களாசாசனம் பெற்று இப்போது திருவழுந்தூர் என வழங்கும் ஊரை உள்ளடக்கிய நாட்டுப் பகுதி.

இரண்டாவது சாசனம் சோழனது ஆட்சியாண்டு 46இல் (1116) எழுந்தது: சோழர்களுள் இவன் ஒருவனே இவ்வளவு நீண்ட காலம் ஆட்சி புரிந்தவன் ஆதலால், காலம் இக்குலோத்துங்கன் (I) காலம் என்பது தெளிவு.

ஆரிய உலகம் அனைத்தையும் குடைக்கீழ்
ஆக்கிய குலோத்துங்க சோழற்கு
ஆண்டொரு நாற்பத் தாறிடைத் தில்லை
அம்பலத் தேவட கீழ்ப்பால்
போரியல் மதித்துச் சொன்னவா றறிவார்
கோயிலும் புராண நூல் விரிக்கும்
புரிசை மாளிகையும் வரிசையால் விளங்கிப்
பொருப்பினால் விருப்புறச் செய்தோன்
நேரியற்கு ஆண்டோ ரஞ்சுடன் மூன்றில்
நிகரிலாக் கற்றளி நீடுர்
நிலாவினாற் கமைத்த நிலாவினான் அமுத
சாகரன் நெடுந்தமிழ்த் தொகுத்த
காரிகைக் குளத்தூர் மன்னவன் தொண்டை
காவலன் சிறுகுன்ற நாட்டுக்
கற்பக மிழலை நாட்டுவே ளாண்மை
கொண்டவன் கண்டன்மா தவனே.*

இவ்விரு பாடல்களும் அமிதசாகர முனியைக் குறித்த சில செய்திகளைத் தெரிவிக்கின்றன. இக்கண்டன் மாதவன், அமிதசாகர முனிவரைக் கொண்டுவந்து குளத்தூரில் இருக்கச் செய்து காரிகை பாடுவித்தவனுடைய வழித்தோன்றல்; மருமான் என்பது, இக்காலத்துப் போலன்றி, அக்காலத்து, சங்க இலக்கிய காலத்தில் உள்ளது போல, வழிவந்தவன் என்ற பொருளுடையது. இவன் முன்னோர் செயங்கொண்ட சோழ மண்டலமாகிய தொண்டை மண்டலத்தில் குளத்தூரில், சோழரின் கீழுள்ள

* செயங்கொண்ட சோழமண்டலம் தொண்டை மண்டலம். கண்டன் மாதவன் என்ற சிற்றரசன், அமிதசாகர முனியாற் காரிகை கண்டவன் மருமானும், காரிகைக் குளத்தூர்க் காவலனும், மிழலை நாட்டு வேளும் ஆவான். சிறுகுன்ற நாடென்பது, இக்குளத்தூரை உள்ளடக்கிய பிரதேசமாகும். இது தொண்டை மண்டலத்து ஆமூர்க் கோட்டத்தில் உள்ளது. இவ்வூரில் அமிதசாகர முனிவர் தங்கியிருந்து காரிகை செய்ததனால், ஊருக்கே பின்னர் காரிகைக் குளத்தூர் என்ற பெயர் எழுந்தது. முதல் இராசேந்திரன் காலத்துக் காரிகைப் பேரூர் நாடு என ஒரு நாட்டின் பெயரும் சாசனங்களில் பயில்கிறது.

தலைவர்களாய் வாழ்ந்தவர்கள். முனிவர் யாப்பருங்கலக் காரிகை பாடிய சிறப்பால், அவ்வூர் பின்னர் காரிகைக் குளத்தூர் என்ற பெயர் பெறுவதாயிற்று. இராசேந்திர சோழன் காலத்தில் காரிகைப் பேரூர் நாடு என்ற பெயர் வழங்கி வந்தமை தெரிவதால், அவன் காலத்துக்கு (1012 - 1044) முன்னமேயே காரிகை பாடப்பெற்று, இவனாலும் சிறப்புப் பெயர் பெற்றது என்பது தெளிவு. செயங்கொண்ட சோழன் முதல் இராசராசன் (985 - 1014). இவன் பெயராலேயே தொண்டை மண்டலம் செயங் கொண்ட சோழ மண்டலம் எனப்பட்டது. ஆதலால், இராசேந்திரனுக்கு முன்னதாக, இராசராசன் காலத்தில்தான் இந்நூல் பாடப்பட்டிருத்தல் வேண்டும்.

மேலும், பாண்டியர் வரலாறொன்றால் அமிதசாகரருடைய குருவாகிய குணசாகரர் என்று கருதத்தக்க குணசாகர பட்டாரகர் என்ற ஆசாரியர் வரலாறும் சிறிது தெரிகிறது. திருநெல்வேலி ஜில்லா கழுகு மலையில், மாறன் சடையன் என்ற பாண்டியனுடைய மூன்றாம் ஆட்சியாண்டில் எழுந்த சாசனங்களால் அக்காலத்தில் குணசாகர பட்டாரகர் என்ற சிறப்பு வாய்ந்த சைனமத ஆசாரியர் தமது சைன சித்தாந்தத்தைப் பரப்புவதற்காக, பிரசாரகர் சிலரை நியமித்து அவர்களுக்கு உணவளிக்கும் பொருட்டுப் பூதானம் பல செய்தார் என்று தெரிகிறது. அவரிடம் சீடர் பலர். இப்பாண்டியன் மூன்றாம் இராசசிம்ம பாண்டியன் புதல்வனாய், கி.பி. 946 முதல் 966 வரையில் அரசாண்ட வீர பாண்டியனாகலாம் என்பது அறிஞர் கருத்து. மேலும் அச்சாசனங்களில் வீரநாராயண ஏரி, உத்தம சீலன் என்ற பெயர்களும் காணப்படுகின்றன. வீரநாராயணன் என்பது 907-953இல் ஆட்சி புரிந்த பராந்தக சோழனுக்கு உரிய பெயர். இவனுக்குப் பின் கண்டராதித்த சோழனையும் அரிஞ்சயனையும் கடந்து, 957இல் பட்டமேற்ற இரண்டாம் பராந்தகனாகிய சுந்தர சோழன் அவ்வீர பாண்டியனை வென்றவன். இவனுக்குப் பின் 970இல் பட்டமேற்றவன் உத்தம சோழன் (970 - 985). இக்காலப் பகுதியில் குணசாகர பட்டாரகர் வாழ்ந்தார் என்றால், இவர் மாணாக்கரான அமிதசாகரர், அடுத்துப் பட்டமேற்ற இராசராசன் (985 - 1014) காலத்தில் வாழ்ந்தார் என்பதும் பொருந்தக் கூடியதே. ஆதலால் நீடூர்ச் சாசனத்தால் வரையறுக்கப்படும் கால எல்லை இதற்கும் ஒத்திருப்பது தெரியவரும். எனவே, அமிதசாகரர் காலமும் கி.பி. 1000 - 1014க்குள் அடங்கும் எனக் கருதுதல் பிழையாகாது.

பாடலில் கண்ட சொன்னவாறறிவார், சேரமான் பெருமாள். இவருக்குக் கோயிலும் புராண படனம் செய்வதற்கான மண்டபமும் சிறப்பாகச் செய்தவன் வழிவந்தவனே கண்டன் மாதவன்.

### யாப்பருங்கல விருத்தியுரை

இவ்வுரையாசிரியர் மேற்கோள் காட்டும் பாடலொன்றில் கோன் கண்டன் என்ற பெயர் வருகிறது, இப்பெயர் ஒருகால் இக்கண்டன் மாதவனைக் குறிப்பதாகலாம்:

குலாவணங்கு வில்லெயினர் கோன்கண்டன் கோழி
நிலாவணங்கு நேர்மணல்மேல் நின்று – புலாவுணங்கல்
கள்ளம்புட் காக்கின்ற கோவின்மையோ நீ பிறர்
உள்ளம்புக் காப்ப துரை.

குணசாகரரும் இப்பாடலைத் தருகிறார்.

### யாப்பருங்கலம்

அருங்கலம் என்பது அரிய அணி. அமிதசாகரனார் இவ்வாறு அணி இலக்கணத்தின் பெயர் தோற்றுமாறு தம் யாப்பிலக்கணத்திற்குப் பெயர் அமைத்திருப்பது சுவையுடையது. அருங்கலம் என்று நூற்பெயர் அமைத்தனாலேயே இவர் அருங்கலான்வயம் என்ற சைனக்குழுவினர் என்று எண்ணுவது அவசியமில்லை. ஏழாம் நூற்றாண்டில் அப்பர் சுவாமிகள் பாடிய நமசிவாயத் திருப்பதிகத்தில் பூவினுக்கு அருங்கலம் என்று தொடங்குகிற இரண்டாம் பாடல் நான்கு வரிகளிலும் அருங்கலம் என்று அமைத்திருப்பது அனைவரும் நன்கறிந்தது.

இது நூற்பாவால் இயன்ற யாப்பிலக்கண நூல். இதன் பகுதிகள் ஒத்து எனப்படும். இதனுள் உறுப்பியல் ஒத்து, செய்யுளியல் ஒத்து, ஒழிபியல் ஒத்து என மூன்று பகுதிகள் உள்ளன. உறுப்பியல் என்பது செய்யுளின் உறுப்பைக் கூறும் பகுதி. இது எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை ஆகிய ஆறு ஒத்துக்களை உடையது. சிறப்புப் பாயிரத்தோடு நூல் தொடங்குகிறது.

முழுதுலகு இறைஞ்ச முற்றொருங் குணர்ந்தோன்
செழுமலர்ச் சேவடி செவ்விதின் வணங்கிப்
பாற்படு தென்தமிழ்ப் பரவையின் வாங்கி
யாப்பருங் கலம் நனி யாப்புற வகுத்தோன்

தனக்கு வரம்பாகிய தவத்தொடு புணர்ந்த
குணக்கடற் பெயரோன் கொள்கையின் வழாஅத்
துளக்கறு கேள்வித் துகள்தீர் காட்சி
அளப்பருங் கடற்பெயர் அருந்தவத் தோனே.

*இப்பாடல் நூற்பெயரும், நூலாசிரியர் பெயரும், அவருடைய ஆசிரியர் பெயரும் மட்டும் கூறுகின்றது. அடுத்து உள்ள தெய்வ வணக்கப் பாடல் அருகக்கடவுள் துதி கூறுகிறது:*

வெறிகமழ் தாமரை மீமிசை ஒதுங்கிய
அறிவனை வணங்கி அறைகுவன் யாப்பே.

*இதன் ஒத்துக்கள் பின்வரும் அளவுள்ள நூற்பாக்களைக் கொண்டவை. பாயிரம் 2; உறுப்பியல் 53 (எழுத்து 4, அசை 5, சீர் 7, தளை 6, அடி 10, தொடை 21); செய்யுளியல் 40; ஒழிபியல் 3 - ஆக 98. இவற்றுள், ஒழிபியலின் 2, 3ஆம் சூத்திரங்கள் முறையே புறனடையும் சித்திரக்கவி மாலையுமாகும். இவ்விரு சூத்திரங்களும் உரையும் ஏறக்குறைய நூலில் பாதி அளவினவாக உள்ளன. மூன்றாம் சூத்திரம், சித்திரக்கவிமாலை* என்று தலைப்பு இடப் பெற்றிருப்பினும், அதனோடு தொடங்கி நால்வகைக் கவிஞன் முதலிய ஆசிரியரின் இலக்கணம் கூறுகின்றது. பின்வந்த வீரசோழியம் முதலான இலக்கண நூல்களுக்கு இதுவே வழிகாட்டியாக அமைந்திருக்கிறது. இதன் நூற்பாக்கள் ஓரடிச் சிறுமையும் இருபத்தொன்பதடிப் பெருமையும் உடையன. உரையிறுதியில் காணப்படும் வெண்பா நூலின் பெருமையை நன்குணர்த்தும்:*

சொல்லிற் சுருங்கிப் பொருள்பெருகித் தொல்ஞால
மெல்லாம் விளக்கி இருளகற்றும் – நல்யாப்
பருங்கலம் வல்லவர் தாம் அன்றே, கேள்வி
ஒருங்கறிய வல்லார் உணர்ந்து.

*எனினும், கால ரீதியில் யாப்பருங்கலம் பயில்வார் அருகி, இதன் ஆசிரியரே செய்த மற்றொரு நூலாகிய யாப்பருங்கலக் காரிகையே தமிழ்க் கல்வியாளரிடை மிக்க ஆட்சியுடையதாகி, இன்றும் அப்படியே இருந்து வருகிறது.*

---

* *மாலை மாற்றே சக்கரம் சுழிகுணம் என்ற சித்திரக்கவி மாலைச் செய்யுள் பிங்கலத்தில் காணப்படுகிறது. முதல் 14 அடிகள் பிங்கலம். பின் 15 அடிகள் அமிதசாகரர் சேர்த்தவை போலும்.*

## பதிப்பு

*யாப்பருங்கலம் மூலமும் உரையும் சிறப்பான முறையில் 1919, 1929 ஆண்டுகளில் இரு தொகுதிகளாக பவானந்தம் பிள்ளை பதிப்பாக வெளிவந்தது. முதல் தொகுதி முகவுரையில், பஞ்ச தந்திரம் எழுதிய தாண்டவராய முதலியார் யாப்பருங்கல மூலத்தை மட்டும் நெடுங்காலம் முன்னமே அச்சிட்டு வெளிப் படுத்தினார் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. பவானந்தம் பிள்ளை பதிப்பில் ஆங்கிலத் தமிழ் முகவுரைகள், சில ஆராய்ச்சிக் குறிப் புக்கள், மேற்கோள் நூல் அட்டவணை, அரசர் ஊர் முதலிய வற்றின் பட்டியல், மேற்கோள் பாடல் முதற்குறிப்பு முதலியன தொகுக்கப்பட்டுள்ளன. சென்னை அரசாங்கத் தொன்னூல் நிலைய வெளியீடு, மே.வீ. வேணுகோபாலப் பிள்ளை பதிப்பு 1960. முன் பதிப்பிலுள்ள அகராதிகள் அப்படியே பதிப்பிக்கப் பட்டுள்ளன. புதிதாய்ச் சேர்த்த பொருளகராதி முதலியவற்றுக்குப் பக்க எண்ணே இல்லை. எழுத்து, மிகவும் கெட்டியான 9 பாயிண்ட் எழுத்து. பிந்திய பதிப்பு என்பதற்கான புதிய அம் சங்கள் எவையும் இதனுள் காணப்படவில்லை.*

### யாப்பருங்கலக் காரிகை

*இந்த நூல் கட்டளைக் கலித்துறையால் இயன்றது. காரிகை என்ற சொல்லின் பொருள் அழகு, அழகுடைய பெண், கட்டளைக் கலித்துறை என்று திவாகரம் கூறும். முன்னமே இருந்த இப்பெயரை அமிதசாகரர் எடுத்துப் பொருத்திக் கொண்டார். இவருக்கு முன்னால் இப்பெயரை இவ்வாறு யாரும் அமைத்துக் கொண்டதில்லை. இது காரணமாகப் பிற்காலத்தில் காரிகை என்றால் யாப்பருங்கலக் காரிகை என்ற அளவுக்கு இது நூற்பெயராகவே ஆகிவிட்டது. மண்டல புருடர் சூடாமணி நிகண்டில், காரிகை ஒரு நூல் என்றே கூறுகிறார். 'காடும் செடியுமன்றோ தமிழ்க்காரிகை கற்றதுவே' என்ற படிக்காசுப் புலவர் பாட்டும் காணத்தக்கது.*

*இது யாப்பருங்கலத்தை விடச் சுருக்கமாகவும் எளிமை யாகவும், அப்பெரு நூலுக்கு அங்கமாகவும் செய்யப்பெற்ற தென்று தெரிகிறது. காரிகை என்பது ஒரு பெண் என்றும் பொருள் படுமாதலால், நூல் மட்டுமின்றி அருங்கலம் அணிந்த ஒரு பெண் என்பதும் பெயரிலுள்ள நயம்.*

*அருங்கல நூல் பாகுபாட்டை யொட்டியே இந்நூலும் உறுப்பியல் செய்யுளியல் ஒழிபியல் என்ற மூன்றியல்களாயுள்ளது.*

இவை முறையே 21, 16, 10ஆக 47 சூத்திரங்களும் கொண்டது. இந்நூல் 'யாப்பருங்கலப் புறனடை' என்ற பெயருடையதென்று அந்நூலுரையால் அறிகிறோம். முதல் மூன்று பாடல்கள் தற் சிறப்புப் பாயிரமும் அவையடக்கமும் கூறும். முதற் பாடல் அருகக் கடவுளை வணங்குவது. தற்சிறப்புப் பாயிர உரை, இந் நூல் செய்தார் அமிதசாகரர் என்றும் நூற்பொருள் முதலியன இவை என்றும் விளங்கக் கூறுகிறது. அவையடக்கப் பாடல் பின்வருவது:

தேனார் கமழ் தொங்கல் மீனவன் கேட்பத்தெண் ணீரருவிக்
கானார் மலயத் தருந்தவன் சொன்னகன் னித்தமிழ் நூல்
யானா நடாத்துகின் றேனென் றெனக்கே நகை தருமால்
ஆனா அறிவி னவர்கட் கென்னாங் கொலென் னாதரவே.

மீனவன் கேட்ப என்றமையால், இவர் பாண்டியன் அவையுள் அரங்கேற்றினார் என்று பொருளாகிறது. குளத்தூரில் இவரை அழைத்துச் சென்று அங்கிருந்த வள்ளல் இவரைக் காரிகை பாடுவித்தான் என்று முன் காட்டிய இரு பாடல்களால் அறிந் தோம். ஆனால் இவர் நூலை அரங்கேற்றியது பாண்டியன் அவையில் என்று பொருள் கொள்ளுமாறு இப்பாடல் உள்ளது. சம்பிரதாயப்படி இவர் அகத்தியன் தமிழ் நூல் என்கிறார்: அகத்தியர் இலக்கணம் வகுத்துத் தந்த தமிழில் என்ற பொருளில்.

இமயம் சேர்ந்த காக்கையும் பொன்னிறமடையும் என்று பலரும் குறிப்பிடும் கருத்தை இவரும் 'பனிமால் இமயப் பொருப்பகம் சேர்ந்த பொல்லாக் கருங்காக்கையும் பொன்னிற மாய் இருக்கும்' (பாயிரம் 3) என்று கூறுகிறார்.

உறுப்பியலானது எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை என்பன முறையே கூறுகிறது. எழுத்து பதின் மூன்றுவகை, அசை இருவகை, செய்யுள் சீர் ஐந்து வகை, தளை ஏழுவகை, அடி ஐந்து வகை, தொடை நாற்பத்து மூன்று வகை என்று கூறப்பட்டுள்ளன. செய்யுள் இயலானது வெண்பா, ஆசிரியம், கலி ஆகிய மூன்று பாக்கள் நாற்சீர் அடிகளால் நடைபெறு மென்றும், வஞ்சிப்பா இரு சீரல்லது முச்சீர் அடியால் நடை பெறுமென்றும், அவற்றுக்குரிய ஓசை இன்னதென்றும், பின்னர் பாக்களின் வகை, பாவினங்களின் வகை ஆகியவற்றிற்கு இன் னது இலக்கண மென்றும், மருட்பாவானது புறநிலை வாழ்த்து, கைக்கிளை, வாயுறை வாழ்த்து, செவியறிவுறூஉ என்ற நான்கு

பொருள் பற்றி வருமென்றும் கூறுகின்றது மூன்றாவதாகிய ஒழிபியலானது, யாப்பிலக்கணத்துக்கே சிறப்பான சில கருத்துக் களையும், எல்லா நூற்கும் பொதுவான நூற்பயன், ஆசிரியர், மதவிகற்பம், குற்றம், குணம், உரை, உத்தி முதலியனவும் விளங்கக் கூறுகிறது.

இக்காரிகை எல்லோராலும் நன்கு பயிலப்பட்டு வந்தது. 'காரிகை கற்றுக் கவிபாடுதல்' என்பது ஒரு பழமொழிபோல வழங்கிற்று. இப்பழமொழி இருவகையில் பொருளுடையது. காரிகை கற்றால், கவிபாட வல்ல புலமை கைகூடும் என்பது ஒன்று. காரிகை மட்டும் கற்றுக் கவி பாடினால் அதில் இலக்கணம் பொருந்தி இருக்குமேயன்றி, கவிச்சுவை அமைதல் நாமகள் அருளால்தான் என்பது மற்றொன்று.

காரிகை கற்றுக் கவிபா டுவதினும்
பேரிகை கொட்டிப் பிழைப்பது நன்றே.

என்ற ஒரு பாடல் கூட நாமகள் அருள் வேண்டும் என்ற நிலையை நன்குணர்த்துவது. காரிகை நூல் படித்தறிவதன் அவசியத்தை ஒரு பண்டை வரலாறும் கூறும். வைத்தியநாத தேசிகர் மகன் சதாசிவ தேசிகரிடம் கல்வி பயின்ற மாணாக்கர் காடுகளில் தூதுளங்காய் பறிக்கச் சென்றபோது காரிகையை மனப்பாடம் செய்து கொண்டே பறித்தனராம். அவர்களைப் பாராது, அவ்வழியே கவியோசையை மட்டும் செவியுற்று வந்த படிக்காசுப் புலவர் வியப்படைந்து, ...பட்டியெங்கும் - காடும் செடியும் என்னோ தமிழ் கற்றதுவே என்று பாடினாராம் (பெருந்தொகை 1725).

மனப்பாடம் செய்வோருக்கு உதவியாயிருக்கும் பொருட்டு, ஆசிரியரே இதன் ஒவ்வோர் இயலிலும் அமைந்த சூத்திரங்களின் முதல் தொடரை ஒரு சூத்திரமாக அழகுபட அமைத்திருக்கிறார். அன்றியும், நூல் நெடுகிலும் உதாரண இலக்கியங்களை நினை வில் கொள்ளும் பொருட்டு அவற்றின் முதல்நிலைக் காரிகை ஒன்றும் அமைக்கப் பெற்றுள்ளது. இவையும் சூத்திரங்களோடு சேர்த்தே கணக்கிடப்பெறும். இதனால், ஆசிரியர் கருத்துக்கு விளக்கம் இன்னின்ன பாடல் என்பது ஆசிரியராலேயே சுட்டப் பட்டிருப்பது தெளிவாகும். சூத்திரங்கள் யாவும் நயம்பட அமைந்துள்ளன. இன்றுவரையில் இலக்கணம் பயின்றோர் யாவரும் யாப்புக்கு இக்காரிகையையே பெரிதும் பாராட்டிக் கற்று வருகின்றனர்; யாப்பருங்கலத்தைக் கற்றவர் அரியர்.

இக்காரிகைக்கு ஆசிரியரின் மாணாக்கராகிய குணசாகரர் என்பவர் இலக்கண இலக்கிய மேற்கோள்களோடு மிகச் சிறந்த உரை எழுதியிருக்கிறார். மூலமும் உரையும் பலமுறை பதிப்பிக்கப் பெற்றுள்ளன. வேறு பல புதிய உரைகளும் உள்ளன.

ஒரு செய்தி நினைவு கூரலாம். யாப்பருங்கலக்காரிகை தோன்றிய பிறகு எந்தத் தனி யாப்பிலக்கண நூலுமே தோன்றவில்லை. பிற பகுதிகளில் பல்வேறு இலக்கணங்கள் தோன்றியிருந்தும், இப்பகுதியில் எந்த நூலும் தோன்றாமை இதனுடைய பெரும் தகுதிக்குச் சான்று பகரும்.

## காரிகை பற்றிய ஒரு குறிப்பு

யாப்பருங்கலக் காரிகை மூலத்தை மட்டும் ஆராயும்போது ஒரு கருத்து எழாமல் போகாது. அமிதசாகரர் யாப்பருங்கலமும் காரிகையும் செய்ததாக வரலாறு சொல்லுகிறது. அருங்கலம் நூற்பாவால் ஆனது; காரிகை கட்டளைக் கலித்துறை. காரிகையால் இந்நூல் பாடிய ஆசிரியர் இதனுள் கட்டளைக் கலித்துறைக்கு இலக்கணம் கூறவில்லை. உடம்பொடு புணர்த்தல் உத்தியால் உணர வைத்தல் போலும். அருங்கலச் சூத்திரங்களில் சில இடங்களில் என்மனார் புலவர், வகுத்தனர் என்ப இயல்புணர்ந்தோரே என்பன போன்ற தொடர்கள் மிகவும் அருகிக் காணப்படும். ஆனால், காரிகை மகடூஉ முன்னிலையாகச் செய்யப்பட்டது என்று சொன்னோம். இங்கு மகடூஉ முன்னிலையாக வரும் பாடல்கள், 47இல் 34. பெண்ணைப் பழிப்பதே மரபாக உடைய சமண சமயத்தில் வந்த இவ்வாசிரியர் ஏன் இவ்வாறு பெண்ணை முன்னிலையாக வைத்துப் பாடினார் என்பது தெரியவில்லை. புலவர் மரபு என்று கருதலாம். அது அத்துணை கொள்ளத்தக்கதாகத் தெரியவில்லை. இலக்கியத்துள் இவ்வாறு வருதலைக் கொள்ளமுடியும். இலக்கணத்துள் கொள்ளுவது கடினம். இலக்கியத்துள் நாலடியார் பாண்டி மன்னனை முன்னிலைப்படுத்தியும், அபூர்வமாக மகடூஉ முன்னிலையாகவும் பேசுகிறது. நாலடியார் 400 பாடல்களில் மிகச் சிலவே - ஆறு பாடல்களே - இப்படி உள்ளன. ஆனால், இவ்விலக்கணத்தில் பெரும்பகுதி மகடூஉ முன்னிலையாக இருப்பது சில ஐயங்களை விளைவிக்கிறது. உரைகள் அமித சாகர முனிவரே பாடியிருக்கிறார் என்று தெரிவிக்கின்றன. இருந்தாலும் ஐயம் நீங்க வழி இல்லை.

பிற்கால ஆசிரியர் சிலர் பாடியிருப்பதுபோல, நூலாசிரியர் தம் மாணாக்கி ஒருத்திக்கு இக்காரிகையைப் பாடியளித்தார் என்று கருதக்கூடும். சூரியனார் கோயில் ஆதீனத்தை ஸ்தாபித்த சிவாக்கிர யோகிகள் என்ற துறவி, தமது குருவாகிய இல்லறத் தாரான சிவக்கொழுந்து தேசிகரின் புதல்வியான சுவானந்த நாச்சியார் என்பவருக்குச் சிவஞான நெறியை விளக்கவேண்டிச் சிவநெறிப் பிரகாசம் பாடித் தந்தார் என்று வரலாறு கூறும். அங்கு 213 பாடல்களில் மகடூஉ முன்னிலையாக விளித்த சொல்லே இல்லை. நீ உணர்ந்துகொள் என்று சொல்லுகிறாரேயன்றி, மாதே என்று கூடச் சொல்லவில்லை. அங்கு ஆசிரியர் உண்மை யாகவே தம் மாணாக்கிக்குப் பாடிக் கொடுக்கிறார். முற்கூறிய நாலடியைப் பார்ப்போமானால், அங்கு தொடீஇ, கண்ணாய், எயிற்றாய், கோதாய் என்ற விளிகளே வருகின்றன. நாலடியார் செய்தவரும் துறவியாவார். காலம் பழைய காலம்.

ஆனால் காரிகையின் நிலைமை விபரீதமாக இருக்கிறது. மகடூஉ முன்னிலை அநேகமாக எல்லாப் பாடல்களிலும். ஆசிரியர் முன்னிலைப்படுத்திக் கூறும் மொழிகள் பின்வருவன. குழலே கோதாய் கொடியே கண்ணி இடையாய் நுதலே தோளி மொழியே நேரிழையே - 22 பாடல்கள்; திருவே நல்லாய் மாதே மெல்லியலே - 8 பாடல்கள்; மென்முலை - பாடல் 1; அல்குல் - பாடல் 3. நூலுடை வெள்ளிதழ்த் தாமரைக் கோயில் நுடங் கிடையே - பாடல் 26. இவற்றைப் பார்க்கும்போது முக்கிய மாக இறுதி இரண்டு தலைப்பையும் பார்க்கும்போது, ஓர் ஆசிரியர் - அதிலும் முனிவராய் உள்ளவர் - தம் மாணாக்கியை இவ்வாறு விளித்துப் பேசுவாரா என்ற ஐயம் நமக்கு எழுகிறது. இவர் சைனர். சைன மதத்தில் இவ்வாறு விளிக்கலாம் போலும்! சிற்றின்பத்தையே மிகைப்படுத்திப் பேசுகின்ற சீவக சிந்தா மணியை ஒரு சைனமுனிவர் செய்தார். பெண்களை மிகவும் இழித்துப் பேசுகின்ற கதையாகிய யசோதர காவியத்தை ஒரு சைனர் எழுதினார். இந்த மாதிரியான முன்னிலை விளிகளை உடைய ஓர் இலக்கணத்தையும் மற்றொரு சைன முனிவர் செய்தார் என்று வரலாறு சொல்லுகிறது. இதை ஒப்புக் கொள்ளாமல் என்ன செய்வது? சிற்றின்பத்தைத் துறக்க வேண்டும் என்று சதா உபதேசம் செய்யும் சைனமுனிவருக்கு இந்த உரிமை உண்டு போலும். இது அறிஞர் சிந்தனைக்குரியது.

இதே நூற்றாண்டில் அரை நூற்றாண்டு பிற்பட்டு எழுதப் பெற்ற வீரசோழியத்திலும் மகடூஉ முன்னிலைப் பாடல்கள் அதிகமாக உள்ளன. 181 காரிகைச் சூத்திரங்களில் மகடூஉ முன்னிலையாக வருவன 58. இவற்றுள் ஒன்று அல்குல் மாதே என்று கூறுகிறது. பாட்டை நிரப்ப அறியாமல் ஆசிரியர்கள் இவ்வாறு பெய்து கொண்டனர் என்று கருதலாம்; அல்லது அக்காலத்தில் பெண்களை இவ்வாறு எதிரே விளித்துப் பேசுவது குற்றமெனக் கருதப்படவில்லை என்று கூறலாம்.

## புத்தமித்திரனார் - வீரசோழியம்

### முன்னுரை

தமிழ் இலக்கிய வரலாற்றில் வீரசோழியத்துக்குச் சிறப்பான இடமுண்டு. முதலாவது, இந்நூல் பௌத்த சமயத்தார் தமிழில் செய்த ஒரே இலக்கண நூலாகும். பௌத்தம் தமிழை வளர்த்தது என்று சிலர் சொல்வார்கள். அது பெரிதும் ஏற்கத்தகாத ஒரு கூற்று. பௌத்தர் எத்தனையோ நூல் செய்ததாகச் சொல்லப் படினும், கிடைக்கிற நூல்கள் இரண்டே; ஒன்று இலக்கியம், மற்றது இலக்கணம். சாத்தனார் செய்த மணிமேகலை இலக்கியம்; இதனுள் பௌத்த சமயத் தத்துவங்கள் நன்கு ஆராயப் பட்டுள்ளன. மற்றது வீரசோழியமாகிய இலக்கணம். இவ்விரண்டைத் தவிர, இன்று தமிழில் வேறு பௌத்த நூல் இல்லை. பௌத்தர் சைனர்களைப் போல ஒரு காலத்திலும் தமிழ் நாட்டில் அரசியலில் ஆதிக்கம் பெற்றுத் தமிழ் நாகரிகத்தையும், சமயத்தையும், மொழியையும் குலைக்க முயலவில்லை என்பது நினைவு கூரத்தக்கது.

இரண்டாவது, வீரசோழியமானது மிகச் சுருங்கிய அளவிலே ஐந்திலக்கணங்களையும் சொல்ல முயல்கிறது. முன் காட்டிய அட்டவணையால், (பக்கம் 76) தொல்காப்பியத்தின் பின் ஏற்பட்ட இலக்கண வளர்ச்சி நன்கு விளங்கும். வீரசோழியமுடையாருக்கு முன், தொல்காப்பியத்தின் பின், பொருளிலக்கணமும் யாப்பிலக்கணமும் புதியனவாகப் பல செய்யப்பட்டிருந்தன. எழுத்து, சொல், அணி பற்றி யாரும் இலக்கண நூல் செய்யவில்லை. ஐந்திலக்கணமும் பற்றி நூல் செய்தது இவருடைய சிறப்பு.

மூன்றாவது, இவர் வடமொழி இலக்கணத்தை ஒட்டித் தமிழுக்கு இலக்கணம் செய்ய முற்பட்டதாகும். இது ஒரு புது முயற்சி. பிற்காலத்தில் இவர் முன் மாதிரியைக் கொண்டு ஐந்திலக்கணம் செய்யவும், வடமொழியை உடன் கொண்டு தமிழிலக்கணம் செய்யவும், முன் வந்தோர் சிலர். இவர் காலத்தில் வடமொழி தமிழில் அதிகமாக ஆட்சிக்கு வரவில்லை. சிவாலயங்கள் இந்தக் காலத்தில் தான் பெருகிக் கொண்டு வந்தன. சிவாசாரியர்களால் வடமொழி மூலாகம நூல்கள் ஆலய வழிபாட்டில் ஆட்சிக்கு வரத் தலைப்பட்டன. வைணவத்தில் இப்போதுதான் நாலாயிரங்களையும் கண்டு பிடித்து நாதமுனிகளும் அவருக்குப் பின்வந்த சில ஆசாரியர்களும் தோன்றி, குரு சிஷ்ய பரம்பரையை வளர்க்கத் தலைப்பட்டார்கள். இந்த நிலையில் வடமொழியைத் தமிழில் அமைத்துக் கொள்வதற்கும் பயன்பட வேண்டும் என்று கருதிச் சிறந்த நோக்குடன் இவ்வாசிரியர் இந்நூலை எழுதினார் என்று தெரிகிறது.

இலக்கியம் தோன்றிய பிறகு இலக்கணம் எழுதுதல் மொழி நியதி. ஆனால் இங்கு இலக்கியம் இல்லாமலே இலக்கணம் ஏற்பட்டிருக்கிறது என்று சொல்லலாம். இதற்குக் காரணம், ஆசிரியருக்குத் தமிழில் - வடமொழியில் அல்ல - உள்ள ஆர்வமும் வடமொழியில் இருந்த பயிற்சியும். வடமொழி, பிராமணருக்கே உரிய பாஷை என்று ஒரு தப்பான கருத்து நிலவி வந்திருக்கிறது. இது பொய்க்கருத்து என்பதை இவ்வாசிரியர் நன்கு நிரூபிக்கிறார். இவர் சிற்றரசராய் இருந்தவர், பிராமணர் அல்லர். இவைகளே வீரசோழியம் பற்றி முன்னுரையாக நாம் குறிப்பிட விரும்பும் கருத்துக்கள்.

### புத்தமித்திரனார்

வீரசோழியம் என்ற நூலைச் செய்த ஆசிரியர் பொன் பற்றி - புத்தமித்திரர் என்பவர். வீரசோழியம் செய்தமையால் இவர் வீரசோழியர் என்றே சொல்லப்பட்டார். இவர் பாண்டி மண்டலத்தில் மிழலைக் கூற்றத்திலுள்ள பொன்பற்றி (பொன் பேத்தி) என்ற ஊரில் தலைவராய் (சிற்றரசராய்) இருந்தவர். இது பற்றியே இவர் பொன்பற்றி காவலன் புத்தமித்திரன் எனப் பட்டார். இவர் மரபினர் பலர், இவருக்கு முன்னும் பின்னும், சோழ அரசரிடம் தலைவர்களாய்ப் புகழோடு விளங்கியிருக்கிறார்கள். இவர்கள் அனைவரும் புத்த சமயத்தினர். வீரசோழி

யம் உரையுள் வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பாவுக்கு மேற்கோளாகக் காட்டிய 'பூமகனே முதலாக' என்ற தொடக்கமான நீண்ட கலிப்பா, புத்தர் பெருமான் துதி. இதன் சுரிதகப் பகுதி பொன்பற்றி காவலன் சேந்தனைப் புகழ்கின்றது:

அலகி லாநின் அடியிணை பரவுதும்
வெல்படைத் தொண்டைமான் விறற்சே னாபதி
சிங்களத் தரையன் வெண்குடை யதனொடு
பொங்குபுகழ் வில்லவன்றன் புறக்குடை கொண்டு
பொலிதரு சேந்தன் பொன்பற்றி காவலன்
மலிதரு பார்மிசை மன்னுவோ னெனவே.

இப்பகுதியால் இச்சேந்தன் தொண்டைமான் மரபினன், சேனாபதி, சோழ அரசன் சிங்களத்தரசனோடும் சேர மன்னனோடும் போரிட்டபோது உடனிருந்து இவனும் போர்புரிந்து வெற்றி பெற்றான் என்று அறிகிறோம். போர் புரிந்த சோழ அரசன் முதல் இராசராசன் ஆகலாம்.* இந்த மரபில் வந்த மற்றொரு தலைவர் புத்தமித்திரனார். இவர்கள் வாழ்ந்த பொன் பற்றி என்றவூர் தஞ்சாவூர் மாவட்டம் அறந்தாங்கி தாலுக்காவில் உள்ளது. நூலாசிரியர் பெயரையும் நூலின் பெயரையும் பாயிரப் பாடல்கள் 1, 3 குறிப்பிடுகின்றன.

மிக்கவன் போதியின் மேதக் கிருந்தவன் மெய்த்தவத்தாற்
றொக்கவன் யார்க்குந் தொடர வொண்ணாதவன் தூயனெனத்
தக்கவன் பாதந் தலைமேற் புனைந்து தமிழுரைக்கப்
புக்கவன் பைம்பொழிற் பொன் பற்றி மன்புத்த மித்திரனே.

நாமே வெழுத்துச் சொல் நற்பொருள் யாப்பலங் காரமெனும்
பாமேவு பஞ்ச வதிகார மாம்பரப் பைச்சுருக்கித்
தேமே வியதொங்கல் தேர்வீர சோழன் திருப் பெயராற்
பூமே லுரைப்பன் வடநூன் மரபும் புகன்று கொண்டே.

இப்பாடல்களால் பொன்பற்றிக் காவலரான புத்தமித்திரர் என்பவர் போதியில் இருந்த புத்த பெருமானை வணங்கி, எழுத்து சொல் பொருள் யாப்பு அலங்காரம் என்னும் பஞ்ச அதிகார மாம் பரப்பைச் சுருக்கி வீரசோழமன்னன் திருப்பெயரால் வடநூன் மரபையும் கலந்து இலக்கணம் உரைத்தார் என்பதாகும்.

---

* சிங்களாந்தகன் என்பது இவன் பட்டங்களிலொன்று.

*இவற்றுள் சில செய்திகளை வீரசோழிய உரைகாரர் தாம் மேற் கோள் காட்டிய காதை கரப்புப் பாடல் ஒன்றில் தம் ஆசிரிய ரான இவரைப் புகழ்ந்து கூறுமிடத்துச் சொல்கின்றார்:*

ஈண்டுநூல் கண்டான் எழில் மிழலைக் கூற்றத்துப்
பூண்டபுகழ்ப் பொன் பற்றிக் காவலனே – மூண்டவரை
வெல்லும் படைத்தடக்கை வெற்றிபுனை வீரன்தன்
சொல்லின் படியே தொகுத்து.

*இவற்றால் நாம் அறிவது, புத்தமித்திரனார் தம் அரசனாகிய வீரசோழன் (வீர இராசேந்திரன்) பெயரால் வீரசோழியம் என்ற இந்த நூலைச் செய்தார். இது வடமொழி இலக்கணத்தையும் உடன் கொண்டு செய்ததாகும். தலைவராயிருந்த புத்தமித்திரனார் வடமொழி இலக்கணத்தையும் தழுவிக் கொண்டு, ஐந்திலக்கண மும் எழுத முன்வந்தது, அவருடைய இருமொழித் தகுதியைப் புலப்படுத்தும். இவர் அவையடக்கப் பாடலில், 'அகத்திய முனிவன் போதி சத்துவருள் ஒருவராகிய அவலோகிதன் பக்கல் கற்ற தமிழுக்கு இலக்கணம் கற்பிக்க நீ யார்?' என்று தம்மைத் தாமே கேட்டுக் கொள்வது சுவையாக உள்ளது.*

ஆயுங் குணத்தவ லோகிதன் பக்க லகத்தியன்கேட்
டேயும் புவனிக் கியம்பிய தண்டமி ழீங்குரைக்க
நீயு முளையோ வெனிற்கரு டன்சென்ற நீள்விசும்பில்
ஈயும் பறக்கு மிதற்கென்கொ லோ சொல்லு மேந்திழையே.

*அகத்தியர் அவலோகிதரிடம் தமிழ் கேட்டார் என்று உரைப்பது பௌத்த நூலாசிரியர் மரபு. 'அவலோகிதன் மெய்த் தமிழ்' என்று பின்னரும் (83) கூறுவார்.*

**வீரராசேந்திரன்**

*புத்தமித்திரனார் வீரராசேந்திரனிடத்துத் தலைவராய் வாழ்ந்திருந்தவர். இவ்வரசன் முதல் இராசேந்திரனுடைய ஐந்தாம் புதல்வன். ஆட்சிக்காலம் 1063 - 1070. இவர் இரு மொழிப் புலவராய் இருந்தது பற்றி அரசன் இவரை இவ்விலக் கணம் செய்யுமாறு பணித்தான் என்று கருதலாம். முன்னமே காட்டியபடி 'தேமேவிய தொங்கல் தேர்வீர சோழன் திருப் பெயரால், உரைப்பன்' என்று இவர் கூறுவதாலும், பின்னர் 'எல்லா உலகும் மேவிய வெண்குடைச் செம்பியன் வீரராசேந் திரன் தன் நாவியல் செந்தமிழ்' என்று கூறுவதாலும் அறியலாம்.*

இவற்றால் இவ்வரசனுக்குத் தமிழ் மொழியிலுள்ள பற்றும் புலப்படும். இவ்வரசன் மேலைச் சாளுக்கியரோடு நிகழ்த்திய போர்கள் சரித்திரப் புகழ் பெற்றவை. இப்போர் கூடல் சங்கமம் என்ற இடத்தில் நடந்தது. சாளுக்க வேந்தனாகிய ஆகவமல்லனும் பெரும் தோல்வி அடைந்தான். இப்பெரு வெற்றியைக் குறித்து கூடல் சங்கமத்துப் பரணி* என்ற ஒரு நூல் பாடப்பெற்றது என அறிகிறோம். இவ்வரசன் எஞ்சிய காலம் முழுமையும் போரி லேயே ஈடுபட வேண்டியிருந்தும், தமிழில் மிக்க ஆர்வம் காட் டியது, இவனுடைய சிறந்த பண்பாகும். கூடல் சங்கமத்துப் போரைக் கலிங்கத்துப்பரணி, விக்கிரம சோழன் உலா, இராச சோழன் உலா, சங்கர சோழன் உலா ஆகிய எல்லா நூற்களும் குறிப்பிடுகின்றன. வீரசோழன் என்று வழங்கப்பெற்ற இவன் பெயராய் அமைந்த நூல் வீரசோழியம் எனப் பெயர் பெற்றது. கும்பகோணத்தருகே இவன் வெட்டுவித்த பாசன ஆறு ஒன்று இன்றும் இவன் பெயரால் வீரசோழன் என்றே வழங்குகிறது.

### காலம்

புத்தமித்திரனார் இவ்வரசன் காலத்தவர் எனவே, இவர் வீரசோழியம் எழுதிய காலமும் இதே காலமாகும். வரலாற்றை ஆராயும்போது, வீரராசேந்திரன் ஆண்ட காலம் 7 ஆண்டாகிய குறுகிய காலமாக இருப்பினும், அதில் ஓர் ஆண்டு கூடப் போரில்லாமல் இருக்கவில்லை. எனவே எந்த ஆண்டு என்று தெரியாவிட்டாலும், இந்தக் குறுகிய காலப் பகுதியில் (1063 - 70) இந்நூல் செய்யப்பட்டது என்பதில் ஐயமில்லை.

### வீரசோழியம்

இந்நூல் பாயிரமும் ஐந்திலக்கணமாகிய ஐந்ததிகாரமு முடையது. நூல் கட்டளைக் கலித்துறையால் இயன்றது. இதற்கு இவருடைய மாணாக்கராய்க் கருதத்தக்க பெருந்தேவனார் என்பவர் சிறப்பான உரை செய்திருக்கிறார். அவர் விக்கிரம சோழன் (1120 - 1133) காலத்து வாழ்ந்தவர். ஆகவே உரையானது பன்னிரண்டாம் நூற்றாண்டு வரலாற்றில் ஆராயப்படும். உரை யாசிரியர், பொன்பற்றி காவலன் தான் மொழிந்தபடி வீர சோழியக் காரிகை நூற்று எண்பஃதொடு ஒன்று என்று கூறு கிறார். இவற்றுள் எழுத்ததிகாரம் 28, சொல்லதிகாரம் 57,

---

* அத்தியாயம் 9 - பிரபந்த இலக்கியம் என்பது காண்க. இப்பரணி பாடிய வரலாறு தெரிகிறதேயொழிய நூல் கிடைக்கவில்லை.

பொருளதிகாரம் 21, யாப்பதிகாரம் 36, அலங்காரம் (இங்கு அலங்கார அதிகாரம் என்று சொல்லவில்லை) 39, மொத்தம் 181 காரிகைகள். வீரசோழியம் என்பது ஆரூர்த் தியாகேசருடைய சிங்காதனத்தின் பெயர் என்று தியாகராசர் கழிநெடில் கூறுகிறது - கமலை ஞானப்பிரகாசர்.

### எழுத்து

இது சந்திப்படலம் என்ற ஒரே படலம். இங்குச் சொல்லப் படுவது எழுத்திலக்கணமாயினும், சந்தியிலக்கணமே மிகுதி பெற்றதால், இப்பெயர் பெற்றது. இங்கு சொல்லப்பட்ட பொருள்கள் எழுத்து வகை, பிறப்பு, அளவு, முதல்நிலை, இறுதிநிலை, புணர்ச்சி என்ற பகுதிகள். இவற்றுள் புணர்ச்சி கூறும் காரிகை 18. இதனால் சந்திப் படலம் என்ற பெயர் பொருத்தமேயாகும்.

### சொல்

சொல்லதிகாரம் வேற்றுமை, உபகாரகம், தொகை, தத்திதம், தாது, கிரியாபதம் என்ற ஆறு படலங்களை உடையது. வேற்றுமைப் படலத்தில் வேற்றுமையின் தொகை உருபு என்பன சொல்லப்படும். உபகாரகப் படலம் - (உபகாரகம் - முற்கூறிய வேற்றுமைப் படலத்திற்கு உதவியாகிய பொருளைக்கூறுவது). இங்கு காரகம் அவற்றின் பொருள் என்பது சொல்லப்படும். முழுமையும் இவர் வடமொழி இலக்கணச் சொற்களைப் பெய்து எழுதுகிறார். அடுத்து தொகைப்படலம் - வடமொழித் தொகைகளின் பிரிவு பற்றியும் தமிழ்த் தொகைகள் பற்றியும் பேசும். தத்திதப் படலம் விகுதி பற்றிக் கூறுவது. தாதுப்படலம் வேர்ச்சொல் பற்றியும், கிரியாபதப் படலம் வினை, விகுதி பற்றியும் பேசுகின்றன. இப்படலத்துள் கிரியாபதப்படலம் முற்றும் என்று எழுதியபின், நூலோடு சேர்த்து இரண்டு வெண்பாக்கள் எண்ணப் பட்டுள்ளன. இரண்டாம் வெண்பா அவிநயனார் ஆராய்ந்தார் சொல் என்று கூறுகிறது. இவை இரண்டும் சூத்திரங்களின் மொத்தத் தொகையுள் சேர்ந்துள்ளன.

### பொருள்

இது பொருட்படலம் என்ற ஒரே படலம். இதனுள் அகப் பொருள் புறப்பொருள் என்பன முதலில் சொல்லப்பட்டன. பின்னர் நயநிலைப்படலம் ஆவது, நாடகம், கூத்த மார்க்கம் என்று கூறி, உரையாசிரியர் பல பகுதிகளைச் சேர்த்திருக்கிறார்.

## யாப்பு

இது யாப்புப் படலம் என்ற ஒரே படலம். இங்கு அசை, சீர், அடி, மோனை, எதுகை, செய்யுள் வகை என்ற பொருள்கள் சொல்லப்படுகின்றன. செய்யுள் வகையில் வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா, மருட்பா, பாவினங்கள் என்ற பொருள்களைக் காணலாம். சிந்து விருத்தம் முதலான பகுதிகளும், சந்தம் முதலான பகுதிகளும் எல்லாம் வடமொழியை ஒட்டியே சொல்லப்படுகின்றன.

## அணி

இது அலங்காரப் படலம் அல்லது அணி அதிகாரம் என்ற ஒரே பகுதி உடையது. தொடக்கத்தில் 'செய்யுட்களாம் - தரைமலி மானிடர் தம் அலங்காரங்கள் தண்டி சொன்ன - கரைமலி நூலின் படியே மதிப்பன்' என்று தமக்கு மூலநூல் வடமொழி என்பதை விளக்குகிறார். 34 அணிகளைக் கூறிப் பின் உவமையை, உருவகம், பிறபொருள் வைப்பு, தடைமொழி, அணிவிதிரேகம் என்பவற்றையும் அவற்றின் வகைகளையும் விரிவாக விளக்கி, பின்னும் 16 அணிகளை விளக்கி பிறகு, சொல்லணி, பிறர்கோள் கூறல், சித்திரக்கவி முதலியவற்றை விளக்குகிறார். வடவெழுத்து விரவுவது விரவியல் என்றும், வடமொழி விரவினால் மணிப்பிரவாளம் என்றும், இதற்கு எதுகை இல்லையென்றும் கூறிச் செய்யுளின் பயன் அறம் பொருள் இன்பம் வீடு என அறிக என்று முடிக்கிறார். 151ஆம் காரிகையில் பிற்காலத்திற்கு உரியவற்றையும் சேர்த்துச் செய்யப் பட்ட ஒரு சூத்திரம் பாடபேதமாக மதுரை நாட்டுப் பிரதியில் உள்ளது என்ற குறிப்புக் காணப்படுகிறது.

அகத்தியரைச் சொல்லுகிறார் (76). அவிநயனாரைச் சூ. 85இல் குறிப்பிடுகிறார். தண்டியாசிரியரைப் பல இடங்களில் குறிப் பிட்டுச் சொல்லுகிறார் (143, 149, 160). இவருக்கு மூல நூல்கள் தமிழ்த் தொல்காப்பியமும் வடமொழித் தண்டியாசிரியர் செய்த காவியாதரிசமும் ஆகும்.

சில அபூர்வமான சந்தி விதிகள் வீரசோழியத்தில் மட்டுமே சொல்லப்பட்டுள்ளன. ழகர மெய் முன் வல்லெழுத்துவரின் ழகரமெய் போய் டகரமெய்யாகவும், மெல்லெழுத்துவரின் னகர மெய்யாகவும் திரியும். அங்ஙனமே ழகரமெய் சில இடங்களில் னகரங்கள் வரின் கெடும். ழகர மெய்யின் முன்வரும் நகர தகரங்கள் ணகர டகரமாகத் திரியும். இ ஈ ஐ என்னும் உயிர்களுக்கு முன்

நகரம் ஒகரமாகத் திரியும் என்னும் விதி போன்றவற்றைக் காண்க. இவ்விதிகள் மற்றைய நூல்களில் காணப்படாதவை.

இவ்வாசிரியர் நீண்ட ஆயுள் உடையவராக இருந்திருத்தல் வேண்டும். இவருடைய மாணாக்கரான பெருந்தேவனார் பின்னே 1118 - 33இல் ஆட்சி புரிந்த விக்கிரம சோழ மன்னன் காலத்தில் உரை எழுதினார். ஆதலால் இவர் இவ்வீரராசேந்திரன் காலத்தில் மட்டுமின்றி, பின்னரும் சுமார் கி.பி. 1110 வரை வாழ்ந்திருந்தார் என்றும், இறுதிக் காலத்தில் இவரிடம் மாணாக்கராய் இருந்து இந்நூலைக் கற்ற பெருந்தேவனார் இவர் காலத்துக்குப்பின் 10 ஆண்டுகள் கழித்து தாம் இவருக்கு நிறைவேற்ற வேண்டிய ஒரு கடமையாக இந்நூலுக்கு உரை எழுதி முடித்தாரென்றும் கொள்ளுதல் பொருந்தும்.

இவர் 62 காரிகைகளை மகடூஉ மொழியாக அமைத்திருக்கிறார் (முன்னமே அமிதசாகரரைப் பற்றிக் குறிப்பிட்ட கருத்தைப் பார்க்க). ஓர் இடத்தில் மட்டும் 'அல்குல் மாதே' என்று விளிக்கிறார். இவ்வாறு கூறுவது அக்காலத்து ஒரு நூல் மரபு போலும்.

சந்தி பற்றி வீரசோழியம் கூறுகின்ற ஓர் இலக்கண விதி பிற்காலத்தில் எடுத்துக்காட்டாகச் சொல்லப்பட்ட தென்பது கந்தபுராண வரலாறு. திகழ் + தசக் கரம் = திகட சக்கரம் என்று கச்சியப்ப சிவாசாரியர் செய்த கந்தபுராணம் முதற் பாடல் தொடங்குகிறது. இந்தச் சந்திக்கு இலக்கணம் இல்லை என்று அரங்கேற்றக் காலத்தில் ஒருவர் ஆட்சேபிக்க, மறுநாள் முருகப் பெருமானே கச்சியப்பருக்காக அருள் சுரந்து ஒரு தமிழ்ப் புலவர் வடிவோடு வந்து வீரசோழிய இலக்கணத்தைக் காட்டி அதில் இதற்கு விதி இருப்பதைத் தெரிவித்தார் என்பது கந்த புராண அரங்கேற்ற வரலாறு. இதனால் புத்தமித்திரனார் வீர சோழியம் செய்திருந்த போதிலும், அது வழக்கில் இல்லாமையால் பிற்காலத்தில் ஒருவர் எடுத்துக் காட்ட வேண்டியிருந்தது என்பது அறிகிறோம்.

## பதிப்பு

தாமோதரம் பிள்ளை பதிப்பு 1881. ஜீவாக்ஷாமிர்த அச்சுக்கூடம், மூலம் 1886. பவானந்தர் கழகம், கா.ர. கோவிந்தராச முதலியார் பதிப்பு 1942.

○○○

*அத்தியாயம் 4*

# இலக்கண உரையாசிரியர் – 1

## *யாப்பருங்கல விருத்தியும் காரிகையுரையும்*

### *முன்னுரை*

*இந்த நூற்றாண்டில் தோன்றி இலக்கணநூல் செய்த ஆசிரியர் வரலாற்றை நாம் ஆராய்ந்தபோது (அத்தியாயம் 3) அமிதசாகரர் புத்தமித்திரனார் என்ற இருவரைப் பார்த்தோம். அமிதசாகரர் செய்த இலக்கண நூல்கள் இரண்டும், முறையே நூற்பாவினாலும் கட்டளைக் கலித்துறையினாலும் இயன்றவை. இரண்டுக்கும் அவருடைய மாணாக்கர் இருவர் தனித்தனி உரை செய்தார்கள். நூற்பாவினால் ஆன யாப்பருங்கலத்தின் உரை விருத்தியுரை எனப்படும். இது தமிழ் இலக்கிய வரலாற்றில் மிகவும் சிறப்பான இடம் பெறுகிறது. இலக்கண உரைகளில் இது இறையனார் களவியல் உரையுடனும் தொல்காப்பிய உரைகளுடனும் ஒருங்கு வைத்துப் பேசத்தக்க சிறப்பு வாய்ந்தது. நூலாசிரியர் 'அளப்பரும் கடற்பெயர் அருந்தவத்தோர்' என்று சொல்லப்படுகிறார். ஆனால் இவ்விருத்தியுரைகாரர் இவ் வுரை இயற்றியுள்ள தகுதியை நோக்கும் பொழுது, இவர் கடல் போன்ற பெருமையுடையவர் என்றே சொல்லலாம். ஆசிரியர் மலை போன்ற இயல்பு பெற்றிருக்க வேண்டுமென்று பண்டைச் சூத்திரங்கள் சொல்வதற்கு ஒப்ப, இவர் 'அளக்கலாகா அளவும் பொருளும், துளக்கலாகா நிலையும் தோற்றமும், மறப்பினும் வளம் தரும் வண்மையும்' பெற்றவர் என்பதில் ஐயமில்லை. இச்சிறப்புக்கள் எல்லாம் பின்னுள்ள ஆராய்ச்சிக் குறிப்பால் நன்கு விளங்கும்.*

*யாப்பருங்கலக் காரிகைக்கு உரை எழுதியவர் குணசாகரர் என்பவர். இவரும் தம் ஆசிரியரிடமே நூலைப் பயின்று உரை*

எழுதினார் என்று தெரிகிறது. காரிகை நூல் சுருக்கமாய் இருக்கவே, இவ்வுரையும் விருத்தியை நோக்கச் சுருக்கமாய் அமைந்துள்ளது. எனினும், காலப்போக்கில் விருத்தியுரைக்குத் தமிழ் நாட்டில் ஆட்சி குறைந்து போயிற்று. காரிகையும் அதற்குக் குணசாகரர் செய்த உரையும், தோன்றிய காலந்தொடங்கி இன்று வரை, கற்போரால் விரும்பிப் பயிலப்படுகின்றன.

வீரசோழியம் இக்காலத்தில் தோன்றிய நூல் என்று முன்னமே குறிப்பிட்டோம். அதற்கு உரைசெய்த பெருந்தேவனார், புத்தமித்திரனார் மாணாக்கராய், அடுத்த நூற்றாண்டின் தொடக்கத்தில் வாழ்ந்தார் எனக் கருதுகிறோம். பன்னிரண்டாம் நூற்றாண்டின் வரலாற்றில் அவ்வுரையை விரிவாக ஆராய்ந்திருக்கிறோம்.

இக்காலத்தில் தொல்காப்பியம் முழுமைக்கும் இளம்பூரணர் எழுதிய பேருரை தோன்றிற்று. கிடைக்கிற தொல்காப்பிய உரைகள் அனைத்திலும் இதுவே பழமையானது. இளம்பூரணர், யாப்பருங்கல விருத்தியுரைகாரரை அடுத்துத் தோன்றியவர் என்று தெரிகிறது. இவருடைய வரலாறு அடுத்த அத்தியாயத்தில் ஆராயப்படும்.

## யாப்பருங்கல விருத்தியுரையாசிரியர்

யாப்பருங்கல உரை, யாப்பருங்கல விருத்தி எனவே வழங்கும். யாப்பருங்கலக் காரிகையுரை செய்தார் குணசாகரர் என்று நாம் அறிவது போல, யாப்பருங்கல விருத்தியுரை செய்தார் பெயர் இன்னதென்று அறிய முடியவில்லை.

### ஆசிரியர்

யாப்பருங்கல விருத்தி செய்தவரும் யாப்பருங்கலக் காரிகை உரை செய்த குணசாகரமும் ஒருவரே என்று ஆராய்ச்சியாளர் சிலர் நினைக்கிறார்கள். அவ்வாறு நினைப்பதற்குச் சில உதாரணங்களையும் காட்டுகிறார்கள். ஆனால் உண்மை அதுவன்று. இருவரும் வெவ்வேறானவர் என்பதே எமது கருத்து. சில கூற்றுக்களை இங்கு ஆராயலாம். குணசாகரர் மயேச்சுரர் சூத்திரங்கள் என்று சொல்லும் சூத்திரங்கள் சில, விருத்தி உரையில் பேராசிரியர் சூத்திரங்கள் எனச் சொல்லப்பட்டுள்ளன. குணசாகரரே யாப்பருங்கல விருத்தியும் செய்திருந்தாரானால், ஒரே சூத்திரத்

திற்கு இவ்வுரையில் ஒரு பெயரும் அடுத்த உரையில் மற்றொரு பெயரும் சொல்லமாட்டார்; இருபெயர்களும் ஒருவரையே சுட்டினாலும் கூட, ஒரே பெயரைத்தான் ஓர் ஆசிரியருக்குச் சொல்லுவார்.

யாப்பருங்கல விருத்தியுரையில், காரிகை யாப்பருங்கலப் புறனடை என்று காட்டப்பட்டுள்ளது; காரிகை மேற்கோளா கவும் வந்துள்ளது. வந்த சில இடங்களில் விருத்தியுரைகாரர் ‘இக்காரிகையை விரித்துரைத்துக் கொள்க’ என்று எழுது கிறார். இவரே குணசாகரராயின், ‘காரிகை உரையுள் கூறினாம், ஆண்டுக் காண்க’ என்றோ ‘காரிகை உரையுள் கூறுவாம், ஆண்டுக் காண்க’ என்றோ எழுதுவார். யாப்பருங்கலம் - காரிகை இரண்டும் செய்த ஆசிரியர் ஒருவரேயாதலின், காரிகையை விருத்தி உரையாசிரியர் புறனடை என்று சொல்வது பொருத் தமே. இதுபோலவே குணசாகரர், தம் உரையுள் ‘யாப்பருங்கல விருத்தியுள் கண்டு கொள்க’ என்று எழுதுவதும். இதன் பொரு ளாவது, ‘சில காலத்திற்கு முன் யாப்பருங்கல விருத்தி எழுதப் பட்டது, அதனுள் மற்றொருவர் கூறியிருக்கிறார், அதைப் பார்க்க’ என்பதாகும். குணசாகரர் தாமே விருத்தியுரை செய் திருந்தாரானால், ‘விருத்தியுள் கூறினாம்’ என்று எழுதுவார். தொல்காப்பிய உரையாசிரியர் பலர் இவ்வாறு கூறியிருக்கக் காண்கிறோம்.

மற்றொரு கருத்தும் சொல்வார்கள். சில யாப்பருங்கலக் கருத்துக்களும் அவற்றைக் கூறும் தொடர்களும், இரண்டு உரைகளிலும் ஒத்து உள்ளன என்பார்கள். உண்மை: ஒரே ஆசிரியரிடம் பயின்ற இரு மாணாக்கர் ஒத்த கருத்தமைதி உடையவர்களாயும் ஒரே வகையான சொல்லாட்சி பெற்றவர் களாயும் இருத்தல் இயல்பு அல்லவா? மூல நூலாசிரியர் இரண் டுக்கும் ஒருவரேயாதலின், இரண்டுக்கும் உரையாசிரியர் ஒரு வரேயாக வேண்டுமென்பது விதியில்லை. எனவே, உரைகளின் தன்மையை நோக்கினாலும் கூட, இரண்டும் வெவ்வேறு புலவர் களால் செய்யப்பட்டன என்பது நன்கு விளங்கும். இந்த அடிப் படையில், அதாவது இரண்டின் உரையாசிரியர்களும் வெவ்வே றானவர்கள் என்ற அடிப்படையில், யாப்பருங்கல விருத்தி யுரையை இனி ஆராய்வோம்.

அமிதசாகரருக்குப் பின் வந்து அவர் செய்த யாப்பருங் கலத்துக்கு உரையிட்ட இவர், அவரே செய்த காரிகையின்

உரையுள் "யாப்பருங்கல விருத்தியுட் காண்க" என்னுமிடத்துக் குறிப்பிடப்பட்டுள்ளார். குணசாகரர், யாப்பருங்கலம் செய்த அமிதசாகரருடைய மாணாக்கர் என்பது அடுத்து வரும் அவர் வரலாற்றால் விளங்கும். எனவே, யாப்பருங்கல விருத்தி செய்த உரைகாரரும், அமிதசாகரருடைய மாணாக்கர் போலும்; இவர் முன்வந்தவராயும் குணசாகரர் சற்றுப் பின்வந்தவராயும் இருத்தல் பொருந்தும். இவர் காலம், அமிதசாகரர் காலமும் அடுத்த காலமுமாகலாம்.

தமிழ் நாட்டில் உரை செய்த மிகச் சிறந்த கல்வியாளர்களில் இவரும் ஒருவராவார் என்பது நன்றாகப் புலப்படுகின்றது. அடியார்க்கு நல்லாருடைய சிலப்பதிகார உரையால் அவருடைய முத்தமிழ்ப் புலமை விளங்குவது போல, இவருடைய உரையால், இவருடைய பரந்த பலதுறை நூற்புலமையும் யாப்பிலக்கணப் புலமையும் நன்கு வெளியாகின்றன. அன்றியும், இவருரையில் தொல்காப்பியர் காலம் முதல் 10ஆம் நூற்றாண்டின் இறுதி வரையில் உள்ள இலக்கணப் பரப்பு, புலவர் அரசர் பற்றிய செய்திகள் முதலியன மிகப் பல தெரிகின்றன. பிறவகை எதனாலும் அறியப்படாத எண்ணற்ற செய்திகள் இவ்வொரு நூலினால் மட்டும் அறியப்படுகின்றன. இவ்வாறு அறியப்படும் செய்திகள் சிலவற்றை மட்டும் இங்குத் தொகுத்துக் கூறுகிறோம். பெரும்பான்மையும் இவர் மேற்கோட் பாடலின் மூலத்தைக் குறிப்பிடுகிறார். சில இடங்களில் நூலையும் கருத்தையும் ஆராய்கிறார். இது வரலாற்றறிவுக்குப் பெருந்துணையாயுள்ளது.

### நாடும் சமயமும்

"நாடெனப்படுவது சோழநாடென்றும், ஊர் எனப்படுவது உறையூர் என்றும், பரவை வழக்கினுள்ளும் சிறப்பித்துச் சொல்வர்" என்று இவர் கூறுகிறார். இதனால் இவர் சோழ நாட்டினர் என்பது நன்கு விளங்கும். வளவன் என்னுமிடத்து ஊர் குடந்தை என்கிறார். பொறையன் செழியன் என்ற பாட்டு (361). இதனால் இவர் ஊர் குடந்தையாக இருக்கலாம். அமித சாகரரின் மற்றொரு நூலின் உரைகாரரான குணசாகரரும், தாம்செய்த யாப்பருங்கலக் காரிகை உரையில், 'சோழநாடு செந்தமிழ் நாடே' என்று எழுதுகிறார். இவற்றை ஊன்றி நோக்கும் போது, யாப்பருங்கலமும் காரிகையும் செய்த அமிதசாகரர் சோழநாட்டிலேயே வாழ்ந்தாரென்றும், இவ்வுரைகாரரும்

குணசாகரரும் உள்ளிட்ட பல சோழநாட்டு மாணாக்கர் அவரிடம் இருந்தார்களென்றும் நாம் யூகிப்பது தவறாகாது.

இவர் மேற்கோள் காட்டியுள்ள பாடல்களில் மிகப் பல அருகன் துதியாக உள்ள பாடல்கள். அளவியல் சந்தத்திற்கு நாலெழுத்து அடி முதல் இருபத்தாறு எழுத்து அடி வரையில் இவர் காட்டியுள்ள மொத்தப்பாடல் இருபத்தாறாகும். இவற்றுள், அகத்துறையில் அமைந்த ஆறு பாடல்களைத் தவிர, ஏனையவை யாவும் அருகன் தோத்திரங்களே. இவருடைய ஆசிரியரான அமிதசாகரர் சைன சமயத்தவர், அவருடைய மாணாக்கரான இவ்வுரையாசிரியரும் அக்கால இயல்புக்கு ஏற்ப, சைன சமயத்தவரே என்பது உறுதி. பழையாறையில் சிறப்பான சைனர் கோயில் இருந்தது* என்று இவர் கூறுகிறார்; உச்சந்தமலையையும் குறிப்பிடுகிறார். உரைகாரர் சைவர் என்று கா.சு. பிள்ளை எழுதியிருப்பது பொருளற்றது.

இவர் அருக சமயத்தவரேயாயினும் பிற மதங்களையும் மிகவும் சிறப்புறப் போற்றிக் கூறுகிறார் என்பது குறிப்பிடத் தகுந்தது. பேராசிரியரைக் குறிப்பிடுகின்ற இடத்து, எண்ணற்ற அடைமொழிகளைத் தொடுக்கிறார். இவை யாவும் சிவபிரானின் பெருமையை உரைப்பன. இவற்றை இவ்வாசிரியர் மேலேற்றி இவர் சொல்வதால், அவரிடத்து இவருக்குள்ள பணிவும் ஈடுபாடும் நன்கு புலனாகும். அன்றியும் இதனார், இவ்வுரைகாரர் பேராசிரியரிடத்தும் மாணாக்கராய் இருந்தார் என்று கருதவேண்டும். ஒருகால், தம்மாசிரியராகிய அமிதசாகரர் காலம் முடிந்து போகவே, அவருக்குப்பின் இவர் இப்பேராசிரியரிடம் இலக்கிய இலக்கணங்கள் பயின்றிருக்கக் கூடும்; அது காரணம் பற்றியே பேராசிரியரை இவ்வளவு பெருமை தந்து கூறுகிறார். அன்றியும் இவர் சமயக் காழ்ப்பில்லாமலும், சிவபெருமானைப் போற்றியும், மிகப் பலவான பாடல்களை மேற்கோளாகத் தருவதற்கும், இதுவே காரணம் என்று கருதவேண்டும்.

பேராசிரியரைப் பன்னிரண்டுக்கு மேற்பட்ட செய்யுள் ஓசை உள்ள தொடர்களால் இவர் குறிப்பிடுவதைப் பின்னே காண்போம். சிவபெருமானுடைய அர்த்தநாரீசுவர வடிவத்தைக் குறிப்பிடுகின்ற பின்வரும் பாடல் கருதற்குரியது:

---

* பழையாறையில் இருந்த சிவாலயத்தைச் சமணர் மறைத்து விட்டனர் என்ற செய்தியை அப்பர் வரலாற்றில் காண்கிறோம்.

பாடகஞ் சேர் காலொருபால், பைம்பொற் கனைகழற்கால்
ஒரு பால் தோன் றும்;
நீடு குழலொருபால், நீண்ட சடையொருபால்;
வீடிய மானின் அதளொருபால், மேகலைசேர்ந்து
ஆடு துகிலொருபால்: அவ்வுருவம் ஆண்பெண்ணென்று
அறிவார் யாரே?

*இவர் சமணராயினும், இப்பாடலைக் காட்டுவதில், சிவபிரான் உருவத்தை இவர் நன்கு கண்டு மகிழ்ந்து சொல்வது தெரிகிறது. சிறப்பாக, இவருக்கு அர்த்தநாரீசுவர உருவத்தில் அதிக ஈடுபாடு போலும். அர்த்தநாரீசுவர வடிவம், மருட்பாவுக்கு உதாரணம்:*

வேதவாய் மேன்மகனும் வேந்தன் மடமகளும்
நீதியாற் சேர்ந்து நிகழ்ந்த நெடுங்குலம்போல்
ஆதிசால் பாவும் அரனார் நெடும்பாவும்
ஓதியவா றென்றி மருட்பாவாய் ஓங்கிற்றே.

*இது கலிவிருத்தம். மருட்பாவைக் கூறுகின்றது. விருத்தியுரைகாரர் தாமே இப்பாடலைச் செய்து காட்டுகின்றார்.*

*'வெண்பாவும் ஆசிரியமும் விரவி, புறநிலை வாழ்த்து முதலாகிய பொருள்கள் மேல் யாப்புற்று, மருட்சியாகப் பாவி நடத்தலின் மருட்பா என்று வழங்கப்படும்' என்று சொல்ல வந்தவர், சங்கர நாராயணர் உருவத்தைச் சொல்லும் பாடலைத் தருகிறார்:*

கங்கா யமுனைச் சங்கம் போலவும்
சங்கர நாரணர் சட்டகம் போலவும்
வெண்பாவும் ஆசிரியமுமாய் விராய்.

*சிவபெருமானை வணங்காதோர் எவ்வாறு கையேற்று இரந்து நிற்கிறார் என்று சுவையாகக் காட்டுகிறார்:*

கரவொடு நின்றார் கடிமனையிற் கையேற்று
இரவொடு நிற்பித்த தெம்மை – அரவொடு
மோட்டாமை பூண்ட முதல்வனை முன்வணங்க
மாட்டாமை பூண்ட மனம்.

*பூசனை என்பது பொதுவாகச் சைவர் சிறப்பித்துச் சொல்கின்ற ஒரு சமயநெறி. அதற்கான ஒரு பாடலை இவர் காட்டுவது கண்டு மகிழத்தக்கது:*

மிக்க மாதவம் வீட்டுல கடைதலை விளைக்கும்
தக்க தானங்கள் தணிப்பரும் போகத்தைப் பிணிக்கும்
தொக்க சீலங்கள் இயக்கமில் துறக்கத்தைப் பயக்கும்
சிக்கெனப் பூசனை திகழொளிப் பிழம்பினைத் திருத்தும்.

*ஒளிப்பிழம்பு என்றமையால் சிவபிரான் என்பது தெளிவு.*

வரிகொள் அரவும் மதியுஞ் சுழலக்
கரிகால் ஏந்தி யாடுமே
கரிகால் ஏந்தி யாடும் இறைவன்
புரிபுன் சடைமேற் புனலும் பிறழ்வே.

*இவர் நக்கீரதேவர் பாடிய திருஎழுகூற்றிருக்கைப் பாடலை எடுத்துக் காட்டியிருப்பது பின்னர் சொல்லப்படும். அன்றியும், இவர் சிவபெருமான் துதிப்பாடல்களை எடுத்துக் காட்டுவது போலவே, திருமால் துதிப்பாடல்களையும் நன்கு போற்றிக் கூறுகிறார். பின்வரும் இரண்டு பாடல்களும் ஒரே இடத்தில், அடிமறியாய்க் கூறப்பெறும் அடிமறிமண்டில ஆசிரிய விருத்தத்திற்கு உதாரணமாய்க் காட்டுகின்றார்:*

வெறிவிரவு புன்சடைமேல் வெள்ளம் பரக்கும்
விறல்விசயன் ஆகத்தும் வெள்ளம் பரக்கும்
கறைவிரவு நஞ்சுண்டு கண்டங் கறுக்கும்
கழலடைந்தார் தீவினையைக் கண்டங் கறுக்கும்
பொறிவிரவு பூண்முலையாள் போகத்த னாகும்
பொது நீக்கித் தனையடைந்தார் போகத்த னாகும்
நெறிவிரவு காஞ்சிநெறிக் காரைக் காட்டான்
நிழலடைந்தார் தம்மைநெறிக் காரைக் காட்டான்.

நிலங்கா ரணமாக நீர்க்கங்கை யேற்றான்
நீண்டதா ளாலங்கோர் நீர்க்கங்கை யேற்றான்
சலங்கா ரணமாகச் சங்குவாய் வைத்தான்
தாயலா ளவியநஞ் சங்குவாய் வைத்தான்
துலங்காச்சீர்த் தானவரைத் துன்னத்தா னட்டான்
துன்னலார்க் கின்னமிர்தந் துன்னத்தா னட்டான்
இலங்கா புரத்தார்தங் கோமானை எய்தான்
எய்தாதார் நெஞ்சத்துள் எஞ்ஞான்றும் எய்தான்.

இவ்விரு பாடல்களும் முறையே சிவபிரானையும் திருமாலையும் துதிப்பன; மடக்காகவும் அமைந்துள்ளன. இப்பாடல்கள் நம் மனத்தில் இரண்டு கருத்துக்களைத் தோற்றுவிக்கின்றன. ஒன்று, இவற்றைக் கொண்ட சிவபரமான நூல்களும் திருமால் பரமான நூல்களும் மிகப்பல அன்று இருந்திருக்க வேண்டும்; அவ்வாறு இருந்தால்தான் சில பாடல்களை எளிதாகத் தேர்ந்து கொள்ள இவரால் முடியும்; அல்லது இப்பாடல்களை இவரே செய்தமைத்துக் கொள்ள வேண்டும். இங்ஙனமாயின், இவருடைய சமயப் பொறையையும் புலமைத் திறமையையும் நாம் பெரிதும் வியக்க வேண்டும். மேலும், நிரல் நிறைக்கு உதாரணம் சொல்லுமிடத்து திருமால் துதியாக மூன்று பாடல்களைத் தருகிறார். பின்வரும் பாடல் அவற்றுள் ஒன்றாகும்.

பேய்முலை வியன்ஞாலம் பூங்குருந்த மதவேழம்
வைமருப் பெழிலேறு வாட்கண்ணார் குரவைச்சீர்
உண்டானும் அளந்தானும் ஒசித்தானும் காத்தானும்
கொண்டானும் கொடுத்தானும் கொடியுவணத் தவனரோ.

அன்றியும், நிரல்நிறைக்கு உதாரணமாக இவர் கூறும் பல பாடல்களும் பின்வரும் பாடல் ஒன்று மட்டும் இங்கு கருதத் தக்கது:

பூமலை நீருறையுள்; புள்ளேறு புட்கொடி;
வாய்மைவேல் ஆழி படைக்கலம்;– நாமம்
பிரமன் இறைகண்ணன்; பொன்தீக்கார் மேனி;
கருமம் படைப்பழிப்புக் காப்பு.

மும்மூர்த்திகளின் உறையுள், கொடி, படைக்கலம், பெயர், நிறம், கருமம் நிரலே கூறும் இச்செய்யுள், சிவபிரானைக் கூறும்போது, இறை என்ற பொதுச்சொல்லால் கூறுகின்றது. இதனால் பரம்பொருள் என்ற பொருள் உடைய இறை என்ற பொதுச்சொல்லை, சிவபிரானைக் குறிக்க இவர் பயன்படுத்துவதைப் பார்க்கும்பொழுது, இவர் எவ்வளவு விரிந்த மனப்பான்மை உடையவர் என்பது நன்கு விளங்குகிறது.* இதைத் தொடர்ந்து மற்றொரு பாடலையும் குறிப்பிடலாம்.

---

* இங்கு அருகனைக் குறிப்பிடவில்லை. இவ்விடத்தும் பிறவிடத்தும் கூறிய குறிப்புக்களால் இவ் உரையாசிரியர் உண்மையிலேயே சைவரா யிருந்து, தம் ஆசிரியர் சமணரானமை பற்றி, அம்மதம் தழுவிய பாடல்களைக் காட்டுகிறார் என்றே கருதலாம் போலும்.

கண்ணுதலோன் காப்பக் கடல்மேனி மால்காப்ப
எண்ணிருதோள் ஏந்திழையாள் தான்காப்பப் – பண்ணியல்நூல்
சென்னியர் புகழுந் தேவன்
மன்னுக நாளும் மண்மிசைச் சிறந்தே.

இங்கு இவர் சிவபிரான், திருமால், துர்க்கை ஆகிய மூவரையும் போற்றுதல் பாராட்டுதற்குரியது.

சைனர் பொதுவாகக் கலைமகளைத் துதிப்பவர்கள். அம் மரபுக்கேற்ப இவரும், புலவர் நாவில் பொருந்திய கலைமகளைப் போற்றுவது சிறப்பு:

புலந்துறை போகிய புலவர் நாவினுள்
கலந்துறை கலைமகள் கவிதை கந்தமா
நிலந்தொழப் புறப்படும் நிலையள் ஆகும், இவ்
இலங்கிழை பெருமையை எண்ணல் வேண்டுமோ.

## புலமைத் திறன்

மற்றொரு கருத்தும் இங்கு குறிப்பிடத்தக்கது. மிகப் பெரும்பாலான உதாரணப் பாடல்களை இவரே செய்து அமைத்துக் கொண்டார் என்றும் கருதத் தோன்றுகிறது. நூலில் சொல்லப்பட்டு, இவரால் உரையில் விளக்கப்பெறுகிற அத்தனை இலக்கண விகற்பங்களுக்கும் பொருந்தக்கூடிய பாடல்கள் முன்னே தோன்றியிருந்தன என்பது நம்பக்கூடியதாய் இல்லை. ஓர் உதாரணத்தின் மூலம் இதை நன்கு உணர்த்தலாம். பல்வகை வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பாக்களையும் குறிப்பிடுகின்ற எண்பத்து நாலாம் சூத்திர உரையில், 'சிலம்பொலிக்கும் இணையடியும்' என்ற தொடக்கமுடைய நீண்ட பாடலை இவர் தருகிறார். நாம் மேற்கூறவிருக்கும் விளக்கம் கருதி, அப்பாடல் முழுமையும் இங்கு எடுத்து எழுதுகின்றோம்:

சிலம்பொலிக்கும் இணையடியும் செறிகுறங்கும் பணைத் தோளும்
நலம்புகழ்தற் கரிதாய நகைமுகமும் புரிகுழலும்
இலங்கிழையாற் பொலிவுற்ற எழில் நிறமும் இவைகவற்ற,
அந்தணனாய் அறமொரீஇ அணியிழைநின் பணி பிழைத்து
முந்துணரான் பிரிவாற்றா முகிலுறங்கு மணி வரைமேல்
வந்தவிழ்ந்த மலரயனாய் வரம்வேண்ட அருளியோய்!

இது தரவு.

போதிவரு மலர்ப்பிண்டிப் புங்கவன் தன் அறநெறியைத்
தீதகல மிசை பெருகத் திருநலமும் ஒரு மனத்தால்
பேதிவரும் பிறவிகளைப் பிரித்தருளு கென வணங்கிக்
காதிவரும் மணிக்குழையாய், கடவுளடி அடைந்தனையே.

மதுவார்ந்த மலர்ப்பிண்டி மாதவன தருள்நெறியைக்
கதுவாய்ப் பட்டியலாமை கழிகாவல் மிகை பூண்டு
பொதுவாய்வண் மறைசோலைப் பொழிலணியுஞ் சந்தத்துள்
இதுவாகும் அறநெறியென் றினிதமர்ந்த இயல்பினையே.

தேனுலாம் மலர்ப்பிண்டித் தேவர்கோன் திருந்தடியை
வானுலாம் அமரர்களும் விஞ்சையரும் வந்தேத்த
ஊனுலாம் உடம்பெய்தி உச்சந்த மால்வரைமேல்
வேனிலான் மனங்கனல விதூடகனை விரும்பினையே.

*இவை தாழிசை.*

என வாங்கு,

*இது தனிச் சொல்.*

அணிகிளர் துகிலல்குல் மணிமலி கலையினை:
பணிமொழி நினதருள் பலரிவண் அருளென மருள்குவை;

கறையறு துறவுடை இறைவன திருவடி கவவுறு காதலை;
முறையற முழுவது மலிபொருள் நிலைமையை
மலமற உணர்தலும் மகிழ்ந்தனை;

திருமலர் கஞலிய சிகழிகை திகழ்தரு
மணிமலி மகரமும் மறுவறு திலகமும்
அணிந்தனை:

முழுமதி யிதுவென முதுபுதன் மதுவிரி
திருமல ரிதுவென மொழியினும் அளியினம்
இகலிய முகத்தினை;

நகையென மினலென நளிர்சுட ரொளியென
வகையமை அமிழ்தென வளைகடல் மணியென
முகைவிரி மலரென முறுவலை;

குழலென அமிழ்தென நனியினி கனியென
மலியொலி மருவிய மலருறை மிஞிறென
மகிழ்தரு குயிலென மழலைய மொழியினை;

பெறலரும் மரபின திருவமர் அருண்மொழி
உருவருள் உறுவர்கள் ஒழிவிலர் வினவலின்
மருளற அருளிய அறிவன தருண்மொழி
மகிழ்ந்தனை;

*இவை அராகம்.*

குரும்பையும் பொற்செப்பும் கோங்கின் அரும்பும்
விரும்பின வீங்கு முலை;
முலைத்தலைச் செஞ்சுணங்கு வேங்கை மலரோடு
அலைத்தன அம்பொற் பிதிர்.

*இவை பேரெண்.*

மணிபுனைந்த முடியினைநீ; மானிகலும் நோக்கினைநீ;
அணிபுனைந்த அல்குலைநீ; அரும்பாரும் முறுவலைநீ;
காதணிந்த குழையினைநீ; கதுப்பணிந்த கண்ணியைநீ;
கோதணிந்த குழலினைநீ; பொருவரிய புகழினைநீ;

*இவை சிற்றெண்.*

அதனால்,

*இது தனிச்சொல்.*

அருள்நெறி பயந்த அறிவருள் அறிவன்
பொருள்நெறி புகன்ற வாய்மொழி வழாது
குணந்துறை போகிய எண்ணரும் பெருமை
கணந்துறை போகிய காவலன் கண்ணி
உலவு புகழ் உரவோன் திருநகர்
நிலவி எம்மிடர் நீக்குமதி நீயே.

*இது சுரிதகம்.*

*"இது, வண்ணக வொத்தாழிசைக் கலிப்பாவிற்கு ஓதப் பட்ட உறுப்புப் பிழையாது வந்தவாறு ... மற்றையன இவ்வாறு செயிற்றியத்துள்ளும் அகத்தியத்துள்ளும் ஓதிய இலக்கணம் தழுவிக் கிடந்தனவில்லை என்பது."*

*இப்பாடலுள் அராகவுறுப்பாக 'அணிகிளர் துகிலல்குல்' தொடங்கிப் 'பெறலரு மரபின' வரையில் ஒன்பது அடிகள் வருகின்றன. இவற்றுள் அடிதோறும் அமைந்த சீர்கள் நான்கு*

முதல் பதின்மூன்று வரை (4, 5, 6, 7, 9,* 10, 11, 12, 13) ஆகும். பிறர் ஒரு நூல் இவ்வாறு செய்தார், இவ்வரிகளில் முறையாக இச் சீர்கள் ஒன்றின் ஒன்று மிகுந்து வருமாறு ஒரு பாடல் பாடி வைத்தார் என்று சொல்வது ஏற்கக் கூடாத கருத்து. ஆதலால், இவ்வுரையாசிரியரே தாம் உதாரணங் காட்டுவதற்கென்று இதைப் படைத்துக் கொண்டார் என்று சொல்வதே பொருத்தம். 'செயிற்றியத்துள்ளும் அகத்தியத்துள்ளும் ஓதிய இலக்கணம் தழுவிக் கிடந்தன இல்லை' என்று இவர் இங்கு கூறியதால், அவ்விலக்கணம் தழுவிய பாடலை இவர் புதிதாகச் செய்து அமைத்துக் கொண்டார் என்று கருதுதலே முறை.

## இலக்கியச் செய்திகள்

இவ்வுரையால் அறியவரும் இலக்கியச் செய்திகள் அளவிறந்தன. முந்தையோர் கருத்துக்களை இவர் எடுத்துக்கூறும் போது, 'இவை ஒரு சார் ஆசிரியர் கொள்கை' என்பார். சில இடங்களில் 'ஒருசார் வடநூல் வழித் தமிழாசிரியர் இவ்வாறு கூறுகின்றனர்' என்பார்; புலத்துறை முற்றிய பொய்தீர் புலவர், மாப்பெரும் புலவர், புராண கவிஞர் என்றெல்லாம் கூறுகின்றார். இவர் உரை செய்யுமுன் சில புராணங்களும் செய்யப் பெற்றிருந்தன என்று நாம் எண்ண வேண்டியிருக்கிறது. எனினும், இப்படி எந்தப் புராணமும் கிடைக்கவில்லை. சாந்தி புராணம், புராண சாகரம் என்ற நூல்களை இவர் இங்குக் குறிப்பிடுகின்றார். சாந்தி புராணமானது, சாந்தி நாதர் என்ற பதினாறாம் தீர்த்தங்கரர் சரிதம் கூறும் புராணம் போலும். இதன் பாடல்கள் சில புறத்திரட்டில் வந்துள்ளன. புராண சாகரம் இது போன்ற பல சைன சமயப் பெரியார் வரலாறு கூறும் நூலாயிருக்கலாம். (வடமொழியில் இதேபோல கதாசரிச் சாகரம் என்ற நூல் இருப்பதும் இங்கு அறியத்தக்கது)

இவ்வுரையால் அறியவரும் இலக்கியச் செய்திகள் மூலமாக விளக்கமில்லாத பல நூல்களுள் முப்பேட்டுச் செய்யுள் (விருத்தியுள் முப்பெட்டுச் செய்யுள் என்று அச்சிடப்பட்டுள்ளது) என்பது ஒன்று. இது முத்தொள்ளாயிரம் போன்ற ஒரு நூல் போலும். இது பற்றிய விளக்கம் எமது 9ஆம் நூற்றாண்டு வரலாற்றில் காணலாம்.

---

* எட்டுச் சீர் அமைந்த அடி அச்சுப்பிரதியில் விடுபட்டது போலும்.

இவர் பேராசிரியரைக் குறிப்பிடும்போது, அவர் மயேச்சுரர் என்ற சிவபெருமான் பெயரைத் தாங்கியவர் என்று கூறும் பொருட்டுச் செய்யுளோசை படும்படி அழகிய தொடர்களால் குறிப்பிடுகின்றார்: பிறை நெடுமுடிக் கறைமிடற்றரனார் பெயர் மகிழ்ந்த பேராசிரியர், நீர்மலிந்த வார் சடையோன் பேர் மகிழ்ந்த பேராசிரியர், திரிபுரமெரித்தவர் பெயர் மகிழ்ந்த பேராசிரியர் விரிசடை நிருத்தர் பெயர் மகிழ்ந்த பேராசிரியர், கறைமிடற்றான் பெயர் மகிழ்ந்த பேராசிரியர், பெண்ணொரு பாகன் பெயர் மகிழ்ந்த பேராசிரியர், பெருமான் பெயர் மகிழ்ந்த பேராசிரியர், பிறை முடியோன் பெயர் மகிழ்ந்த பேராசிரியர், வாமமேகலை மாதையோர் பாகனார் நாமம் மகிழ்ந்த நல்லாசிரியர், காமவேளைக் கறுத்த புத்தேள் நாமந் தாங்கிய நல்லாசிரியர், காமனைக் காய்ந்தவர் நாமம் மகிழ்ந்த நல்லாசிரியர், திரிபுரமெரித்த விரிசடைக் கடவுள் திருப்பெயர் மகிழ்ந்த தொன்னூற் கவிஞர் என்பன* போன்ற தொடர்களைக் காண்க. இத்தொடர்கள் குறிப்பிட்ட ஆசிரியர், சிவபெருமான் திருப்பெயரைத் தாங்கியவர், மயேச்சுரர் என்று இந்நூலில் சில இடங்களில் குறிப்பிட்டுள்ளமையால் அவரே இவ்வாசிரியர் என்று அறிஞர் கருதுகின்றனர். மேலும், மேற்கோள் உரையில் பேராசிரியர் பெயர் வரத்தக்க இடத்தில் மயேச்சுரர் பெயரும் மாறி மாறி வருவதால், இரு பெயர்களும் ஒருவரையே குறிப்பிடுகின்றன என்று கருதவேண்டும். மயேச்சுரர் இறைவன் ஆதலால், சங்கத்தில் தலைமை பூண்டிருந்த இம்மயேச்சுரரே பேராசிரியராவார், இறையனார் இவரேயாகலாம் என்ற ஒரு குறிப்பை யாப்பருங்கலம் பதிப்பித்தார் தருகிறார். இது பொருந்தாது. ஏனெனில் இறையனார் காலத்தால் மிக முந்தியவர். அவர் களவியலுள், இத்தகைய தொடர்கள் எவையும் அவரைக் குறிப்பிட வழங்கவில்லை. அன்றியும், பெயரைத் தாங்கிய என்று வருவதால், தாங்கியவர் மற்றொருவரேயன்றி இறையனார் அல்லர் என்பதே முறை. மேலும், தொல்காப்பிய உரைகாரரான பேராசிரியரை இப்பெயர்கள் சுட்டும் என்ற கருத்தும் கொள்ளத்தக்கதன்று. அப்பேராசிரியர் காலம் பதின்மூன்றாம் நூற்றாண்டு. இம் மயேச்சுரர் காலம், யாப்பருங்கலத்துக்கு முந்திய காலமாகும்: 9ஆம் நூற்றாண்டோ அதற்கு முற்பட்ட காலமோ ஆகும்.

---

* இவற்றுட் பல இடைச் செருகல், ஏடுகளிற் காணப்படவில்லை என்றும் சொல்வார்.

*இவ்வுரைகாரர் குறிப்பிடும் நூல்கள் சிலவற்றை இங்கு கருதலாம். தண்டியலங்காரத்துக்கு முன் அணியியல் என்ற பெயரால் ஓர் அணியிலக்கணம் வழங்கியமை இவர் கூறுகிறார்; இந்நூல் அடியார்க்கு நல்லார் முதலியோராலும் காட்டப் பட்டுள்ளது. மேலும், கேசி என்ற பெயரால் காலகேசி, குண்டல கேசி, நீலகேசி, பிங்கலகேசி, அஞ்சனகேசி என்ற நூல்கள் வழங்கின என்று அறிகிறோம்; எனவே குண்டலகேசியும் அதை மறுக்கும் நீலகேசியும் காலத்தால் 11ஆம் நூற்றாண்டுக்கு முற் பட்டன என்று தெரிகிறது. இடைக்காடனார் பாடிய ஊசி முறி, பொய்கையார் பாடிய இலக்கண நூல், மாலை என்ற பெயரால் வழங்கிய அவிநந்த மாலை, தேசிகமாலை, பன்மணி மாலை ஆகியன, நூல் என்று வழங்கிய கருட நூல், மந்திர நூல்; அடி நூல், ஆதிநாதராய்ந்த நூல், காரண நூல், தன நூல் என்பன, கதை என்று வழங்கிய உதயணன் கதை, கதை, கணக்கியல் என் பன குறிப்பிடத்தக்கன.*

*பாக்கள் நான்கு சாதி என்று கூறி, ஆசிரியம் அரச சாதி என்று கூறுமிடத்து இவர் பேராசிரியர் பெயரைக் குறிப்பிடு கிறார்.*

எல்லா நிலமும் அடிப்படுத்து ஈரிரண்டு
நல்லாகமப் பொருளை நண்ணுதலால் – பல்லோர்க்கும்
சீரா சிரியத்தைத் தேர்வேந்தன் என்றுரைத்தார்
பேரா சிரியர் பெயர்.

*இப்பேராசிரியர் மேற்காட்டியவரே போலும்; ஆகமப் பொருள் என்று குறிப்பிட்டது காண்க. நால்வகைச் சாதியார்க்கும் உரிய தொழில்கள் எத்தனை என்று கூறுமிடத்து, இவர் வணிகருக்கு எட்டு நிலம், நாலாம் சாதியினருக்குப் பத்து நிலம் என்று குறிப் பிடும் பாடல்கள் இங்கு காணத்தக்கன.*

தனிமை யாற்றல், முனிவில னாதல்,
இடத்துத் தெருமரல், பொழுதொடு புணர்தல்,
உறுவது தெரிதல், இறுவது அஞ்சாமை,
வகுத்தல், ஈட்டல் – வாணிகன் துறையே.

ஆணை வழி நிற்றல், மாண்வினை தொடங்கல்,
கைக்கடன் ஆற்றல், கசிவகத் துண்மை
ஓவா முயற்சி, ஒக்கல் போற்றல்,

மன் றிடை மகிழ்தல், ஒற்றுமை கோடல்,
திருந்திய அறத்தில் தீராது ஒழுகல்,
விருந்து புறந்தருதல் – வேளாண் துறையே.

*இரு பாடல்களும், திவாகர நிகண்டிலும், பிங்கல நிகண்டிலும் - சூத்திரம் 779, 781ஆகச் சில பாடபேதங்களோடு காணப்படுகின்றன. இதனால் நம்மாசிரியர் இப்பாடல்களை முழு நூல்களான திவாகரம் பிங்கலத்திலிருந்து எடுத்துக் கொண்டாரென்பது தெளிவு. பின்னும் இதனால், திவாகர பிங்கல நிகண்டுகளின் காலமும் நம் உரைகாரர் காலமாகிய 11ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்டது (9 - 10 ஆம் நூற்றாண்டுகள்) என்ற வரையரையும் பெறுகின்றன.*

*வாணிகன் துறை வேளாண் துறை என்று குறிப்பிட்டது போல, ஒரு பாடலால், இடையர் காளைமாட்டுக்கு விதையடிப் பதைக் குறிப்பிடுவதும் காணத்தக்கது:*

ஆவின் இடையர் விதையடிப்பர் அவ்விதையைக்
காமினோ என்றாற் கதம்படுவர் – நாமினிப்
பொல்லா தெனினும் அப் பூந்தோட்டம் வாழுநரும்
கொள்ளாராம் நம்சொற் குணம்.

*நால்வகைப் பாலும் நால்வகை வருணமாவன என்பது வாய்ப்பியமுடையார் கருத்து என்கிறார். நால்வகைப் பாக்களின் வைப்பு முறைக்குரிய நியாயம் இவர் எழுதியிருப்பது அறிந்து இன்புறத்தக்கது. வெண்பாவுக்குக் கூறியது மட்டும் இங்கு எடுத்துக் காட்டுவோம்: "வெண்பா ஆசிரியம் கலியே வஞ்சியென்று கிடக்கைக்கு ஒருசார் ஆசிரியர் உரைக்குமாறு: நாற்சீரடியான் நடைபெறுதலும், வேற்றுப் பாவினா விறாமையும், எல்லாப் பொருண் மேலுஞ் சொல்லப்படுமென்றிவற்றால் ஆசிரியத் தோடொத்தலும், உயர்ந்த வோசைத்தாகலும், உத்தம சாதி யாகலும் வேற்றுத்தளையும் வேற்றடியும் வேற்றுப்பாவும் விரவாமையும் என்னும் அதிக குணமுடைமை நோக்கி, வெண்பா ஆசிரியப்பாவின் முன்வைக்கப்பட்டது." பிறவும் இது போலவே விளக்கப்பட்டன. இங்ஙனமே தாழிசை துறை விருத்தம் என்ற பெயர்கள் பற்றி இவர் கூறும் விளக்கமும் மிக்க சுவையுடையது.*

குறளடி

23ஆம் சூத்திர இறுதியில், அடிகளுக்கு இவர் கூறும் பொருள் சுவைபட உள்ளது: குறளடி முதலிய அடிகளை இடுகுறியானும் காரணக் குறியானும் வழங்கும். காரணக் குறியான் வழங்குமாறு யாதோ எனின், மக்களில் தீரக் குறியானைக் குறளனென்றும், அவனின் நெடியானைச் சிந்தன் என்றும், சிறியனும் நெடியனும் அல்லாதானை அளவிற்பட்டானென்றும், அவனின் நெடியானை நெடியனென்றும், தீரநெடியானைக் கழி நெடியானென்றும் வழங்குவர் ஆதலின், இவ்வடிக்கும் இவ்வாறே பெயர் சென்றதெனக் கொள்க.'

தம் காலத்தில் வழக்கிலிருந்த எண்ணற்ற நூல்களை இவர் எடுத்துக் காட்டுகிறார். மிகப் பெரும்பான்மையானவை இலக்கணங்கள். சில இலக்கியங்களும் உள்ளன. சில நூற்பெயர்களை மட்டும் சொல்லுகிறார். பல நூற்பாடல்களைத் தருகிறார். சில இடங்களில் என்றாருமுளர் என்பார். இவையன்றிச் சில இடங்களில் தாமே உதாரணப் பாடல்கள் செய்தமைத்திருக்கிறார் என்றும் முன்கூறியபடி யூகிக்க வேண்டியிருக்கிறது. இணை மோனை ஏழு விகற்பமும் வருவதற்குக் காட்டிய 'அணி மலர் அசோகின் தளிர் நலம்' என்ற பாடலும், இணை யெதுகை ஏழு விகற்பமும் வருவதற்குக் காட்டிய "பொன்னினன்ன பொறி சுணங்கு" என்ற பாடலும், உதாரணங்களாம். இவைபோலவே, அறுபது வஞ்சியுரிச்சீரும் வந்த பாட்டு என்று 73 அடிகளை யுடைய நீண்ட பாட்டொன்றைத் தருகிறார்; இது "நலஞ்செலத் தொலைந்த புலம்பொடு பழகி" என்று தொடங்கி, "கருங்கடல் நாடனொடு கலவாவூங்கே" என்று முடிகிறது. இதுவும் உரையாசிரியர் செய்தமைத்ததென்றே கருதவேண்டும்; இல்லையானால், இவருக்கென்று வஞ்சியுரிச் சீரெல்லாம் வருமாறு மற்றொருவர் ஒரு பாடல் பாடியமைத்தல் நடைபெறுவ தொன்றன்று. பல பாட்டுக்களைக் காட்டுவதற்குப் பதிலாக ஒரே பாடலில் காட்டலாம் என்று ஆசிரியரே செய்து காட்டியிருக்கிறார். தொடையோத்து உதாரணப்பாடல்கள் அனைத்துமே இத்தகையன. இவற்றை ஆயும்போது, உரையா சிரியரே மிகச் சிறந்த புலமையுடையவரென்பதும், சிறப்பான காவியம் செய்யும் ஆற்றல் பெற்றவர் என்பதும், நன்கு விளங்கும். இவர் உரை எழுதப் புகுந்தது, தம் ஆசிரியரிடத்துள்ள அன்பும், இவ்யாப்பு நூலின்பாலுள்ள ஈடுபாடுமேயாகும்.

எழுகூற்றிருக்கை என்ற சித்திரகவிக்கு உதாரணங் கூறுமிடத்து, இவர் முதலாவதாக, நூலாசிரியர் ஜைனராதலால் அம்மதச் சார்பில் அருகன் துதியாகிய ஓர் எழுகூற்றிருக்கை தருகிறார்; இது வேறெங்கும் காணப்பட்டிலது. அருகன் திருவெழுகூற்றிருக்கை இவ்விருத்தி உரைகாரரே செய்திருக்கக் கூடும். பின்னர் இரண்டாவதாக, சிவபரமான எழு கூற்றிருக்கைப் பாடலொன்று தருகிறார்; இது பதினொராந் திருமுறையில் நக்கீரதேவ நாயனார் பாடியதாக உள்ளது.

மேலும், இவர் காட்டும் பாடலுக்கும் பதினொராந் திருமுறைப் பதிப்பில் காட்டிய பாடலுக்கும் பாடபேதங்கள் மிகுதியாக இருப்பினும், துறை வகுத்து அதில் பாட்டில் வரும் எண்களை அடைவு செய்வதைப் பொறுத்தவரையில் இரண்டும் ஒன்றே. ஆனால் இவ்வுரைகாரர் கொண்ட பாடம் பல இடங்களில் திருத்தமான பாடமாகத் தெரிகிறது.*

பாவையர் விளையாடும் பெற்றியாகப் போகியும் வந்தும் அமைவது எழுகூற்றிருக்கை என்று ஆசிரியர் எழுதுகிறார். இவரே வேறு பல பாவைப் பாட்டுக்களைத் தம் உரையுள் காட்டுவதும் குறிப்பிடத்தக்கது: அம்மானை, பாவைப் பாட்டு, தும்பிப்பாட்டு, புறப்பாட்டு என்பன. இவர் காட்டும் பாவை 5 அடி உடையது. இவர் காட்டும் உதாரணப் பாடல்களை மட்டும் இங்கு எடுத்துக்காட்டுவது பிற்காலத்து வந்த பாடல்களோடு ஒப்பிட்டுப் பார்ப்பதற்கு உதவியாயிருக்கும்:

அம்மானை - கொற்றவை துதி:

சேயரி நாட்டமும் செவ்வாயும் அல்குலுமோ – அம்மானாய்
ஆய்மலருந் தொண்டையும் ஆழியம் திண்டேரும் – அம்மானாய்
மாயிருந் தானை மயிடன் தலையின்மேல் – அம்மானாய்
பாயின சீறடிப் பாவை பகவதிக்கே – அம்மானாய்.

புறா - அருகன் துதி:

உற்ற படையினார் பெற்ற பகையினார் – புறாவே
பெற்ற முடையார் பெருஞ்சிறப் பாண்டகை – புறாவே
மற்றை யவர்கண் மனையிற் களிப்பதே – புறாவே.

* இரண்டு பாடங்களையும் கொண்டு, சித்தாந்தம் 1970 ஜூலை மாத இதழில் திருத்தமான பாடம் வெளியிட்டிருக்கிறோம்.

ஏதங்கள் நீங்க எழிலிளம் பிண்டிக்கீழ்ப் – புறாவே
வேதங்கள் நான்கும் விரித்தான் விரைமலர்மேற் – புறாவே
பாதம் பணிந்து பரவுதும் பல்காலும் – புறாவே.

*பாவைப் பாட்டு - அருகன் துதி:*

கோழியுங் கூவின, குக்கில் அழைத்தன,
தாழியுள் நீலத் தடங்கணீர் போதுமினோ!
ஆழிசூழ் வையத் தறிவன் அடியேத்தி,
கூழை நனையக் குடைந்தும், குளிர்புனல்
ஊழியுள் மன்னுவோ மென்றேலோ ரெம்பாவாய்.

*இறுதிப் பாடலைக் குணசாகரரும் கூறுகிறார்; இது அவிநய னார் காட்டிய பாட்டு என்பது நம் உரையாசிரியர் குறிப்பு. இப்பாடல், சைவ வைணவப் பாவைப் பாடலுக்குப் பிற்காலத்தது ஆகலாம். இவையொட்டியே எந்தை குன்றம் என்ற முடிபை யுடைய சில வரிகளையும் இவர் தருகிறார். ஒருகால் இவை பாரி மகளிர் பாடல்களா? (யா. விருத்தி பக்கம் 248-249).*

மாலை மணங்கமழும் மௌவல் முகைவிரியும் எந்தை குன்றம்
காலை மணிக்குவளை காதலர்போற்கண் விழிக்கும் எந்தை குன்றம்
நீலமழை முழங்கி நின்று சிலம்பதிரும் எந்தை குன்றம்
மாலை மயிலகவ வந்தண்டுலவணமே எந்தன் குன்றம்
ஆடுகழை கிழிக்கும் கந்தண்டியரிற்றே எந்தை குன்றம்
நீடுகழைமேல் நிலா மறி நிற்குமே எந்தை குன்றம்
கூடு மழை தவழும் கோடுயர் சந்தமே எந்தை குன்றம்.

*வாயுறை வாழ்த்து மருட்பாவுக்கு இவர் காட்டும் உதாரணம் மிகச் சிறந்த கருத்துடைய பாடல்களுள் ஒன்று:*

பலமுறையும் ஓம்பப் படுவன கேண்மின்:
சொலன்முறைக்கண் தோன்றச் சுடர்மணித் தேரூர்ந்து
நிலமுறையின் ஆண்ட நிகரிலார் மாட்டும்
சிலமுறை அல்லது செல்வங்கள் நில்லா;
விலங்கும் எறிபடையும், ஆற்றலும், மாண்பும்,
கலந்ததம் கல்வியும், தோற்றமும், ஏனைப்
பொலஞ்செய் புனைகலனோடு இவ்வாறி னாலும்
விலங்கிவருங் கூற்றை விலக்கலும் ஆகா;
அனைத்தாதல் நீயிரும் காண்டிர்; நினைத்தகக்
கூறிய எம்மொழி பிழையாது,
தேறிநீர் ஒழுகிற் சென்றுபயன் தருமே.

இவ்வுரையாசிரியர், 'வைகலும் வைகல் வரக் கண்டும்' என்ற நாலடியார்ப் பாட்டையும் 'மனைக்குப் பாழ் வாணுதல் இன்மை' என்ற நான்மணிக் கடிகைப் பாட்டையும், முறையே அணியியல் உடையாரும் செய்யுளியல் உடையாரும் காட்டியனவாகக் குறிப்பிடுகிறார். அவ்விரண்டு நூல்களும் பதினெண்கீழ்க் கணக்கு நூல்கள். அவற்றின் காலம் பொதுவாக, சங்க இலக்கியங்களுக்குப் பிற்பட்டது ஆகும்; அதாவது கி.பி. 2-3ஆம் நூற்றாண்டுகளுக்குப் பிற்பட்டது. இனி அணியியல், செய்யுளியல் இரண்டையும், சிறந்த இலக்கணங்களாக, பதினொராம் நூற்றாண்டில் வாழ்ந்த இவ்வுரையாசிரியர் குறிப்பிடுவதால், அவை இவருக்கு முந்திய ஒன்பது - பத்து நூற்றாண்டுகளுக்கு உரியன என்று நாம் கருதுதல் பொருந்தும். ஆகவே, இவை மேற்கோள் காட்டுகின்ற நாலடி, நான்மணி இரண்டும் சுமார் 8ஆம் நூற்றாண்டு அல்லது அதற்கு முற்பட்ட காலம் என்ற வரையறையை யாப்பருங்கல உரையாசிரியர் கூற்றால் நாம் கொள்ள முடிகிறது. நான்மணிக்கடிகை சிலப்பதிகாரத்தில் வருவதால், அதன் காலம் இன்னும் முற்பட்டது என்பது நன்கு அறிந்த செய்தி. நாலடியைப் பார்க்கும்போது, நாலடிப் பாடல்கள், சம்பந்தரோடு புனல்வாதம் செய்த சமணர் வைகையில் இட்டவை என்ற கருத்து வழங்கி வருகிறது; இவ்வுரையாசிரியர் குறிப்பைப் பார்க்கும் பொழுது, சம்பந்தர் காலமாகிய ஏழாம் நூற்றாண்டின் இடைப்பகுதி ஆகிய காலம் நாலடியாருக்குப் பொருந்தக் கூடியது என்றும்; புனல்வாதக் கதை எளிதில் புறக்கணிக்கத் தக்கதன்று என்றும் நன்கு விளங்குகின்றன.

அறிவுடை நம்பியார் செய்த சிந்தம் என்பது ஒரு குறிப்பு உடையது: புறநானூற்றில் பாண்டியன் அறிவுடை நம்பி செய்த பாடல் வருகிறது. இருவரும் ஒருவராகவே இருத்தல் கூடும்.

மேற்கோள் பாடல்களில் கருடநூல் பெயர் வருகிறது:

அனந்தனுங் குளிகனு மாதி யாகிய
நனந்தலைப் பெருங்குலம் நான்கும் நாட்டிய
கனங்கெழு கருடநூ லகத்துக் காணலாம்;
இனம்புரி எதிர்நிர னிறையு மென்பவே.

இந்நூல் சித்தராரூடம் போல ஒரு விஷநூல் போலும்.

*முறை நிரல் நிறைக்கு உதாரணமாக இவர் காட்டும் பின் வரும் பாடலும் ஒருகால் அக்கருட நூலைச் சேர்ந்ததே ஆகலாம்; இப்பாடல் ஈரெதுகையாக உள்ளது:*

புள்ளிப் பொறியே சுடர்நந்தி போர்க்குலிசம்
வள்ளிதழ்த் தாமரையும் வைக்கஅம் மண்டலத்தே
மண்டலத்தைப் புள்ளின் வதன முதலாகக்
கொண்டொழியச் சிந்திப்பக் குன்றும் கொடுவிடமே.

*திரையக்காணம்* என்று இரு பாடல்களைக் காட்டுகிறார். கோள்கள், ராசிகள் இங்கு சொல்லப்பெறுவதால், இது ஒரு சோதிட நூல் ஆகலாம். முதற்பாடலில் நூற்பெயர் வருகிறது. வளையாபதிச் செய்யுட்கள் பல புறத்திரட்டில் வருகின்றன; ஆனால் இவ்வாசிரியர் இரண்டு வளையாபதிப் பாடல்களைக் காட்டி, 'இத்தொடக்கத்தன ஒரு சார் வளையாபதிப் பாட்டும் கலிவிருத்தத்தின் பாற்படும்' என்று எழுதுகிறார். இவ்விரு பாடல்களும் இரண்டடி கொண்ட மூன்று தாழிசைகள் ஒரு பொருள் மேல் அடுக்கி வந்தனவாக அமைந்துள்ளன.*

நீல நிறத்தனவாய் நெய்கனிந்து போதவிழ்ந்து
கோலங் குயின்ற குழல்வாழி நெஞ்சே!
கோலங் குயின்ற குழலுங் கொழுஞ்சிகையும்
காலக் கனலெரியின் வேம்வாழி நெஞ்சே!
காலக் கனலெரியின் வேவன கண்டாலும்
சால மயங்குவ தென் வாழி நெஞ்சே!

வித்தகர் செய்த விளங்கு முடிகவித்தார்
மத்தக மாண்பழிதல் காண்வாழி நெஞ்சே!
மத்தக மாண்பழிதல் கண்டால் மயங்காதே
உத்தம நன்னெறிக் கண் நில்வாழி நெஞ்சே!
உத்தம நன்னெறிக் கண் நின்றூக்கஞ் செய்தியேல்
சித்தி படர்தல் தெளி வாழி நெஞ்சே!

*இவ்விரண்டு பாடல்களையும் பார்க்கும்போது, வளையாபதியின் கவிதை அழகு எத்துணைச் சிறப்புடையது என்பது விளங்கு கிறது. இதனோடு, தக்கயாகப்பரணி உரைகாரர் "இவர் வளையா பதியை நினைத்தார் கவியழகு வேண்டி" என்று ஒட்டக்கூத்தரைக் கூறுவதன் பொருத்தமும் நன்கு விளங்கும்.*

---

* *இந்நூல் பற்றிய ஆராய்ச்சிக் குறிப்பை எமது 10ஆம் நூற்றாண்டு இலக்கிய வரலாற்றில் காண்க.*

இலைநல ஆயினும் எட்டி பழுத்தால்
குலைநல வாங்கனி கொண்டுணல் ஆகா; இளையாள்
முலைநலங் கண்டு முறுவலிக் கின்ற
விலையுடை நெஞ்சினை வேறுகொளீரே

'இம்மூலர் வாக்கு (திருமந்திரம்) மிக்கு வந்தவாறு கண்டு கொள்க' என்று இவர் கூறுகிறார். ஆனால் ஏடுகளிலும் அச்சிட்ட திரு மந்திரப் புத்தகங்களிலும் மிக்கு வந்த சீர் காணப்படவில்லை. 'இளையாள்' என்ற இச்சீர் இல்லாமலே இயல்பாகப் பொருள் ஆகின்றது. ஒருகால் இவ்வுரையாசிரியர் இம்மிகைச்சீர் பொருந் தவே இப்பாடலை அறிந்திருந்தார் போலும். பூதத்தாரும், காரைக்காற் பேயாரும் பாடிய பாட்டு என்று இவர் ஒரு பாடலைக் காட்டுகின்றார். இரண்டாமடி ஒரு சீர் குறைந்து வந்ததற்கு இது உதாரணம்:

கறைப்பற் பெருமோட்டுக் காடு கிழவோட்கு
அறைத்திருந்த சாந்தைத்தொட் டப்பேய்
மறைக்க அறியாது மற்றும்தன் கையைக்
குறைக்குமாம் கூர்ங்கத்தி கொண்டு.

இப்பாடல் பரணிப் பிரபந்தங்களில் சொல்லப்படும் பேய்களின் செயலுக்குப் பொருத்தமாக உள்ளது. இது பாடிய சந்தர்ப்பம் விளங்கவில்லை. பூதத்தார் ஆழ்வாரா, காரைக்காற் பேயார் அம்மையாரா என்ற விளக்கமும் கிடைக்கவில்லை. பாடலில் பேய் என்று வந்தமையால், பூதம் - பேய் என்று பெயர் வருகின்ற இவ்விருவர் பெயரும் சொல்லப்படுகின்றனவோ என்று ஐயுற வேண்டியுள்ளது.

பல பாடல்கள் காப்பியங்களிலிருந்து எடுத்தனவெனத் தெரிகின்றன. இவை இப்போதுள்ள சிந்தாமணி சூளாமணியில் இல்லை. இறந்துபோன காப்பியங்களில் இருந்தன போலும். 'குற்றங்கள் மூன்றும் இலனாய்க் குணங்கட் கிடனாய்' என்பது அமிர்தபதி என்ற காப்பியத்தின் தொடக்க வரி; இதுவும் ஒரு சைன நூல் போலும்.

சில சமயங்களில் உரைகாரர் தாம் காட்டும் இலக்கணப் பொருத்தத்துக்காக வேண்டி, மேற்கோட் பாடலைக் கொஞ்சம் திருத்திக் கொள்கிறாரோ என்று கருதவேண்டியுள்ளது; பையுட் சந்தம் என்ற இடத்து, சூளாமணிப் பாடலில் (சுயம்வரம் 250) இரு வரிகளை இவர் திருத்தியிருக்கக் காணலாம். அச்சிட்ட

சூளாமணி நூலிலுள்ள பாடல் இவர் திருத்தமின்றி,இவர் காட்டும் இலக்கணத்துக்குப் பொருந்தாது.*

எழுத்தல்லாதன செய்யுளகத்து வந்தால் அவற்றைச் செய்யுள் நடைக்கு ஏற்ப அசை சீர் தளை அடி தொடை பிழைபடாமல் வழங்குக எனக் கூறி, அஃகு வஃகு எனவரும் ஒலியை அமைத்து ஒரு வெண்பாவைக் காட்டி, "ஒழிந்தன இடைக்காடனார் பாடிய ஊசி முறியுட் கண்டு அலகிட்டுக் கொள்க" என்கிறார். இதனால், இடைக்காடனார் பாடிய ஊசிமுறி என்ற நூல் உண்மையாகவே இருந்தது. அது இவர் காலத்தில் வழக்கில் இருந்து பின்னர் இறந்து போயிற்று என்று அறிகிறோம்.

பொய்கையார், நக்கீரர் போன்ற பல பண்டைப் புலவர்கள் பற்றிய செய்திகள் இந்நூலால் சிறிது தெரிய வருகின்றன. இச் செய்திகள் சில கருத்துக்களைத் தெளிவுபடுத்த உதவும். பொய் கையார் முதல் திருவந்தாதிப் பாட்டைக் காட்டுகிறார். இது கொண்டு சிலருக்குக் குழப்பம் நேர்ந்தது உண்மை. ஆனால் இவ்வுரை குழப்பத்தைத் தெளிவுபடுத்த உதவுகிறது என்று நாம் கருதுகிறோம். ஒரு பொய்கையார் களவழி நாற்பது பாடிக் கோச்செங்கணானைப் புகழ்ந்தார்; அவரே பின்வரும் பாடலை யும் பாடினாராகலாம்:

அவிழ்ந்த துணியசைக்கும் அம்பலமும் சீக்கும்
மதிழ்ந்திடுவார் முன்னம் மலரும் – கவிழ்ந்து
நிழல்துழா யானை நெடுமான்தேர்க் கிள்ளி
கழல்தொழா மன்னவர்தங் கை.

கிள்ளி என்பதனால் அக்கோச்செங்கணானையே பாடிய தனிப் பாடல் என இதைக் கொள்ளலாம். மற்றொரு பொய்கையார் 'வையம் தகளியா' என்று தொடங்குகின்ற முதல் திருவந்தாதி பாடினார்.

ஆடவர்கள் எவ்வாறு அகல்வரணி வெஃகாவும்
பாடகமும் ஊரகமும் பஞ்சரமா – நீடியமால்
நின்றான் இருந்தான் கிடந்தான் இது அன்றோ
மன்றார் கலிக்கச்சி மாண்பு.

---

* இப்படியே சம்பந்தர் தேவாரப் பாடலை, தண்டியலங்கார வாசிரியர் தம் உரையில் இறுதி எழுத்துக்கள் சில மாற்றிக் காதை கரப்பாக வைத்துக் காட்டுகிறார்: எமது தமிழ் இலக்கிய வரலாறு 12ஆம் நூற்றாண்டு பார்க்க.

என்பதை விருத்தியுரைகாரர் எடுத்துத் தருகிறார். (திருமழிசை யாழ்வாரின் சீடரான கணிகண்ணர், தன்னைப் பாடும்படி வற்புறுத்திய கச்சிவேந்தனை நோக்கித் திருமாலைச் சிறப்பித்துக் கூறிய பாடலென்று இதைக் குரு பரம்பரை நூல்கள் கூறும்) இன்னுமொரு பொய்கையார் வாழ்ந்திருந்து பாட்டியல் ஒன்று செய்தார். இவர் செய்த சூத்திரங்கள் சில பன்னிரு பாட்டியலி லும், இவ்வுரையிலும், நவநீதப் பாட்டியல் உரையிலும் பயில் கின்றன. இவ்வாறு நாம் பொய்கையார் மூவரைத் தெளிவு செய்து கொள்ள வேண்டும். முதலாவது கடைச்சங்க காலத்துப் பொய்கை யார். களவழி நாற்பது பாடியவர்: காலம் 2, 3 நூற்றாண்டு (சிலர் சற்றுப் பிற்பட்ட காலத்தவர் என்பர்) இரண்டாவது பொய்கை யார், முதல் திருவந்தாதிபாடிய ஆழ்வார்: காலம் 5, 6 நூற்றாண் டுகள். மூன்றாவது பொய்கையார் பாட்டியல் பாடியவர்; காலம் 9ஆம் நூற்றாண்டு; இப்பாட்டியல் இன்று கிடைக்கவில்லை.

நக்கீரர் வரலாறும் இதுபோன்றதே. செய்யுளின் ஓசையைக் குறித்து இவர் சொல்லுமிடத்தில் ஒரு தொடர் சிலருக்கு விபரீத மாகவே பொருள் தருகின்றது. ஏந்திசைச் செப்பலோசை, தூங்கிசைச் செப்பலோசை, ஒழுகிசைச் செப்பலோசை என்ற மூன்றுக்கும், இவ்வுரைகாரர் ஒரு வெண்பாவும் குறளும் ஒவ்வோரிடத்திலும் சொல்லி, முடித்துக் காட்டும்போது, வேறு நூல்களையும் குறிப்பிடுகிறார்: 1. வெண்பா: குறள் 397: இன்னவை பிறவும் ஏந்திசைச் செப்பலோசை. 2. வெண்பா; குறள் 1121: இன்னவை பிறவும் நக்கீரர் நாலடி நானூற்று வண்ணத்தால் வருவனவுமெல்லாம் தூங்கிசைச் செப்பலோசை 3. வெண்பா; குறள் 984: இன்னவை பிறவும் முத்தொள்ளாயிரத்து வண்ணத்தால் வருவனவுமெல்லாம் ஒழுகிசைச் செப்பலோசை. இவை அம் மூன்றிசைச் செப்பலோசைக்கும் அவிநயனார் காட்டிய பாட்டு'. இங்கு, நக்கீரர் நாலடி நானூற்று வண்ணம் என்று அச்சிட்டிருப்பதால், சிலர், நக்கீரர் நாலடி நானூறு பாடினார் என்று கூறியுள்ளனர். இது பொருந்தாது. அச்சில் பிழையிருக்குமென்று தோன்றுகிறது. நக்கீரர் என்ற சொல் பிழையாக இருக்க வேண்டும்; நக்கீரர் காட்டிய என்றிருக் கலாம். நக்கீரர் அடிநூல் என்று யாப்பருங்கல உரை கூறும் பாட்டியலைச் செய்த நக்கீரர் நாலடியைக் காட்டியிருக்கலாம். அடுத்து முத்தொள்ளாயிரத்தைக் குறிப்பிட்ட விருத்தியுரைகாரர் இங்கு மட்டும் நாலடியின் ஆசிரியர் நக்கீரர் என்று குறிப்பிட்ட தாகக் கருதுவது பிழையாகும்.

விருத்தியுரையுள் நக்கீரர் அடிநூல், நக்கீரர் நாலடி நாற்பது என்ற பெயர்கள் வருகின்றன. இவர் கூறும் இப்பெயர்களைக் கொண்டு குழம்பாமல் நக்கீரர் மூவர் இருந்தனர் என்று வரையறை செய்து கொள்ளுதல் வரலாற்று ஆராய்ச்சிக்குப் பொருத்தமாகும். ஒருவர் சங்ககால நக்கீரர்: சங்க இலக்கியத் தனிப்பாடல்கள் பலவும், நெடுநல்வாடையும், திருமுருகாற்றுப் படையும் பாடினார் என்று நாம் கருதுகிறோம். (நெடுநல் வாடையும், திருமுருகாற்றுப்படையும் வெவ்வேறு புலவர் பாடினர் என்று வையாபுரிப்பிள்ளை சொல்வர்) மற்றொரு நக்கீரர் இருந்து பதினொராந் திருமுறையில் காணப்படுகிற திரு எழுகூற்றிருக்கை, திருக்கண்ணப்ப தேவர் திருமறம் முதலான பிரபந்தங்களைப் பாடினார். திரு எழுகூற்றிருக்கை இவ்விருத்தி யுரையிலும் காட்டப்பட்டுள்ளது. மூன்றாவது நக்கீரர் ஒருவர் இருந்து நக்கீரர் அடிநூல், நாலடி நாற்பது என்ற பாட்டியல் நூல்கள் பாடினார். முதல் நக்கீரர் சங்க காலத்துக்குரியவர். கி.மு. 1 முதல் கி.பி. 1 வரையிலுள்ள இருநூற்றாண்டுகளுக்கிடை யிலுள்ள காலத்தில் வாழ்ந்தவர். பதினொராந்திருமுறை பாடிய நக்கீரர் 10ஆம் நூற்றாண்டில் வாழ்ந்திருக்கலாம். பாட்டியல் பாடிய நக்கீரர் 9ஆம் நூற்றாண்டில் வாழ்ந்திருக்கலாம். இத் தெளிவும் இவ்வுரையின் மூலம் நாம் செய்து கொள்ள முடிகிறது. களவியல் உரைசெய்த நக்கீரரை நாம் இங்குக் கருதவில்லை.

நக்கீரரைக் குறித்த இதே இடத்தில் மற்றொரு குறிப்பைத் தருவதும் பயனுடையது. அவிழ்ந்த துணியென்று பொய்கை யார் வாக்கைக் குறித்த அதே இடத்தில், பின்வரும் பாடலும் குறிப்பும் காணப்படுகின்றன:

ஊசி யறுகை யுறுமுத்தங் கோப்பனபோல்
மாசி யுகுபனிநீர் வந்துறைப்ப – மூசு
முலைக்கோடு புல்லுதற்கொன் றில்லாதேன் காண்மோ
விறக்கோடு கொண்டெரிக்கின் றேன்.

இந்நக்கீரர் வாக்கினுட் கடை யிரண்டடியும் மூன்றாமெழுத் தொன்றெதுகை வந்தவாறு காண்க.' இப்பாடல் பிற்காலத்துத் தோன்றிய தமிழறியும் பெருமாள் கதை (17 நூற்.) என்ற உரை நடைக் கதையில் நக்கீரர் பாடிய பாட்டாகச் சொல்லப்பட் டுள்ளது. முழுதும் பாடபேதமாகவும், இங்குக் காட்டிய எதுகை நயத்துக்குப் பொருந்தாமலும் அப்பாடல் உள்ளது.

இவ்வுரையாசிரியர் நன்கு இலக்கியச்சுவை தேர்பவர் என்று கருதமுடியும்; சிறந்த ரசிகராவார். இலக்கணம் காட்ட வந்த இடத்தில் இவர் காட்டும் பாடல்கள் எல்லாம் சுவை நிரம்பியவை. பின்வரும் பாடல் காண்க.

இருளுக்கு எரிவிளக்கு என்றும் பகையே;
அருளுக்கு அலைவாழ்க்கை யஃதும் பகையே;
மருளுக்கு வாலறிவு மாளாப் பகையே;
பொருளுக்கு அஃதின்மை பகை.

ஒரு பாடல் தாளப் பொலிவுடையதாய், பிள்ளைகள் ஆட்டம் ஆடுவதற்கு ஏற்ற எளிய சந்தத்தில் அமைக்கப் பெற்றிருக்கிறது:

இந்திரர்க ளேத்தும்மடி ஈண்டுயிர்கள் ஓம்பும்மடி
வெந்திறல ஞாயிற்றெழில் வீவிலொளி வெல்லும்மடி
மந்திரத்தி னோதும்மடி மாதுயரந் தீர்க்கும்மடி
அந்தரத்தினா னாயவிதழ்த் தாமரையி னங்கண்ணடி.

இவர் காட்டுகின்ற மற்றொரு பாடல் பல்லுணா வளத்தைக் கூறுகின்றது. புன்செய்த் தானியங்கள் ஒன்பது இங்குச் சொல்லப் பட்டன. இப்பாடல் இவ்வாசிரியரே செய்ததாயிருக்கலாம் அல்லது அமிர்தபதிப் பாடலாயிருக்கலாம்:

கவர்கதிர் வரஃகிறுங்கு காய்கவின்ற எட்குழாந்
துவரை கொள் பயறுழுந்து தோரையோடு சூழ்கொடி
அவரை யின்ன பல்லுணா அளக்கரிய என்பவால்
கவரும் வண்டு சூழ நின்று காந்தள்கைம் மறித்தவே.

இப்பாடலைப் பாடிவர் உண்மையிலேயே வேளாண்மைத் துறையில் சிறந்திருந்தார் என நாம் கருதலாம். (இத்தானியங்கள் நவதானியம் எனப்படும்)

ஒத்தாழிசைக் கலிப்பா உதாரணங்களாக இவர் காட்டும் பாடல்கள், பல உறுப்புக்களையும் கொண்டுள்ளமையால், மிக நீண்ட பாக்கள். இவற்றுள் சிறப்பாக, "விளங்கு மணிப் பசும்பொன்னின்" என்ற தொடக்கமுடைய பாடலை இவர் 'இஃது ஆறுறுப்பும் குறைவின்றி வந்த வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பா' என்கிறார். ஆறுறுப்பாவன - தரவு, தாழிசை, அராகம், அம்போதரங்கம், தனிச்சொல், சுரிதகம் என்பன.

*பல ஒத்தாழிசைக் கலிப்பாக்களில், அச்சுதன் போன்ற ஒரு பாட்டுடைத் தலைவனோ, அன்றி அருகன்போன்ற ஒரு தெய்வமோ, போற்றப் பெற்றுள்ளது. ஆனால் இங்குக் குறித்த பாடலில் தெய்வமோ பாட்டுடைத் தலைவனோ இல்லை. ஊரன் என்று கிளவித் தலைவன் மட்டும் குறிக்கப்பட்டுள்ளான். இதனால் உரையாசிரியரே இப்பாடலைச் செய்து காட்டுகிறார் என்று கருதலாம். இப்பாடல் பிற்காலத்தார் கூறும் வரைவு கடாதல் என்னும் கிளவிக்குரிய பல துறைகளையும் உள்ளடக்கிய பாட்டு என்று சொல்லலாம்.*

விளங்குமணிப் பசும்பொன்னின்
விசித்தமைத்துக் கதிர்கான்று
துளங்குமணிக் கனைகழற்காற்
றுறுமலர நறும்பைந்தார்
பரூஉத்தடக்கை மதயானைப்
பணையெருத்தின் மிசைத்தோன்றும்
குரூஉக் கொண்ட மணிப்பூணோய்,
குறையிரந்து முன்னாட்கண்.

மாயாத வனப்பினையாய் மகிழ்வார்க்கு மல்லார்க்கும்
தாயாகித் தலையளிக்குந் தண்டுறை யூர, கேள்:

*இது தரவு.*

காட்சியாற் கலப்பெய்தி எத்திறத்துங் கதிர்ப்பாகி
மாட்சியாற் றிரியாத மரபொத்தாய், கரவினாற்
பிணிநலம் பெரிதெய்திப் பெருந்தடந்தோள் வனப்பழிய
அணிநலந் தனியேவந் தருளுவதும் அருளாமோ?

அன்பினால் அமிழ்தளைஇ அறிவினாற் பிறிதின்றிப்
பொன்புனைப் பூணாகம் பசப்பெய்தப் பொழிலிடத்துப்
பெருவரைத்தோ ளருளுதற் கிருளிடைத் தமியையாய்க்
கருவரைத்தோள் கதிர்ப்பிக்குங் காதலுங் காதலோ?

பாங்கனையே வாயிலாப் பலகாலும் வந்தொழுகும்
தேங்காத கரவினையும் தெளியாத இருளிடைக்கட்
குடவரைவேய்த் தோளிணைகள் குளிர்ப்பிப்பான் தமியையாய்த்
தடமலர்த்தார் அருளுநின் தகுதியுந் தகுதியோ?

*இவை தாழிசை.*

தாதுறு முறிசெறி தடமல ரிடையிடை
 தழலென விரிவன பொழில்;
போதுறு நறுவிரை புதுமலர் தெரிதரு
 கருநெய்தல் விரிவன கழி;
தீதுறு திறமறு கெனநனி முனிவன
 துணையொடு பிணைவன துறை;
மூதுறு மொலிகலி நுரைதரு திரையொடு
 கடிதொடர் புடையது கடல்.

*இவை நான்கும் அராகம்.*

கொடுந்திற லுடையன சுறவேறு கொட்பதனால்
இடுங்கழி யிராவருதல் வேண்டாமென் றிசைத்திலமோ?
கருநிறத் தெறுதொழிற் கராம்பெரி துடைமையால்
இருள்நிறத் தொருகானில் இராவார லென்றிலமோ?

*இவை நாற்சீ ரீரடியிரண்டம் போதரங்கம்.*

நாணொடு கழிந்தன்றால் பெண்ணரசி நலத்தகையே,
துஞ்சலு மொழிந்தன்றால் தொடித்தோளி தடங்கண்ணே,
அரற்றொடு கழிந்தன்றால் ஆரிருளும் ஆயிழைக்கே,
நயப்பொடு கழிந்தன்றால் நனவது நன்னுதற்கே.

*இவை நாற்சீ ரோரடி நான்கம்போதரங்கம்.*

அத்திறத்தா லசைந்தன தோள்;
 அலர தற்கு மெலிந்தன கண்;
பொய்த்துறையாற் புலர்ந்தது முகம்;
 பொன்னிறத்தாற் போர்த்தன முலை;
அழலினா லசைந்தது நகை; அணியினா லொசிந்த திடை;
குழலினா னிமிர்ந்தது முடி; குறையினாற் கோடிற்று நிறை;

*இவை முச்சீரோரடி யெட்டம்போதரங்கம்.*

உட்கொண்ட தகைத் தொருபால்
 உலகறிந்த வலத் தொரு பால்
கட்கொண்டல் துளித் தொரு பால்
 கழி வெய்தும் படித்தொரு பால்;

பரிவுறூஉந் தகைத் தொரு பால்
 படிறுறூஉம் பசப்பொரு பால்
இரவுறூஉந் துயரொரு பால்;
 இளிவந்த வெளிற்றொரு பால்;

மெலிவுறூஉந் தகைத்தொரு பால்
விளர்ப்புவந் தடைந்தொரு பால்
பொலிவு சென் றகன் றொரு பால்
பொறைவந்து கூர்ந்தொரு பால்;

காதலிற் கதிர்ப்பொரு பால்
கட் படாத் துயரொரு பால்
ஏதில் சென் றணைந் தொரு பால்
இயனாணிற் செறிவொரு பால்.

*இவை இருசீரோரடிப் பதினாறம் போதரங்கம்:*

என வாங்கு,

*இது தனிச் சொல்.*

இன்னதிவ் வழக்கம் இத்திறம் இவள்நலம்
என்னவும் முன்னாள் துன்னா யாகிக்
கலந்த வண்மையை யாயினும், நலந்தகக்
கிளையொடு கெழீஇய தளையவிழ் கோதையைக்
கற்பொடு காணியம் யாமே,
பொற்பொடு பொலிக, நும் புணர்ச்சி தானே.

*இது சுரிதகம்.*

*இதுபோன்ற பாடல்கள் மிகப் பல, உரையாசிரியரின் கவிதைத் திறனுக்குச் சான்றாயுள்ளவை. இவ்வாறு காணப்படும் பாடல்கள் அவ்வளவும் தனியான ஆராய்ச்சிக்குப் பொருளாய் அமையத்தக்கவை.*

## பாண்டிக்கோவை பற்றிய குறிப்பு

*இவ்வுரை பலவகையிலும் விளக்கந் தருகின்ற ஒரு நூல் பாண்டிக் கோவையாகும்; இதை யாரும் இதுகாறும் நன்கு ஆராய்ந்தறியவில்லை போலும். இக்கோவைப் பாடல்கள் இறையனார் களவியல் உரையில் மேற்கோளாக வந்துள்ளன. செய் வித்தோனால் பெயர்பெற்ற நூல்களின் வரிசையில் பாண்டிக் கோவையும் ஒன்றாக இலக்கண விளக்க உரை குறிப்பிடும். வையாபுரிப் பிள்ளை பதிப்பித்த களவியற் காரிகை உரையே முதன் முதலாக நூற்பெயரை ஐயத்துக்கிடமின்றிக் குறிப்பிட்டது. களவியல் களவியற்காரிகை இரண்டிலும் கிடைத்த இந்நூற் பாடல்கள் முன்னூற்று நாற்பத்தொன்பது. பின்னர், இளம் பூரண உரையில் ஒரு பாடல் கிடைத்தது. இவை வே. துரைசாமி*

ஐயரால் தொகுத்து விளக்கத்துடன் 1957இல் பாண்டிக்கோவை என்ற பெயரில் அச்சிடப் பெற்றன. இவையேயன்றி, யாப்பருங்கல விருத்தியில் ஐந்து பாடல்கள் இந்நூலுக்குரியனவாகக் காணப் படுகின்றன. உதாரணமாகச் சொல்லுமிடத்திலும், பிற இடங் களிலும் இப்பாடல்கள் வருகின்றன. இங்கு, பாண்டிக்கோவை என்று பெயர் குறிப்பிடப்படவில்லை; எனினும், ஒழிபியல் உரையில் ஓரிடத்தில் மூன்று பாடல்கள் தொடர்ந்து சொல்லப் பட்டுள்ளன. பாடல்களைப் படிக்கும்போது இவை பாண்டிக் கோவைப் பாடல்கள் என்பதில் எந்த ஐயமுமில்லை. கயல், கூடல், சேவை வென்றான் என்ற தொடர்கள் இப்பாடல்கள் பாண்டியனுக்குரியன என்பதைக் குறிக்கின்றன. ஓரிடத்தில் உரை யாசிரியர் கட்டளைக் கலித்துறையின் சந்தத்தைக் குறிப்பிடு மிடத்துப் பின்வருமாறு எழுதுகிறார்:

"குமரசேனாசிரியர் கோவையும், தமிழ் முத்தரையர் கோவையும், யாப்பருங்கலக் காரிகையும் போன்ற சந்தத்தால் வருவனவற்றின் முதற்கண் நிரையசைவரின் ஓரடி பதினேழெழுத் தாம். முதற்கண் நேரசைவரின் ஓரடி பதினாறெழுத்தாம்; இவ்வா றின்றி மிக்கும் குறைந்தும் வாரா. அவை எண்ணுகின்றுழி ஆய் தமும் ஒற்றும் ஒழித்து உயிரும் உயிர்மெய்யும் குற்றியலிகரமும் குற்றியலுகரமும் கொண்டு எண்ணப்படும்.

எழுவாய் நிரைவரினா மேழுடைய வீரைந்
தெழுவாய் தனிவரினோன் றேகும் – வழுவாத
கோவையுஞ் செய்யுட்கால் குன்றா பெருகாவென்
றேவினார் தொல்லோ ரெடுத்து.

அவற்றுள் சில வருமாறு:

இருநெடுஞ் செஞ்சுட ரெஃகமொன் றேந்தி இரவின்வந்த
அருநெடுங் காதற்கன் றேதரற் பாலதல் லாது விட்டாற்
கருநெடு மால்கட லேந்திய கோன்கயல் சூடு நெற்றிப்
பெருநெடுங் குன்றம் விலையோ கருதிலெம் பெண் கொடிக்கே

எனவும்,

காய்ந்து விண்டார் நையக் காமரு கூடலிற் கண் சிவந்த
வேந்துகண் டாயென்ன வெள்வளை சோரக் கலைநெகிழப்
போந்து கண்டாயொடும் போந்துகண் டேற்கவன் பொன் முடிமேற்
போந்துகண் டாளென்று போந்ததென் மாட்டோர் புறனுரையே

எனவும்,

திண்டேர் வயவரைச் சேவை வென்றானன்ன தேங்கவுண்மார்
வண்போத மன்ற வளை நிழ னீக்கிய வார்சிலம்பா
நண்போ நினையிற் பொல்லாதது நிற்களென் நன்னுதலாள்
கண்போற் குவளை கனந்ததற் கியாதுங்கைம் மாறிலவே.

எனவும் இவற்றுட் கண்டு கொள்க."

இங்கு காட்டப்பட்ட முதல் வெண்பா செய்யுளிலக்கணம் கூறுகின்றது. அடுத்து வரும் மூன்று கலித்துறைப் பாடல்களும் பாண்டிக்கோவைப் பாடல்கள். யாப்பருங்கல உரை, பிறர் பாண்டிக்கோவை என்று காட்டுகின்ற 'ஒரு மால் வரை நின்று' என்ற பாடலையும் காட்டுகிறது. ஆதலால் பொருளொற்றுமை யுடைய, அதாவது அகப்பொருள் அமைந்து பாண்டியனைச் சிறப்பிக்கின்ற, இப்பாடல்களும் அந்நூலுக்குரியன என்பதில் ஐயமில்லை. இவற்றைக் கூறும்போது, தொடக்கத்தில் ஆசிரியர் குமரசேனாசிரியர் கோவை, தமிழ் முத்தரையர் கோவை, யாப் பருங்கலக் காரிகை என்ற மூன்றையும் சொன்னார். யாப்பருங் கலக்காரிகை என்பது பதினொன்றாம் நூற்றாண்டு. முத்தரையர் கோவை, ஒன்பதாம் நூற்றாண்டு வரை ஆட்சி புரிந்த முத்தரை யர் தலைவனொருவனைக் கூறுவது. மூன்றாவது நூலும் ஒரு கோவை நூல், இது குமரசேனாசிரியர் என்பவர் செய்த நூலாக வேண்டும். இது யாது என்று அறிவதற்கு ஒரு துணையிருக்கிறது. முன்காட்டிய மூன்று பாடல்களும் பாண்டிக்கோவை என்று சொன்னோம். ஆசிரியர் இப்பெயரைச் சொல்லவில்லை. இவை காரிகைப் பாடல்களுமல்ல, முத்தரையரைக் குறிப்பிடாமை யால் முத்தரையர் கோவைப் பாடல்களுமல்ல; ஆகவே குமர சேனாசிரியர் கோவைப் பாடல்களாகவே இருத்தல் வேண்டும். ஆனால் இவை பாண்டிக்கோவைப் பாடல்கள். ஆகவே பாண்டிக்கோவையும் குமரசேனாசிரியர் கோவையும் ஒன்றே; எனவே, குமரசேனாசிரியரே பாண்டிக்கோவையின் ஆசிரியர் என்ற செய்தி இதனால் விளங்குகின்றது. இச்செய்தி வேறெந்த நூல்களாலும் இப்போது அறியப்படாததொன்று.*

## தலைவர் முதலாயினோர்

இவ்வுரையாசிரியர் மிகப் பழமையான காலமாதலினாலே, இவரால் சுட்டப்பெற்ற பாடல்களுட் பயிலும் அரசர் வள்ளல்கள்

* இது பற்றி 1944இல் யாம் எழுதிய குறிப்பை எமது அம்பிகாபதி கோவை முகவுரையில் காண்க.

போன்றாரைக் குறித்து சில கூறலாம். சங்க இலக்கியங்களில் பாடப்பெற்ற தலைவர் சிலரையும் இங்கு காணலாம். நன்னன், கரிகாலன், தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுவழுதி; பின்னர் தென்னம்பைச் சேந்தன் என்று ஒரு பாடல் குறிப்பிடு கின்றது.

இன்னமிழ்த மூட்டி யெழில்வளைசேர் முன்கைக் கொண்டு
என்னையர்பேர் சொல்லென் றிரந்தாலும் – தென்னம்பைச்
செஞ்சுடர்வாள் வெஞ்சினவேற் சீர்ச்சேந்த னென்னுமால்
கிஞ்சுகவா யஞ்சொற் கிளி.

இச்சேந்தன், திவாகரரைக் கொண்டு திவாகர நிகண்டு பாடுவித்த அம்பர்ச் சேந்தனே போலும். அங்ஙனமாயின், திவாகர நிகண்டு 11ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்டதென்பதும் தெளிவாகிறது. திவாகரத்தை இதே நூற்றாண்டில் எழுந்த சிலப் பதிகார அரும்பதவுரைகாரரும் குறிப்பிடுகிறார். பதின்மூன் றெழுத்தடிச் சந்தத்துக்கு இவர் காட்டியுள்ள உதாரணப் பாடல் 'மத்த மயூரக் கிழவோன்' பெயரைக் குறிப்பிடுகிறது: மத்த மயூர சந்தானமென ஒரு சைவ சந்தான பரம்பரை இருந்ததென்று பிற்கால நூல்களால் அறிகிறோம்.

செம்பூட்சேய் என்ற பெயர் தொல்காப்பியர் மாணாக்கருள் ஒருவர் பெயராக வருகிறது. உரையுள் இரண்டு பாடல்கள் இவரைப் புகழ்கின்றன. ஒன்று 'பரூஉத்தடக்கை மதயானை' என்று தொடங்குகின்ற கலிப்பா இங்கு இவர் கூடலார் கோமான், கொற்கைக் கோமான் என்று சொல்லப்படுகின்றார். மற்றொன்று 'நறுவேங்கைத் துறுமலர்' என்று தொடங்குகின்ற கொச்சகக் கலிப்பா. இக்கலிப்பாவில், செம்பூட்சேயோடுகூட செங்கோற் கிள்ளியின் உறந்தையும் சிறப்பிக்கப்படுகின்றது:

ஆட னடைப் புரவிச் செம்பூட் சேஎய்க்
கூட லெனக் குயின்றன தோள்;

மறந்தரு தானைச் செங்கோற் கிள்ளி
யுறந்தையிற் சிறந்தன முலை;

மஞ்சுவரைத் திணிதோட் பூழியர் மன்னவன்
வஞ்சியென மலர்ந்தன கண்.

மற்றோரிடத்திலும் இச்சேயின் வடிவழகைப் போற்றுகின்ற பாடல் காணப்படுகின்றது:

வண்டுளர் பூந்தார் வளங்கெழு செம்பூட் சேஎய்
வடிவே போலத்
தண்டளிர்பூம் பிண்டித் தழையேந்திமா வினவி.

இப்பாடல்கள் குறிப்பிடும் செம்பூட்சேய் அகத்தியர் மாணாக்கராய்த் தொல்காப்பியரோடு கல்வி பயின்றவரே என்று நாம் கருதினால், இவர் ஒரு புலவராய் இருந்தார் என்பது மட்டு மின்றி, பாண்டிய மரபில் முடி மன்னராய்க் கூடற்கோமானாய் வீற்றிருந்து புலவர் பாடும் புகழ் பெற்றவரும் ஆவார் என்று கருதவேண்டும். இவரைப் புகழ்ந்த பாடல்கள் சில சிறந்த இலக்கியச் சுவை பொதிந்தவை:

இன்றே,
பொலிகநும் வினையே, பொலிகநும் வினையே,
நாணணி கொண்ட நன்னுதல் அரிவைக்கும்
பூணணி கொண்ட பொங்குவரை மார்பற்கும்,
மனையீ ரோதி வாழ்வொடு மல்கிய
புனையீ ரோதிக்கும், பொலிக நும் வினையே.

இறையனார் களவியல், களவும் கற்பும்பற்றி வருகின்ற பாட்டினைப் பத்து இலக்கணத்தால் உரைக்க என்று உணர்த்து கின்றது (சூ. 56):

திணையே கைகோள் கூற்றே கேட்போர்
இடனே காலம் எச்சம் மெய்ப்பாடு
பயனே கோள் – என்று ஆங்கப் பத்தே
அகனைந் திணையும் உரைத்த லாறே.

இப்பத்தையும் களவியல் உரை விளக்கிச் சொல்கின்றது. கூற்று பற்றிக் கூறுவது: 'இனிக் கூற்று என்பது, கூறுதற்கு உரியாரை அறிந்து அவருள் இன்னார் கூறினார் இப்பாட் டென்று அறிதல்; அதற்கு உரியாரைச் செம்பூட்சேயார் கூற்றிய லுள்ளும் தொல்காப்பியனார் பொருட்பாலுள்ளும் கண்டு கொள்க.' தொல்காப்பியனார் பொருட்பால் என்பது பொருளதி காரம். அதேபோலச் செம்பூட்சேயார், கூற்றியல் என்ற பெயரால் ஒரு தனி நூலோ, அல்லது நூலின் பகுதியான ஓர் இயலோ செய்திருந்தார் என்று நினைக்கவேண்டும். செம்பூட் சேயார்

கூற்றியலாக இறையனாரகப் பொருளும் குறிப்பிடுகிறது - சூ. 56 உரை. ஒருகால் அவர் இதுபோலவே களவியல் கூறும் பத்து இலக்கணங்களுக்கும் பத்து இயல்கள் செய்திருக்கக்கூடும். தொல்காப்பியப் பொருளதிகார இயல்களுள் மெய்ப்பாடு, உவமம், செய்யுள், மரபு ஆகிய நான்கியல்கள் திணை சம்பந்த மின்றி உள்ளன. இவற்றுக்கு முன்னுள்ள ஐந்தியல்களும் திணை மெய்ப்பாடு முதலியன இயலின் பெயராகத் தோற்றுகின்றன. ஆதலால் செம்பூட்சேயார் இப்பத்திலக்கணங்களுக்குப் பத்தியல் கள் செய்திருந்தார் என்பது பொருந்தும். எனவே, இது பொரு ளதிகாரம் என்ற நூலின் பிரிவு விரிவுகளைப் பெற்றிருந்தது என்று உணர உதவும். எனினும், இந்நூல் அடுத்த சில நூற் றாண்டுகளில் இறந்து போயிற்றுப்போலும்.

நந்தி இங்கு நான்கு இடங்களில் குறிப்பிடப்பெறுகிறான். இவன் நந்திக் கலம்பகம் கொண்ட நந்திவர்ம பல்லவமன்னன் போலும். பாடல்கள் யாவும் கலிப்பா. இவை அவனைத் திருமா லாகப் பாவித்து, நீ பொலிக, நிலவுக என்று வாழ்த்துகின்றன. எனவே, பாடல்கள் உடன் காலம். இந்நந்தி மூன்றாம் நந்திவர்மன்; காலம் 9ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதி. ஆனால் ஒரு பாட லேனும் கலம்பகத்துட் குறிப்பிட்டுள்ள போர் வெற்றிகளுள் ஒன்றையும் குறிப்பிடவில்லை. “மண்டலம் பண்டுண்ட திண் தேர் வரகுணன்” என்றதொரு பாடல் இவ்வுரையுள் வருகிறது. பிற்கால உரைகள் பலவும் இப்பாடலை எடுத்துத் தருகின்றன. இவ்வரகுணன். திருக்கோவையுட் சிறப்பிக்கப்பெற்றவனும், பட்டினத்தடிகளால் திருவிடைமருதூர் மும்மணிக் கோவையுள் விரிவாய்ப் போற்றப்பெற்றவனுமான இரண்டாம் வரகுணன்; நந்திவர்மனிடம் தோற்ற சீவல்லப பாண்டியன் புதல்வன். இவன் சோழனைப் பலமுறை வெற்றி கொண்ட போதிலும், கி.பி. 880இல் ஆதித்த சோழனிடம் திருப்புறம்பயம் போரில் தோற்றான்.

அச்சுதன் என்ற களப்பிர அரசனைக் குறித்த பாடல்களும், படைத்தலைவனாயிருந்து, பழையாறையில் சைனப் பள்ளி கட்டிய விண்ணன் என்பவனைக் குறித்த பாடல்களும், மேற் கோளில் வந்துள்ளன. இதைத் துதிக்கும் தனிப் பாடல்களும் சில காட்டப்பட்டுள்ளன. களப்பிரர் சைனர்; ‘களப்பிரன் என்ற கலியரசன்’ பாண்டி நாட்டில் புகுந்து அழிவு செய்த செய்தியைச் சாசனங்கள் கூறும். உரையாசிரியர் சைனராயினமையின்,

அவர்களைப் போற்றும் பாடல்களைக் கூறினார் என்று கருத லாமாயினும், அவர் ஏனைய சமயத்தெய்வங்களையும் நன்கு போற்றும் பல பாடல்களையும் எடுத்துத் தருகிறார் என்பது மறக்கற்பாலதன்று.

## இலக்கணச் செய்திகள்

யாப்பிலக்கணத்தைக் கூறவந்த இந்த உரையாசிரியர், அளவில்லாத இலக்கண நூல் ஆசிரியர்களையும் அவர்கள் நூல் களையும் நூல் மரபுகளையும் யாப்பு விசேடங்களையும் குறிப் பிடுகிறார். இவர் குறிப்பிடும் செய்திகள், பல ஆசிரியர் பல ஆண்டுக்காலம் ஆராய்ந்தும் முடிவு காணமுடியாத சிறந்த பொருளாய் உள்ளன. எனினும், சில செய்திகளை இங்கு குறிப் பிட முயல்வோம். முதற் சூத்திர உரையில்,

> தொல்காப் பியப்புலவோர் தோன்ற விரித்துரைத்தார்
> பல்காய னார் பகுத்துப் பண்ணினார் – நல்யாப்புக்
> கற்றார் மதிக்குங் கலைக்காக்கை பாடினியார்
> சொற்றார் தம் நூலுள் தொகுத்து.

என்ற ஒரு வெண்பா தருகிறார். இதனால் யாப்பிலக்கணத்தைச் செய்தவர் மூவர் குறிப்பிடத்தக்கவர் என்றும், தொல்காப்பியர் விரித்தும், பல்காயனார் பகுத்தும், காக்கை பாடினியார் தொகுத்தும் செய்தனர் என்றும் அறிகிறோம். இம்மூவருள் பல்காயனார் பாடல்கள் பன்னிரு பாட்டியல் முதலியவற்றுள் காணப்படினும். அகத்தியர் மாணாக்கர் எனப்படும் பன்னிரு வருள் அவர் பெயர் காணப்படவில்லை. அவர் காலப்பழமையை ஆராயும்போது அவரும் தொல்காப்பியர் காலத்தவரே என்று கருதுகிறோம். ஏனைய இருவரும் தொல்காப்பியரும், காக்கை பாடினியாரும், அகத்தியரின் பிற மாணாக்கரும் சமகாலத்த வருமாவர்.

அகத்தியர் செய்த நூல் எங்கும் குறிப்பிடப்பட்டுள்ளது. பாட்டியல் முதலான பல பிரிவுகளையும் இவர் செய்தாரென்று காண்கிறோம். இவர் ஆணையின்படி இவர் மாணாக்கர் இலக்கண நூல் செய்தனரென்று வரலாறு கூறும்; இவ்வுரை யில் "அகத்தியனாராணையினாற் செய்யப்பட்ட நூல்களெல் லாம்" என்று வருவது இதற்கு ஆதாரவாக, உள்ளது. இவர் களுள் தொல்காப்பியர் செய்த இலக்கணமே பெருநூலாக இன்றும் வழங்கி வருகிறது. அகத்தியர் மாணாக்கரான அதங்

கோட்டாசான் தலைமையில் தொல்காப்பியம் அரங்கேற்றப் பெற்றது. மற்றொரு மாணாக்கரான பனம்பாரனார் சிறப்புப் பாயிரம் செய்தார்; அன்றியும், பனம்பாரனாரே தம் பெயரால் ஓர் இலக்கண நூல் செய்தாரென்று நன்னூல் மயிலைநாதர் உரையால் அறிகிறோம். ('இவை பனம்பாரம்' என்று சில பாயிரச் சூத்திரங்களை அவர் குறிப்பிடுகிறார்) ஏனைய ஒன்பதின்மருள், வாய்ப்பியனார், அவிநயனார், காக்கை பாடினியார், நற்றத் தனார் என்போர் பெயரமைந்த நூல்கள் இங்கு பலமுறை சொல்லப்பட்டுள்ளன.

இவர்களுள் பின்கூறிய மூவர் நூல்களும், இவ்வுரையுள் மட்டுமின்றி, பன்னிரு பாட்டியல், நவநீதப் பாட்டியல் உரை முதலியவற்றுள் பலமுறை சிறப்பாகக் காட்டப்பெற்றுள்ளன. இந்நூல்கள் அவ்வவ்வாசிரியர்களால் பெயர் பெறுகின்றன. இவர்களே அன்றி, பின்வரும் ஆசிரியர்களும் இங்கு குறிப்பிடப் பட்டிருக்கிறார்கள்: கடிய நன்னியார், கையனார், சங்க யாப் புடையார், சிறு காக்கை பாடினியார், செயிற்றியனார், செய்யுளிய லுடையார், நக்கீரர், நல்லாதனார், பரிமாணனார், பல்காயனார், பாக்கனார், பாடலனார் பாட்டியலுடையார், பாட்டியல் மரபுடையார், புட்கரனார், மயேச்சுரர் என்னும் பேராசிரியர், பொய்கையார், மாபுராணமுடையார், மாமூலர், யாப்பியலுடை யார், விளக்கத்தனார், நல்லாதனார், நல்லாறனார் என்பன ஒரே பெயர்கள் போலும்; அப்படியே பாட்டியல், பாட்டியல் மரபு என்ற இரண்டும் ஒன்றே போலும். இங்கு குறிப்பிட்ட அனை வரும் பாட்டியல் நூல் செய்தவராவர்.

இலக்கிய நூல் செய்தாரை இவ்வரிசையில் குறிப்பிட வில்லை. காட்டப்பெற்ற மேற்கோள்களுள் மிகவும் அதிகமான பாடல்கள் அவிநயமாகும். அவிநயனார் மிகச் சிறந்த நூல் ஒன்று செய்தாரென்றும், அது தொல்காப்பியத்தை ஒத்த பெருமை. உடையதென்றும், அது ஒரு தனி இலக்கணமரபுக்குத் தோற்று வாயாக அமைந்து பல நூல்களுக்கு மூலமாக இருந்ததென்றும், வச்சணந்திமாலை முதலியவற்றால் அறிகிறோம். அந்நூல் இப்போதில்லை.

மற்றொரு குறிப்பும் சொல்லத்தகும். அவிநயம் போன்ற நூல்களுக்கு மேற்கோள்கள் அவ்வாசிரியர்களாலேயே எடுத்துக் காட்டப் பெற்றிருந்தன என்று இவ்வுரையால் தெரிகிறது. அவிநயனார் காட்டிய பாட்டு, கையனார் காட்டிய பாட்டு,

மயேச்சுரர் காட்டும் பாட்டு என்பன போன்ற உதாரணங்கள் காண்க. 'நிரனிறை, சுண்ணம் அடிமறிமொழி மாற்று, அடி மொழி மாற்று என்னும் இந்நான்கினோடும், பூட்டுவில், புனல் யாறு, தாப்பிசை, அளைமறியாப்பு, கொண்டுகூட்டு என்னும் இவ்வைந்தும் உறழ இருபதாம். அவை வந்த வழிக்கண்டு கொள்க. இருபது வகையாலும் காட்டினார். அவிநயனார் எனக் கொள்க' என இவர் கூறுவது இங்கு கருதத்தக்கது.

நன்னூற் பாயிரத்துள் முப்பத்திரண்டு உத்தி கூறும் 'நுதலிப் புகுதல் ஒத்துமுறை வைத்தல்' என்ற நூற்பா, பாடலனாருரை என்று இவ்விருத்திகாரரும் பின்னர்க் குணசாகரரும் கூறுகின் றனர்; நன்னூற் பொதுப்பாயிரம் முழுமையும் பழம் பாடல், பவணந்தி செய்ததன்று என்ற கருத்துக்கு இவ்வுரை சான்று பகர்கிறது.

மற்றொரு கருத்தும் இங்கு கூறத்தக்கது. உரைகாரர் மேற் கோள் காட்டும் இடங்களில் பலவற்றுள், காக்கை பாடினியார், சிறுகாக்கை பாடினியார், அவிநயனார், மயேச்சுரர் என்ற வரிசை யில் குறிப்பிடுகிறார். இவர்கள் போன்றவர்கள் அக்காலத்துத் தமிழ்ச் சான்றோரால் பெரிதும் ஒப்புக்கொள்ளப்பட்ட பேரா சிரியர்களாயிருந்தனர் என்று கொள்ளக் கிடக்கிறது. காக்கை பாடினியார் நூற்பாக்கள் பெரியவையாயிருக்க, சிறுகாக்கை பாடினியார் பாக்கள், சில சொல்லே உடையனவாயிருத்தலைக் காண்கிறோம். இது காரணம் பற்றியே இவருக்குச் சிறுகாக்கை பாடினியார் என்ற பெயர் அமைந்தது போலும்.*

நேர் என்ற சொல்லுக்கு இவர் குறிப்பிட்டுள்ள பொருள்கள் கருதத்தக்கன: "நேர் என்பது மாறாதற் கண்ணும், ஒத்தற் கண்ணும், தனிமைக் கண்ணும், மிகுதிக் கண்ணும், நுட்பத்தின் கண்ணும், சமனாதற் கண்ணும், உடம்படுதற் கண்ணும், பாதிக் கண்ணும், தலைப்பாட்டின் கண்ணும், நிலைப்பாட்டின் கண்ணும், கொடைக் கண்ணும் நிகழும். என்னை? "நேர்ந்தார ரணம் பல கடந்த அடுபோர்ச் செழியன்" எனவும், "நேர் பொரு ணிறுத்தனன்" எனவும், "நாற்சீர்கொண்டது நேரடி" எனவும், "நேரின மணியை நிரல்பட வைத்தாங்கு" எனவும், "நேர் நூல் நேராடை" எனவும், "நாற்சீர் கொண்டது நேரடி" எனவும்,

* விருத்தியுரையாசிரியர் இளையரான காக்கைபாடினியார் என்று குறிப்பிடுவதையும் நோக்குக.

"நெட்டெழுத்தானேரப்படும்" எனவும், "நேர் போகி" எனவும், "நேர்பட்ட விரண்டு படையும்" எனவும், "நேர் திருந்தன" எனவும், "நேராமற் கற்பது கல்வியன்றே" எனவும் "நேரா நோன்பு" எனவும், "நேரா நெஞ்சத்தானட்டானல்லன்" எனவும், "உப்பு நேர்ந்தார்" எனவும் "புளி நேர்ந்தார்" எனவும், "நேரிழை மகளிர்" எனவும் வழங்குவாராகலின்". (சூ. 58) நேர் என்ற சொல்லுக்கு இவர் இங்கு பதினொரு பொருள்கள் கூறுகிறார். கூறுகின்ற முறையைப் பார்க்கும்போது, முந்தைய நூலென்றைத் தழுவி அல்லது எடுத்துச் சொல்வதுபோல் உள்ளது. இவ்வாறு சொற் பொருள் கூறுகின்ற நூல் இரண்டேயாகும். யாப்பருங்கல விருத்தி காரருக்கு முன்னிருந்த நிகண்டுகள் திவாகரமும் பிங்கலமும். இச்சொல்லோ இப்பொருள்களோ இவ்விரு நூல்களிலும் சொல்லப்படவில்லை. ஆதலால், மற்றொரு நிகண்டு இவ்வுரை காரருக்கு முன் இருந்ததென்றும், அதன் கருத்தையே இவர் இவ்வாறு எடுத்துக் காட்டுகிறார் என்றும் கருதவேண்டும். அக்குரோணி அளவு பற்றிப் பாரத வெண்பாவில் பெருந்தேவ னார் காட்டும் ஆசிரியப்பா இந்நிகண்டுக்கு உரியதாகலாம்.*

இடுகுறியாற் பெயர் பெற்றன யாவை என்று கூறுமிடத்து, நிகண்டு என்ற நூலை இறையனார் அகப்பொருளுரை கூறு கிறது; பின்வந்த உரைகளும் கூறுகின்றன. மேற்குறிப்பிட்ட வற்றால், இப்படியொரு நூல் உண்மையாகவே இருந்ததென் றும், அது மேற்கோளாகப் பண்டையாசிரியர்களால் கொள்ளப் பட்டதென்றும் கருதவேண்டும். இவர் கூறும் கருத்துக்கள் ஒரு கால் அந்நிகண்டினுள் இருந்திருக்கலாம்.

மாபுராணம் ஒரு பாட்டியல் நூல் என்று முதல்முதலாக இவ்வுரையினால்தான் அறிகிறோம். சிலப்பதிகார ஏடொன்றி லிருந்து எடுத்து ஐயரவர்கள் பதிப்பித்த ஒரு நீண்ட ஆசிரியப்பா, முச்சங்க வரலாறும் கூறுமிடத்து, மாபுராணத்தைக் குறிப்பிடு கிறது. (பெருந்தொகை 1384) இது ஒரு சைன நூல் என்று ஐயரவர்கள் குறிப்பிட்டார்கள்; சைவ வட நூலாகிய மகா புரா ணத்தைக் கருதிப்போலும். ஆனால் இவ்வுரைகாரர் இங்கு இதன் சூத்திரங்கள் பலவற்றைத் தருவதோடு, மாபுராண முடையார் காட்டும் உதாரணங்கள் எனப் பல வெண்பாக் களையும் எடுத்துத் தருகிறார்.

---

* 9ஆம் நூற்றாண்டு வரலாறு பெருந்தேவனார் பாரதம் பார்க்க.

செயன்முறை, செயிற்றியம், அகத்தியம் என்ற மூன்று நூல்களையும் இவர் பல இடங்களில் சேர்த்தே கூறுகிறார். அகத்தியத்தை யொத்த பெருமையுடையனவே மற்ற இரண்டும் என்பது இவர் விரிவான கருத்து. செயிற்றியம் அடியார்க்கு நல்லராலும் எடுத்துக் காட்டப்பட்டது. இவை முத்தமிழும் கூறும் இலக்கண நூல் போலும்.

இவ்வுரைகாரர் ஒவ்வோர் ஓத்தின் இறுதியிலும் அவ்வோத்தில் சொல்லப்பட்ட பொருளைத் தொகுத்துரைக்கும் வெண்பாக்கள் ஒன்றிரண்டைக் காட்டுகிறார்; பின்வருவது தொடையோத்தின் இறுதியில் உள்ள வெண்பாக்களில் ஒன்று:

எழுத்து மொழிபொருளென் றெண்ணிய மூன்றின்
வழுக்கின் முறைமை வகையால் – இழுக்கில்
அடியோ டடியியைந்தும் அந்தரித்தும் வந்தால்
தொடை என்பர் தொன்னூ லவர்.

சூத்திரம் ஆறு வகை என்பர் - பெயர்ச் சூத்திரம், விதிச் சூத்திரம், விலக்கியற் சூத்திரம், நியமனச் சூத்திரம், அதிகாரச் சூத்திரம், ஞாபகச் சூத்திரம்; .... பரிபாடைச் சூத்திரம். என்பனவும் உள; சூத்திரித்து நடத்தலின் சூத்திரம் எனப்படும்; இது வடமொழித் திரிசொல்.

தொடையோத்துச் சூத்திரங்களின் உரையில், எதுகை, மோனை, அளபெடை, அந்தாதி முதலியவற்றுக்கு எடுத்துக் காட்டாகக் காட்டும் பாடல்கள் பெரும்பாலன இவ்வுரையாசிரியரே செய்தமைத்துக் கொண்டவை; இவை யாவும் தனிப் பாடல்களாய்ப் பாட்டுடைத்தலைவன் இல்லாது செய்யப் பெற்றவை. எல்லாப் பாடல்களும் அந்தந்த எடுத்துக் காட்டுக்குத் தக்க அளவே உள்ளன. வருக்க மோனைக்கு இவர் காட்டும் பாடலும் இங்குக் குறிப்பிடுவோம்:

பகலே,
பல்பூங் கானற் கிள்ளை ஒப்பியும்
பாசிலைக் குளவியொடு கூதளம் விரை இப்
பின்னுப் பிணியவிழ்ந்த நன்னெடுங் கூந்தல்
பீர்ங்கம் பெய்து தேம்படத் திருகிப்
புனையீ ரோதி செய் குறி நசைஇப்
பூந்தார் மார்ப, புனத்துள் தோன்றிப்

பெருவரை அடுக்கத்து ஒருவே லேந்திப்
பேயும் அறியா மாவழங்கு பெருங்காட்டுப்
பைங்கண் உழுவைப் படுபகை வெரீஇப்
பொருதுசினந் தணியாப் பூநுதல் ஒருத்தல்
போகது வழங்கும் ஆரிருள் நடுநாள்
பெளவத் தன்ன பாயிருள் நீத்தி இப்
பொழுது வருகுவை யாயின்
நன்றார் மார்ப, தீண்டல் எங்கதுப்பே.

*இவ்வாறு காட்டிய வெண்பாக்கள் ஆசிரியர் தாமே செய்தன வாகும். இப்படியே அடியோத்தின் இறுதியில் வழக்கம்போல் இவர் கூறும் வெண்பாக்களில் இரண்டு மிக்க சுவையுடையன; அடி என்பதன் இலக்கணம் உரைப்பன:*

எண்ணெழுத்திற் றிண்ணியராய் எஃகின் வலியராய்
நுண்ணுணர்விற் சேர்ந்த நுழைவினராய் – மண்மேல்
நடையறிந்து கட்டுரைக்கும் நாவினார்க் கல்லால்
அடியறியுந் தன்மை அரிது.

தடுத்த தளை யொன்றுந் தாம் பலவுங் கூடி
அடுத்து நடப்ப தடியாம் – வடுத்தீர்ந்த
பாத வடமொழியைப் பைதீர் தமிழ்ப்புலவர்
நாதரடி யென்றார் நமக்கு.

*நூற்குற்றத்தை வழு என்றும், அழகை மாண்பு என்றும் கூறுவார். வெண்பா - வன்பா; ஆசிரியம் - மென்பா; கலிப்பா - முரற்கை என்பார்; எழுத்து முதலியவற்றின் பெயர் காரணக்குறி என் பதை, இவர் விளக்கி ஒரு பாடல் தருகிறார்.*

எழுதப் படுதலின் எழுத்தே; அவ்வெழுத்து
அசைத்திசை கோடலின் அசையே; அசையியைந்து
சீர்கொள நிற்றலிற் சீரே; சீரிரண்டு
தட்டு நிற்றலில் தளையே; அத்தளை
அடுத்து நடத்தலின் அடியே; அடியிரண்டு
தொடுத்தல் முதலானயின தொடையே; அத்தொடை
தூக்கிற் றொடர்ந் திசைத்தலிற் றூக்கெனப் படுமே.

*என்றார் ஆசிரியர் எனக் கொள்க." இதனோடு கடைசி அடிக்கு முன் தொடை என்பதன் பின், "பாவி நடத்தலிற் பாவே; பாவொத்து" என்று ஓர் அடி அதிகமாய்ச் சேர்த்துச் சூத்திர*

மாக்கியது, பிற்கால நூலாகிய இலக்கண விளக்கம். மேலும், 'அத்தொடை, பாவி நடத்தலிற் பாவே; பாவொத்து, இனமா நடத்தலின் இன மெனப்படுமே' என்பது யாப்பருங்கலக்காரிகை உரை செய்த குணசாகரர் கொண்ட பாடம். விரித்தியுரைகாரர் வேறு, குணசாகரர் வேறு என்று தொடக்கத்தில் கூறிய கருத்துக்கு இப் பாட வேறுபாடும் ஆதரவு தருகிறது. முற்றுமோனை இங்கு ஒரு பாட்டின் ஓரடி மட்டுமன்று, பாட்டின் எல்லா அடிகளின் எல்லாச் சீர்களிலும் பொருந்தி வருவது:

அணியிழை அமைத்தோள் அம்பசப்பு அடைய
அரிமதர் அலர்க்கண் அரும்பணி அரும்ப
அரும்பொருட்கு அகன்ற அறவோர்
அருளிலார் அற்பின் அழியுமென் அறிவே.

இங்ஙனமே முற்றெதுகைக்கும் ஒரு பாடல் தருகிறார்: இங்கு, பாட்டின் எல்லாச் சீர்களும் ஒரே எதுகைத் தொடையில் அமைந் திருப்பது காணத்தக்கது.

கல்லிவர் முல்லையும் மெல்லியலார் பல்லரும்பும்
புல்லார்ந்து கொல்லேறு நல்லானைப் – புல்லின
பல்கதிரோன் எல்லைக்கட் சொல்லுமாறு இல்லைகொல்
சொல்லியார் சொல்லிய சொல்.

தொல்காப்பியத்தின் பின் யாப்பருங்கலத்துக்கு முந்திய காலம் வரையில், பெரு நூல்கள் செய்த பேராசிரியர்கள் நீங்க லாக ஏனையோர் செய்த பாடல்கள் பலவும் பல வகையான யாப்பமைதிகளுள் அடங்கியிருந்தன என்றும், பல பாடல்கள் யாப்பமைதிக்குப் பொருந்தாமல் இருந்தன என்றும், இவர் மிகவும் முயன்று பல பாடல்களை யாப்பிலக்கணத்துக்குப் பொருத்திக் காட்டச் செய்யும் முயற்சியால் நன்கு விளங்கு கிறது. ஆனால், இவ்வாறு இவர் கருதுகின்ற பாடல்களும் நூல் களும் பிற்காலத்தில் வழக்கிழந்தன. இவர் காலத்தில் அவை இருந்தன போலும். "இவ்வோசை விகற்பமெல்லாம் வல்லார் வாய்க் கேட்பினல்லது காட்டலாகா என்றறிக" வல்லார் வாய்க் கேட்டுணர்க என்பன போன்ற கூற்றுக்களைக் காண்க.

யாப்பிலக்கணத்தில் பிற்கால வாய்பாடுகள் தேமா, புளி விளம் காய் கனி என்ற அசைகளைக் கொண்டன; ஆனால் யாப்பருங்கல உரையுள் மா, புலி, பாம்பு, களிறு, வாய், சுரம்,

காடு, கடறு என்பன முதலாக இருப்பதைக் காணலாம். இதனால் யாப்பருங்கல விருத்தி குறிப்பிடும் ஒரு பண்டைய மரபு வழக்கு வீழ்ந்து, புது மரபு ஏற்பட்டதென்று கருதவேண்டியிருக்கிறது.

இவ்வுரைக்கு முன், பாட்டியல் நூலோ, பொருத்தப் பாட்டியலோ எழாவிடினும் பிங்கல நிகண்டு இவற்றை விரிவாய்க் கூறுகிறது. இவர் ஒழிபியலுள் பொருத்தங்களைக் குறிப்பிடுகிறார். காக்கைபாடினியார், பாட்டியலுடையார், யாப்பியலுடையார் என்போரைக் குறிப்பிட்டபின் எழுதுகிறார்:

“இவற்றுக்கு நிறமும், திணையும், பூவும், சாந்தும், புகையும், பண்ணும், திறனும், இருதுவும், திங்களும், நாளும், பக்கமும், கிழமையும், கோளும், இராசியும், தெய்வமும், திசையும், மந்திரமும், மண்டலமும், பொறியும், எழுத்தும் முதலாகிய பண்பும் அறிந்து ஆராதிப்ப, அவை யாவர்க்கும் கல்வியும் புலமையும் ஆக்கி நன்மை பயக்கும். இவையெல்லாம் திணை நூலுள்ளும் பிறவற்றுள்ளும் கண்டு கொள்க”. இதனால் பொருத்தப் பாட்டியல் திணை நூல் என்று வழங்கியிருக்கக் கூடுமென்று அறிகிறோம். இப்பகுதி பின்காலத்தில் பாட்டியலுள் ஒரு பகுதியாகி விட்டது.

கவி, கமகன், வாதி, வாக்கி என்ற நால்வரது தன்மையும் ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் என்ற நால்வகைக் கவித் தன்மையும் இவர் விளக்கியிருப்பது சிறப்பு.

“எழுத்து நால்வகை - உருவெழுத்து, உணர்வெழுத்து ஒலியெழுத்து, தன்மையெழுத்து என; இவையன்றி, அ, கசட தபய முதலியவாய எழுத்தும், அசலவரஙய முதலிய இராசி எழுத்தும், கார்த்திகை முதலிய நாளெழுத்தும், தோப முதலிய நால்வகை எழுத்தும், சாதி முதலிய தன்மையெழுத்தும், உச்சாடனம் முதலிய உக்கிர எழுத்தும், சித்திரகாரூடம் முதலிய முத்திறவெழுத்தும், புத்தேள் முதலிய நாற்கதியெழுத்தும், தாது முதலிய ஒளியெழுத்தும், மாகமடையம் முதலிய சங்கேத எழுத்தும், பார்ப்பான் வழக்காகிய பதின்மூன்றெழுத்தும் என்று இத் தொடக்கத்துள்ளும், கட்டுரையெழுத்தும், வச்சிர் முதலிய வடிவெழுத்தும், மற்றும் பலவகையாற் காட்டப்பட்ட எல்லா எழுத்தும் வல்லார் வாய்க் கேட்க” என்ற பகுதி ஆராயத்தக்கது.

சொல் நான்கு வகை - பெயர், தொழில், இடை, உரி என என்று கூறி, பின் மார்க்கம் உத்தி தருக்கம் நடம் என்னும் பொருள்களை விரித்துக் கூறுகிறார். இந்நூலால் அறியப்படும்

வேறு இலக்கணச் செய்திகள்: அகத்தியனார் பாட்டியல் செய்தார். தொல்காப்பியர் பாட்டியல் செய்தார். நக்கீரனார் அடி நூல் என்ற பாட்டு இருந்தது. அவிநயனார் செய்த அவிநயத்துள் கணக்கியல் என்ற ஒரு பகுதி இருந்தது. நாலடி நாற்பது என்பது அவிநயத்தின் புறனடை என்பனவாகும். இலக்கணம் பற்றிய ஆராய்ச்சிகள் இவர் காலத்திலே நிரம்ப நடந்தன. தடை விடைகளும் கடாவிடைகளும் இவர் நூல்களுள் காண்கின்றன. இவர் கருத்துப்படி, யாப்பருங்கலம் ஒரு சார்பு நூல்; கையனார், பல்காயனார், தொல்காப்பியனார் ஆகியோர் நூல்கள் முதல் வழி நூல்கள் போலும். காக்கைபாடினியார் நக்கீரனார் அடி நூல் தொல்காப்பியம் என்ற பெயர்களை இவரே பாட்டினுள் அமைத்துக் கூறுகிறார்.

நூல் இறுதி, ஒழிபியலின் கடைசிச் சூத்திரமாகச் சித்திரக் கவிமாலை என்ற தலைப்பில் 29 அடிகள் உடைய ஒரு நூற்பா தரப்பட்டுள்ளது. இங்கு மாலை மாற்றுத் தொடங்கி மிகப் பலவான சித்திரக்கவியின் இலக்கணம் சொல்லப்பட்டுள்ளது. சித்திரக்கவிகளுள், மாலைமாற்று, சக்கரக்கவிகள், எழுகூற்றிருக்கை, காதை கரப்பு, கரந்துறை பாட்டு முதலாயின மிகவும் சிறப்புடையவை. மிகப்பலவான சக்கரக் கவிகளைக் கூறுகிறார். இங்கு காட்டப்பட்டுள்ள பாடல்கள் பல்வேறு ஆசிரியர் செய்தவை போலும். சமுத்தி என்ற பெயர் சொல்லாமல் வாசங் கொளல், வாவனாற்றி, பாவின் புணர்ப்பு முதலான வகைகள் வகுக்கப்பட்டுள்ளன. இவையும் சித்திரக்கா விசித்திரக்கா முதலாயின பலவும் பிற்கால இலக்கியங்களில் பெயர்தானும் காண்பதற்கு இல்லை.

இவற்றின் பின்னர் நால்வகைக் கவிகள் என்ற கருத்து விளக்கப்பட்டுள்ளது. அடுத்து அவையின் அமைதி, பாடல் மரபு, தாரணை, ஆனந்தக்குற்றம் முதலியன. செய்யுள் வகை, இசை வகை, எண், திணை, இருது, காலம், எண்வகை மணம், எழுத்து, சொல், மார்க்கம், ஆடல் உத்தி, தருக்கம் என்ற பொருள்களை உரையாசிரியர் விவரிக்கிறார். இவற்றுள் சில முந்தைய ஆசிரியர் கருத்தைத் தழுவி உரைத்திருப்பினும் கூட, சில பகுதிகள் புதியன. அவையின் இலக்கணம் கூறியது மிகச் சிறப்பான பொருள். இங்கு, நல்லவை, தீயவை, குறையவை, நிறையவை, தொலைவு என்ற ஐந்து கருத்துக்களைக் குறிப்பிட்டு, அவற்றிற்கான மேற்கோள் செய்யுளையும் தருகிறார். அவை பின்வருவன:

அவையெனப் படுபவை அரில்தபத் தெரியின்
நல்லவை தீயவை குறையவை நிறையவை எனச்
சொல்லுப வென்ப தொல்லை யோரே.

*என்பவாகலின் அவற்றுள்,*

நல்லவை யென்பது நாடுங் காலை,
எத்துறை யானும் இருவரும் இயம்பும்
அத்துறை வல்லோர் அறனொடு புணர்ந்தோர்,
மெய்ப்பொருள் கண்டோர், மிக்கவை ஓர்வோர்,
கற்றவர், கல்விக் கடாவிடை யறிவோர்,
செற்றமும் சினமும் சேரா மனத்தோர்,
முனிவொன் றில்லோர், மூர்க்க ரல்லோர்,
இனிய முகத்தோர், இருந்துரை கேட்போர்,
வேந்த னொருவற்குப் பாங்கு படினும்
தாந்தா மொருவர்கட் பாங்கு படாதோர்,
அன்னோர் முன்னர்க் கூறிய பொழுதிற்
றொலையு மாயினும் தொலைவெனப் படாது,
வெல்லு மாயினும் மிகச் சிறப் புடைத்தே.

தீயவை யென்பது தெரியுங் காலை,
சுலாவுஞ் சுண்டுந் தாமேற் கொண்டு,
நிலாவாப் பொருள்களைக் குலவி யெடுத்தாங்கு,
உரைத்த ஒருவற்காய்ச் செருவென மொழிந்து,
சொல்லியது உணராது அல்லவை யுணர்ந்து
வாரம் படுவது தீயவை யாகும்.

நிறையவை யென்பது நினையுங் காலை,
எல்லாப் பொருளும் தன்னகத் தடக்கி
எதிர்வரு மொழிகளை எடுத்துரைப் பதுவே.
குறையவை யென்பது கூறுங் காலை,
நிறைவில் சொல்லே நினைந்தவை யெடுப்ப
வரையும் என்ப ஆணையி னிகந்தே.

தொலைவெனப் படுபவை சொல்லுங்காலை,
கூறியது கூறல், மாறு கொளக் கூறல்,
பொருளல கூறல், மயங்கக் கூறல்,
கேட்போர்க் கின்னா யாப்பிற் றாகிப்
பழித்த மொழியான் இழித்துக் கூறல்,

தன்னா னொருபொருள் கருதிக் கூறல்,
இன்னா வகையின் மனங்கோளின்மை,
அன்னவை பிறவும் அவற்றினெறி யாகும்.*

இங்கு நல்லவை தீயவை நிறையவை குறையவை தொலைவு எனச் சொல்லப்பட்ட இலக்கணங்களை நவநீதப் பாட்டியல் (14 நூ.) 88, 90, 89, 91, 94 - 95 கலித்துறைகள் கூறுவதும் அறியத் தக்கது.

நூல் இறுதியில் ஒழிபியலில் இவ்வாசிரியர் எண்ணற்ற இலக்கண இலக்கியப் பொருள்களைத் தொகுத்துச் சொல்லு கிறார். இவை யாவும் இறுதிச் சூத்திரமாகிய மாலை மாற்றே சக்கரம் சுழிகுளம் என்பதன் விளக்கமாகும். இப்பாடலின் 24ஆம் அடி எண்வகை மணம் என்று சொல்லுகிறது. இவ்வுரை யாசிரியர் எண்வகை மணத்தையும் விளக்குகின்றார். எண்வகை மணம் ஆவன: பிரம மணம், விதி மணம், ஆரிட மணம், தெய்வ மணம், அசுர மணம், இராக்கத மணம், பைசாச மணம், கந்தருவ மணம் என்றுரைத்து, எட்டு வெண்பாக்களால் இவற்றின் இலக்கணம் கூறுகிறார்: தொல்காப்பியர் பொருளதிகாரத்துக் களவியல், இறையனார் களவியல் முதல் சூத்திரம் மன்றல் எட்டு என்று குறிப்பிடுகின்றன. இதை இளம்பூரணர் விளக்க, அவர் விளக்கத்தை வைத்து வேண்டியபடி விரித்து, வேண்டிய மேற்கோள் வெண்பாவும் ஆசிரியப்பாவும் சேர்த்து, நச்சினார்க் கினியர் பெருக்கி உரைத்தார். ஆனால் இவ்விருத்தியுரைகாரர், இதே எட்டையும் சொன்ன போதிலும் கூட, இதே மரபில் வராமல் வேறு மேற்கோட் பாடல்களையும் வேறு சொற்களை யும் உபயோகிக்கிறார். இளம்பூரணரிலிருந்து நச்சினார்க்கினி யர் வரை கருத்துக்கள் சிறிது வளர்ந்து அல்லது விளக்கம் பெற் றிருக்கின்றன. பிரமமணம் கருத்து வேறுபாடு இல்லை.

ஒப்பாருக் கொப்பார் ஒருபூப் பிரிந்தபின்
இப்பால் மதி தோன்றா எல்லைக்கண் – அப்பால்
தருமமே போல்கென்று தக்கார்க்குச் சேர்த்தல்
பிரமமாம் போலும் பெயர்.

---

* இதனோடு பத்துக் குற்றம் கூறுகிற நன்னூற்பாயிரம் 14ஆம் சூத்திரத்தை ஒப்பு நோக்குக.

விதிமணம்

*பிறர் பிரசாபத்தியம் என்பர்: உரிய கோத்திரத்தார் பரியங் கொடுப்பர் என்று பிறர் கூறுவர்;*

கொடுத்த பொருள்வாங்கிக் கொண்டபேர் .....
மடுப்பர் மடுத்தற் கமைந்தால் – அடுப்போன்
இரண்டா மடங்குபெய்து ஈவ ததுவே
இரண்டாம் மணத்தின் இயல்பு.

கொடுப்பான் கொடுத்துழிக் கொண்ட பொழுது
மடுப்பாங் கடுத்தற் கமைந்தார் – மடுப்பா
னிரண்டா மடங்குபே தித்தலே மாய
னிரண்டா மணத்தி னியல்பு.

*ஆரிடம் என்பது ரிஷித் தொடர்பு.*

இற்குலத்தோடு ஒப்பானுக் கொடுப்பான் இமிலேறாப்
பொற்குளம்பில் பொற்கோட்ட ஆப்புனைந்து – முற்படுத்து
வாரிடம்பே ராமுலையை வாழ்க்கைக்கண் வைப்பதுரை
ஆரிடம் பேராம் அதற்கு.

இற்குரம்போ லொப்பவருக் கொப்பவ ரென்றோட்டாப்
பொற்குளம்பி னூடு புனலினிடை – முற்கொணர்ந்து
வாரொடுங்கு மென்முலையை வாழ்க்கைக் கமைப்பவரே
லாரிடம்பே ராகு மதற்கு.

*இங்கு பொற்குளம்பும் பொற்கோடும் உடைய ஆவைப் புனைந்து என்ற கருத்து நச்சினார்க்கினியர் காட்டும் பாடலில் இல்லை. ஆனால் அவர் சொல்லும் விளக்கத்தில், பொற்கோடு, பொற்குளம்பினவாகச் செய்து பொன்னணிந்து என்று எழுது கிறார். எனவே இவ்விருத்தியுரையைப் பார்த்தே அவர் இக் கருத்தைக் கொண்டார் என்பது பிழையாகாது.*

தெய்வமணம்

*வேள்விக் களத்துத் தீப்பாரித்துத் தீ முன்னர் வேள்வியா சிரியர்க்குக் கைக்கு நீர் பெய்து கொடுத்தல்.*

மெய்ப்பாலைப் பெண்தன்மை யெய்தியபின் மெல்லியலை
ஒப்ப வுணர்ந்த பொழுதுண்ட – லொப்பார்க்கு
நெய்தயங்கு தீ முன்னர் நேரிழையை ஈவதே
தெய்வப்பே ராகுந் தெரிந்து.

தெய்வந் தொழுது பெற்ற சேயிழையை யொப்புமையா
னெய்வந்த தீமுன்னா நேர்வதூஉங் – கைவந்த
வேள்வியகத்து வினையான் விழை பொருளா
யாள்வ தூஉந் தெய்வ மணமாம்.

இங்கு நம் உரைகாரர் வேள்வியாசிரியருக்கு என்று மட்டும் சொன்னார். ஆனால் இளம்பூரணர் "தெய்வமாவது வேள்விக்கு ஆசிரியராய் நின்றார் பலருள்ளும் ஒருவருக்கு வேள்வித் தீ முன்னர்க் கொடுப்பது" என்று எழுதுகிறார். இதைத் தழுவிய நச்சினார்க்கினியரும் "பெரு வேள்வி வேட்பிக்கின்றார் பலருள்ளும் ஒத்த ஒருவருக்கு அவ்வேள்வித் தீ முன்னர்த் தக்கணையாகக் கொடுப்பது." இவை ஓர் உண்மையைத் தெளிவு படுத்துகின்றன. விருத்திகாரர் வேள்வி ஆசிரியர் என்று பொதுப் படச் சொன்ன கருத்தை முதலில் இளம்பூரணர் 'ஆசிரியராய் நின்றார் பலருள்ளும் ஒருவருக்கு' என்று சிறப்பித்துச் சொன்னார். ஆதலால் முதலில் விருத்திகாரர் உரை எழுத, அதை ஒட்டி மிக நெருங்கிய காலத்தில் பின் வந்த இளம்பூரணர் சிறப்பாகக் குறிப்பிட்டார் என்று தெரிந்து கொள்ள முடிகிறது.

அசுரமணம்

வேறுபாடு இல்லை.

வில்லேற்றல் வேள்வியைக் காத்தல் மிகுவலிக்
கொல்லேற்று இயல்குழையைக் கோடல்என்று – எல்லாம்
அரியன செய்து எய்தின னாயின் அசுரம்
அரியவாம் அந்த மணம்.

வில்லேற்றல் வேழமட றன்மெய் மதவலியாற்
கொல்லேற்றை நண்ணியே கொள்ளுதல் பொன் – னல்லாட்
கரியன வீத லசர மசுர
ராயன வாற்று மணம்.

இராக்கதமணம்

ஆடைமேலிடுதல் பூமேலிடுதல் கதவடைத்தல் முதலிய வற்றால் வலிதிற் கோடல்.

பூந்துகிலோ டின்னனவும் மேலிட்டும் கதவடைத்தும்
பாய்ந்து கதந்தா அய்ப் பற்றிக்கொண் – டேந்திழையை
எய்தப் படுவ திராக்கதம் என்பதே
மைதீர்ந்தார் சொல்லும் மணம்.

ஆனால் இக்கருத்து இதே விதமாக இளம்பூரணரால் சொல்லப்படவில்லை; 'தலைமகள் தன்னிலும் தமரினும் பெறாது வலிதிற் கொள்வது' என்று மட்டும் சொன்னார்; நச்சினார்க்கினியர் இதை அப்படியே எழுதிக் கொண்டார்; மற்றபடி விருத்தி உரைகாரர் தரும் விளக்கம் இவர்களிடத்தில் காணப்படவில்லை.

### பைசாச மணம்

துஞ்சினாரோடும், மயங்கினாரோடும் சரித்தாரோடும் செத்தாரோடும்*, விலங்கினோடும், இழிதகு மரபில் யாருமில்லா வொரு சிறைக்கண் புணர்ந்து ஒழுகும் ஒழுக்கம்.

துஞ்சல் களித்தல் மயங்குதல் மாழாத்தல்
அஞ்சல் அறிவழித லாதலென் – றெஞ்சினவும்
இன்ன திறத்தா னிழித்தக எய்துபவேற்
பின்னைப் பசாசமணப் பேர்.

மஞ்சிற் களித்தல் மயங்குதல் மாழாத்த
லஞ்சல் அறிவிழத்தல் சாவுதலிற் – றுஞ்சின
பின்னை மறத்தால் விழைந்தகடு செய்வதே
பின்னைப் பிசாச மணம்.

இளம்பூரணர் இவ்வாறு சொல்லவில்லை; களித்தார் மாட்டும் துயின்றார் மாட்டும் கூடுதல் என்றார். இதை விரித்து நச்சினார்க்கினியர், 'மூத்தோர் களித்தோர் துயின்றோர் புணர்ச்சியும் இழிந்தோளை மணஞ்செய்தலும் ஆடைமாறுதலும் பிறவுமாம்' என்று எழுதுகிறார்.

### கந்தருவ மணம்

ஒத்த குலனும் குணனும் அழகும் அறிவும் பருவமும் உடையார் யாருமில் ஒரு சிறைக்கண் அன்பு மீதூரத் தாமே புணர்ந்து ஒழுகும் ஒழுக்கம் என்னை?

ஒத்த குலத்தார் தமியராய் ஒரிடத்துத்
தத்தமில் கண்டதம் அன்பினால் – உய்த்திட
அந்தர மின்றிப் புணர்வ ததுவரோ
கந்தருவ மென்ற கருத்து.

---

* 'ஏதில் பொருட் பெண்டிர் பொய்ம்மை முயக்கம் இருட்டறையில் ஏதில் பிணந் தழீஇயற்று' என்ற குறள் இங்கு நினைவு கூரத்தக்கது.

முன்னை வினையின் முறையாற் களவியலாற்
கன்னியைக் கண்டுடன் காதலித்துப் – பின்ன
ருளநிக ழார்வ முரைத்தொத் துறுதல்
வளமிகுகாந் தர்ப்ப மணம்.

இது விருத்திகாரர் விளக்கம்; ஆனால் இளம்பூரணர் உரை, ஒத்த இருவர் தாமே கூடும் கூட்டம் என்று மட்டும் சொல்லும். நச்சினார்க்கினியர்,' 'கந்தருவ குமரரும் கன்னியரும் தம்முள் எதிர்ப்பட்டுக் கண்டு இயைந்தது போலத் தலைவனும் தலைவியும் எதிர்ப்பட்டுப் புணர்வது' என்று மட்டும் சொல்லி மேற்கோள் வெண்பாவும் காட்டினார். இவ்விருவர் உரையுள்ளும், விருத்திகாரர் குறிப்பிடும் 'அன்புமீதூர' என்ற கருத்துக் காணப்படவில்லை. எனவே, இவ்விடத்து ஏனையோரை விட விருத்திகாரர் அகன் ஐந்திணையின் கூட்டமாகிய யாழோர் கூட்டம் என்னும் இக்கந்தருவ மணத்தின் உயிர் நாடியான அன்பு என்பதை உணர்ந்து உரை வகுக்கிறார் என்பது நன்கு புலப்படும். இதுவும் இவர் இளம்பூரணருக்கு முற்பட்டவர் என்று கொள்வதற்குத் தக்க சான்றாகும்.

மேலும், கடைசி வெண்பாவை யடுத்து விருத்திகாரர் அவிநயனார் பாடலொன்றைக் கந்தருவ மணக் கருத்துக்கு மேற்கோளாகத் தருகிறார்:

முற்செய் வினையது முறையா உண்மையின்
ஒத்த இருவரும் உள்ளகம் நெகிழ்ந்து
காட்சி ஐயம் தெரிதல் தேற்றலென
நான்கிறந் தவட்கு நாணும் மடனும்
அச்சம் பயிர்ப்பும் அவற்கும்
உயிர்த்தகத் தடக்கிய
அறிவும் நிறைவும் ஓர்ப்பும் தேற்றமும்
மறைய வவர்க்கு மாண்டதோர் இடத்தின்
மெய்யுறு வகையு முள்ளல்ல துடம் புறப்படாத்
தமிழியல் வழக்க மெனத்
தன்னன்பு மிகை பெருகிய
களவெனப் படுவது கந்தருவ மணமே.

இப்பாடலில் கருதத்தக்கன, முற்செய் வினையது முறையா உண்மையின் என்பதும், தமிழியல் வழக்கமெனத் தன்னன்பு

மிகை பெருகிய களவு என்பதுமாகும். இறையனார் களவிய லுரையில் வரும் 'நல்வினைப் பயத்தால்' என்ற தொடரும் இங்கு கருதத்தக்கது.

பத்தினிச் செய்யுள்

யாப்பருங்கல விருத்திகாரர் கூறும் இச்செய்யுள் பின்வருவது:

கண்டகம் பற்றிக் கடக மணி துளங்க
ஒண்செங் குருதியி லோஒ கிடந்ததே – கெண்டிக்
கெழுதகைமை யில்லேன் கிடந்துடப் பன்னாள்
அழுத கண்ணீர் துடைத்த கை.

பத்தினி என்பது பத்தினியாகிய கண்ணகி என்றும் இச் செய்யுள் ஒருகால் கண்ணகி வரலாற்றைக் கூறும் பிறிதொரு நாடகக் காப்பியத்திலிருந்து எடுக்கப்பட்டதாகும் என்றும் எண்ண இடந்தருகிறது.

வெண்டுறைப் பாட்டை விளக்குமிடத்து, இது பதினோ ராடலுக்குமேற்ற பாட்டு, பதினொன்றுக்கும் உறுப்பு 53, இவற்றின் தன்மையைச் செயிற்றியமும் சந்தமும் பொய்கையார் நூலும் உரைக்கும் என்று சொல்லி, பதினோராடலும் ஆட் டினார் யார் என்று பதினொரு குறட்பாக்களைத் தருகிறார். இவ்வுறுப்புக்களின் தொகையைச் சிலப்பதிகார உரையில் அடியார்க்கு நல்லாரும் குறிப்பிட்டுக் குறள் மேற்கோள் பாடல் களையே தருகிறார்; பாடல்கள் சில பாடபேதமாகவும் சில வேறாகவும் காணப்படுகின்றன.

இரு குறளை நடுவில் தனிச்சீர் பெய்து, ஒரே விகற்ப நேரிசை வெண்பாவாகவும் பல விகற்ப நேரிசை வெண்பாவாகவும் ஆக்கலாம் என்று காட்டுகிறார்:

படைகுடி கூழமைச்சு நட்பர ணாறும்
உடையா னரசரு ளேறு – (திடமா)
அஞ்சாமை ஈகை அறிவூக்கம் இந்நான்கும்
எஞ்சாமை வேந்தர்க்கு இயல்பு.

மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழின்
அறஞ்சூழும் சூழ்ந்தவன் கேடு – சிறந்தீர்
துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்
திறந்தாரை யெண்ணிக் கொண் டற்று.

எய்தற் கரிய வியன்றக்கால் அந்நிலையே
செய்தற் கரிய செயலென்று – வையகத்து
ஈதலிசைபட வாழ்தல் அதுவல்லது
ஊதிய மில்லை உயிர்க்கு.

என்ற எடுத்துக் காட்டுக்கள் காண்க.

வேற்று மொழிகளைச் செய்யுளில் வழங்குவதற்கு இவர் ஓர் அமைதி காட்டுகிறார்: 'பாவினங்களுட் சமக்கிரதமும், வேற்றுப் பாடையும் விரவி வந்தால், அவற்றையு மலகிட்டுப் பாச்சார்த்தி வழங்கப்படும். அவை குறு வேட்டுவச் செய்யுளும், லோக விலாசனியும், பெருவள நல்லூர்ப் பாசண்டமும் முதலாக வுடையன எனக்கொள்க.'

செந்தமிழ்ச் செய்யுட் டெரிந்துணர்ந்து செந்தமிழ்க்கண்
வந்த வடமொழியு மாற்றாதே – சந்தம்
வழுவாமற் கொண்டியற்று மாண்பினார்க் குண்டோ
தழுவாமை நிற்குந் தமிழ்.

## சொல்லும் பொருளும்

இவர் எழுதிய சில சொற்பொருள்கள் சுவையுடையன. அம்போதரங்கம் - அம்புத் தரங்கம்; அழகிற்றாய் ஒழுகித் தரங்கப்பட்ட உறுப்பிற்றாகலானும், உயர்ந்தெழுந்து ஒரு காலைக் கொருகால் கலி சார்ந்து சுருங்கித் தரங்கப்பட்ட நீர்த் திரை போலும் உறுப்புக்களையுடைத் தாகலானும், அம்போ தரங்க ஒத்தாழிசைப்பா என்பதும் காரணக் குறி. அம்போத ரங்கம் என்பது நீர்த்திரையைச் சொல்லுமோ எனின் சொல்லும்; அம்புத் தரங்கம் என்னும் வடமொழியை அம்போதரங்கம் என்று திரித்துச் சொன்னாராதலின்". சிறப்பில்லாததனை ஒரு சாரார் கொச்சை என்றும் கொச்சகம் என்றும் வழங்குவர் என்கிறார். இரு நூற்றாண்டுகள் கழித்துப் பேராசிரியர் இது பற்றிச் சொல்லும் கருத்து வேறு. "கொச்சகம் ஒப்பினாகிய பெயர்; பல கோடுபட அடுக்கி யுடுக்கும் உடையினைக் கொச்சக மென்ப; அதுபோலச் சிறியவும் பெரியவும் விராயடுக்கியும் தம்முளொப்ப அடுக்கியும் செய்யப்படும் பாட்டுக்களைக் கொச்சக மென்றானாகலின்" என்பது காண்க.

சுரிதகம் - ஓரிடத்தோடாநின்ற நீர், குழியானும் திடரானுஞ் சார்ந்த விடத்துச் சரிந்தோடு மதனைச் சுரிந் தென்றும் சுழியென் றும் வழங்குவதுபோலத் தான் கலியோசை யான் வாரா நின்றது

வெள்ளையானும் ஆசிரியமானுமாய்த் தக்கதொரு பொருளை யுட்கொண்டு நிற்றலாற் சுரிதக மென்பதூஉங் காரணக்குறி; இதற்கு ஒரு விளக்கச் சூத்திரமும் குறிப்பிட்டுள்ளார்.

“அறம், பொருள், இன்பம், வீடு என இவற்றைப் பாவி நடத்தலின் பா; வெண்பா - வேற்று வண்ணம் விரவாது தூய்மை பெற்ற வெள்ளை வண்ணம் எல்லா வண்ணத்துள்ளும் சிறப் புடைத்து. அவ்வாறே வேற்றுத்தளையும் அடியும் விரவாது தூய்மை பெற்று எல்லாப் பவினுள்ளுஞ் சிறப்புடைத்தாதலின் வெள்ளை யென்பது காரணக்குறி. திருவே போலச் சிறப்புடை யானைத் திரு வென்றாற்போலக் கொள்க. ஆசிரியப்பா - சீரி னானும் பொருளினானும் ஓசையினானுமாகிய நுண்மையைத் தன்கண் நிறுவிற்றாகலானும், புறநிலை வாழ்த்து முதலாகிய பொருள்களை ஆசிரியனே போலக் கிளக்கு மாற்றலானும், ஆசிரிய மென்பது காரணக் குறி. ஆசு - சிறிது, நுண்ணிது எனினு மொக்கும். கலிப்பா - சீர் பொரு ளிசைகளா லெழுச்சியும், பொலிவும், கடுப்பும் உடைத்தாகலின் கலியென்பதுங் காரணக் குறி. வஞ்சிப்பா - குறளுஞ் சிந்தும் அல்லாத அடிகளையெல்லாம் வஞ்சித்து வருதலானும், வாயுறை, புறநிலை, அவையடக்கியல், செவியறிறூஉ என்றிப் பொருள்களை வஞ்சித்து வருதலானும், வஞ்சிக்கொடி போல் நேர்ந்து நிற்றலானும், வஞ்சியென்னுந் திறமே போல வனப்பும் ஏர்பு முடைமையானும் வஞ்சியென்பது காரணக்குறி.

பண்பறி புலவர் - புலத்துறை முற்றிய பொய்தீர் புலவர்.

**உரையாசிரியர் காலம்**

அமிதசாகரர் காலம் கி.பி. 1000 - 1014 ஆகும் என்று தொடக்கத்தில் குறிப்பிட்டோம். ஆதலால், அவர் மாணாக்க ராக இருந்து அவர் நூலுக்கு உரை எழுதிய உரைகாரர் காலம் இதையடுத்த காலம் என்று கருதுவது முறையாகும். அதாவது; அமிதசாகரர் காலம் 11ஆம் நூற்றாண்டின் முதல் கால் பகுதி என்றால் முன்னே குறிப்பிட்டபடி அடுத்த கால் பகுதியாகிய 1015-1040 இவ்வுரையாசிரியர் வாழ்ந்து உரைசெய்த காலமாகும்.

வேறொரு வகையிலும் இக்காலத்தை வரையறை செய்து கொள்ள முடிகிறது. நால்வகைக் கவியாகிய கவியே, கமகன், வாதி, வாக்கி என்போர் தன்மையை ஒழிபியலில் சித்திரக் கவி உரைக்கும் சூத்திரத்தின் உதவியால் விளக்கி எழுதுகிறார். இந்

நால்வருள், கவி என்பார் நான்கு வகைப்படுவர் - ஆசு, மதுரம், சித்திரம், வித்தரம் என. இவ்வடமொழிப் பெயர்களை இவ் வாசிரியர் கடுங்கவி, இன்கவி, அருங்கவி, பெருங்கவி என்று அழகாகத் தமிழில் சொல்லுவது மிகவும் சுவை பொருந்தியிருக் கிறது. இந்த நால்வருள்ளும், வித்தார கவியாவான் மும்மணிக் கோவையும், பன்மணிமாலையும், மறமும், கலிவெண்பாவும், மடலூர்ச்சியும் முதலாகிய நெடும்பாட்டும் கோவையும், பாசண்டமும், கூத்தும், விருத்தமும், கதை முதலாகிய செய்யுளும், இயலிசை நாடகங்களோடுங் கலை நூல்களோடும் பொருந்தப் பாடும் பெருங்கவி எனக் கொள்க. இங்கு இவர் குறிப்பிடுகின்ற நூல்கள் சிறிது ஆராய்ச்சிக்கு உரியன. மும்மணிக்கோவை - பதினொராம் பிரபந்தங்களுள் சில. பன்மணிமாலை இருப்ப தாகத் தெரியவில்லை. கலிவெண்பா பதினொராம் திருமுறையில் பல உள்ளன; உலாவும் இதனுள் அடங்கும். மடலூர்ச்சி - பெரிய திருமடல் சிறிய திருமடல். மறம் - பதினொராம் திருமுறையில் சில உள்ளன. கோவை - பாண்டிக் கோவை, திருக்கோவையார். பாசண்டம் - கிடைக்கவில்லை. கூத்து - விளக்கத்தார் கூத்து இருந்ததாகத் தெரிகிறது, நூல் இல்லை. விருத்தம் - அப்பர் திருமுறையில் உள்ள திருவிருத்தம், நம்மாழ்வார் பாடிய திரு விருத்தம், திருத்தக்க தேவர் பாடிய நரிவிருத்தம். இங்கு மூன்று சொல்லப்படினும், முதல் இரண்டும் கட்டளைக் கலித்துறை, ஆகவே யாப்பருங்கல விருத்தி கூறும் பெயர் இவற்றுக்குப் பொருந்தாது எனத் தோன்றுகிறது. திருத்தக்க தேவர் பாடிய தாகச் சொல்லும் நரி விருத்தமொன்றே இங்கு கருதத்தக்கது. இதனுள் அறு சீர் விருத்தமும் கலி விருத்தமும் காணப்படுகின் றன. (கதை - பெருங்கதை) இவை யாப்பருங்கல உரையாசிரி யருக்கு முன்னே இருந்த நூல்கள் பற்றிய விளக்கமாகும். பிற் காலத்தில் இவை பிரபந்தங்கள் எனப்பட்டன.

ஆசிரியர் எல்லா நூல்வகைகளையும் இங்கு கூறி விட்டார் என்று சொல்ல முடியாது. இருப்பினும், பரணி போன்ற சிறப்பான பிரபந்தம் அக்காலத்தில் இருந்திருந்தால் அவர் அதைக் கூறியிருப்பார். இன்று கிடைக்கின்ற பரணிகளுள் பழமையானது கலிங்கத்துப் பரணி. இது முதற் குலோத்துங்க சோழனுடைய கலிங்க வெற்றியைப் புகழ்வது. இதன் காலம் கி.பி. 1105. ஆனால் இதற்கு முன்பும் பல பரணிகள் இருந்தன என்று சாசன வாயிலாக அறிகிறோம். இவற்றுள் கொப்பத்துப் பரணி கூடல்சங்கமத்துப் பரணி என்ற இரண்டை இந்நூலில்

இறுதியில் உள்ள பிரபந்த இலக்கியம் என்ற அத்தியாயத்தில் விளக்கமாகக் கூறியுள்ளோம். இந்நூல்கள் கிடைக்காவிட்டாலுங் கூட, நூல்கள் தோன்றியிருந்தமை உண்மையே. இவற்றுள் காலத்தால் முதலாவது, கொப்பத்துப் பரணி. இந்நூல் கங்கை கொண்ட சோழனுடைய இரண்டாம் புதல்வனாகிய இராசேந் திர சோழன் (1051 - 1063) கொப்பம் என்ற இடத்தில் மேலைச் சாளுக்கிய வேந்தனான ஆகவ மல்லனுடன் போர் நிகழ்த்திப் பெற்ற வெற்றியைக் குறிப்பதாகும். கொப்பம் என்பது தெலுங்கு நாட்டில் கிருஷ்ணா நதிக் கரையில் உள்ள ஊர். சோழ மன்னனான முதலாம் இராசாதி இராசன் போர்க்களத்தில் உயிர் துறக்கவே, அவன் தம்பியாகிய இவ்விராசேந்திரன் போர்க்களத்திலேயே தலைமையேற்றுத் தொடர்ந்து வெற்றிபெற்றான். இப்போர் நடந்த ஆண்டு 1054. இவ்வாறு போர் வென்ற இராசேந்திரன் மீது ஓர் பரணிப் பிரபந்தம் பாடப்பட்ட செய்தியை ஒட்டக் கூத்தர் இராசராசன் உலாவில் (கண்ணி 25) கூறுகிறார்:

**– கொலையானை**
**பப்பத் தொரு பசிப்பேய் பற்ற ஒரு பரணி**
**கொப்பத் தொரு களிற்றாற் கொண்டோனும்.**

இப்பரணியானது இக்காலத்தில் இல்லாது போயினும், கூத்தர் காலத்தில் இருந்தது போலும். இந்நூல் யாப்பருங்கல உரையாசிரியர் காலத்தில் இருந்ததாயின், வித்தார கவி பாடுவதற் குரிய நூல்களாக மும்மணிக்கோவை போன்ற சிறு பிரபந்தங் களைக் கூறுகின்ற இவர் இதைக் கூறாது விடமாட்டார். மேலும், இவர் காலம் சோழர் சிறப்பாக ஆண்ட காலம். அமிதசாகரரும் உரை செய்த மாணாக்கரும் சோழ நாட்டிலேயே வாழ்ந்தவர் கள். இவர் எண்ணற்ற செய்திகளையும் நூல்களையும் தெரிந்து குறிப்பிடுகிறார். ஆதலால் சோழ நாட்டில் தோன்றிய இந்தச் சிறப்பான இலக்கியத்தை உரையாசிரியர் அறியவில்லையானால், அவர் காலத்தில் நூல் தோன்றவில்லை என்றே கொள்ள வேண்டும். அதாவது, இவ்வுரையாசிரியர் காலம், நூல் குறிப் பிடும் போரின் காலமாகிய 1054க்கு முன் என்று நாம் கருத வேண்டும். பரணிநூல், போரைச் சிறப்பிப்பது ஆதலால் போரைத் தொடர்ந்தே எழுதப்பட்டிருக்கும் என்பது உறுதி. எவ்வகையாலும் இவர் காலம் 1054க்கு முற்பட்டது என்பதில் ஐயம் இருக்க முடியாது. எனவே இவ்வுரையாசிரியர் காலம் கி.பி. 1015 - 1040 என்ற கருத்து ஏற்புடையது.

(வையாபுரிப்பிள்ளை யாப்பருங்கல விருத்தியின் காலம் 1200 என்று எழுதியிருக்கிறார் (காவிய காலம் பக்கம் 214 "யாப் பருங்கல விருத்தியில் 'அமிர்தமதி' என்ற காவியம் குறிப்பிடப் பட்டுள்ளது. இக்காவியம் ஸோமதேவர் கி.பி. 951இல் இயற்றிய யஸஸ்திலக சம்புவின் வழி நூல் எனவே, சுமார் கி.பி. 1100இல் இயற்றப்பட்டிருக்கலாம். இதனை நோக்குமிடத்து யாப்பருங்கல விருத்தி 1200இல் இயற்றியதாகலாம் - எனத் தோன்றுகிறது." இது பொருந்தாது; யாப்பருங்கல விருத்தியில் குறிப்பிடப் பட்டது அமிர்தபதி. அமிர்தபதியும் அமிர்தமதியும் ஒன்றல்ல. அமிர்தமதியினுடைய வரலாறு தமிழில் யசோதர காவியம் என்ற நூலில் சொல்லப்பட்டுள்ளது. (எமது தமிழ் இலக்கிய வரலாறு பதின்மூன்றாம் நூற்றாண்டு காண்க) இதுவரையில் பல ஆதாரங்களைக் கொண்டு யாப்பருங்கல விருத்தியின் காலம் 11ஆம் நூற்றாண்டு என்று குறிப்பிட்டோம். அந்த முடிபு பிள்ளையவர்களுடைய குறிப்பினால் மாறுபடாது)

முடிவுரை

யாப்பருங்கலவுரையை மேலெழுந்தவாரியாக ஒருவர் பார்த்தாலுங்கூட, அவ்வுரை காட்டும் இறந்து போன தமிழ் வளத்தை எண்ணிச் சிறிது துயரம் அடையாமலிருக்க முடியாது. இவர் குறிப்பிட்டுச் சொல்லும் இலக்கணங்களும் மரபுகளும் செய்திகளும் பார்க்கின்ற அறிவுடையவர் எவரும், அன்றைய தமிழ் நூற்பரப்பையுணர்ந்து பிரமிப்படையாமல் இருக்க முடியாது. சில பெயர்களை இங்கே பாகுபடுத்திக் கூறுவோம். இவர் குறிப்பிடும் நூல்களுள் இன்று முழுமையும் அறியப்பட்ட நூல்கள் பின்வருவன: அகநானூறு, இறையனார் களவியல், உதயணன் கதை, ஐங்குறுநூறு, கலித்தொகை, குறுந்தொகை, சிந்தாமணி, சிலப்பதிகாரம், சூளாமணி, திருக்குறள், திரு மந்திரம், தொல்காப்பியம், நாலடி, நான்மணிக் கடிகை, நீலகேசி, பத்துப்பாட்டு (மதுரைக்காஞ்சி, முல்லைப்பாட்டு, பட்டினப் பாலை, மலைபடுகடாம்), பிங்கலம், புறநானூறு, புறப்பொருள் வெண்பாமாலை, முதுமொழிக் காஞ்சி, யாப்பருங்கலக் காரிகை. (இங்கு மணிமேகலை, நற்றிணை, பதிற்றுப்பத்து, பரிபாடல் என்ற நூல்கள் வரவில்லை) இனி முழுமையும் கிடைக்காமல் சில பாடல்களே அறியப் பெற்ற நூல்கள் பின்வருவன: குண்டல கேசி, முத்தொள்ளாயிரம், வளையாபதி என்பன. முழுமையும் கிடைக்காமல் பெயர் மட்டும் பிற நூல்களாலும் அறியப்படுவன

- இலக்கண நூல்கள்: அகத்தியம், நக்கீரர் அடி நூல், அணியியல், அவிநயம், அவிநயனார் கணக்கியல், காக்கை பாடினியம், சங்கயாப்பு, சிறுகாக்கை பாடினியம், செயிற்றியம், நற்றத்தம், நாலடி நாற்பதென்னும் அவிநயப் புறனடை, பல்காயம், பன்னிரு படலம், பாட்டியல், பாட்டியல் மரபு, பொய்கையார் நூல், மயேச்சுரர் யாப்பு, மாபிங்கலம், மாபுராணம், வாய்ப்பியம். இலக்கிய நூல்கள்: அமிர்தபதி, ஆதிநாதராய்ந்த நூல், இராமாயணம், கல்யாணக்கதை, காலகேசி, குணகாங்கி, அறிவுடை நம்பி செய்த சிந்தம், செயதேயம், தக்காணியம், தாரணை நூல், திணை நூல், நியமம், பன்மணிமாலை, பாரதம், பிங்கலகேசி, புராணசாகரம், மார்க்கண்டேயனார் காஞ்சி, லோகவிலாசினி, வாசுதேவனார்சிந்தம் என்பன. பன்னிருபடலத்துள் கைக்கிளை பெருந்திணை என இரு படலங்களைக் குறிப்பிடுகிறார். இராமாயணமும் புராணசாகரமும் பஃறொடை வெண்பாவாலானவை என்றும் கூறுகிறார்.

தலைவர் முதலியோர்: அச்சுதன் (களப்பிர அரசன் இளஞ் சாத்தன், அழிசி, கதக்கண்ணன், கரிகாலன், கண்டரகண்டன், கலிமன்னன், களந்தை வேந்தன், காடவர் கோன், காளிங்கன், காளிம்பன், குட்டுவன், குணபரன், கோசன், சங்கபாலன், செம்பூட் சேய், சேந்தன், திரையன், தொண்டையார்கோ, நந்தி, நயதீரன், நன்னன், பல்லவ மல்லன், பாரி, முத்தரையர், வரகுணன். ஊர் முதலியன: அம்பர், ஆமூர், உறையூர், கச்சி, கழுமலம், (கதிர்) காமம், காம்போசனாமூர், குடந்தை, கொல்லி, கொற்கை, கோட்டாறு, கோளூர், தலையாலங்கானம், தில்லை, தண் களந்தை, பழையனூர், பழையாறு, புகார், புத்தூர், பெருவல்லம், மதுரை, வஞ்சி.

இவ்வுரையாசிரியர் எடுத்துக் காட்டுகின்ற பாடல்கள் எல்லாமே சுவை நிரம்பிய பாடல்கள். அரசாட்சியின் தன்மை எப்படியிருக்க வேண்டும் என்பதைக் கூறும் ஒரு பாடல் மிக்க சிறப்புடையது:

திருக்கொண்டு பெருக்க மெய்திவீற் றிருந்து,
குற்றங் கெடுத்து, விசும்பு தைவரக்
கொற்றக் குடை யெடுப் பித்து, நிலம் நெளியப்
படை பரப்பி, ஆங்காங்குக் களிறு யாத்து,
நாடுவளம் பெருகக் கிளைகுடி யோம்பி,

நற்றாய் போல உற்றது பரிந்து
நுகத்துக்குப் பகலாணி போலவும்,
மக்கட்குக் கொப்பூழ் போலவும்
உலகத்துக்கு மந்தரமே போலவும்
நடுவு நின்று செங்கோ லோச்சி,
யாறில் வழி யாறு தோற்று வித்துக்
குளனில் வழிக் குளந்தொடு வித்து,
முயல் பாய் வழிக் கயல்பாயப் பண்ணியும்,
களிறு பிளிற்றும் வழி பெற்றம் பிளிற்றக் கண்டும்
களிறூர் பலகாற் சென்று தேன் தோயவும்,
தண்புனற் படைப்பைத் தாகியும்,
குழை கொண்டு கோழியெறிந்து,
இழை கொண்டு ஆன்தட்டும்
இலக்கங் கொண்டு செங்கால் நாரை எறிந்தும்,
உலக்கை கொண்டு வாளை யோச்சியும்
தங் குறை நீக்கியும், பிறர் குறை தீர்த்தும்,
நாடாள் வதே அரசாட்சி.

## *குணசாகரர்*

### *ஆசிரியர்*

*யாப்பருங்கலக் காரிகைக்கு உரை எழுதிய ஆசிரியர் குணசாகரர் என்பவர். இவர் நூலாசிரியரான அமிதசாகரரின் மாணாக்கர். ஆராய்ந்தோர் சிலர், இவரே அமிதசாகரரின் குருவான குணசாகரர் என்று கூறியுள்ளனர். இது பிழை. ஆசாரியர் எவரும் தம் மாணாக்கர் நூலுக்கு உரை எழுதிய மரபில்லை. இப்பொருள் முந்திய அத்தியாயத்தில் அமிதசாகரர் பற்றிக் கூறிய இடத்து விளக்கப்பட்டது. மேலும், இவ்வுரையினுள் உரையாசிரியர் கூறும் சொற்கள், எந்த ஆசிரியரும் தம் மாணாக்கரைக் குறித்துச் சொல்வனவாக மாட்டா; 'இந்நூல் ஆரியம் என்னும் பாரிரும் பௌவத்தைக் காரிகையாக்கித் தமிழ்ப்படுத்திய அருந்தவத்துப் பெருந்தன்மை அமிதசாகரர் என்னும் ஆசிரியராற் செய்யப்பட்டது' என்று கூறியிருப்பது காணத்தக்கது.*

*இனி, ஒரு நூலாசிரியர் தம் குருவின் பெயரைத் தம் மாணாக்கருக்கு இடுவது மரபு சமயத் துறையில் இதை எங்கும்*

காணலாம். திருக்கடவூரில் இருந்த ஆளுடைய நாயனார் என்பவர், தம் குருவான திருவியலூர் உய்யவந்தார் உபதேசித்த ஞானப் பொருளைத் தம் மாணாக்கருக்கு உணர்த்தியபோது, அவருக்குத் தம் குருவின் பெயரையே அமைத்தார்; அவரே திருக்களிற்றுப்படியார் என்ற சைவ சாத்திர நூல் செய்த திருக் கடவூர் உய்யவந்தார் என்பவர். இதுபோலவே, பரஞ்சோதி முனிவர் என்பவர் பூமியில் இறங்கி, சுவேத வனப்பெருமாள் என்ற குழந்தைக்குச் சிவஞானம் உபதேசித்த போது, தம் குரு வாகிய சத்தியஞான தரிசனிகள் பெயரின் தமிழ் வடிவமாகிய மெய்கண்டார் என்ற பெயரைத் தீட்சா நாமமாகச் சூட்டினார். இவற்றையொப்ப, சைனசமயத்தில் முனிவராயிருந்த அமிதசாக ரர் தம் மாணாக்கரொருவருக்குத் தம் குருவின் பெயரான குண சாகரர் என்பதைச் சூட்டினார் என்று கருத வேண்டும். இவர்கள் இலக்கணமும் உரையும் செய்தமையால், இவர்கள் பெயரை நாம் அறிகிறோமேயன்றி, இவர்களது சமயத்துறை வாழ்க்கை நமக்குச் சிறிதும் தெரியாது. தெரிந்தால் இப்பெயர் வரலாற்றை யும் நன்கு உணர்ந்திருப்போம். இப்போது, இவர் அமிதசாகரர் மாணாக்கராய், அவருடைய குருவாகிய குணக்கடற் பெயரோன் என்று சொல்லப்பட்ட குணசாகர பட்டாரகருடைய பெயரைத் தரித்திருந்தவர் என்று கருத வேண்டும்.

இவரைக் குறித்த பிற வரலாறுகள் புலப்படாவிட்டாலுங் கூட, செந்தமிழ் நாடாவது சோழநாடு என்று இவர் குறிப்பிடு வதால், இவர் சோழ நாட்டினர் என்று அறியலாம்.

'இயற்சொல் தானே இயம்புங் காலை
செந்தமிழ் நிலத்து வழக்கொடு சிவணித்
தம்பொருள் வழாமை இசைக்கும் சொல்லே.

என்றாராகலின். அவை நடக்கும் எல்லை யாவையோ எனின் வையையாற்றின் வடக்கும், மருதயாற்றின் தெற்கும், கருவூரின் கிழக்கும், மருவூரின் மேற்குமாகிய நான்கு எல்லைக்குட்பட்ட சோணாடு என்க. என்னை?

மன்ற வாணன் மலர்திரு வருளால்
தென்தமிழ் மகிமை சிவணிய செய்த
அடியவர் கூட்டமும் ஆதிச் சங்கமும்
படியின்மாப் பெருமை பரவுறு சோழனும்
சைவ மாதவரும் தழைத்தினி திருக்கும்
மையறு சோழ வளநா டென்ப.

என்றாராகலின்.' இவர் கருத்து, தமிழ்நாடு சோழநாடு ஆகும் என்பது; செந்தமிழ் நாடு பாண்டிநாடே என்று பலரும் சொல்லி யிருப்பதைக் கருத்தில் கொண்டு, சோழ நாடே செந்தமிழ் நாடு என்று இவர் நிறுவுவதனால் இவர் நாடு சோழநாடு என்பதும், தம் நாட்டிடம் இவர் மிக்க பற்றுடையவர் என்பதும் தெளி வாகின்றன. இப்பாடல் இவர் காலத்தில் ஆட்சி புரிந்திருந்த சோழமன்னர் பெற்றிருந்த சிறப்பையும் உணர்த்துகிறது. காலம் என்ற தலைப்பில் இதை மீண்டும் குறிப்பிடுவோம். இவர் வேறு எந்த நூல் எழுதியதாகவோ, உரை செய்ததாகவோ வரலாறு இல்லை. இவர் வரலாறுகள் பிற எவையும் தெரியவில்லை.

'யாப்பருங்கலத்திற்கு உரையியற்றியவர் இன்னாரென்று துணிவதற்குச் சான்று யாதும் இல்லை. ஒரு சில இடங்களில் "யாப்பருங்கல உரையுட் கண்டு கொள்க" எனக் காரிகையுரை (அடையாறு சாமிநாதையர் நூல் நிலையப் பதிப்பு: பக். 42, 67, 79, 90, 101, 105, 108, 115, 122, 124, 160, 195) கூறுதலால், முன்னைய உரையை இயற்றியவர் வேறோர் ஆசிரியர் ஆவார் என்றும் துணிதல் தகும். ஓரிடத்தில் "தொல்காப்பியத்துள்ளும், யாப் பருங்கல விருத்தியுள்ளும் கண்டுகொள்க" எனக் காணப்படு கின்றது. இதனால் தொல்காப்பியத்தோடு ஒத்த தகுதியும் பெருமையுமுடையதாக இவ்விருத்தி கருதப்பட்டுள்ளது தெளி வாம். தாமே எழுதிய விருத்தி ஆயின், காரிகை உரைகாரர் இங்ஙனம் கூறார். அன்றியும், மேற்சுட்டிய விருத்தியெனக் குறிப் பிடவே இல்லை. இக்காரணங்களால், இவ்விருத்தியின் ஆசிரி யரும் காரிகையின் உரைகாரரும் வேறு வேறாவர் என்றே துணியத் தக்கது' - வையாபுரிப்பிள்ளை, காவிய காலம், பக்கம் 214.

**காலம்**

குணசாகரர் அமிதசாகரருக்கு மாணாக்கராதலால், காலம் அவரையடுத்த காலம் என்பது தெளிவு. யாப்பருங்கல விருத்தி யுரை செய்தவரும் இவரும் ஒரே காலத்தினர் ஆவர். அவர் காலம் 1015 - 1040 என்று முன்னமே காட்டினோம்; இவர் காலமும் அதுவே, அல்லது சற்றுப் பிற்பட்டு, 1025 - 1050 என்று கருதலாம். இதற்கு ஆதரவாகக் கிடைக்கும் பல குறிப்புக்களையும் இங்கு கூறுவோம். புறப்பொருள் வெண்பாமாலைப் பாடலாகிய 'திருநுதல் வேர்வரும்பும் தேங்கோதை வாடும்' என்ற பாட லையும் நூற்பெயரையும் இவர் தருவதோடு, முதல் நினைப்புக் காரிகையிலும் இப்பாடலைக் குறிப்பிடுகிறார். இது மருட்பா

வுக்கு எடுத்துக் காட்டாக வரும் பாடல். இவ்வெண்பாமாலை செய்த ஐயனாரிதனார் காலம் பலர் பலவிதமாகச் சொல்லி யிருந்தும், 9ஆம் நூற்றாண்டென்பது பொருந்தத்தக்கது. எனவே, அந்நூலை எடுத்துக்காட்டும் குணசாகரர் சிறிது பிற்பட்டுப் பதினொராம் நூற்றாண்டில் வாழ்ந்தார் என்று சொல்வது கொள்ளத்தக்கது.

மற்றொரு பாட்டு, மேற்காட்டிய சோழநாட்டைக் குறித்த பாடல். இங்கு அடியவர் கூட்டம், ஆதிச்சங்கம், பெருமை மிக்க சோழன், சைவமாதவர் என்ற செய்திகள் சொல்லப்பட் டுள்ளன. இவை யாவும் பொருந்துகின்ற காலம், தஞ்சைப் பெருங்கோயில் கட்டியும், திருமுறைகளை வெளிப்படுத்தியும், சிறப்புற்றிருந்த முதலாம் இராசராச மன்னன் காலம். இச் சிறப்பை நம் உரைகாரர் நன்கு தெரிந்து குறிப்பிடுகிறார். அமித சாகரர் இவ்விராசராச மன்னன் காலம் என்று முன்னமே வரை யறை செய்தோம். அவர் நூலுக்கு உரைசெய்த இவ்வுரைகாரர் அவர் காலமாகிய இம்மன்னன் காலத்தையடுத்து வாழ்ந்தார் என்று கொள்வது பிழையாகாது.

**காரிகை உரை**

குணசாகரர் முதல் பாடலின் உரையில் நூற்பெயரைக் கூறுமிடத்துப் பின்வருமாறு எழுதுகிறார்: ‘இந்நூலென்ன பெயர்த்தோவெனின், பாளித்தியம் என்னும் பாகத இலக்கணமும் பிங்கலம் என்னும் சந்தோபிசிதமும் போலக் காரிகை யாப்பிற் றாய், குணகாங்கிய மென்னுங் கருநாடகச் சந்தமேபோல மகடூஉ முன்னிலைத்தாய் அவையடக்கமுமுடையதாய், மயேச்சுரர் யாப்பே போல உதாரணமெடுத்தோதி, இசைத்தமிழ்ச் செய் யுட்டுறைக் கோவையே போலவும் அருமறையகத்து அட்டக வோத்தின் வருக்கக் கோவையே போலவும், ஊருபாவதாரத்திற்கு நீதகச் சுலோகமே போலவும், முதனினைப் புணர்த்திய இலக் கியத்தாய், வேதத்திற்கும் நிருத்தமும், வியாகரணத்திற்குக் காரிகையும், அவிநயர் யாப்பிற்கு நாலடி நாற்பதும்போல யாப் பருங்கல மென்னும் யாப்பிற்கங்கமாய், அலங்கார முடைத் தாகச் செய்யப்பட்டமையால், யாப்பருங்கலக்காரிகையென் னும் பெயர்த்து. இப்பகுதியில் இவர் அரிய செய்திகள் பல கூறு கிறார். இந்நூல் யாப்பருங்கலத்துக்கு அங்கமாய் அலங்காரம் உடைத்தாகச் செய்யப்பட்டது என்றது சிறப்பு. அவிநயத்துக்கு அங்கமாய் அமைந்த நூல் நாலடி நாற்பது, மயேச்சுரர் யாப்பு

உதாரணம் எடுத்தோதியது, இசைத் தமிழ்ச் செய்யுள் துறைக் கோவை முதல் நினைப்பு உணர்த்தியது, வியாகரணத்திற்கு அங்கமானது காரிகை - முதலியன புதிய கருத்துக்கள். இந் நூல்கள் இப்போது கிடைக்கவில்லை. இந்நூலின் 47 காரிகை களில் 36 மகடூஉ முன்னிலையாக உள்ளமை இவர் குறிப்புக்குப் பொருத்தமாய் உள்ளது. முதல் நினைப்புக் காரிகை என்று கூறியதற்கேற்ப காரிகை ஆசிரியர் இயல் முடிவில் மட்டுமின்றி இடையிலும் முதல் நினைப்புக் காரிகை அமைத்திருக்கிறார்.

பெரும்பான்மையும் இவர் யாப்பருங்கல உரையில் வரும் மேற்கோள்களையே தருகிறார். அங்கு காணப்படும் ஆசிரியர் பெயர்களையே இவர் குறிப்பிடுகிறார். அகத்தியர், அவிநயனார், காக்கை பாடினியார், கையனார், சங்கயாப்புடையார், செய்யு ளியலுடையார், நத்தத்தனார், பல்காயனார், மயேச்சுரர் பாடல னார் என்ற பெயர்களைக் காணலாம். (ஒரு பதிப்பில் கலிதய னார் என்று சொல்லப்பட்ட பெயர் அவிநயனாரே ஆகும்) பின்னும் காமவேளைக் கடுத்த புத்தேள் நாமந்தாங்கிய நல்லா சிரியர் என்று குறிப்பிடுகிறார். வேறு இவர் காட்டும் நூல்கள் இடைக்காடனார் ஊசிமுறி*, நாலடி நாற்பது, பாவைப் பாட்டு, மார்க்கண்டேயனார் காஞ்சி, முத்தொள்ளாயிரம் என்பன. இதுவரை கூறியவை இறந்துபோன நூல்கள். இப்போது இருக்கும் நூல்களில்❖ இவர் குறிப்பிடுபவை பின்வருவன: தொல்காப்பியம், புறப்பொருள் வெண்பாமாலை; சூளாமணி, சிலப்பதிகாரம், சிந்தாமணி; குறுந்தொகை, கலித்தொகை, புறநானூறு ஐங்குறுநூறு, நற்றிணை; குறள், நாலடி, நான்மணி, முதுமொழிக்காஞ்சி, பட்டினப்பாலை, மலைபடுகடாம், கொன்றை வேந்தன், பாண்டிக்கோவை. இவர் அதிகமாகக் காட்டுபவை சூளாமணியும் திருக்குறளும்.

நூல்களையும் ஆசிரியர்களையும், முத்தொள்ளாயிரம் போன்ற சான்றோர் செய்யுள், பட்டினப் பாலை என்னும் வஞ்சி

---

* ஊசிமுறி என்றும் ஆசிரிய முறி என்றும் சிலர் கூறியிருப்பது பொருந் தாது, ஆசிய முறி என்பதே திருத்தமானது என்று மே.வீ. வேணு கோபாலப் பிள்ளையவர்கள் கூறியிருப்பது நல்ல கருத்து.

❖ ஒரு பதிப்பில் திருப்பாமாலை என்று மூன்று பாடல்கள் காட்டப் பட்டுள்ளன. அப்படி ஒரு நூல் இல்லை. பண்டைய இலக்கண இலக்கியம் உரைகளில் காணப்பட்ட அருக தோத்திரமான சில பாடல்களைச் சமீப காலத்தில் தொகுத்து அச்சிட்ட நூலே திருப்பா மாலையாகும்.

நெடும் பாட்டு, காக்கை பாடினியார் முதலாகிய தொல்லாசிரியர் என்று குறிப்பிடுகிறார்.

நூல் செய்த காரணம் சொல்லுகிறார்: "பண்டையோரு ரைத்த தண்டமிழ் யாப்பிற் கொண்டிலாத குறியினோரைக் குறிக்கொளுவுதல் காரணமாகவும், தொல்லைப் பனுவற்றுணி பொருளுணர்ந்த நல்லவையோரை நகுவிப்பது காரணமாகவும் செய்யப்பட்டது." இது ஓரளவு ஒப்புக் கொள்ள முடியாத காரண மாகத் தோன்றுகிறது. நகுவிப்பது என்றால் சிரிப்பிப்பது என்று பொருள். ஆசிரியர் தம்மைத் தாமே இவ்வாறு கூறுதல் அடக்கத் தால் வருவது. உரையாசிரியர் கூற்று இவ்வாறு வருவதற்கில்லை. நூலின் அவையடக்கப் பாடலில் 'யான் நூல் செய்வது எனக்கே நகை விளைக்கும்' என்று ஆசிரியர் சொல்லுவதும் காண்க.

குணசாகரர் அமிதசாகரருடைய மாணாக்கர் என்று குறிப்பிட்டோம். 'வேறு பொருள் கூறுவாரும் உளர்' என்று இரண்டாம் பாடல் உரையில் சொல்லுகிறார்.* உடன் காலத் திலேயே பல உரைகள் எழுந்ததாக வரலாறு இல்லை. இது வேறு கருத்தைக் குறிப்பிட்ட அந்த அளவே கொள்ள வேண்டும். பல இடங்களில், 'இவற்றிற்கு இலக்கியம் யாப்பருங்கல விருத்தி யில் கண்டு கொள்க' என்று இவர் எழுதுவதால், அவ்வுரை எழுந்தபின் அதைப் பயின்று இவர் இவ்வுரை எழுதினார் என்று கொள்ளத் தகும்.

யாப்பருங்கல உரையிலும் இக்காரிகை உரையிலும், 'இவர் காட்டிய பாட்டு' என்ற தொடர் வரக் காண்கிறோம். தோடா ரெல்வளை என்ற பாடலைத் தந்து, "இது அடி தோறும் இடை யிட்டு வந்தமையால் இடையிட்டெதுகை; இது தொல்காப்பிய னார் காட்டிய பாட்டு; என்னை? தாஅ வண்ணம் - இடையிட்டு வந்த எதுகைத் தாகும்" (தொல்காப்பியம் செய்யுளியல் சூத்திரம்) என்று இவர் காட்டுகிறார். இங்கு தொல்காப்பியனார் காட்ட வில்லை. தொல்காப்பியனார் கூறிய கருத்துக்கு இவர் பாடலைக் காட்டுகிறார். இது நன்கு தெரிகிறது. ஆகவே யாப்பருங்கலத்தில் அவிநயனார் காட்டிய பாட்டு என்பது போன்ற இடங்களிலும் இவ்வாறே பொருள் கொள்ளத்தக்கது. திரிசொல் - அடுக்கல்,

---

* இவர் காலத்திலேயே, வேறு மாணாக்கர் வேறுவிதமாக உரை சொல்லி வந்தனர் எனவும் தெரிகிறது; 5ஆம் காரிகையுரையில், "என்று உதாரணம் எடுத்து ஓதினாரும் உளர் எனக் கொள்க" என்று காட்டுகிறார்.

பிறங்கல் - ஓங்கல், விலங்கல், விண்டு, குவடு என்பவை மலை என்னும் ஒரு பொருள் வேறு சொல். உந்தி - ஆற்றிடைக் குறையும், கொப்பூழும், தேருருளும், யாழகத் தோறுருப்பும் என்னும் வேறு பொருள் குறித்த ஒரு சொல். திசைச்சொல் - மயிலை, 'மஞ்ஞை' என்றும், கிளியைக் 'கிள்ளை' என்றும், தாயைத் 'தள்ளை' என்றும், நாயை 'ஞமலி' என்றும் வழங்குவனவாம். வடசொல் - குங்குமம், மூலம், சங்கு, சந்தனம் என்பனவாம். அம்போதரங்கம் - கரைசாரக் கரைசார ஒரு காலைக்கொருகால் சுருங்கி வருகின்ற நீர்த்தரங்கம் போல நாற்சீரடியும் முச்சீரடியும் ஆகிய அசை யடிகள் - என்ற இவர் தம் கருத்துக்கள் காணத்தக்கன.

செந்தமிழ் நிலத்தைச் சேர்ந்த பன்னிரு கொடுந்தமிழ் நிலமாவன:

> **தென்பாண்டி குட்டங் குடங்கற்கா வெண்பூழி**
> **பன்றி யருவா அதன்வடக்கு — நன்றாய்**
> **சீத மலாடு புனல்நாடு செந்தமிழ் சேர்**
> **ஏதமில் பன்னிருநாட் டெண்.**

இதை விரித்துரைத்துக் கொள்க என்று இவர் முதல் முதலில் குறிப்பிடுகிறார். பின்னோர் நூலிலும் இக்கருத்துக் காணப்படு கிறது.

இவர் எழுத்தெண்ணி நூல் காரிகைகள் நாற்பத்து நான்கும், கிரந்த வகையால் தொண்ணூறு கிரந்தமும் இருபத்தெட்டு எழுத்தும் என்கிறார். எழுத்தெண்ணிக் கிரந்தம் என்பது ஒரு வடமொழி மரபு.

அமிதசாகரர் மூலத்தின் இயல்தோறும் செய்யுட்களின் முதல் நினைப்புக் காரிகை ஒன்று செய்து சேர்த்திருப்பது போல, குணசாகரரும் தம் உரையில் மேற்கோள் காட்டும் இலக்கியப் பாடல்களுக்கு முதல் நினைப்புக் காரிகை செய்து சேர்த்திருக் கிறார். இவை 12. இது நூலைப் பயில்வோர் பாடல்களை நினைவில் வைத்திருக்க உதவும் பொருட்டுச் செய்ததாகும். பிற்காலத்தில் யாப்பருங்கலம் பயிற்சி குன்றிப்போக, காரிகையே இன்றளவும் சிறப்பாய் பயிலப்பட்டு வருகிறது. இவர் காலத் திலேயே உரையைப் பயில்வோர் அதிகமாகி, அவர்களுக்கு உதவும் பொருட்டு இவற்றை இவர் தொகுத்தார்; உரை செய்த காலத்திலேயே அவ்வளவுக்கு இதற்குச் சிறப்பு ஏற்பட்டிருந்தமை பெரிதும் வியக்கத்தக்கது.

செய்யுளியல் இறுதியில் வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா ஆகிய நான்கின் வைப்பு முறையைக் கூறும் விளக்கத்தை இவர் அப்படியே விருத்தியுரையிலிருந்து எடுத்து வைத்திருக்கிறார்.

## சமயம்

இவர் சமயத்தால் சைனர் என்பது எல்லோரும் அறிந்தது. ஆனால் வேற்றுமையின்றிப் பிற சமயங்களையும் போற்று கிறார். சைவ மாதவரும் தழைத்தினிதிருக்கும் சோணாடு என்றமை முன்னமே குறிப்பிட்டோம். நூல் இறுதியில் ஆனந்தக் குற்றம் முடிந்தபின் எல்லாக் குற்றமும் தீர்ந்த செய்யுள் என்று இவர் முருகனைத் துதிக்கின்ற குறுந்தொகையின் கடவுள் வாழ்த்துப் பாடலை எடுத்துக் காட்டுவது, இவருடைய விரிந்த உள்ளத்துக்குச் சிறந்த சான்றாயுள்ளது.

> **தாமரை புரையுங் காமர் சேவடி,**
> **பவளத் தன்ன மேனி, திகழொளி**
> **குன்றி ஏய்க்கும் உடுக்கை, குன்றின்**
> **நெஞ்சுபக எறிந்த செஞ்சுடர் நெடுவேற்**
> **சேவலங் கொடியோன் காப்ப,**
> **ஏம வைகல் எய்தின்றால் உலகே.**

## பதிப்பு

திருவாவடுதுறையாதீன வித்துவான் தாண்டவராய சுவாமி கள், இயற்றமிழாசிரியராகிய திருத்தணிகை விசாகப் பெருமாள் ஐயரவர்கள், அஷ்டாவதானம் வீராசாமிச் செட்டியாரவர்கள் முன்னிலையில், தில்லையம்பூர்ச் சந்திரசேகர கவிராச பண்டிதர் பரிசோதித்த பதிப்பு 1853. கா. ர. கோவிந்தராச முதலியார் பதிப்பு 1934. மே.வி. வேணுகோபால பிள்ளை பதிப்பு 1968. இவற்றுள் முதல் இரு பதிப்புக்களில் ஒழிபியல் இறுதியில் காணப்படும் சீரடுவிட்டிசை என்ற காரிகை மூன்றாவது பதிப்பில் விடப்பட் டுள்ளது. அதுபோல, திரிசொல் முதலிய பகுதிகள், சோணாட் டைக் குறிப்பிடும் பாடல் முதலிய பல பகுதிகள், முதல் இரண் டில் காணப்பட்டும் பிந்திய பகுதியில் நீக்கப்பட்டுள்ளன. முதற் பதிப்பில் நூல் முடிந்தபின், இந்நூலில் சொல்லாத கட்டளைக் கலிப்பா இலக்கணம் சேர்க்கப்பட்டுள்ளது. பிந்திய பதிப்புக் களில் பின்னும் பல விளக்கங்கள் சேர்க்கப்பட்டுள்ளன.

○○○

*அத்தியாயம் 5*

# இலக்கண உரையாசிரியர் – 2

# இளம்பூரணர்

## *முன்னுரை*

*இன்று கிடைக்கின்ற தமிழ் இலக்கண நூல்களுள் மிகவும் பழைய நூலாகிய தொல்காப்பியத்துக்கு உரை செய்த பலருள், முதல் உரை செய்தவர் இளம்பூரணர். இது பற்றியே உரை யாசிரியர் என்ற பொதுப்பெயர் இவருக்கே உரிய சிறப்புப் பெயராக வழங்குவதாயிற்று. நூற்பெயரைக் குறிப்பிடாமலே அடியார்க்கு நல்லார், 'உரையாசிரியராகிய இளம்பூரண அடிகள்' என்று இவரைக் குறிப்பிடுவதால், இதை நன்கு அறிய லாம். கடைச்சங்க காலம் முடிந்தபின், பாண்டி நாட்டில் 'களப்பிரன் என்னும் கலியரசன்' புகுந்து மொழிக்கும் நாகரிகத் துக்கும் சமயத்துக்கும் செய்த கொடுமைகளால், எப்படியோ நூற் பயிற்சி மறைந்து போய் விட்டது. ஆங்காங்குத் தனியான சில புலவரே மொழியைக் கற்றும் நூல்களைக் கற்றும் கற்பித்தும் வந்தார்கள் போலும். இப்படிப் பட்டதொரு தமிழ் வளர்ச்சி குன்றிய சூழ்நிலையில், சைவ சமய ஆசாரியரான ஞானசம்பந்தர் போன்றாரும் வைணவ சமய ஆழ்வார்களும் தோன்றிச் சமயத்தையும் அதன் வழியாகத் தமிழ்மொழியையும் மீண்டும் தூக்கி நிறுத்தினார்கள். இவர்களுடைய ஆக்கத் தொண்டுகள் ஒன்பது - பத்து நூற்றாண்டு வரையில் தொடர்ந்து நடந்தன. இவற்றின் விளைவாக, அரசியல் துறையில் ஒரு பேரெழுச்சி ஏற்பட்டது. அப்பேரெழுச்சியானது சோழ நாட்டில் சோழ மன்னர் எழுச்சி என்ற உருக்கொண்டு, இதே காலத்தில் புதிய சோழ பரம்பரையை ஆட்சி பீடத்தில் அமர்த்*

திற்று. 'வாரி பொய்த்தாலும் தான் பொய்யாத' காவிரி சூழ் நாட்டில் மீண்டும் ஒரு பொற்காலம் தலையெடுத்தது. அதன் சின்னமாக அந்நாட்டில் தோன்றிய பல மொழித் தொண்டர்களில் இளம்பூரணர் முக்கியமான ஒருவர் என்று சொல்வது மிகையாகாது.

சங்க காலத்தின் பின் தொல்காப்பியம் பயில்வாரற்றுப் போயிற்று என்ற நிலை இருந்தது போலும். மதுரையிலிருந்த பாண்டி மன்னன், 'எல்லாமிருந்தும் பொருளதிகாரம் இல்லையெனில் பயன் இல்லையே' என்று வருந்தியதும், மதுரை ஆலவாய் இறையனார் அவனுக்காக அறுபது பொருளதிகாரச் சூத்திரங்களைச் செப்பிதழில் எழுதி அளித்ததும், அவற்றிற்கு நக்கீரனார் உரை செய்ததும் ஆகிய வரலாறுகளை இறையனார் களவியலுரை கூறும். செவி வழியாக வந்த நக்கீரனார் உரை பத்தாம் நூற்றாண்டில் தான் எழுத்து வடிவம் பெற்றது என்று ஆன்றோர் கருதுகின்றனர். நக்கீரர் உரை செய்தது முதலான நிகழ்ச்சிகள் சங்ககால நிகழ்ச்சிகள் என்று இறையனார் களவியலுரையே கூறும்; எனினும், இவை சங்ககாலத்துக்குரியன அல்லாமல், களப்பிரரை ஓட்டி மீண்டும் பாண்டியராட்சியை மதுரையில் நிறுவிய பாண்டிமன்னன் காலத்துக்குரிய செய்திகளாகலாம். ஒரு வகையில் இக்காலம் வரையில் தமிழ் மொழிப் பயிற்சி, அதாவது இலக்கணப் பயிற்சியும் சிறப்பாகப் பொருளிலக்கணப் பயிற்சியும், குன்றியிருந்த நிலையை இவை நன்றாக உணர்த்துகின்றன. மாணிக்கவாசகரை அழகிய சிற்றம்பலம் உடையான் 'ஒரு கோவை பாடித் தருக' என்று கேட்டுப் பெற்றான் என்ற கதையுங்கூட, இந்த நிலையைத்தான் நமக்குச் சுவைபட உணர்த்துகிறது.

இந்தச் சூழ்நிலையில் உருவானவர் இளம்பூரணர். ஏறக்குறைய ஆயிரம் ஆண்டுகள் தொல்காப்பியமானது பயிற்சியின்றி மங்கி இருந்திருக்கிறது. இறையனார் செய்தார் என்ற காரணத்தால், பொருள் இலக்கணத்தின் ஒரு பகுதியைக் கூறும் இறையனார் களவியல் என்ற அகப்பொருள் நூலுக்குக் கற்றோர் மதிப்புக் கொடுத்தது இயல்பே. அதன் மூலமாகப் பொருளிலக்கணம் ஒரு புதிய விழிப்புப் பெற்றது. அப்போது இளம்பூரணர் தோன்றித் தொல்காப்பியத்தை நன்கு ஆய்ந்து கற்றார்; தாமாக ஆய்ந்து கற்றார் என்றுதான் கருதவேண்டும். "பிறர் உட்புகுந்து காண முடியா வண்ணம் இருண்டு கிடந்த தொல்காப்பியம்

என்னும் சரக்கறையுள் தம் அறிவென்னும் அவியாவிளக்கைக் கொண்டு துருவி ஆங்கே குவிந்து கிடந்த அரிதனக் குவியல்களை உலகிற்கு முதலில் விளக்கிக் காட்டிய பெருந்தகையார் இவரே" என்று மு. இராகவையங்கார் அழகுபடச் சொல்வது இவரைப் பற்றிய உண்மையான பாராட்டு. இளம்பூரணர் தொல்காப் பியத்தின் மூன்று அதிகாரங்களை நன்கு பயின்று தெளிவான முதல் உரை எழுதினார்; பொருளதிகாரத்துக்கு மிகவும் சிறப் பாக உரை எழுதினார். கூடுமானவரையில் மூலத்தின் சிறப்புக் கள் அனைத்தும் புலப்படுமாறு இவர் எழுதியிருக்கிறார். மூன்று அதிகாரங்களுக்கும் பூரணமான உரை எழுதி அவ்வுரை இன்று வரை நிலவுமாறு வைத்த பெருமை இவருக்கு உரியது. இவர் பெயரே பூரணர் என்ற இருந்ததனாலே இந்தப் பூரணமும் தொல்காப்பியர் உரையாசிரியர் மரபில் இவர் ஒருவருக்கே வாய்த்தது போலும்! தமிழ்நாடு முழுமையிலும் இவரது பொரு ளதிகார உரைக்குக் கிடைத்த ஓலை ஏடு ஒன்றே ஒன்றுதான். எத்தனையோ எண்ணத்தொலையாத ஏட்டுச் சுவடிகள் எல்லாம் இறந்து போயிருக்க, இவரது உரை ஒரு பிரதியேனும் கிடைத்து, இன்று உரை நிலவி வருவது பெருவியப்புக்கு இடமாய் உள்ளது.

இந்த அத்தியாயம் இவர் வரலாற்றையும் உரையையும் ஆராய்ந்து மதிப்பிடும். இவர் தொல்காப்பியவுரை தவிர வேறெந்த நூலும் செய்யவில்லை.

**ஆசிரியர்**

இளம்பூரணர் என்ற பெயர் விளக்கமில்லை. சங்க நூல் களில் இளம் என்ற அடைகொடுத்து வரும் அரசர் புலவர் பெயர்கள் பல. இளங் கண்டீரக்கோ, இளங்குமணன், இளந் திரையன், இளஞ் சேட்சென்னி, இளஞ் சேரல், இளம் பெரு வழுதி, இளவெளிமான் - என்ற பெயர்கள் மன்னர் மரபினரைக் குறிக்கும். இவர்கள் அவ்வப் பெயருடைய மன்னர் அல்லது அவர் போன்ற தலைவருக்கு இளவல்களாக இருந்தோராக நினைக்கப்படுவர். சேரன் செங்குட்டுவனுடைய இளவலாகப் பிரசித்தி பெற்றுத் துறவு பூண்டிருந்த இளங்கோ அடிகள் பெயர் நன்கு தெரிந்தது. இவர் போலவே அமைந்த ஒரு பெயர், பதினொராந் திருமுறை ஆசிரியர்களுள் ஒருவரான இளம் பெருமானடிகள் என்பது. புலவர் பெயராக வருபவை மிகப் பல. இளங்கீரன், இளந்தத்தன், இளந்தேவன், இளநாதன், இளங் கண்ணன், இளம்போதி, இளம்பூதன் என்பவை முதலான

பெயர்களைக் காண்க. கௌசிகனார் ஒருவர், இளங்கௌசிகனார் மற்றொருவர் என்று புலவர் பெயர்கள் கணக்கிடப்பட்டு வந்துள்ளன. குமணன் தம்பி இளங்குமணன், வெளிமான் தம்பி இள வெளிமான் என்று இருவர் வெவ்வேறாகச் சொல்லப்பட்டுள்ளது உண்மையே. ஆனால் எல்லாப் பெயர்களுக்கும் இது பொருத்தமாகாது. இயல்பையே அடையாகச் சொல்லிய இடங்களும் பல இருக்கும். இளம் என்ற அடை இளமை ஆகிய இயல்பைக் குறித்த அடையாக இருக்கும்.

இவ்வாறாக, இளம்பூரணர் என்ற பெயர் முதுபூரணர் ஒருவரைக் குறிக்கும் என்று கருதவேண்டியதில்லை. இவர் பெயர் பூரணர். முழுதுல கிறைஞ்ச முற்றொருங் குணர்ந்தோனாகிய அருகன் இயல்புகளுள் ஒன்றாகிய அனந்த ஞானம் என்ற பூரணத் தன்மையை உணர்த்தும் பெயர் இவருக்கு இடப் பெற்றது போலும்; இளமையில் துறவு பூண்டு மெய்ந்நெறியை நாடி நின்றமையால் இளம்பூரண அடிகள் எனப்பட்டார் என்று கருதலாம். வரலாற்று விளக்கமில்லாத போது, இவர் பேராசிரியரின் மாணாக்கரென்றும் நச்சினார்க்கினியரின் வித்தியா குருவென்றும் சொல்லப்பட்டார்.

## நாடு

ஊர் எனப்படுவது உறையூர் என்றும், நாடெனப் படுவது சோழ நாடு என்றும், உறையூரிற் பெரிது கருவூர் என்றும் இவர் தெரிந்து குறிப்பிடுவதாலும், கருவூருக்கு வழி எது, சாத்தா, உறையூருக்குச் செல்லாயா என்ற எடுத்துக் காட்டுக்களை இவர் கூறுவதாலும், இவரைச் சோழ நாட்டினர் என்று கருதலாம். மற்றும் ஒரு குறிப்பு: "கைக்கிளை என்பதன் பொருண்மை யாதோ எனின், கை என்பது சிறுமை பற்றி வரும். அது தத்தம் குறிப்பிற் பொருள் செய்வதோர் இடைச்சொல். கிளை என்பது உறவு. பெருமையில்லாத தலைமக்கள் உறவு என்றவாறு. கைக்குடை, கையேடு, கைவாள், கையொலியல், கைவாய்க்கால் எனப் பெருமையில்லாதவற்றை வழங்குப ஆதலின்" என்று எழுதுகிறார். கைக்குடை, கைவாள் என்ற தொடர்கள் எங்கும் வழங்குமாயினும், கைவாய்க்கால் என்பது இன்றும் சோழ நாட்டில் மட்டுமே சிறு வாய்க்காலைக் குறிப்பிடுவதற்கு வழங்கும் பெயராகும். இவர் சோழநாட்டினர் என்ற கருத்துக்கு இது பின்னும் ஆதரவு தருகிறது.

இவர் வேளாள மரபினர் என்பது, இவர் மிகுதியும் உணவு பற்றியும் உழவுத்தொழில் பற்றியும் மேற்கோள் தருவதால் அறியக் கிடக்கின்றது. சில பின்வருவன: நம்பி வந்தான் அவற்குச் சோறிடுக, எருது வந்தது அதற்குப் புல்லிடுக; கன்று நீரூட்டுக - ஆன் கன்றும் எருமைக் கன்றும் பூங்கன்றும் ஆங்கு உளவாயின்...; பசித்தேன் பழஞ்சோறு தா என்றாள்; கூழுண்ணா நின்றான்; சோறும் உண்டான்; சோறுவேவ விருந்து பாணியா நின்றுழி; எட்குப்பை நெற்குப்பை; எள்ளொடு விராய அரிசி; தீங்கரும்பு; சாத்தற்குச் சோறு கரும்பிற்கு வேலி; ஏர்ப்பின் சென்றான்;

> அடகு புலால் பாகு பாளிதமும் உண்ணான்
> கடல் போலும் கல்வியவன்.

என்ற உதாரணங்கள் சொல்லதிகார உரையுள் மட்டும் காணப் படுவனவற்றுள் சில. அஃறிணைக் குறிப்பு வினைமுற்றுப் பற்றிய சூத்திரவுரையில் (246), கோடின்று செவியின்று, கோடுடைத்து செவியுடைத்து என ஒருமைக்கண்ணும் பன்மைக் கண்ணும் குறிப்பிடுகிறார். கோடில்லாமலிருப்பது இளங்கன்றுகளுக்கு இயல்பு; முதிர முதிரக் கோடு வளரும். ஆனால் செவியில்லா திருப்பது, எந்தப் பிராணிக்குமே இயல்பன்று. இவரும், இல்லாத ஒரு நிலையைச் சொல்லவில்லை; உள்ள நிலையையே உதாரண மாய்க் குறிப்பிடுகிறார். இந்த நினைவோடு பார்த்தால், ஒன்று தெளிவாகிறது. சோழ நாட்டில் அன்றும் இன்றும், காளைக் கன்றுகளுக்குக் கொம்பு தீய்க்கும் வழக்கமும் காதறுக்கும் வழக்கமும் நிலவி வருகிறது. சோழநாட்டு உழவு மாடுகள் கொம்பில்லாது மொட்டை மாடுகளாவும் காதறுபட்டும் காட்சி தருவது பிற பகுதியினருக்கு வேடிக்கையாயிருப்பதுண்டு. இந்த நிலையை இளம்பூரணர் குறிப்பிடுகிறார். ஆதலால் இதைத் தெரிந்து குறிப்பிடுகின்றவர் சோழ நாட்டு வேளாளர் என்பதில் ஐயமில்லை.

**சமயம்**

இவர் துறவு பூண்ட பெரியார் என்று, சிலப்பதிகாரத்தில் அடியார்க்கு நல்லார் 'உரையாசிரியராகிய இளம்பூரண அடிகள்' என்று கூறியிருப்பதால் அறிகிறோம். மேலும் அடிகள் என்ற சொல்லுக்கு, 'துறத்தலான்' என்று நல்லாரே பொருள் உரைத்திருப்பதாலும் தெளிவாகும். இவர் சமயத்தால் சைனர் என்பது எல்லோரும் நன்கறிந்தது. சைனப் புலவரான மயிலை நாதர் தம் சமயத்தாரைப் பெரிதும் போற்றுபவர். இவரை

'உளங்கூர் கேள்வி இளம்பூரணர் என்னும் ஏதமில் மாதவர்' என்று அவர் புகழ்வது காணத்தக்கது. சைனருடைய கருத்து ஆண் பிறவியே வீடு பேற்றிற்கு உரியது, பெண்டிர் வீடுபேற்றிற்கு உரியரல்லர் என்பது; இதை "ஏகாரம் வீடுபேற்றிற்குரிய ஆண் பால் உணர்த்துவதால் பின்வைக்கப்பட்டது" என்று இவர் எடுத்து மொழிகிறார். இவற்றால் இவர் சமயம் தெளிவாகும்.

ஆனால் இவர் சைவர் என்று பொருள்படும்படியாக ஔவை. துரைசாமிப்பிள்ளை தமது நூலில் சைவப்புலவர் பட்டியலில் இவர் பெயரைக் குறிப்பிட்டிருக்கிறார். ஒரு பதிப்பாளர்* இவர் சைவர் என்று துணிந்து எழுதியிருக்கிறார். இதற்கு அவர் கூறிய விளக்கம்: இவர் பொருளியல் முதற் சூத்திர வுரையில் அகநானூற்றுக் கடவுள் வாழ்த்துப் பாடலை முழுமை யும் தந்து, அதற்கு உரையும் தந்து, அவ்வுரையுள் 'மணிமிடற்று அந்தணன் தாவில் தாள் நிழல்' என்ற தொடருக்கு, மணி மிடற்று அந்தணரது சிவானுபூதி என்று எழுதியிருப்பதாலும், குறுந்தொகைக் கடவுள் வாழ்த்துப் பாடலாகிய தாமரை புரையும் காமர் சேவடி என்பதை இளம்பூரணர் பல இடங்களில் எடுத்துக் காட்டியுள்ளமையாலும், முறையே முருகனையும் சிவபெரு மானையும் துதிக்கின்ற பாடலைச் சொல்பவர் சைவரே என்று சொல்லத்தக்கது என்பதாகும். இவை போலவே, வாசுதேவன் வந்தான் திருவினான் வந்தான் என்றும், அரசர் தாம் தூதாகிய வாறு வாசுதேவனால் உணர்க என்றும் இவர் காட்டுவதால், இவரை வைணவர் என்றும் கருதிவிடலாம். ஆனால் இது பொருத்தமுடையதன்று. பண்டைய உரையாசிரியர் பலர் சைன சமயத்தாராய் இருந்தும் கூட, பிற தெய்வங்களைப் போற்று கின்ற பாடல்களை இலக்கணப் பொருத்தம் கருதியும், இலக் கியச் சுவை கருதியும், மிகுதியாக எடுத்துக் காட்டுகிறார்கள். இந்த இடங்களில் அவர்கள் தங்கள் தெய்வம் என்ற குறுகிய நோக்கம் இல்லாது தமிழ் நயம் என்ற ஒன்றைக் கருதிச் சொல் கிறார்கள் என்று தெரிகிறது. காலத்தால் இளம்பூரணருக்குச் சற்று முந்தி உரைசெய்த யாப்பருங்கல விருத்தி உரைகாரரால் இது நன்கு விளங்கும். மேலும், காரிகைக்கு உரை செய்த குண சாகரர் நூலின் இறுதியில் 'எல்லாக் குற்றங்களும் தீர்ந்த பாடல்' என்று அதே குறுந்தொகைக் கடவுள் வாழ்த்துப் பாடலை எடுத்தெழுதியுள்ளார். இவற்றால், இளம்பூரணர் சைனர் என்ற கருத்து தவறாகாது.

---

* கு. சுந்தரமூர்த்தி, தொல்காப்பியச் சொல்லதிகார உரைப் பதிப்பு 1963

இவர் தம் உரையுள் அருகபரமாக உள்ள பாடல்களைத் தேடி எடுத்துக் காட்டவில்லை. இலக்கியச் சுவை பொருந்திய பாடல்களை நினைவுக்கு வந்தபடியே காட்டியிருக்கிறார். பிற ஆசிரியர் யாரும் காட்டாத மூத்தநாயனார் திருவிரட்டை மணி மாலையை இவர் காட்டியிருப்பதும் இதற்கு ஓர் எடுத்துக் காட்டாகும். ஆசீவகப்பள்ளி என்று சைனர் பள்ளியைக் குறித்த இடத்திலேயே குமரகோட்டம் பிரமகோட்டம் என்பவற்றை யும் குறிப்பிடுகிறார். இப்படியே இவர் பின்னும், வேற்றுமை யுணர்ச்சியின்றி, முறையாக அருகன், திருமால், சிவபிரான், ஆதிநாதர், விநாயகர் வணக்கப் பாடல்களை 359ஆம் சூத்திர வுரையுள் எடுத்துக் காட்டுகிறார். இப்படியே பல தெய்வங் களைச் சேர்த்துக் குறிப்பிடுவதில் இவருக்குப் பெருமகிழ்ச்சி. புறத்திணையில், பூவைநிலை என்பது, "பூவை மலர்ச்சியைக் கண்டு மாயோன் நிறத்தை யொத்ததெனப் புகழ்தல்" என்று சொல்லி, வெண்பாமாலை உதாரணமும் காட்டி மேல் எழுது கிறார்: "இஃது உரையன் றென்பார், மாயோன் முதலாகிய தேவர் களோடு உவமித்தலே பூவைநிலை என்ப; உதாரணம்:

> இந்திரன் என்னின் இரண்டேகண்; ஏறூர்ந்த
> அந்தரத்தான் என்னிற் பிறையில்லை; – அந்தரத்திற்
> கோழியான் என்னில் முகனொன்றே; கோதையை
> ஆழியான் என்றுணரற் பாற்று."

இங்கு இந்திரன், சிவபிரான், முருகன், திருமால் (இவரை நச்சினார்க்கினியர் பலதேவர் என்பார்) ஆகியோர் குறிப்பிடப் பட்டுள்ளனர். திருமுருகாற்றுப்படை வரிகளைப் பல முறை காட்டுகிறார். முருகாறு புலவராற்றுப்படை என்பது இவர் கருத்து.

இரு கருத்துக்கள் குறிப்பிடத்தக்கன. களவு நெறியை இவர் அறம் பயவாத புறநெறி அன்று, வேத விதியாகிய தந்திரம் என்கிறார். வேதத்துக்குப் புறம்பான சைனராகிய இவர் வேதத் தைச் சொல்வாரா என்பது ஒன்று. தாபத இலக்கணமாக இவர் தோலுடுத்தல், எரி ஓம்பல், சடை புனைதல் என்பவற்றையும் கூறுகிறார். இவை சைவருக்கு அடையாளங்கள். இவை போல்வன சில. இவற்றைப் பார்க்கும்போது இளம்பூரணர், களப்பிரருடைய கொடுமை எல்லாம் அழிந்து நெடுநாளாகிய பின் சைனசமயத்தில் தோன்றியிருந்தும் கூட, சோழர் தலைமை யில் முன்னேறி வந்த நாட்டின் பண்பாட்டை நன்குணர்ந்து, சமயச்சார்பு புலப்படாதபடி, காலத்தின் எழுச்சியோடொத்து

மிகவும் அழகாகத் தமது உரையையும் மேற்கோள் பாடல்களை யும் அமைத்துச் செல்லுகிறார் என்று சொல்லவேண்டும்.

யாப்பருங்கல விருத்தியுரைகாரர் இளம்பூரணர் ஆகிய பெரும்புலவர்கள் தங்கள் காலத்தில் கண் முன்னே சைனம் ஆழ்ந்து போவதையும், சைவம் ஓங்கிப் பெருகியதையும் கண் டார்கள். இவர்கள் மொழியில் மிகுந்த பற்றுக் கொண்டார் களேயன்றி, சமயத்தில் மிகுந்த பற்றுக் கொள்ளவில்லை. ஆகவே, தாங்கள் சைனராயிருந்துங் கூட, அவ்வுணர்வைக் குறைத்து, மாறிவரும் சமுதாயச் சூழ்நிலைக்கு ஏற்பத் தங்களை அமைத் துக் கொண்டு உரை எழுதியிருக்கிறார்கள்.

## ஒரு போலி வரலாறு

இளம்பூரணர் வரலாறு சம்பந்தமாக இரண்டு குறிப்புக் களை இங்கு ஆராய வேண்டும். முதல் குறிப்பு, இளம்பூரணர் தொல்காப்பியச் சிறப்புப் பாயிரம் என்ற பெயரோடு மதுரை செந்தமிழ்ப் பத்திரிகையில் 1922, 1945 ஆகிய ஆண்டுகளில் வெளிவந்தது. பின்னே குறிப்பிடுபவற்றை நன்கு அறியவேண்டிப் பாடல் முழுமையும் இங்குத் தருகின்றோம்.

தண்கட லசைவளி யுறுப்பத் திரைபிதிர்ந்
தூங்கலின் பொருட் குவைப் புணரியி லையுற
அலைவமன் மயரினை யகற்ற லெழுத்தால்
திணைதுறை யுட்கோள் இயற்றிற னறியாக்
கவர்பொருள் மாக்கள் மயக்கினுக் கிரங்கிப்
பாயிருங் காப்பியச் சுவைபல வுணர்ந்தகந்
தோய மடுத்தோர் தொல் காப் பியனுரை
முத்திற லோத்தினுக் கொத்த சீர்க் காண்டிகை
சொன்னிலை மேற்கோள் தொகுபொருள் துணிபுடன்
இயல்நூற் பாமுடி பிணைத்தடி காட்டித்
தலைகடை கூட்டித் தந்தனன் பண்டே
கொங்குவேள் மாக்கதை குறிப்புரை கண்டோன்
தன்னறி யளவையில் நல்லுரை தேவர்
பன்மணிக் குறட்பா மதிப்பிடப் பொறித்தோன்
குணகடற் செல்லூர் மணக்குடி புரியான்
தண்முலை முகையென வெண்ணூல் சூடி
அந்தணன் துறவோன் அருமறை உணர்ந்த
இளம்போதி பயந்த புனிதன்
இளம்பூ ரணனுரை இனிதுவாழ் கீங்கென்.

இப்பாடல் சொர்ணம் பிள்ளையினுடைய இளம்பூரணர் சொல்லதிகாரக் காகிதப் பிரதியில் உள்ளதாகக் குறிப்பு. இப் பாடலை நம்பி, சதாசிவப் பண்டாரத்தார் இதை ஆராய்ந்து சில குறிப்புக்களை எழுதியிருக்கிறார். இளம்பூரணர் மணக்குடையர் என்னும் குடிப்பிறப்புடையவர், மணக்குடவர் என்று வழங்கும் திருக்குறள் உரையை இவரே இளமையில் எழுதினார், துறவு பூண்டபின் தொல்காப்பிய உரையை எழுதினார், இவர் பிறந்த ஊர் செல்லூர், இவர் தந்தை இளம்போதி என்ற அந்தணரின் புதல்வர், கொங்குவேள் மாக்கதையாகிய பெருங்கதைக்கு இவர் குறிப்புரை எழுதினார் என்ற கருத்துக்களை அவர் தெரிவித் திருக்கிறார். அதற்கு அடிப்படை, இப்பாடல் உண்மையான பழம்பாடல் என்ற நம்பிக்கையாகும். மேலும், பண்டாரத்தார், மணக்குடவர் உரைக்கும் இளம்பூரணரது தொல்காப்பியப் புறத்திணை இயல் உரைக்கும் உள்ள பல கருத்தொற்றுமை களை எடுத்துக்காட்டி இருவரும் ஒருவரேயாவர் என்று நிறுவ முயல்கின்றார். தமிழ் உரை மரபில் முன்வந்த ஆசிரியர் கூற்றுக் களை பின்வந்தோர் அப்படியே எடுத்து எழுதிக் கொள்வது வழக்கு. 10ஆம் நூற்றாண்டில் உரை செய்த மணக்குடவர் கருத்துக்களைப் பெய்தும் தழுவியும் 11ஆம் நூற்றாண்டில் இளம்பூரணர் உரை செய்திருத்தல் இயல்பு. இது இருவரும் ஒருவர் என்பதற்குப் போதிய காரணமாகாது.

மற்றப்படி, இப்பாடல் வெளி வந்த அதே இதழில் (1945) அப்பத்திரிகையின் உதவி ஆசிரியராயிருந்த தி.கி. இராமானுச ஐயங்கார் இக்கருத்துக்களை மறுத்திருக்கிறார்: நமசிவாய முதலியார் அச்சிட்ட இளம்பூரணர் உரை அகத்திணை, புறத் திணை இயல் பதிப்பில் இது பற்றிய குறிப்பு இல்லை; ஐயர் அவர்களின் பெருங்கதைப் பதிப்பில் இது பற்றிய குறிப்பு இல்லை; நமசிவாய முதலியார் சொல்லதிகாரப் பதிப்பில், ‘இவரைப் பற்றிய செய்தி வேறுயாதும் புலப்படவில்லை’ என்றே எழுதினார்; சிதம்பரம் பிள்ளை பொருளதிகார இளம்பூரணர் உரைப் பதிப்புக்குச் சொர்ணம் பிள்ளையின் காகிதப் பிரதியைப் பார்த்தாராயினும், இப்பாடல் பற்றிய குறிப்பேயில்லை; அவர் வையாபுரிப் பிள்ளையின் பிரதியை இரவலாகப் பெற்றுத் தமக்குத் தோற்றியவாறு மாற்றியும் கூட்டியும் எழுதிக்கொண் டார் என்பதே சிதம்பரம் பிள்ளை கருத்து; மணக்குடவர் உரைப் பதிப்பில் (1925) “மணக்குடவரைப் பற்றி அறிய எச்சாதனமும் கிடைக்கவில்லை” என்றே குறிப்புள்ளது’ என்பன ஐயங்கார்

குறிப்புக்கள். இவற்றால் இப்பாடல் போலியான புதுப்பாடல் என்பது நன்கு விளங்கு. இப்போலியை நம்பி வரலாற்றாராய்ச்சி செய்யவியலாது.

## இளம்பூரணம் – பதிப்பு வரலாறு

காலம் சென்ற வ.உ. சிதம்பரம்பிள்ளை அவர்கள் சிறந்த தேச பக்தராக இருந்த காலத்தில், சிறப்பான தமிழாராய்ச்சியில் ஈடுபட்டிருந்தார் என்பது பலருக்குத் தெரியாது. இவர் ஆராய்ச்சி சென்று பதிப்பித்த சில நூல்களில், தமிழ் மக்கள் நன்றியறித லோடு சிறப்பாகக் குறிப்பிடவேண்டியது, தொல்காப்பியப் பொருளதிகார இளம்பூரணர் உரை. ஒன்பது இயல் கொண்ட இந்நூலில் இவர் அகத்திணையியல், புறத்திணையியல் என்ற முதலிரு இயல்களையும் 1928இல் அச்சிட்டார்; தொல்காப்பியம் முழுமையும் இவருக்கு அச்சிட்டு உதவிய பேரன்பர் வாவிள்ள - இராமசுவாமி சாஸ்திருலு அண்ட் சன்ஸ் என்ற நிறுவனத்தின் தலைவராயிருந்த அந்தச் சாஸ்திரியின் புதல்வரான வேங்கடேசு வரசாஸ்திருலு. அவரே பின்னும் ஏழு ஆண்டுகள் கழித்து மற்ற ஏழு இயல்களையும் அச்சிட்டுக் கொடுத்தார். அவர் தெலுங்கர். பிள்ளையை அவருக்கு லோகமான்ய பாலகங்காதர திலகரே அறிமுகம் செய்து வைத்தார். இந்த உத்தம தேச பக்தரிடம் ஏற்பட்ட உண்மை நட்பின் காரணமாகவே அந்தத் தெலுங்கர் இந்த உரையைத் தமது சொந்தச் செலவில் அச்சிட்டுக் கொடுத் தார். பிற்காலத்தில் சிதம்பரம் பிள்ளையைக் ‘கப்பல் ஓட்டிய தமிழர்’ என்று பலர் வானளாவப் புகழக் காண்கிறோம். ஆனால் அன்று, சிறைவாசத்தால் உடல் மெலிந்து, மனம் உடைந்து, வறுமையில் மூழ்கி, இவர் துன்புற்றிருந்த நிலையில் ஒரு தமிழரும் இவர் நூலை அச்சிட முன்வரவில்லை என்று மிக்க வருத்தத்தோடு சொல்ல வேண்டியிருக்கிறது.

தொல்காப்பியப் பொருளதிகார இளம்பூரணர் உரைக்குக் கனக சுந்தரம் பிள்ளையிடம் இருந்த ஒரே ஓலை ஏடு தான் உண்டு; தமிழ்நாடு முழுமையிலும் வேறு யாரிடத்திலும், பொருளதிகாரம் இளம்பூரணம் முழுமையும் அடங்கிய ஏடு, எங்கும் இல்லை. ரா. இராகவையங்கார் அவர்களிடம் மட்டும் செய்யுளியல் - மரபியல் ஏடு ஒன்று இருந்தது. இவற்றை வைத்தே சிதம்பரம் பிள்ளை பிரதி செய்தார். அச்சிடுமுன் சிறைக்குச் சென்று விட்டார். அனேக ஆண்டுகள் கழித்துச் சிறையிலிருந்து வெளிவந்த பிறகு, அச்சாகாது இருந்த ஏழு இயல்களையும்

இவர் அச்சிட எண்ணினார். ஆனால் அப்போது இவருள்ளம் சிறை வாசத்தால் பெரிதும் உடைந்து போயிருந்தது. அந்நிலையில் இருவர் இவருக்கு உதவி செய்ய முன் வந்தனர். ஒருவர் சென்னைப் பல்கலைக்கழகத்தில் தமிழ்ப் பேரகராதியின் பதிப்பாசிரியராக இருந்த ச. வையாபுரிப் பிள்ளை அவர்கள்: இவர் தயாரித்திருந்த அச்சுப்பிரதியை மூல ஏட்டோடு ஒப்பு நோக்கி, விடுபட்டிருந்த இடங்களையெல்லாம், வேறு இளம் பூரணர் ஏடு இன்மையால், நச்சினார்க்கினியர் உரையைக் கொண்டு ஒரு வகையாகப் பூர்த்தி செய்து, மேற்கோள் முதலியவற்றைத் தேடித் தொகுத்துத் திருத்தமாக அச்சுத் தாள்களைச் சரிபார்த்து நூலை முடித்துக் கொடுத்தார்.

"தமிழ்நாடு முழுவதிலும் பொருளதிகார இளம்பூரணருரை முற்றுமடங்கிப் பிரதி ஒன்றேயுள்ளது. இப்போது அங்கங்கே ஒரு சிலரிடத்துள்ள பிரதிகளனைத்தும் இவ்வேட்டுப் பிரதியைப் பார்த்தெழுதிக் கொண்ட கடிதப் பிரதிகளேயாகும். இக்கடிதப் பிரதிகள் சிலவற்றில் ஒரு சிலவிடங்களில் ஏட்டுப் பிரதியில் காணப்பெறாத விஷங்கள் ஆதாரமின்றி நுழைத்தெழுதப் பட்டன. அவ்வாறு நுழைத்தெழுதியவற்றையெல்லாம் களைந்து ஏட்டுப் பிரதியிலுள்ளவாறே, இப்பதிப்பு எனது நண்பர் வையாபுரிப்பிள்ளையவர்களாற் சுத்தஞ் செய்யப்பட்டுள்ளளது" என்று சிதம்பரம் பிள்ளை தமது பதிப்புரையில் கூறுவது காண்க.

பின்னர், முற்கூறியவாறு வாவிள்ள வேங்கடேசுவர சாஸ்திருலு இதை அச்சிட்டுக் கொடுத்தார். களவியல், கற்பியல், பொருளியல் என்ற மூன்றும் ஒரு புத்தகமாகவும், அடுத்த மெய்ப்பாட்டியல், உவமையியல், செய்யுளியல், மரபியல் ஆகிய நான்கும் மற்றொரு புத்தகமாகவும் வெளிவந்தன. இவற்றை 15-1-1936இல் சிதம்பரம் பிள்ளை எழுதிய பதிப்புரையால் அறியலாம். "இவ்வேழு இயல்களுக்கும் பெயரளவில் பதிப்பாசிரியன் யான். உண்மையில் பதிப்பாசிரியர் திரு. வையாபுரிப் பிள்ளை அவர்களே. அவர்கள் செய்த நன்றி என்னால் என்றும் உள்ளற் பாலது" என்று சிதம்பரம்பிள்ளை எழுதிய பதிப்புரையினால் இது விளங்கும். நூலின் முகப்பேட்டில் பதிப்பாசிரியர் வ. உ. சிதம்பரம் பிள்ளை, எஸ். வையாபுரிப்பிள்ளை என்று இருவர் பெயரும் அச்சிட்டிருக்கக் காணலாம். உண்மையில் வையாபுரிப் பிள்ளையே பதிப்பாசிரியராக இருந்த போதிலும், சிதம்பரம் பிள்ளை பெயராலேயே நூலை வெளியிடுவதில் அவருக்குச்

சம்மதமே; ஆனால் இவ்வாறு தம் பெயரையும் போட்டதற்கு, அக்காலம் (1936) சென்னை பல்கலைக்கழகத்தில் தமிழ் ரீடர் பதவியிலிருந்த அனவரத விநாயகம் பிள்ளை அவர்கள் ஓய்வு பெற்ற காரணத்தால், அப்பதவி தமக்குக் கிடைக்க வேண்டும் என்று வையாபுரிப்பிள்ளை விரும்பியதும், இப்புத்தகத்தின் முகப்பில் தம் பெயர் இருந்தால் தமக்கு அனுகூலமாக இருக்கும் என்று அவர் கருதியதும், காரணமாகும்.

மேற்சொல்லியது சிதம்பரம்பிள்ளை பதிப்பின் வரலாறு. இதுபோலவே பிரதிகளின் வரலாறு ஒன்று உண்டு. அது மிக்க சுவையுடையது. சிதம்பரம் பிள்ளை மிகவும் நல்லவர். தமிழில் அதிகம் பற்றுள்ளவர். யார் எதுசொன்னாலும் அதை அப்படியே மெய்யென்று நம்புபவர். அவர் இளம்பூரணம் பொருளதிகாரம் ஆராய்வதறிந்து, ஒரு தமிழ்ப் பண்டிதர் தம்மிடம் ஒரு காகிதப் பிரதி இருக்கிறதென்று சொல்லி, பிரதியை இவரிடம் விலைக்கு விற்றார். சிதம்பரம் பிள்ளையும் பணம் கொடுத்துப் பெற்றுக் கொண்டார். ஆனால் அது உண்மையில் அந்தப் பண்டிதர், வையாபுரிப் பிள்ளையின் காகிதப் பிரதியைக் கடனாக வாங்கிக் கொண்டு போய் அதைப் பார்த்துத் தாம் எழுதிக்கொண்ட பல காகிதப் பிரதிகளுள் ஒன்றாகும். இப்பண்டிதர் யார் என்று சிதம்பரம்பிள்ளை 'பதிப்பாசிரியர் குறிப்பு' என்ற பகுதியில் தெரிவித்திருக்கிறார். இவரை வையாபுரிப்பிள்ளை, 'அண்ணாச்சி' என்றே வழங்குவார்.

“இதனை வெளியிடுவதற்குக் கிடைத்த கடிதப் பிரதிகளில் ஒன்று காலஞ்சென்ற த.மு. சொர்ணம்பிள்ளையவர்களுக்குரியதாகும். அவர்கள் பிரதி செய்யும் பொழுது உரையில் இல்லாத பல சொற்றொடர்களை இடையிடையே பெய்திருக்கிறார்கள் என்பது பல காரணங்களால் ஊகிக்கக் கூடியதாயிருக்கிறது. பிறிதொரு பிரதி ஸ்ரீமான் தி. நா. சுப்பிரமணிய ஐயரிடமிருந்து கிடைத்தது. இது சொர்ணம் பிள்ளையின் பிரதியைப் பார்த்து எழுதிய கடிதப்பிரதியின் பிரதியென்று தெரியவருகிறது. இதிலும் பல வகையான இடைச் செருகல்கள் உள்ளன. மூன்றாவது பிரதி ஸ்ரீமான் எஸ். வையாபுரிப் பிள்ளையவர்களுக்குரியது. இது 1912இல் ஸ்ரீமான் தி.த. கனகசுந்தரம் பிள்ளைவர்கள் ஏட்டுப் பிரதியைப் பார்த்து எழுதிய கைப்பிரதியாகும். இதுவே இடைச் செருகல்களைத் தெரிந்து கொள்வதற்கும் மூலத்தின் சுத்த பாடத்தை நிச்சயிப்பதற்கும் பெரிதும் பயன்பட்டது. இதனையே

சொர்ணம்பிள்ளைவர்கள் இரவலாகப் பெற்றுத் தமக்குத் தோன்றியவாறு பலவிடங்களில் மாற்றியும் கூட்டியும் பிரதி செய்துகொண்டார்கள்" என்று 'பதிப்பாசிரியர் குறிப்பு' என்ற பகுதியில் சிதம்பரம் பிள்ளை எழுதியிருக்கிறார்.

இந்த அண்ணாச்சி இப்பொருளதிகார உரைக்குப் பல கைப் பிரதிகள் தயாரித்தார். ஒன்று, மேற்சொன்னவாறு சிதம்பரம் பிள்ளைக்கே கொடுக்கப்பட்டது. மற்றொன்றை அவர் கா. நமசிவாய முதலியார் அவர்களிடம் கொடுத்தார். முதலியார் உபகார மனப்பான்மையுடையவர். இந்த அண்ணாச்சி உதவி செய்ய எண்ணி அந்தக் காகிதப் பிரதியை விலை கொடுத்து வாங்கிக் கொண்டார். (ரூபா 150 என்று கேள்வி) பின் முதலி யார் அதை அச்சிட எண்ணம் கொண்டு வையாபுரிப் பிள்ளை யிடம் உசாவியபோது, அவர் மற்றொரு பிரதி கிடைத்திருப்பது தெரிந்து மிக்க மகிழ்ச்சியடைந்து வாங்கிப் பார்க்கவும், இது தம்முடைய காகிதப் பிரதியின் நகலே என்று தெரிந்தது; அண்ணாச்சியின் திருவிளையாடல் என்று இதைக் குறிப்பிடு வார். தாம் வாங்கின காகிதப் பிரதி ஆதாரமான பிரதியல்ல என்றும், உரையை அப்போது சிதம்பரம் பிள்ளை அச்சிட்டுக் கொண்டிருந்தார் என்றும் முதலியார் தெரிந்து, தமது அச்சு முயற்சியைக் கைவிட்டார். உரிய காலத்தில் சிதம்பரம் பிள்ளை பதிப்பு வெளியாயிற்று.

இப்படி நிகழ்ந்த அண்ணாச்சியின் திருவிளையாடல்கள் பல. ஒன்று, இதே சிதம்பரம் பிள்ளை அவர்களிடத்தில் சோடித் துக் கொடுத்து அச்சிடச் செய்த "இன்னிலை மூலமும் உரையும்". கைந்நிலை என்பது பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் ஒன்றா யிருக்க, இந்நிலை உண்மையான நூல் தான், பதினொண் கீழ்க் கணக்கில் ஒன்று என்று எண்ணி இவர் ஏமாந்துபோய் விட்டார். அண்ணாச்சியின் மற்ற இரு படைப்புக்கள் மூவடி முப்பதும், செங்கோன் தரைச் செலவும் ஆகும். இவை அதே பெயருடைய உண்மையான நூல்கள் என்றே நம்பி, அக்காலத்தில் அச்சிடப் பெற்றன.

இவர் இளம்பூரணர் உரைச் சிறப்புப் பாயிரம் என்ற பாடல் ஒன்றைப் பெயர் விழையான் என்ற கைச்சாத்தோடு 1922இல் செந்தமிழ்ப் பத்திரிகையில் வெளியிட்டார். அப்பாடல் 'தண் கடல் அசை வளி' என்று தொடங்குவது, அச்செய்யுளின் கீழ், அவர். 'திருவருளால் தொல்காப்பியப் பொருளதிகாரத்துக்கு

உரையாசிரியருரை முற்றிய ஏடொன்று எனக்குச் சேந்தன் மங்கலத்தில் கிட்டிற்று. அதனை ஆராய்ந்து அச்சிற்கு இலக் காக்கி முடிக்கச் சென்னை ஸ்ரீமான் கா. நமச்சிவாய முதலியார் அவர்கள் ஏற்று வெளிப்படுத்தி வருகிறார்கள். அவ்வேட்டின் தலைப்பில் பொறிக்கப்பட்டிருக்கும் இச்சிறப்புப் பாயிரத்தி னால் ஆராய்ச்சியாளர் பலருக்கும் பல உட்கோள் புலனாம் என எண்ணி விரைந்து செந்தமிழிற்கு அனுப்பாலாயிற்று" என்று எழுதியுள்ளார். இதுபற்றி இந்நூலகத்துள் 4ஆம் அத்தியாயத் தில் விளங்க ஆராய்ந்துள்ளோம். இப்புலவரின் புனைந்துரை களில் இதுவும் ஒன்று.

பதிப்பு வரலாற்று அறிவுக்கு உதவவேண்டும் என்ற எண் ணத்தினால் யாம் அறிந்த உண்மைச் சம்பவங்களை இங்கு கூறி யிருக்கிறோம்; யாரையும் குறைசொல்ல வேண்டுமென்ற நோக்கம் இல்லை. 1934 - 36ஆம் ஆண்டுகளில் வையாபுரிப் பிள்ளை யவர்களிடம் பழகியிருந்த அன்பர்களுக்கு இச்செய்தி நன்கு தெரியும்.

சிதம்பரம் பிள்ளை அச்சிட்ட இளம்பூரணர் உரை வர லாற்றை இந்த அளவு கூறினோம். பின்னால் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார் 1953ஆம் ஆண்டில் அச்சிட்ட இளம்பூரணர் உரைப் பதிப்பு புத்தகத்தையும் பார்த் தோம். இதனுள் பதிப்புரை ஒரு பக்கமும், செ.ரெ. இராமசாமிப் பிள்ளை என்ற பதிப்பாளர் எழுதிய முன்னுரை பன்னிரண்டு பக்கமும் உள்ளன. "இது வித்துவான் பாடத்திற்கு உரியதாக இருத்தலால் இதை அச்சிட்டோம்" என்று கழகத்தார் எழுதி யிருக்கிறார்கள். இதைப் பார்த்தபோது சிதம்பரநாத முதலியார் பாடிய மாணக்கர் பரணி நினைவுக்கு வந்தது:

எழுதாமல் ஒருநாளும் இருக்க வேண்டாம்
இருக்கின்றார் மாணாக்கர் எண்ணில் பல்லோர்
எடுத்தெடுத்து விலைகொடுக்கப் பெற்றோர் தாமும்
இருக்கின்றார் இருக்கின்றார் இருக்கின் றாரே.

வித்துவான் பட்டத்துக்குப் படிப்பவர்கள் தலையில் சுமத்து வதற்காக இப்புத்தகம் அச்சிடப்பட்டது; நோக்கம் வியாபார நோக்கமே. பொதுவாக இக்காலத்தில் தோன்றியுள்ள தமிழ் உணர்ச்சியைப் பயன்படுத்திக் கொண்டு தமிழ் நூல் வியாபா ரத்தைப் பெருக்குவோர்களில் இக்கழகத்தார் முன் நிற்பவர்கள்.

இவர்கள் பதிப்பில் முந்திய சிதம்பரம் பிள்ளை பதிப்பைப் பற்றி எங்கேனும் ஒரு வார்த்தை குறிப்பிட்டிருப்பார்களோ என்று முயன்று வரி வரியாகத் தேடிப் பார்த்தும் ஒரு குறிப்புக் கூடக் கிடைக்கவில்லை. இதனால் தான் இதை வியாபாரம் மட்டும் என்று சொன்னோம்.

வியாபாரம் மட்டும் அல்ல; கொள்ளை என்றும் சொல்ல வேண்டும். ஒருவர் உழைத்துச் செய்த காரியத்தை மற்றொருவர் அப்படியே பயன்படுத்திக் கொண்டால், அதைக் கருத்துலகத்தில் திருட்டு என்று சொல்வோம். இலக்கியத்துறையில் ஒருவர் கூறியதை மற்றொருவர், இடம் குறிப்பிடாமலும், நன்றி தெரிவிக்காமலும், அப்படியே எடுத்து ஒரு பக்கமோ, ஒரு பத்தியோ, வைத்துக் கொண்டாலும் கூட, ஆங்கிலத்தில் அதைப் பிளேஜியரிசம் (இலக்கியத் திருட்டு) என்று சொல்வார்கள். நூல் முழுமையும் இவ்வாறு நன்றி தெரிவிக்காமலே எடுத்து அச்சிட்டுக் கொள்வதைக் கொள்ளை என்று சொல்லலாம் அல்லவா?

இப்படிப்பட்ட தமிழ்க் கொள்ளைக்கு இந்த இருபதாம் நூற்றாண்டில் தமிழ்த் தொண்டு என்று பெயர். தமிழ்த் தொண்டானால் அதற்கும் உண்மையில் வழியுண்டு; இளம்பூரணர் உரையைத் தொண்டாகவே அச்சிட வழி உண்டு. சிதம்பரம் பிள்ளை பதிப்பில் பல பாடல்கள் விளங்கா மேற்கோளாக உள்ளன. பதிப்பின் காலம் 1936. அடுத்த ஆண்டில் (1937), டாக்டர் சாமிநாதையர், "தமிழ்நெறி விளக்கம் - பொருளியல்" என்ற சிறப்பான ஒரு சிறு அகப்பொருள் இலக்கணத்தை (கிடைத்தவரையில்) அச்சிட்டார்கள். இதனுள், இளம்பூரணர் பொருளதிகார உரையில் இடம் விளங்காத மேற்கோளாய் உள்ள 6 பாடல்கள் காணப்படுகின்றன; அந்நூலின் காலம் 9ஆம் நூற்றாண்டாகும். 1953இல் அச்சிட்ட புத்தகத்தில், இடமறிந்து இப்பாடல்களைக் குறிப்பிட்டிருந்தால், இதைத் தமிழ்த் தொண்டு என்றும் தமிழ் வளர்ச்சி என்றும் நாம் கருதலாம். அப்படி இடம் கண்டு இங்கு ஒன்றும் குறிப்பிடப் பெறவில்லை.

கிடைத்த ஒரே ஏட்டின் பிரதியில் இளம்பூரணர் உரையுள் பல இடங்கள் சிதைந்து போயின என்றும், அவ்விடங்கள் நச்சினார்க்கினியர் உரைகொண்டு பூர்த்தி செய்யப்பட்டன என்றும் வையாபுரிப்பிள்ளை குறிப்பிட்டிருக்கிறார். இவை அவர் பதிப்பில் பகர வளைவு வைத்து அடையாளமிட்டுக்

காட்டப்பட்டுள்ளன. அடையாளங்கள் நீக்கப்பட்டு, எல்லாம் ஒன்று போலக் கழகப் பதிப்பில் உள்ளன. இது நூலாராய்ச் சிக்கு இடர் விளைக்கும் செயல்; நச்சினார்க்கினியர் கூற்றை இளம்பூரணர் கூற்றாகக் கொள்ள நேரும். மேலும், மேற்கோள் தேடித் தொகுப்பது மிக மிகக் கடினமான வேலை. தொகுப் பவரிடம் பரந்த நூலறிவும் புலமையும், சிறந்த நினைவாற்றலும் வேண்டும். இதைச் செய்தோருக்கே இதன் அருமை தெரியும். வையாபுரிப்பிள்ளை மிக முயன்று தொகுத்த மேற்கோள் அகராதிகளை அப்படியே கிழித்து அச்சுக் கோத்துக்கொள்வது இவர்களுக்கு எளிதாய்ப் போய்விட்டது.

இலக்கியத் துறையில் ஆசிரியர்களைப் போற்ற வேண்டும், பணம் ஒன்றையே குறியாகக் கொண்டு ஆசிரியர்களைப் புறக் கணிப்பது பாதகச் செயல் என்று காட்டவே இவ்வரலாற்றைச் சொன்னோம்; மேலும் இது யாம் நேரில் அறிந்த செய்தி. தமிழ் நாடு முழுமையிலும் கிடைத்த ஒரே ஏட்டுப் பிரதியை ஆதார மாக வைத்து, தேசபக்தர் சிதம்பரம் பிள்ளையவர்கள் மிகவும் வறுமையில் வாடியிருந்த காலத்தில் அச்சிட்ட இந்நூலைக் கழகத்தார் அனாயாசமாக எடுத்து அச்சிட்டுக் கொண்டார்கள்: நன்றி ஒரு வார்த்தைகூட இல்லை. திருவள்ளுவர் ‘செய்ந் நன்றி யறிதல்’ பற்றி ஓர் அதிகாரமே கூறியுள்ளார். அதையும் அச்சிட்டு இவர்கள் வினியோகம் செய்கிறார்களேயன்றி, அதன்படி நடக் கச் சிறிதும் எண்ணவில்லை. தமிழ்த் தொண்டருடைய அகராதி யில் நன்றியறிதல் என்ற தொடர் இல்லை போலும்:

> எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம்; உய்வில்லை,
> செய்ந்நன்றி கொன்ற மகற்கு.

## இளம்பூரணரும் களவியலுரையும்

இனி இரண்டாவது கருத்து, மு. ராகவையங்கார் அவர்கள் செந்தமிழ்ப் பத்திரிகையில் எழுதிய ஒரு கட்டுரையில், (1906) இறையனார் களவியலுரைகாரர் இளம்பூரணராயிருக்க லாமோ என்ற ஓர் ஐயத்தை எழுப்பியிருக்கிறார்; இதை அவர் முடிவாகக் கூறவில்லை. அது பற்றிச் சில சொற்கள் இங்கு கூறலாம். அவர் கூறியுள்ள கருத்துக்கள் பின்வருவன: “வினை யின் நீங்கி என்ற தொல்காப்பியச் சூத்திரவுரையில் பேராசிரியர், ‘கடைச் சங்கத்தாருள் களவியற் பொருள் கண்ட கணக்காய னார் மகனார் நக்கீரர் இடைச் சங்கத்தாருக்கும் கடைச் சங்கத்

தாருக்கும் நூலாயிற்று தொல்காப்பியம் எனக் கூறலானும், பிற்காலத்தாருக்கு உரை எழுதினோரும் அதுகூறிக் கரிபோக்கி னாராதலாலும், அவர் புலவுத் துறந்த நோன்புடையர் ஆதலால் பொய் கூறார் ஆகலானும் என்பது' என்று சொல்வதால் நக்கீரர் களவியலுரை எழுதி நெடுங்காலமான பிறகு மற்றோர் ஆசிரியர் பிற்காலத்தாருக்கு உரை செய்தார். புலவுத் துறந்த நோன்புடை யமையார் என்று சொன்னமையால் இவர் துறவு பூண்டவர், இளம்பூரணரும் துறவியாதலால் இவரே அவராய் இருக்கலாம். என்மனார் என்னும் சொல்லுக்குக் களவியல் முதற்சூத்திர உரையில் சொல்லிய முடிவும் இளம்பூரணர் சொல்லதிகார முதற்சூத்திர உரையில் சொல்லும் முடிவும் ஒன்றாய் உள்ளன. சேனாவரையர் உரையாசிரியர் கருத்து என்று மட்டும் மறுத்தார்; களவியலுரையார் என்று சொல்லி மறுக்கவில்லை. ஆதலால் அவர் இருவரையும் ஒருவராகவே கருதியிருக்கலாம். பின்னும் அடியார்க்கு நல்லார் வேனிற் காதையின் தொடக்கத்தில் குமரி ஆறு கடல் கொண்ட செய்தி ஏற்றே பெறுதும் எனின், நக்கீரர் உரைத்த இறையனார் பொருளுரையானும், இளம்பூரண அடிகள் முகவுரையானும் பெறுதும் என்கிறார். இன்ன முகவுரை என்று சொல்லாமையால் அது முன் குறிப்பிட்ட களவியல் முக வுரையாய் இருக்கலாம். சிவஞான முனிவர் நக்கீரனாரிடத்தில் பக்தியுடையவர். அவர் களவியல் உரையை மறுத்த இடங் களில் களவியல் உரையைக் குறிக்க மாட்டார், உரையாசிரியர் செய்திருக்கக்கூடிய உரையையே குறிப்பிடுவார்."

இவற்றை ஆய்ந்து சில சொற்கள் சில சொல்லலாம். பேராசிரியர் சொல்வது பொருள் கண்ட நக்கீரர் என்பதும், உரை எழுதினோரும் என்ற தொடர்கள்: இவற்றுள் முரணில்லை. நக்கீரர் கண்ட உரையைப் பலநூறு ஆண்டுகள் கழித்து வேறொருவர் எழுதினார் என்பதே அவ்வுரையில் காணப்படும் கூற்று. ஆதலால் உரை எழுதினோர் மற்றொருவராகிய இளம் பூரணர் என்று கொள்ள முடியாது. அடுத்து, துறவி என்ற கருத்து. இதைக் கொண்டே ஒரு முடிவு செய்ய முடியாது. எழுதினவர் துறவியாய் இருக்கலாம். இருவரும் ஒருவர் என்ப தற்கு இது ஆதாரமாகாது. என்மனார் என்ற தொடருக்கு ஈரு ரைகளும் ஒன்றாய் இருப்பது தக்க ஏதுவாகாது, ஏனெனில் முன் வந்தோர் எழுதும் உரைகளைப் பின் வந்தோர் அப்படியே பெய்து கொள்வது ஒரு மரபு. இது கொண்டு இருவரும் ஒருவர் என்று சொல்ல முடியாது. இனி, இளம்பூரணர் எந்த முகவுரையும்

எழுதியதாக வரலாறு இல்லை. மற்று, மதுரைக் காஞ்சி உரையில் நச்சினார்க்கினியர் 'இராவணன் ஆளுதல் பாயிரச் சூத்திரத்து உரையாசிரியர் கூறிய உரையானும் உணர்க' என்று எழுதுகிறார். இது தொல்காப்பியப் பாயிரமாகும். இப்பகுதி இன்றுள்ள இளம்பூரணத்தில் கிடைக்கவில்லை. ஒருகால் தவறிப்போய் இருக்கலாம். அடியார்க்கு நல்லார் கூறும் முகவுரை என்பது கிடைக்காது போன இவ்வுரைப் பகுதியே ஆகலாம். இவற்றால் இராகவ ஐயங்கார் அவர்கள் குறிப்பிடும் கருத்து அத்துணைப் பொருத்தமுடையது அன்று என்பது தெளிவாகும்.

இது பற்றிப் பின்னும் இரு கருத்துக்களும் சொல்லலாம். ஒன்று, காலம். இறையனார் களவியலுரை எழுதி வைக்கப்பட்ட காலம் பத்தாம் நூற்றாண்டு என்று அறிஞர் அனைவரும் ஒரு முகமாய்ச் சொல்லுகிறார்கள். ஆனால் இளம்பூரணர் காலம் பதினொராம் நூற்றாடின் இறுதிப் பகுதி என்று நாம் இங்கு வரையறை செய்திருக்கிறோம். இருவரும் ஒருவர் என்ற கருத்து பொருந்தாமை தெளிவு. அன்றியும், களவியலுரையையும் இளம்பூரணர் உரையையும் ஒரு முறை மேலெழுந்த வாரியாகப் பார்த்தாலும் கூட, இரண்டுக்குமிடையே உள்ள அதிகமான வேறுபாடு எளிதில் புலப்படும். களவியலுரை எதுகை மோனை உடையதாய், ஓவிய நயமும் செய்யுள் ஓசையும் பொருந்தியுள்ள தான ஓர் அலங்காரமான உரைநடை. ஆனால் இளம்பூரணர் உரையோ சிறிய சொற்கள் கொண்டு சிறிய வாக்கியங்களைப் புனைந்து எளிதாகவும் தெளிவாகவும் செய்யப்பட்ட இனிய நடை. ஒன்றை எழுதியவர் மற்றொன்றை எழுத முடியாது.

பொருளில் காணும் ஒரு மாறுபாட்டை மட்டும் சொல்லி நிறுத்திக் கொள்வோம். 'பூப்பின் புறப்பாடு ஈரறு நாளும் - நீத்தகன்று உறையார் என்மனார் புலவர்' என்பது தொல்காப்பியம்; 'உறைதல் அறத்தாறு அன்றே' என்பது இறையனார் களவியல்: இதன் உரைகாரர், முந்நாளும் தலைமகள் சொற் கேட்கும் வழி உறைவானாவது, உறைந்த பின்னை ஒன்பது நாளும் கூடி உறைவானாவது' என்று பூப்பிலிருந்து பன்னிரு நாள் கணக்கிட்டுச் சொல்கிறார். ஆனால் இளம்பூரணர், 'பூத் தோன்றி மூன்று நாள் கழிந்த பின்பு பன்னிரண்டு நாளும் நீங்குதல் அறமன்று' என்று எழுதுகிறார். இருவரும் ஒருவரேயானால், ஓரிடத்தில் 3+9 நாள் என்றும், மற்றோரிடத்தில் 3+12 நாள் என்றும் எழுத நேராது: ஆதலால், இளம்பூரணர் களவியலுரை செய்தார் என்று கருத்து எழவே வழியில்லை.

காலம்

பவணந்தி முனிவர் இளம்பூரணரைத் தழுவித் தமது நன்னூலைச் செய்தார். சேனாவரையர் உரையாசிரியர் என்று கூறி இவர் கருத்தை மறுக்கிறார்; அவ்விதமே நச்சினார்க் கினியரும், இவர் உரையைத் தழுவியும் மறுத்தும் எழுதுகிறார். ஆதலால், இவர் காலம் பவணந்தி முனிவர், சேனாவரையர் காலமாகிய பதின்மூன்றாம் நூற்றாண்டுக்கும் நச்சினார்க்கினியர் காலமாகிய பதினான்காம் நூற்றாண்டுக்கும் முற்பட்டது என்பது தெளிவு. உரையாசிரியரான இளம்பூரண அடிகள் என்று அடியார்க்கு நல்லார் கூறுவதால் இவருடைய காலம், அவர் காலமாகிய பன்னிரண்டாம் நூற்றாண்டுக்கு முற்பட்டது என்பதும் தெளிவாகிறது. இனி, இவருடைய காலத்தின் கீழ் எல்லைக்கு ஒரு வரையறையும் கிடைக்கிறது. புறப்பொருள் வெண்பாமாலையும் தமிழ்நெறி விளக்கப் பாடலையும் இவர் எடுத்துக் காட்டுகிறார். வெண்பா மாலையின் காலமும் தமிழ் நெறி விளக்கத்தின் காலமும் ஒன்பதாம் நூற்றாண்டு என்பது பல ஆதாரங்களால் விளங்குகிறது. எனவே, இளம்பூரணர் இந்த நூற்றாண்டுகளுக்குப் பிற்பட்டவராகிறார். அதாவது பன்னிரண்டுக்கும் ஒன்பதுக்கும் இடைப்பட்ட காலம். எனவே, இவர் காலம் பதினோராம் நூற்றாண்டு என்பது பொருந்தும்.

பின்னும் சில குறிப்புக்கள் நமக்குப் பயன்படுவன. ஒன்று: எழுத்ததிகாரம் 175ஆம் சூத்திர உரையிலும் 248ஆம் உரையிலும் ‘பரணியாற் கொண்டான்’ என்ற தொடரை எடுத்துகாட்டாகத் தருகிறார். நாளுக்குப் பரணியும், திங்களுக்கு ஆடியும் குறிப் பிட்டிருக்கிறார். பரணி நாளைக் குறிப்பிட்டதில் ஒரு பொருள் இருக்கும் எனத் தெரிகிறது. இகர ஈற்று நாள்கள் வேறு சில இருக்க, இவர் ஏன் பரணியைக் குறிப்பிட்டார் என்பது கேள்வி. இவர் காலத்துக்கு முன் ஒரு பரணிப் பிரபந்தம் பாடப்பட்டி ருக்கும் போலும். வீரராசேந்திர சோழன் கூடல் சங்கமத்தில் மேலைச் சளுக்கிய மன்னாகிய ஆகவ மல்லனை வென்று ஒரு பரணிப் பிரபந்தம் கொண்டான் என்று ஒட்டக்கூத்தர் பாடிய வற்றால் அறிகிறோம். இவர் எடுத்துக்காட்டும் தொடர் அந்த பிரபந்தத்தை நினைவூட்டுகிறது; அந்த நினைவினாலேயே இவர் பரணியைக் குறிப்பிட்டிருக்கலாம். இச்சோழமன்னன் காலம் 1063 - 70.

தொல். எழுத்து. சூ. 52 'னகாரை முன்னர் மகாரங் குறுகும்' என னகாரம் மட்டும் கூறினார். இளம்பூரணர் உரையில் னகாரம் மட்டுமே சொல்லப்படுகிறது. ஆனால் பவணந்தி ணகாரமும் சேர்த்து லள மெய் திரிந்து ணன முன் மகாரம் னைந்தீ னாற்றிரும் செய்யுளிளே என்று கூறினார் - மருண்ம். பின்னால் நச்சினார்க்கினியர் தொல்காப்பிய உரையில் நன்னூலைத் தழுவி, ணகாரத்தின் முன்னர் மகாரங் குறுகும் என்கிறார். இதனால் காலமுறை தெளிவு இளம்பூரணர் 11 நூற்., நன்னூல் 13 நூற்., நச்சர் 14 நூற்.

பொருளதிகாரம் பதிப்பித்த காலத்துக்கு முன்னமேயே யாப்பருங்கல விருத்தியுரை அச்சிடப்பட்டமையால், பொருளதி காரம் பதிப்பித்தபோது, இளம்பூரணர் குறிப்பிட்ட சில மேற் கோள் பாடல்கள் யாப்பருங்கல விருத்தியில் இன்ன இடத்தில் காணப்படுகின்றன என்று ஒரு குறிப்பை இப்பதிப்பில் கொடுத் தார்கள். அனேகப் பாடல்கள் யாப்பருங்கல விருத்தியுள்ளும் இளம்பூரண விருத்தியுள்ளும் காணப்படுகின்றமையால், இருவருள் யார் முந்தியவர் யார் பிந்தியவர் என்று இதுகொண்டு மட்டும் சொல்ல முடியாது.

இதைத் தெளிவுபடுத்தத் தக்க முறையில் மற்றொரு குறிப்புக் கிடைக்கிறது. 'மன்றல் எட்டனுள்' என்பதற்கு இவர் உரை எழுதுமிடத்து. எட்டு வகை மணங்கள் யாவை என்று சுருக்க மாக எழுதுகிறார். அவற்றுள் தெய்வமணம் என்பது பற்றிய விளக்கம் நமக்கு ஒரு குறிப்புத் தருகிறது. தெய்வமணம் என்பது கேள்வியாசிரியருக்குப் பெண்ணை மணம் செய்து கொடுப்பது என்று யாப்பருங்கல விருத்தி உரைகாரர் கூறி, மேற்கோளாக ஒரு வெண்பாவும் தருகிறார். ஆனால் இளம்பூரணர் தெய்வ மாவது, 'வேள்விக்கு ஆசிரியராய் நின்றார் பலருள்ளும் ஒருவற்கு வேள்விக்கு முன்னர் கொடுப்பது' என்று எழுதுகிறார். இவர் ஆசிரியர் என்ற பொருளை இன்னும் வரையறைப்படுத்தி ஆசிரியர் பலருள்ளும் ஒருவற்கு என்று திட்டமாகச் சொல்வ தனால், இவர் விருத்திகாரருக்குப் பின்வந்தவர் என்று கருது கிறோம். விருத்திகாரர் காலம் 1010 - 1040 என்று முந்திய அத்தி யாயத்தில் முடிவு செய்தோம். எனவே, இளம்பூரணர் காலம் இதற்குச் சிறிது பிற்பட்டு இருத்தல் பொருந்துவதே. முன்னமே இவர் காலம் வீரராசேந்திரன் காலத்துக்குப் பிற்பட்டிருக்

கலாம் என்று சொல்லியதையும் பொருத்திப் பார்க்கும்போது, இவர் காலம் அதன்படி கி.பி. 1070 - 95ஆக இருத்தல் கூடியதே.

## தொல்காப்பிய உரை – உரையியல்பு

'தமிழ் நூல் ஒன்றே வல்ல உரையாசிரியர்' என்று சிவஞான முனிவர் இவரைக் குறிப்பிடுகிறார். அவர் கருத்தின்படி இவர் வடமொழியில் வல்லவர் அல்லாவிடினும், நல்ல பயிற்சியுடையவர் என்பதைத் தம் உரையுள் நன்கு காட்டுகிறார் படிமை என்பது ப்ரதிமா என்ற வடசொல்லின் திரிபு என்பார். படிமையோன் - தவ ஒழுக்கத்தை உடையோன். யவனர் - ஆரியச் சிதைவு, அருத்தாபத்தி என்னும் தருக்க நூற்பிரமாணத்தைக் குறிப்பிடுகிறார். ஒரு மந்திரம் போல, ' திரிதிரி சுவாகா, கன்று கொண்டு கறவையும் வத்திக்க சுவாகா' என்று சொல்லுகிறார். காம தந்திர நூல் பாரியாதிகாரம் என்று குறிப்பிடுகிறார்.

இவருடைய உரை தமிழ்ப் பண்பாட்டைப் போற்றிக் கூறுவது. துறவியான இவர், தம் சமய இலக்கியங்களுள் ஒன்றைத் தேர்ந்து உரை செய்ய முற்படாமல், ஒல்காப் பெருமைத் தொல்காப்பியம் என்ற சிறப்பு நூலைத் தேர்ந்து கொண்டதனால், இவருடைய தமிழார்வமும், சிறந்த பண்பும் நன்கு விளங்குகின்றன. சிறப்புப் பாயிரத்துக்கு உரை எழுதினார். அன்றியும், எழுத்ததிகாரத்துக்கும் சொல்லதிகாரத்துக்கும் மட்டும் அல்லாது, அகத்திணை, களவு, கற்பு, பொருள், மெய்பாடு என்று பெரும்பகுதி காதல் ஒழுக்கத்தினையே விதந்து கூறுகின்ற பொருளதிகாரத்துக்கும் இவர் உரை எழுத முன்வந்தமை, தமிழ்ப் பண்பாட்டில் இவருக்குள்ள பெருமதிப்பும் பண்பாடுமேயாகும். இவருக்குப்பின் வந்த சைனத் துறவியான பவணந்தி, எழுத்தும் சொல்லுமே சொன்னார்; பொருள் எடுத்தால் இன்பப்பகுதி சொல்லவேண்டுமே என்று அஞ்சி, விட்டார் போலும். ஆனால், இவருக்கு முன் தோன்றித் தாமும் சைனத் துறவியாயிருந்த திருத்தக்கதேவர் சிற்றின்பச் சுவையே பெருக்கி நூல் செய்தார். ஆன்றால் சிற்றின்பப் பகுதியைக் கூற வந்த நூலுரையில் கூட, காதற் சிறப்பையும் ஒழுக்கத்தையும் வரையறைப்படுத்தி உரைப்பது இவருக்குள்ள பெரும் சிறப்பு. காமம் பயனல்லாதது என்பதை வலியுறுத்திக் கூறுகிறார்: "இந்நூலகத்துக்கு ஒருவனும் ஒருத்தியும் நுகருங் காமத்திற்குக் குணமும் குலமும் செல்வமும் ஒழுக்கமும் இளமையும் அன்பும் ஒருங்கு

உளவழி இன்பம் உளதாம் எனவும், கைக்கிளை ஒரு தலை வேட்கை எனவும் பெருந்திணை ஒவ்வாக் காமமாய் இன்பம் பயத்தல் அரிது எனவும் கூறதலான், இந்நூலுடையார் காமத்துப் பயனின்மை உய்த்துணர வைத்தவாறு அறிந்து கொள்க."

தொல். எழுத்து 374ஆம் உரையில் இல்லென் கிளவி உரை. அல்வழி வேற்றுமையாவன என்று தொடங்கும் பகுதி. இது மிகவும் அபூர்வம். சிலர் ஒலியூன்றல் என்கிறார். முந்திய பாரா விலும் இந்தப் பாராவிலும் போலும் போலும் என்று இவர் எழுதுவது இவர் தயக்கத்துக்கு எடுத்துக்காட்டு. இத்தயக்கத் தால் இவருக்கு முன் உரைகள் சொல்லப்பட்டனவேயன்றி நூலாக எழுதப் பெறவில்லை என்பது தெளிவு. இத்தகைய சிறப்பான நோக்கமுடைய உரையாசிரியர் எவ்விடத்தும் எளிய முறையில் தெளிவாகச் சுருங்கவே தம் உரையை எழுதுகிறார். நடுநிலைமையாக, இனிமையாக எழுதுகிறார். இருபதாம் நூற் றாண்டில், பேச்சு நடையை ஒட்டியே எழுத்து நடையும் சென் றால்தான் மொழி வளர்ச்சியுண்டு என்று பேரறிஞர் உலகெங் கும் சொல்லி வரக் காண்கிறோம். இவ்வியல்பை ஓரளவுக்கு இவர் உரையுள் காணலாம். முந்தையோர் நூல்களை, இவர் எடுத்தாண்ட மேற்கோள் பட்டியலைப் பார்த்தால் இவர் எவ் வளவு புலமையும் அந்நூல்களில் தோய்வும் உடையவர் என்று காணலாம். பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் அதிகமான வற்றை (10 நூல்கள்) மேற்கோளாக ஆளும் உரையாசிரியர் இவரே.

### விளக்கங்கள்

இளம்பூரணர் மிகவும் சிறப்பான விளக்கங்கள் தரும் இடங்கள் பலமுறையும் படித்து மகிழத்தக்கன. களவியல் முதற் சூத்திர உரையில் இன்பமும் பொருளும் அறனும் என்று தொடங்குவதைப் பின்வருமாறு பொருத்திக் காட்டுகிறார் "அறனும் பொருளும் இன்பமும் என்னாது, இன்பமும் பொரு ளும் அறனும் என்றது என்னை எனின், பல வுயிர்கட்கும் வரும் இன்பம் இரு வகைப்படும். அவையாவன, போக நுகர்தலும் வீடு பெறுதலும் என. அவற்றுள் வீடு பேறு துறவறத்தில் நின்றார்க் கல்லது எய்தல் அரிதாயிற்று. போகநுகர்தல் மனையறத்தாற் செய்வது. அவரெய்தும் இன்பமும் அவ்வின்பத்திற்குக் காரண மாகிய பொருளும் அப்பொருட்கட்குக் காரணமாகிய அறனும் எனக் காரிய காரணம் நோக்கி வைத்தார் என்க. இதனாற்

சொல்லியது ஈண்டுக் களவென் றோதப்படுகின்ற ஒழுக்கம் அறம் பயவாத புறநெறியன்று; வேதவிதியாகிய தந்திரம் என விகற்பமாகிய நெறி கூறியவாறு.''

அகப்பொருளை இவர் விரித்துக் கூறியதற்கு ஒரு விளக்கம் தருகிறார். 'அறம் பொருள் இன்பம் வீடு என உலகத்தோரும் சமயத்தோரும் கூறுகின்ற பொருள் யாதனுள் அடங்குமெனில் அவையும் உரிப் பொருளினுள் அடங்கும் ..... அகத்திணை இயலானும் களவியலானும் கற்பியலானும் இன்பப்பகுதி கூறினாராம். அஃதேல் பிற நூலாசிரியர் விரித்துக் கூறினார் போல, அறமும் பொருளும் விரித்துக் கூறாதது என்னையோ வெனின், உலகத்தில் நூல் செய்வார் செய்கின்றது, அறிவிலா தாரை அறிவு கொளுத்த வேண்டியன்றே; யாதானும் ஒரு நூல் விரித்தோதிய பொருளைத் தாமும் விரித்து ஓதுவாராயின், ஓதுகின்றதனாற் பயன் இன்றாமாதலால், முன்னூலாசிரியர் விரித்துக் கூறின பொருளைத் தொகுத்துக் கூறலும் தொகுத்துக் கூறின பொருளை விரித்துக் கூறலும் நூல் செய்வார் செய்யும் மரபு என்று உணர்க. அஃதேல் இந்நூலகத்து விரித்துக் கூறிய பொருள் யாதெனின், காமப் பகுதியும் வீரப்பகுதியும் என்க. இன்பம் காரணமாகப் பொருள் தேடும் ஆகலானும், பொரு ளானே அறஞ்செய்யும் ஆகலானும், இன்பமும் பொருளும் ஏற்றம் என ஓதினார் என உணர்க.'

உன்னநிலை - வீரவேந்தனை உன்ன மரத்துடன் காட்டிப் புகழ்வது. இம்மரம் தெய்வத் தன்மையுடையதாய்த் தன்னாட் டுக்குக் கேடு வருங்கால் உளறியும் வாராத காலம் குழைந்தும் நிற்கும்.

பருவமும் பொழுதும் பற்றி இவர் கூறும் விளக்கம் சிறப்பு. காராவது மழை பெய்யும் காலம். அஃது ஆவணித் திங்களும் புரட்டாசித் திங்களும் என்று இவர் குறிப்பிடும் காலநிலை மாறிவிட்டது. இப்போது இவரது நாட்டில் இம்மாதங்களில் மழை பெய்யாமல் அடுத்த ஐப்பசி கார்த்திகை மாதங்களில் பெய்கிறது என்பது அறியத்தக்கது. 'இவ் வறுவகைப் பருவமும் அறுவகைப் பொழுதும் இவ்வைந்திணைக் குரியவா றென்னை யெனின், சிறப்பு நோக்கி என்க. என்னை சிறந்தவாறு எனின், முல்லையாகிய நிலனும் வேனிற்காலத்து வெப்பம் உழந்து மரனும் புதலும் கொடியும் கவினழிந்து கிடந்தன புயல்கள் முழங்கக் கவின்பெறுமாகலின், அதற்கது சிறந்ததாம். மாலைப்

பொழுது இந்நிலத்திற்கின்றியமையாத முல்லை மலரும் காலமாதலானும், அந்நிலத்துக் கருப்பொருளாகிய ஆனிரை வரும் காலமாதலானும், ஆண்டுத் தனியிருப்பார்க்கு இவை கண்டுழி வருத்தம் மிகுதலின், அதுவும் சிறந்ததாயிற்று. குறிஞ்சிக்குப் பெரும்பான்மையும் களவிற் புணர்ச்சி பொருளாதலின், அப்புணர்ச்சிக்குத் தனியிடம் வேண்டுமென்றே, அது கூதிர்க் காலத்துப் பகலும் இரவும் நுண்துளி சிதறி இயங்குவார் இலராமாதலான், ஆண்டுத் தனிப்படல் எளிதாகலின், அதற்கது, சிறந்தது, நடுநாள் யாமமும் அவ்வாறாகலின் அதுவும் சிறந்தது. மருதத்திற்கு நிலன் பழனஞ் சார்ந்த இடமாதலான், ஆண்டு உறைவார் மேன்மக்களாதலின், அவர் பரத்தையிற் பிரிவுழி அம்மனையகத்து உறைந்தமை பிறர் அறியாமை மறைத்தல் வேண்டி வைகறைக்கண் தம்மனையகத்துப் பெயரும் வழி, ஆண்டு மனைவி ஊடலுற்றுச் சாரகில்லாளா மாதலால், அவை அந்நிலத்திற்குச் சிறந்தன. நெய்தற்குப் பெரும்பான்மையும் இரக்கம் பொருளாதலின், தனிமையுற்று இரங்குவார்க்குப் பகற்பொழுதினும் இராப்பொழுது மிகுமாதலின், அப்பொழுது வருதற்கேதுவாகிய எற்பாடு கண்டார் இனிவருவது மாலையென வருத்தமுறுதலின் அதற்கது சிறந்ததென்க.'

மெய்ப்பாட்டியலில் சுவை என்பதை நன்கு விளக்குகிறார். இன்றும்கூட அனேகர், காணப்படும் பொருளையே சுவை என்று கருதுகிறார்கள். இவர் சுவை என்பது 'காணப்படும் பொருளால் காண்போர் அகத்தில் வருவதோர் விகாரம்' என்று எழுதுவது சுவைக்குச் சுருக்கமான சிறந்த விளக்கமாகும். இவ்விடத்து இவர் செயிற்றியச் சூத்திரங்கள்* பலவற்றை மேற்கோள் தருகிறார். அடியார்க்கு நல்லார் நாடகத் தமிழுக்கு இலக்கணம் வகுக்கும் சிறந்த நூல்களாகச் செயிற்றியம் முறுவல் சயந்தம் என்பவற்றைக் கொண்டிருந்தார். பொருள் இலக்கணத் துறையில் மெய்ப்பாட்டுக்குக் காரணமான உள்ளத்துணர்ச்சியை அறிவதற்கும் அதை இலக்கியத்தில் அமைப்பதற்கும் இவ்வகை இலக்கண அறிவு வேண்டுவதாகும். ஆதலால் செயிற்றியச் சூத்திரங்

* செயிற்றியர் செய்தவை செயிற்றியச் சூத்திரம். இவர் அகப் பொருளில் வரும் கூற்றுக்கள் இன்னாருக்கு உரியவை என்பதை விளக்கும் நூலாக, செயிற்றியனார் கூற்றியல் என ஓர் இலக்கண நூல் செய்தாரென்று இறையனார் களவியலுரையால் அறிகிறோம். மேலும் இவரது ஊர் பேரூர் என்பதைப் பேரூர்கிழான் செயிற்றியன் என்று சேனாவரையர் கூறுவதனால் (தொல்காப்பியம் சொல்லதிகார உரை) பெறுகிறோம்.

கள் நாடகத்துக்கு மட்டுமன்றி பொருளிலக்கணத்துக்கும் சிறப்பான துணையாய் இருக்கும். இளம்பூரணரும் இவ்விடத்தில் இவற்றின் பிரிவை நாடக நூலில் காண்க என்று எழுதுகிறார். ஒன்பதாவது சுவையாகிய சாந்தம் என்பதைத் தொல்காப்பியர் சொல்லாவிட்டாலும் இவர் அதை நடுவு நிலைமை மத்திமம் என்று குறிப்பிட்டு, 'இது யாதொன்றாலும் விகாரப்படாமை, இது மற்றச் சுவையோடு பொருந்தாது. இது ஒப்ப, நிற்கும் நிலை. காமம் வெகுளி மயக்கம் நீங்கிய வாய்மையாளர் பிற சுவைகள் எட்டும் இல்லாதோர் ஆதலினால் இச்சுவையைத் தலைப்படுவோர் என்று எழுதுகிறார்.

தாபத நிலையைக் கூறுமிடத்து இவர் பின்வரும் எட்டு நிலையைக் கூறுகிறார் - நீராடல், நிலத்திடைக் கிடத்தல், தோலுடுத்தல், சடைபுனைதல், எரியோம்பல், ஊரடையாமை,* காட்டிலுள்ள உணவு கோடல், தெய்வ பூசையும் அதிதி பூசையும் செய்தல்.

'பொருளியல் - இதனை ஒழிபியல் எனினும் இழுக்காகாது; அகப்பொருள் புறப்பொருள் என்பன இரண்டு பொருண்மையினும் எஞ்சி நின்றன கூறினமையின்' என்பார்.

எனினும் அருமையாய்ச் சில இடங்களில் சுவைபடவே எழுதுவார்: "பாயிரமென்பது புறவுரை, அது நூற்குப் புறவுரையேல், அதுகேட்டு என்னை பயனெனின், கற்று வல்ல கணவற்குக் கற்புடையாள் போல, இன்றியமையாச் சிறப்பிற்றாயும், திருவமைந்த மாநகரத்துக்கு உருவமைந்த வாயின் மாடம் போல அலங்கார மாதற் சிறப்பிற்றாயும் வருதலானும், பாயிரம் கேளாதே நூல் கேட்குமே எனின் குறிச்சி புக்க மான்போல மாணாக்கன் இடர்ப்படுமாகலானும், பாயிரங்கேட்டல் பயனுடைத்தாயிற்று..... அந்நூலிற் சொல்லப்படுகின்ற பொருள் முதலிய உணர்த்துதலின் அணியிழை மகளிர்க்கு அவ்வணியிற் சிறந்த ஆடை போல நூற்குச் சிறத்தலாற் சிறப்பெனப்பட்டது". 'வாளா தோதும் சூத்திர மெல்லாம், வழக்கே நோக்கும் செய்யுங் காயிற் கிளந்தே யோதும், - சொல் 22. 'எந்தை வருக எம்பெருமான் வருக, மைந்த வருக' - சொல். 38 - சேனாவரையர் இங்கு 'மணாளன் வருக' என்று சேர்த்துச் சொல்கிறார். இத்தொடர் ஒரு பாடலின் தொடக்கமோ என்றெண்ணுமாறும் உள்ளது.

---

* ஊரடையாமை என்பதுதான் இக்கால வேதாந்தத் தாபதர் கைக்கொள்ளும் சாதுர்மாஸ்ய விரதம் என்பது.

விளக்கமுறும்படியும் சுவைபடும்படியும் இவர் உவமை கூறுவார். முதல் கரு உரி என்ற மூன்றினாலும் திணையாகும் என்று கூறி, பின் விளக்குவார் (பொருள் 3): ஒரு பொருட்கு ஒரு காரணம் கூறாது மூன்று காரணம் கூறியது என்னையெனின், உயர்ந்தோர் என்றவழிக் குலத்தினான் உயர்ந்தாரையும் காட்டும், கல்வியான் உயர்ந்தாரையும் காட்டும், செல்வத்தான் உயர்ந் தாரையும் காட்டும்; அதுபோலக் கொள்க.' எழுத்ததிகாரத்தில் (170) அளவுப்பெயருக்கும் நிறைப்பெயருக்கும் முதலில்வரும் எழுத்துக்கள் க ச த ப ந ம வ அ உ என்று சூத்திரத்துட் சொல்லப் பட்டன. இளம்பூரணர் இப்பெயர்களைச் சுட்டிச் சொல்லா விட்டால் பெயர்கள் யாருக்கும் விளங்கப்போவதில்லை. அளவு - கலம் சாடி தாதை பானை நாழி மண்டை வட்டி அகல் உழக்கு; நிறை - கழஞ்சு சீரகம் தொடி பலம் நிறை மா வரை அந்தை. (நிறையில் உகரத்துக்குரிய பெயர் எழுதினோர் பிழையால் விடு பட்டது போலும்) 'நிலம் நீர் தீ வளி விசும் போடைந்தும் - கலந்த மயக்கம் உலகம்' (பொருள். 635) என்பதன் உரையில் கலத்தல் - மயக்கம் என்ற இரு கருத்துக்களையும் இவர் விளக்கிக் கூறுவது மிக்க சிறப்பு. “உலகு, நில முதலாகிய ஐம் பெரும் பூதம் கலந்த மயக்கமாதலான் மேற்சொல்லப்பட்ட பொருள்களைத் திணையும் பாலும் வழாமல் திரிபுபடாத சொல்லோடே தழுவுதல் வேண்டும் என்றவாறு. கலத்தலாவது முத்தும் பவளமும் நீலமும் மாணிக்கமும் விரவினாற் போறல். மயக்கமாவது பொன்னும் வெள்ளியும் செப்பும் உருக்கி யென்றாதல் போறல். உலகமென்றது உலகினையும் உலகினுட் பொருளையும். உலகமாவது முத்தும் மணியும் கலந்தாற்போல நிலம் நீர் தீ வளி ஆகாயம் என விரவி நிற்கும். உலகினுட் பொருள் பொன்னும் வெள்ளியும் செம்பும் உருக்கி யொன்றானாற்போல வேற்றுமைப்படாது நிற்கும்; அவ்விரண்டினையும் உலகம் உடைத்தாகலிற் கலந்த மயக்கமென்றார்.

தமக்குமுன் வழங்கிய வரலாற்றுச் செய்திகள் சிலவும் அறிந்து குறிப்பிடுகிறார். பன்னிருபடல வரலாற்றுக்கதையை இவர் மறுத்துரைத்த செய்தி முன்னமே சொல்லப்பட்டது. சீத்தலைச் சாத்தனார் சீத்தலையுடையவர் என்ற செய்தியை ஏற்றுக் குறிப்பிடுகிறார். தொல்காப்பியர் அகத்தியர் மாணாக்கர் பன்னிருவருள் ஒருவர் என்பதைச் சொல்லுகிறார்; பிற கதை களைச் சொல்லாவிடினும், அவர் காப்பியக்குடியினர் என்கிறார். அடிசிற்கினியாளே என்ற பிரசித்தமான பாடலைப் பாட

பேதங்களோடு குறிப்பிடுகிறார்; வரலாறெதுவும் சொல்ல வில்லை. பாண்டியன் மாகீர்த்தி அவைக்கண்ணே தொல்காப் பியம் அரங்கேற்றப்பட்டது என்று பெயர் குறிப்பிடுகிறார்.

இங்ஙனமே இவர் கூறும் மயிலாப்பிற் கொற்றன், குறிப்பாடி, கொடும்புறமருதி, அம்பர்கிழான், பேரூர்கிழான், சங்கிராமத் தார், பட்டிபுத்திரர் முதலான தொடர்கள் பல்வேறு செய்தி களைக் குறிப்பிடுவன போலும்.

இளம்பூரண அடிகள் சைனர். இவர் காலத்தில் களப்பிரர் என்னும் கலி நீங்கி நெடுநாளாயிற்று. சோழர் தலைமையில் நாடு வெகுவேகமாக முன்னேறி வந்தது. நாட்டு வரலாற்றை இவர் நன்குணர்ந்திருந்தார் போலும். ஆகவே, தாம் வாரிசாக வந்த சமண சமயம், பொதுவாகத் தமிழ் மக்கள் ஏற்காதது என்று நன்குணர்ந்து, தமது சமயச்சார்பு புலப்படாதபடியே மிகவும் அழகாகத் தமது உரையையும் மேற்கோள் பாடல்களையும் அமைத்துச் செல்கிறார். யாப்பருங்கல விருத்தியிலோ வேறு ஆசிரியர்களுடைய உரைகளிலோ காணப்படுகின்ற அளவுக்கு இவருடைய உரையில் சைனச் சார்புடைய பாடல்கள் மிகவும் குறைந்தே காணப்படுகின்றன. தொல்காப்பியருக்குப் பிறகு நெடுங்காலம் நூல் மரபு, சிறப்பாகப் பொருளிலக்கண மரபு, விட்டுப்போனமையால் இவர் தம் கற்றவற்றையும் கேட்டவற்றை யும் வைத்துப் பழம் பெரும் நூலாகிய தொல்காப்பியத்துக்கு மிகவும் நிதானித்தே உரை சொல்லுகிறார். இவர் கேட்டறிந்த விளக்கங்களையெல்லாம் ஆங்காங்கு குறிப்பிட்டு எழுதுகிறார். ஒருசார் ஆசிரியன் கூறும்; என்பர் ஒரு சாரார்; என்பர் ஒரு திறத்தார்; என்பாரும் உளர், பிறிதுமோர் பொருள் உரைப் பாரும் உளர் என்றெல்லாம் இவர் குறிப்பிடுகிறார். இவ்வாறு எழுதுவாரும், இவ்வாறு எழுதுவாரும் என, இருதிறத்தார் ஆசிரியர் எனத் திட்டமாக இவர் குறிப்பிடுகின்றபடியால், இவ ருக்கு முன்னும் தொல்காப்பிய உரை இருந்தது என்று நாம் அறிகிறோம். ஒருகால் பாடமாகக் கற்பிக்கும் மரபே இருந்தது, எழுதி வைத்த உரை இல்லை என்றும் கருதலாம்.

இவர் பிறர் உரையைச் சொல்விச் செல்கிறாரேயன்றி, எங்குமே பிறரை மறுக்கும் வழக்கமில்லை. இந்த முறையில் இவர் பின்வந்தோரினும் பார்க்க ஒரு நாகரிகமான உரை முறையை வகுத்துத் தந்திருக்கிறார் என்று சொல்லலாம். பின் வந்தோரிடம் வந்த கண்டனம் இவரிடத்து இல்லை. ‘இதுவும்

மெய்யுரை போலும்' என்று சொல்லுவது, முதல் உரையாதலால், இவர் ஆய்ந்து சொல்லுகின்ற கருத்து என்று கருதவேண்டும்.

பிறர் மதம் என்று ஓரிடத்தில் கூறுகின்றார். உழிஞை இரு நால் வகைத்து என்று முதற் சூத்திரத்திற் கூறி, அடுத்து, இவை யாவை என்று விளக்கி முடிக்குமிடத்து, மீண்டும் 'சொல்லப் பட்ட இருநால் வகைத்தே' என்று கூறியிருப்பதற்கு இவர் பின்வருமாறு விளக்கம் தருகிறார்: 'பதினெட்டு இருபத் தொன்பது என்பார் மதம் விலக்கியமை தோன்றப் பெயர்த்தும் தொகை கூறினார்; இது கூறியது கூறலன்று, தொகை'.

சூத்திரம் விடுபட்டது என்று ஓரிடத்தில் குறிப்பிடுகிறார். "எஞ்சியோர்க்கும் எஞ்சுதல் இலவே" என்ற 45ஆம் சூத்திர உரையில், "முன்னர்க் கூறாது எஞ்சி நின்ற தலைமகட்டும் பாங்கற்கும் பார்ப்பார்க்கும் பாணர்க்கும் கூத்தர்க்கும் உழை யோர்க்கும் கூற்று நிகழுமாறு உணர்த்துதல் நுதலிற்று. பாங்கர் முதலாயினாரை இச்சூத்திரத்தாற் கூறுப; 'தலைமகள் கூற்றுத் தனித்துக் கூறுதல் வேண்டும், இவரோடு ஒரு நிகர் அன்மை யின்' எனின், ஒக்கும்; தலைமகள் கூற்று உணர்த்திய சூத்திரம் காலப்பழமையாற் பெயர்தெழுதுவார் விழ எழுதினார் போலும்" என்று எழுதுகிறார். இவர் காலத்திலேயே சூத்திரம் தவறி விட் டது என்ற கருத்துத் தோன்றிருப்பது சிந்திக்கத் தக்கது.

பிறர் உரையை இவர் குறிப்பிடும் இடங்கள் சொல்லதி காரத்திலேயே அதிகமாய் உள்ளன.

இளம்பூரணருக்கு ஒன்றரை நூறு ஆண்டுகள் பிற்பட்டு வந்த பவணந்தி முனிவர் இவருரையை நன்கு பயின்று, அதன் படியும், காலமாறுதல்களினால் ஏற்பட்ட மொழி வளர்ச்சியின் படியும், தொல்காப்பியத்தைத் தழுவிய புது நூல் வேண்டும் என்று உணர்ந்து தம் நன்னூலைச் செய்தார்; இதனுள் பல கருத்துக்கள் இளம்பூரணருடையவை. அப்படியே இவருக்கு இருநூறு ஆண்டுகள் பின்வந்து சொல்லதிகார உரைசெய்த சேனாவரையரும், அவருக்கு அடுத்த நூற்றாண்டில் தொல் காப்பியம் முழுமைக்கும் உரைசெய்த நச்சினார்க்கினியரும், இவருடைய உரையைச் சில இடங்களில் தழுவியும் சில இடங் களில் மறுத்தும் உரை செய்திருக்கிறார்கள்.*

---

* இம்மூவரும், எங்கு தழுவியும் எங்கு மறுத்தும் எழுதினர் என்ப வற்றை, கு. சுந்தரமூர்த்தி தம் தொல்காப்பிய இளம்பூரண எழுத்து - சொல்லதிகாரப் பதிப்புக்களில் நன்கு விளக்கியுள்ளார்.

இவர் உரையை 'உளங்கூர் உரையாம் இளம்பூரணம்' என்று இலக்கணக் கொத்துரை கூறும்.

சொற் பொருள்

ஆங்காங்கு சுவையான சொற்பொருள்கள் கூறுகின்றார். வேளாண்மை - உபகாரம், பெண்டிர்க்குரியதோர் இயல்பு. இந்த இடத்து (பொருளதிகாரம் 206) சில சொற்களுக்குச் சிறப்பாகப் பொருளுரைக்கிறார். செறிவு - அடக்கம்; நிறைவு - அமைதி; செம்மை - மனம் கோடாமை; செப்பு - சொல்லுதல்; அறிவு - நன்மை பயப்பனவும் தீமை பயப்பனவும் அறிதல்; அருமை - உள்ளக் கருத்து அறிதல். பெருமையாவது பழியும் பாவமும் அஞ்சுதல். உரன் என்பது அறிவு. மடம் என்பது பொருண்மை அறியாது திரியக்கோடல். பேதைமை என்பது கேட்டினை உய்த்துணராது மெய்யாகக் கோடல். பரிபாட்டாவது பரிந்த பாட்டாம்: அதாவது ஒரு வெண்பாவாக வருதலின்றி பல உறுப்புகளோடு தொடர்ந்து ஒரு பாட்டாகி முற்றுப் பெறுவது. பரிபாடலில் மலையும், யாறும் ஊரும் வருணிக்கப் படும் என்பார். புலவி - அண்மைக் காலத்தது; ஊடல் அதனினும் மிக்கது.

243ஆம் சூத்திரமாகிய 'ஒப்பும் உருவும் வெறுப்பும்' என்பது, முதற் கருவுரிப் பொருளெனப் 'பாகுபடுத்திக் காட்டலாகாதன சில பொருள்கள் கண்டு அவற்றைத் தொகுத்துணர்த்துதல் நுதலிற்று' என்று கூறி, எவ்வாறு காட்டலாகாதன என்பதை விளக்குகிறார்.இங்கு சொல்லிய பதினொரு பொருள்களும் பொருட் சிறப்புடையனவாதலால், அவற்றை முழுமையும் இங்கு தருகிறோம். "ஒப்புமுதலாக நுகர்ச்சி ஈறாக அவ்வழி வரும் சொல்லெல்லாம் நாட்டின் வழங்குகின்ற மரபினானே பொருளை மனத்தினான் உணரினல்லது மாணாக்கர்க்கு இது பொருள் என வேறுபடுத்தி ஆசிரியன் காட்டலாகாத பொருளையுடைய என்றவாறு. ஒப்பு ஆவது - தந்தையையொக்கும் மகன் என்பது. அவ்விருவர்க்கும் பிறப்பு வேறாயின வழி ஒப்பாகிய பொருள் யாதென்றார்க்கு இதுவெனக் காட்டலாகாமையின், அவ்விருவரையுங் கண்டான் அவ்வொருவ ரொருவரை ஒக்குமாறு ஒக்குமது பிறனொருவன் மாட்டுக் காணாமையிற் றானே அப்பொருண்மையை உணரும் என்பது. உரு என்பது - உட்கு. அது பயிலாத பொருளைக் கண்டுழி வருவதோர் மன நிகழ்ச்சி. இவருட்கினார் என்ற வழி மனத்தினான் உணரக்

கிடந்தது. வெறுப்பு என்பது - செறிவு. அது அடக்கம் குறித்து நின்றது. அவரடக்கமுடையர் என்ற வழியதுவும் மனத்தினான் உணரக் கிடந்தது. கற்பு என்பது - மகளிர்க்கு மாந்தர் மாட்டு நிகழும் மன நிகழ்ச்சி. அதுவும் மனத்தானுணரக் கிடந்தது. ஏர் என்பது - தளிரியின்கட் டோன்றுவதோர் பொலிவு போல, எல்லாவுறுப்பினும் ஒப்பக் கிடந்து கண்டார்க் கின்பத்தைத் தருவதோர் நிறவேறுபாடு. அது எல்லா வண்ணத்திற்கும் பொதுவாகலின், வண்ணம் அன்றாயிற்று, இது வண்ணம் பற்றி வரும். 'இவன் ஏருடையன்' என்றால் அதுவும் மனங்கொளக் கிடந்தது. எழில் என்பது - அழகு. அது மிக்குங் குறைந்தும் நீடியும் குறுகியும் நேர்தி உயர்ந்தும் மெலிதாகியும் வலிதாகியும் உள்ள உறுப்புக்கள் அவ்வளவிற் குறையாமல் அமைந்த வழி வருவதோர் அழகு. இதுவும் அழகியன் என்றவழி அழகினைப் பிரித்துக் காட்டல் ஆகாமையின் ஈண்டோதப்பட்டது. சாயல் என்பது - மென்மை; அது நாயும் பன்றியும் போலாது மயிலுங் குயிலும் போல்வதோர் தன்மை. அதுவுங் காட்டலாகாமையின் ஈண்டோதப்பட்டது. நாண் என்றது - பெரியோர் ஒழுக்கத்து மாறாயின செய்யாமைக்கு நிகழ்வதோர் நிகழ்ச்சி. அதுவுங் காட்டலாகாது. மடன் என்பது - பெண்டிர்க்குள்ளதோர் இயல்பு. அது உய்த்துணர்ந்து நோக்காது கேட்ட வாற்றாலுணரும் உணர்ச்சி. அதுவும் காட்டலாகாது. நோய் என்பது துன்பம். இவன் துன்பமுற்றான் என்றவழிஅஃதெத் தன்மையது என்றார்க் குக் காட்டலாகாமையின் அதுவும் ஈண்டோதப்பட்டது. வேட்கை என்பது - யாதானும் ஒன்றைப் பெறல் வேண்டுமெனச் சொல்லும் மனநிகழ்ச்சி. இவன் வேட்கையுடையான் என்றவழி அஃது எத்தன்மை என்றார்க்குக் காட்டலாகாமையின் ஈண் டோதப்பட்டது. ஆவயின் வருஉங் கிளவியெல்லாம் என்ற தனான், அன்பு அழுக்காறு பொறை அறிவு என்பனவும் இவை போல்வனவுங் கொள்க.”

75ஆம் சூத்திரம், புறத்திணை, எட்டுவகை நுதலிய அவை யகம், கட்டமை ஒழுக்கம் என்பவற்றைப் பின்வருமாறு விளக்கினார். 'எட்டுவகை குறித்த அவையகம் என்றமையான், ஏனைய அவையின் இவ்வவை மிகுதி உடைத்தென்றவாறு. அவையாவன - குடிப்பிறப்பு, கல்வி, ஒழுக்கம், வாய்மை, தூய்மை, நடுவுநிலைமை, அழுக்காறாமை அவாவின்மை என்பன .... இல்லறத்திற்கு உரித்தாக நான்கு வருணத்தார்க்கும்

சொல்லப்பட்ட அறத்தின் கண் நிற்றல். அவையாவன: அடக்க முடைமை, ஒழுக்கமுடைமை, நடுவு நிலைமை, வெஃகாமை, புறங்கூறாமை, தீவினையச்சம், அழுக்காறாமை, பொறை யுடைமை என்பன ..... அருளொடு புணர்ந்த அகற்சி - அருளொடு பொருந்தின துறவறம்; அஃதாவது அருளுடைமை, கொல்லாமை, பொய்யாமை, கள்ளாமை, புணர்ச்சி விழையாமை, கள்ளுண் ணாமை, துறவு என்பவற்றைப் பொருந்துதலாம்; அவற்றுள் அருளுடைமை யொழிந்த எல்லாம் விடுதலான் அகற்சி என்றார். அகற்சி - துறவு என்றவிடத்து இளம்பூரணருடைய துறவு நிலை வெளிப்படுகிறது எனக் கருதலாம். நச்சினார்க்கினியரும் இவர் கருத்துக்களையே கூறுவதும் காணலாம்.

அம்பல் என்பது முகிழ்த்தல்; அஃது ஒருவர் ஒருவர் முகக் குறிப்பினால் தோற்றுவித்தல்; அலராவது சொல்லுதல்.

**மேற்கோள்**

தொல்காப்பியத்தின் முதல் உரைகாரரான இளம்பூரணர் இலக்கிய இலக்கண உரைகாரருள் மிகப் பழமையான ஒருவர். இவருக்கு முன்பு தோன்றியிருந்த உரைகள் இறையனார் களவியல் உரையும் யாப்பருங்கல விருத்தி உரையும் மணக்குடவர் திருக்குறள் உரையுமாகும். விருத்தி மட்டும் பதினோராம் நூற்றாண்டு. மற்றவை பத்தாம் நூற்றாண்டு. ஆதலால் இவர் மேற்கோள்கள் காட்டும் நூல்களை அறிவது நூல்களின் கால அறிவுக்குப் பெரிதும் துணை செய்யும். இவர் மேற்கோள் காட்டும்போது பொதுவாக நூற்பெயரையோ ஆசிரியர் பெயரையோ குறிப்பிடுவ தில்லை. ஆயினும் தெரிந்த அளவில் இவர் உரையுள் வரும் நூல் களைப் பின்வருமாறு தொகுத்துக் கூறலாம். இவர் காட்டும் இலக்கண நூல்கள்: புறப்பொருள் வெண்பாமாலை, இறை யனார் களவியல், பிங்கல நிகண்டு; எல்லோரும் மேற்கோள் காட்டுகின்ற ‘ஏவல் இளையர் தாய் வயிறு கரிக்கும்’ என்ற வரியை இவரும் காட்டுகிறார். இது தமிழ்நெறி விளக்கப் பொரு ளியலில் உள்ளது; இவர் குறிப்பினால் அந்நூலின் காலம் வரை யறை பெறுகிறது. இறந்துபோன நூல்களான அகத்தியம் செயிற் றியம் காக்கை பாடினியம் பரிமாணச் சூத்திரம் பன்னிரு படலம் என்ற நூல்களையும் இவர் காட்டுகிறார்.

பன்னிரு படலம் பற்றி இவர் கூறும் ஒரு கருத்து மிகவும் முக்கியமானது. அகத்தியர் மாணக்கர் பன்னிருவர். முதல்

மாணக்கர் தொல்காப்பியர். அவரும் அகத்தியரும் தம்முள் மாறுகொண்டு ஒருவர் மீது ஒருவர் சபித்துக் கொண்டார்கள் என்பது ஒரு கதை. இளம்பூரணர் இதைச் சொல்லவில்லை. ஆதலால், அக்கதை பிற்காலத்துக் கதை என்று கருதவேண்டும். மாணாக்கர் பன்னிருவரும் புறத்திணைப் படலம் ஒவ்வொன்று செய்தார்கள். அப்படலங்கள் ஒரு நூலாகி 'பன்னிரு படலம்' என்று பெயர் பெறும் என்பது இவருக்கு முன்பு எழுந்த ஒரு கதை. வெட்சிப் படலத்தைத் தொல்காப்பியர் பாடினார் என்பது கதை புனைந்தோர் கூற்று. இக்கூற்றை இளம்பூரணர் ஒப்புக் கொள்ளவில்லை. புறத்திணை இயலில் 58 - 60 சூத்திர உரைகளுள் தம் கருத்தை இவர் தெளிவாகக் கூறுகிறார். இங்கு பன்னிரு படலச் செய்யுள் நான்கை எடுத்துக்காட்டி, அவை மயங்கக் கூறுதல் என்னும் குற்றம் உடையன என்றும் முனைவன் நூலிற்கும் கலி முதலாகிய சான்றோர் செய்யுட்கும், உயர்ந்தோர் வழக்கிற்கும் பொருந்தாது என்றும் சொல்லிப் பின்னும் எழுதுகிறார்:

'பன்னிரு படலத்துள் "தன்னுறு தொழிலே வேந்துறு தொழிலென், றன்ன விருவகைத்தே வெட்சி" என இரண்டு கூறுபடக் கூறினாராயினும், முன் வருகின்ற வஞ்சி, உழிஞை, தும்பை முதலாயின எடுத்துச் செலவு, எயில் காத்தல், போர் செய்தல் என்பன அரசர் மேல் இயன்று வருதலின் வேந்துறு தொழில் ஒழித்து, தன்னுறு தொழிலெனத் தன் நாட்டும் பிறர் நாட்டும் களவின் ஆன்நிரை கோடலின் இவர் அவரது ஆணையை நீக்கினாராவார். ஆதலால், இவர் அவ்வாறு கூறல் மிகைபடக் கூறலாம். அதனால், பன்னிரு படலத்துள் வெட்சிப் படலம் தொல்காப்பியர் கூறினாரென்றல் பொருந்தாது...... ஆசிரியர் தாமே மாறுபடக் கூறல், குன்றக்கூறல், மிகைப்படக் கூறல், பொருளில கூறல், மயங்கக் கூறல், தன்னான் ஒரு பொருள் கருதிக்கூறல் என்னும் குற்றங்கள் பயப்பக் கூறினார் என வருமாதலான்'. இதனால் வெட்சிப்படலம் தொல்காப்பியர் செய்ததன்று என்பது இவர் கருத்தாவது தெளிவாகவே, பன்னிரு படலம் பன்னிரு மாணாக்கர் செய்தது என்பதும் பொய்க்கதை யாகிறது. அப்படியே 63ஆம் சூத்திர உரையில் பன்னிரு படலத்துக் கரந்தைப் பகுதி தொல்காப்பியத்துக்கு மாறாகக் கூறலும் மயங்கக் கூறலும் ஆகும் என்று எடுத்துக் காட்டுகிறார். காட்டி, 'இவற்றை எடுத்துக் காட்டின் பெருகுமாதலான் உய்த் துணர்ந்து கண்டு கொள்க' என எழுதுகிறார். எனவே, பன்னிரு

படல வரலாறு பொய்த்தமை தெளிவு. இருப்பினும், பன்னிரு படலம் இளம்பூரணருக்கு முற்பட்டதென்றும் அதன் கருத்துக்கள் சில தொல்காப்பியத்தோடு பொருந்தி வாரா என்றும் அறிகிறோம். இவர் கூறும் முறையினால், இவருக்குத் தொல்காப்பியரிடத்துள்ள பக்தியும், அவர் கருத்தே மேலானது என்ற உறுதியும் நன்து புலப்படுகின்றன.

புறத்திணையியலுள் இவர் மேற்கோள் காட்டும் நூல்கள் புறநானூறு, பதிற்றுப்பத்து, களவழி நாற்பது, சிலப்பதிகாரம், முத்தொள்ளாயிரம் என்ற இலக்கியங்களும் புறப்பொருள் வெண்பாமாலையும் ஆகும். வெண்பாமாலைப் பாடல்கள் மட்டும் இங்கு 75 வருகின்றன.

இதே இடத்தில், நச்சினார்க்கினியர் புறப்பொருள் வெண்பா மாலைப் பாடல்கள் சில காட்டிய போதிலும், வேறு வெண்பாப் பாடல்கள் (பாரதம் முத்தொள்ளாயிரம் நீங்கலாக) 100க்கு மேல் காட்டுகிறார். இவற்றுள் புறத்திரட்டால் அறிய வந்த பெரும்பொருள் விளக்கம் என்ற நூலில் பாடல்கள் சுமார் 20; ஏனைய 80 நச்சினார்க்கினியர் பெயர் சொல்லவில்லை; அவை பெரும்பொருள் விளக்கமாகவே இருத்தல் கூடும். இம்மேற்கோள்களைப் பார்க்கும்போது ஒரு கருத்து எழாமற் போகாது. பெரும்பொருள் விளக்கம் என்ற புறத்திணை பற்றிய வெண்பா நூல், இறந்து போயிற்று. நச்சினார்க்கினியர் காலத்தில் பெருமளவு ஆட்சியில் இருந்தது; 12ஆம் நூற்றாண்டில் அடியார்க்கு நல்லார் இதன் பாட்டில் ஒன்றைத் தருகிறார். ஆனால் இளம்பூரணர் காலத்தில் இந்நூல் அதிகம் ஆட்சிக்கு வரவில்லை போலும். ஒருகால் 10ஆம் நூற்றாண்டிறுதியில் இந்நூல் செய்யப் பெற்றிருந்து, இளம்பூரணர் காலத்தில் ஆட்சி பெறாமல் அடுத்த நூற்றாண்டுகளில் அதிக ஆட்சி பெற்றிருக்கலாமென்று தெரிகிறது.

பொருள் 315ஆம் சூத்திர உரையில், பேதை இலக்கணம் கூறும் ஒரு பாடலைக் காட்டுகிறார். மூலமும் சந்தர்ப்பமும் விளங்கவில்லை:

**பேதை என்பது யாதென வினவின்**
**ஓதிய இவற்றை உணராது மயங்கி**
**இயற்படு பொருளாற் கண்டது மறந்து**
**முயற்கோ டுண்டெனக் கண்டது தெளிதல்.**

திரிசொல்லைக் கூறும் சொல். 341ஆம் சூத்திர உரையில், 'திரிசொல் என்பது செய்யுளின்பம் நோக்கி அவ்வியற் சொற்களை அவ்வாய்பாடு திரித்து வேறு வாய்பாட்டவாக்கும் செய்யுளுடைய சொல்' என்றெழுதிப் பின்வரும் புறச்சூத்திரம் (பரிமாணச் சூத்திரம்) காட்டுகிறார்:

சேரிச் சொல்லின் முட்டுறல் அஞ்சிச்
செய்யுட்குப் புலவர் செய்து கொண்டன்றே.

இது, 'சேரி மொழியாற் செவ்விதிற் கிளந்து' என்ற பொருளதிகாரச் சூத்திரத்தோடு ஒற்றுமையுடைது போலும்.

சொல். 390ஆம் சூத்திரவுரையில், "அருளா இருமை கருமை சேண்மை என்னும் தொடக்கத்தனவற்றைப் பிற நூலார், இருமை பெருமையும் கருமையும் செய்யும் என்றும், 'தொன்றென் கிளவி தொழிற்பயில்வாரும்' என்றும் எடுத்தோதுப என்பதும் அது" என்றெழுதுகிறார். இவை இவருக்கு முன்வந்த திவாகரம் பிங்கல நிகண்டுகளிற் காணப்படவில்லை. ஆகவே பிறிதொரு நிகண்டு போன்ற நூல் வழக்கிலிருந்தது என்று நாம் கருதுகிறோம். அது யாது என்பது விளங்கவில்லை.

## இலக்கியங்கள்

சங்க இலக்கியங்களான எட்டுத் தொகை முழுமையும், (பரிபாடல் முதற்பாடல் ஆகிய 'ஆயிரம் விரித்த அணங்குடை, என்ற பாடல் ஐயரவர்களுக்கு உரை மட்டும் கிடைத்தது' பாடல் கிடைக்கவில்லை; பாடலின் முழுவடிவம் கிடைத்தது இளம்பூரணர் உரையினால் தான்) பத்துப்பாட்டுள் சிறு பாணாற்றுபடை நீங்க, ஏனைய ஒன்பதும்; காப்பியங்களுள் சிலப்பதிகாரம் சிந்தாமணி சூளாமணி மணிமேகலை. சைவ நூல்களில் மூத்த நாயனார் திருவிரட்டை மணிமாலை வருகிறது. பதினெண் கீழ்க் கணக்கினுள் குறள், நாலடி, பழமொழி, திரிகடுகம், களவழி, கார் நாற்பது, ஐந்திணை நூல்கள் ஐந்தும். மற்றவை பெரும் பகுதி கிடைக்கின்ற பாண்டிக்கோவை, குறைந்த பகுதி கிடைக்கின்ற முத்தொள்ளாயிரம், சில பாடல்களே கிடைக்கின்ற சிற்றட்டகம். இறந்துபோன இலக்கியங்களான ஆசிரிய மாலை, குணநாற்பது, மார்க்கண்டேயனார் காஞ்சி, விளக்கத்தனார் பாடல். (இது அச்சுதன் என்ற களப்பிர அரசனைக் கூறுகிறது. விளக்கத்தார் கூத்து என்ற பெயரில் சிலப்பதிகார உரையுள் வேறொரு நூற்பெயர் வருவது நினைவு கூரத்தக்கது)

இவர் உரையில் மேற்கோளாக அச்சிடப்பட்டுள்ள பாடல்களில் இரண்டு பாடல்கள் பற்றி இங்கு குறிப்பிடுவது அவசியமாகும். ஒன்று இன்றுள்ள கொன்றை வேந்தன் என்ற அவ்வை நூலின் காப்புச் செய்யுள்:

கொன்றை வேய்ந்த செல்வ னடியிணை
என்று மேத்தித் தொழுவோம் யாமே.

இப்பாடல் இளம்பூரணராலும், பின்வந்த பேராசிரியராலும் மேற்கோள் காட்டப்பட்டிருக்கிறது. அவ்வையார் பாடிய ஆத்திசூடி, கொன்றைவேந்தன் ஆகிய இரண்டு நூல்களும் தமிழ்நாட்டில் நன்கு பிரசித்தமானவை. அவ்வையார் என்ற பெயரில் பலர் இருந்திருக்கிறார்கள். ஒருவர் கி.பி. இரண்டாம் நூற்றாண்டுக்கு முன் சங்க காலத்தில் வாழ்ந்தவர் என்பதில் தடையில்லை. எட்டுத்தொகையில் காணும் பல தனிப் பாடல்கள் இவர் பாடியவை. மற்றோர் அவ்வையார் 14ஆம் நூற்றாண்டில் வாழ்ந்து ஞானக்குறளும் விநாயகர் அகவலும் பாடினார்.* இடைப்பட்ட காலத்தில் வாழ்ந்த அவ்வையார் எத்தனை பேர் என்பது பற்றி தெளிவு ஏற்படவில்லை. 12ஆம் நூற்றாண்டில் ஓர் அவ்வையார் வாழ்ந்தார் என்பது தெளிவு. இவர் மூதுரை, நல்வழி என்ற இரண்டு நூல்களையும், அசதிக் கோவையையும் செய்தார் என்று திட்டமாகச் சொல்ல முடிகிறது ஆத்திசூடி, கொன்றை வேந்தன் ஆகிய இரண்டையும் இவரே செய்தாரா என்பது தெளிவுபடவில்லை. இதுபற்றிய இரண்டு கருத்துக்கள் சொல்லத்தகும். ஒன்று மூதுரையும் கொன்றை வேந்தனும் ஒருவரே பாடினார் என்பது. அப்படியாயின் 11ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த இளம்பூரணர் 12ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த அவ்வையார் பாடிய கொன்றைவேந்தன் காப்புச் செய்யுளை எடுத்துக் காட்டமுடியாது. இது பழம்பாடலாயிருந்து அவ்வையார் பாடிய 'அன்னையும் பிதாவும்' என்று தொடங்குகிற நூலுக்குக் காப்பாகப் பிறரால் எடுத்து அமைக்கப்பட்டிருத்தல் வேண்டும். அல்லது ஆத்திச்சூடியும் கொன்றை வேந்தனும் பாடிய அவ்வையார் மற்றொருவர் என்றால், இந்த அவ்வையார் காலம் ஒருகால் 9ஆம் நூற்றாண்டாக இருக்கலாம்.❖

---

* எமது தமிழிலக்கிய வரலாறு 14 நூ. காண்க.

❖ இதுபற்றிய விளக்கத்தை எமது 12ஆம் நூற்றாண்டு இலக்கிய வரலாற்றில் காணலாம்.

இரண்டாவது குறிப்பு அறநெறிச்சாரத்தைப்பற்றியது. அந்நூலில் '**தலைமகனிற் றீர்ந்தொழிதல்**' என்ற பாடல் (94) இளம்பூரணர் உரையில் (பொருளதிகாரம் 52) வருகிறது. இங்கு இப்பாடலையன்றி நாலடியார் பாடலும் இதற்கு முன் பெய்யப்பட்டுள்ளது. அங்குள்ள தொடர்களை நோக்கும்போது இம்மேற்கோள் பிற்கால இடைச்செருகல் என்று கருதவும் கூடும். இளம்பூரணர் ஏட்டு வரலாற்றையும் அறியும்போது இக்கருத்து பின்னும் வலியுறுகின்றது. அன்றியும், இளம்பூரணர் உரையில் சில பகுதிகள் இறந்துபோய் நச்சினார்கினியர் உரை பகுதிகளைச் சேர்த்து அச்சிட நேர்ந்தது என்றும், பிற்காலத்துப் பண்டிதர் ஒருவர் இளம்பூரணர் உரையைப் பலவிடங்களில் திருத்தியும் மாற்றியும் கூட்டியும் வைத்தார் என்றும் அறிகிறோம். ஆதலால் 13ஆம் நூற்றாண்டு நூலாகிய* அறநெறிச்சாரப் பாடல் இங்கு இடைச்செருகல் என்பது தெளிவு. இளம்பூரணர் இதை இங்கு காட்டவில்லை. இப்படியே முற்சொன்ன கொன்றை வேந்தன் காப்புச் செய்யுளும் இவர் உரையுள் இடைச்செருகல் என்றே கொள்ளத்தக்கது.

இந்தியன் என்ற விரிந்த நாட்டுப்பற்று இல்லாமல் குறுகிய மனப்பான்மையோடு இக்காலத்தில் பலரும் பேசுகிறார்கள் என்பதை அரசியல்வாதிகள் சொல்லி வருந்துகிறார்கள். இந்த நிலையில், 900 ஆண்டுகளுக்கு முன் இளம்பூரணர் 'நும் நாடு யாது என்றால், தமிழ்நாடு என்றல்' என்றும், சோழநாடு என்றும் பாண்டியநாடு என்றும் சேரநாடு என்றும் வேற்றுமை பாராது கூறுதல் வியக்கத்தக்கதாகும்.

ooo

---

* எமது தமிழ் இலக்கிய வரலாறு, 13ஆம் நூற்றாண்டு காண்க.

அத்தியாயம் 6

# சைவ இலக்கியம் – 1

## சமய இலக்கியம்

### முன்னுரை

நாம் கருதுகின்ற இந்த நூற்றாண்டானது ஒரு சிறப்புடைய காலம் என்று கருதத் தடையில்லை. இந்த நூற்றாண்டில் பிரசித்தி பெற்ற சோழ மன்னனாக விளங்கிய இராசராசன் தஞ்சைப் பெருங்கோயிலைக் கட்டிய காலந்தொடங்கி, கலிங்கப் போர் வென்ற முதற் குலோத்துங்க சோழன் காலம் வரையில், இந்த நூற்றாண்டு செல்கிறது. இது முந்திய நூற்றாண்டுகளில் புதிதாக நிலைபெற்ற சோழப் பேரரசின் தொடக்கமாதலால், பூசலும் சண்டைகளும் மலிந்திருத்தல் இயல்பே. ஆகவே, சமயத் துறையில் நாம் கருதுகின்ற அளவுக்குப் பல துறைகளிலும் மக்கள் மனம் சென்றதாகத் தெரியவில்லை. அடுத்த நூற்றாண்டில் தான் பல துறைகளிலும் மிகச் சிறந்த இலக்கியங்கள் தோன்றத் தொடங்கியிருக்கின்றன. எனினும், இந்த நூற்றாண்டில் சைவ சமய சாதனை மிகவும் பெரிதென்பது, பின்னே நம்பியாண்டார் நம்பி வரலாற்றால் நன்கு விளங்கும்.

இந்த நூற்றாண்டின் சமய இலக்கியத்தை நாம் பார்க்கும் போது, சைன சமயத்தார் ஓர் ஆயிரம் ஆண்டுகளாக மொழி யிலக்கணம் கூறும் நூல்கள் செய்வதிலேயே அதிக கவனம் செலுத்தி வந்தனர்; முந்திய நூற்றாண்டுகளில் பெருங் காப்பியங் களும் செய்தனர். ஆனால் சைன சமய இலக்கியமாக இந்த நூற்றாண்டில் எதுவும் கிடைக்கவில்லை; இலக்கண நூல்கள் சிலவே கிடைத்தன என்பதை முன்பு பார்த்தோம். அடுத்து

வேதாந்தத் துறையில் நாம் பார்த்தோமானால், பதின்மூன்றாம் நூற்றாண்டில் தோன்றிய ஸ்ரீ பட்டனார் செய்த பரமார்த்த தரிசனம் என்ற பகவத் கீதையின் மொழிபெயர்ப்பே முதல் வேதாந்த நூலாகும். பின்னர் பதினைந்தாம் நூற்றாண்டில் எல்லை யில்லாத வேதாந்த நூல்கள் செய்த தத்துவராயர் தொடங்கியே அவை பெருகுகின்றன. நாம் கருதும் காலப் பகுதியில் வேதாந்தம் என்ற பேச்சே தமிழ் மொழியில் எழவில்லை.

இனி, இந்த நூற்றாண்டில் வைணவ சமயத்தில் வைணவ ஆசாரியரான இராமானுசர் கி.பி. 1017இல் தோன்றினார் என்பது குரு பரம்பரை கூறும் வரலாறு. இவர் நூற்றியிருபது ஆண்டுகள் வாழ்ந்தார் என்றும் 1137இல் பரமபதம் அடைந்தார் என்றும் சொல்வர். வைணவத்தை ஒரு தனியான புதுச் சமயமாக்கி அதற்கென்று ஆசாரிய பீடங்கள், மூலசாத்திரங்கள், தத்துவ விளக்கங்கள், ஆசாரமுறைகள், வழிபாட்டு நெறிகள் போன்ற எல்லாத் துறைகளையும் செவ்வையாக வகுத்தளித்த பெருமை அவருக்கே உரியது; பல நூறாயிரம் சைவரை வைணவராக்கி னார். அடுத்த நூற்றாண்டு தொடங்கியே வைணவ இலக்கியங் கள் தோன்ற ஆரம்பிக்கின்றன. அவைகளும் அனேகமாக எல்லாமே வடமொழியில்தான். தமிழ் இலக்கிய வரலாற்றுக்கு அவை துணை செய்யவில்லை. தமிழ் இலக்கிய வளர்ச்சிக்குத் துணைபுரிந்த சிறப்பிலக்கியங்கள், முதலாழ்வார் தொடங்கி நம்மாழ்வார் முடியத் தோன்றிய நாலாயிரப் பிரபந்தம் என்னும் பண்டைய அருட்பாசுர இலக்கியங்கள். இவர்களுக்குப் பிறகு வைணவ இலக்கியங்கள் தோன்றாமல் தொடர்பின்றி நின்று, பின்னர் அஷ்டப் பிரபந்தத்தோடு தான் (16 நூ.) மறுபடியும் தொடங்குகின்றன. இடையில் தோன்றிய நூல்கள் யாவும் சமய நூல்களே அன்றி, இலக்கிய நூல்களாகத் தோன்றியவை மிகவும் அருமை; யாவும் வடமொழியும் மணிப்பிரவாளமுமே.

## சைவ இலக்கியம்

அடுத்து, சைவ இலக்கியத்தைப் பார்க்கும்போது, நாம் வேறு நிலைமையைக் காண்கின்றோம். இங்கு, தேவாரங்களுக்கு முற்பட்ட காலம் முதல், சைவ இலக்கியங்கள் தொடர்பாகத் தோன்றி வளர்ந்து வந்திருந்தன. ஐந்து - ஆறு நூற்றாண்டு முதல் தோன்றிய இலக்கியங்களை நூற்றாண்டு தோறும் ஆராயும்

போது இது நன்கு புலப்படுகின்றது. அவற்றை இங்கு விவரிக்க இடம் இல்லை. பதினோராம் நூற்றாண்டிற்குப் பிறகும் சைவ இலக்கியம் எல்லாத் துறையிலும் வளர்ந்து சிறந்துகொண்டு போவதைக் காண்கிறோம். இவ்வளர்ச்சி தொடர்புவிடாமல் இருபதாம் நூற்றாண்டு வரையில் ஓங்கியிருப்பதும் அறியத்தக்கது.

பதினோராம் நூற்றாண்டைப் பொறுத்தவரையில், இராசராச மன்னன் தஞ்சைப் பெருவுடையார் கோயிலைக் கட்டிய அருஞ்செயலானது சைவத்தின் எல்லாத் துறைகட்கும் ஏற்றம் அளித்திருக்கிறது. கி.பி. 1000ஐ ஒட்டிச் சிவனடியார் பலர் வாழ்ந்து, இசையோடு பொருந்திய பல பாடல்களைப் பாடினர். இப்பாடல்கள், பின்னர் இராசராசனுடைய மகன் இராசேந்திரன் கங்கைகொண்ட சோழேச்சுரம் கட்டிய காலம் வரையில், தொடர்ந்து வந்திருக்கின்றன. இவை யாவும் திருவிசைப்பா என்ற பெயரால், முந்தையோர் செய்த சில இசைப் பாசுரங்களோடு சேர்த்து ஒன்பதாந் திருமுறை என்ற ஒரு தனித் திருமுறையாகவே இந்த நூற்றாண்டில் தொகுக்கப் பெற்றிருக்கிறது.

இந்த நூற்றாண்டில் சிறப்பான இடம்பெறும் சைவ ஆசிரியர் நம்பியாண்டார் நம்பி. இராசராச மன்னனுக்காக வேண்டி, இவர் சைவத் திருமுறைகளைத் தேடிப் பெற்றதும், அவற்றைத் திருமுறைகளாக வகுத்ததும், அவற்றுக்குப் பண்ணடைவு செய்வித்ததும், சைவசமய சரித்திரத்தில் மறக்க முடியாத பெரு நிகழ்ச்சிகள். நாதமுனிகள் வைணவ சமயத்தில் நாலயிரப் பாசுரங்களைத் தேடித் தொகுத்து அமைத்த செய்தி இதை ஒத்ததோர் அருஞ்செயலாகும்.

இந்த நூற்றாண்டில் வாழ்ந்து திருவிசைப்பாப் பாடினோர் என்று நாம் கருதுகின்ற ஆசிரியர்கள் புருடோத்தம நம்பி, சேதிராயர், பூந்துருத்தி நம்பி காட நம்பி, கருவூர்த்தேவர் ஆகியோர். இவர்களுடைய வரலாறுகளை இங்கு ஆராய்கிறோம். இவர்கள் பாடல்களைத் தொகுத்த நம்பியாண்டார் நம்பிகளுடைய வாழ்க்கையையும் நூல்களையும் காலத்தையும் அடுத்த அத்தியாயத்துள் ஆராய்வோம். இக்காலப்பகுதியில் சிறந்த அகப்பொருள் இலக்கியமாகச் சங்க இலக்கிய நெறியில் தோன்றிய கல்லாடம் என்ற நூலை முந்திய அத்தியாயத்தில் பார்த்திருக்கிறோம்; அதுவும் ஒரு சைவ நூலேயாகும்.

## ஒன்பதாம் திருமுறை

சைவத் திருமுறைகள் பன்னிரண்டில், ஒன்பதாம் திருமுறையானது 28திருவிசைப்பாப் பதிகங்களும் ஒரு திருப்பல்லாண்டுப் பதிகமும் கொண்டது. இசைப்பா என்றமையினாலே இது தேவாரங்கள் போல இசைக்குரியது என்பது தெளிவு. இங்கு ஒரு கருத்து உணர்தற்பாலது. வைணவ நாலாயிரப் பிரபந்தங்களில், முதலாயிரம் இசைப்பா; மற்ற இரண்டு - பெரிய திருமொழியும் திருவாய்மொழியும் - இசைப்பாக்கள்; மற்ற ஓராயிரம் மட்டும் இயற்பா (இயற்றமிழ்). சைவத்திலும் அதுபோலவே இயல் இசை என இரு தமிழ்ப் பிரிவுகளைக் கருதுவோமானால், தொகுப்பு நூல்களாயுள்ள ஒன்பது பதினொன்று ஆகிய இரு திருமுறைகளில், ஒன்பது இசைப்பா, பதினொன்று இயற்பா. பின்னும் பார்த்தால், ஒன்று முதல் ஒன்பது திருமுறை வரை இசைப்பா; பத்து முதல் பன்னிரண்டு வரை இயற்பா. (இடையில் திருக்கோவையார் மட்டும் இவ்விதிக்கு விலக்கு; எட்டாந்திரு முறைப் பகுதியாகவுள்ள இது, இயற்பா)

திருவிசைப்பாவானது 'மோகம் எறி திருவிசைப்பா மாலை' என்று திருமுறை கண்ட புராணத்துள் சிறப்பிக்கப் பெற்றிருக் கிறது.

இத்திருமுறையைப் பாடினோர் ஒன்பதின்மர். இவர்கள் பெயர்களையும் பாடிய தலங்களையும் பண்களையும், காலத் தையும் குறித்த அட்டவணை ஒன்று உடன் தந்திருக்கிறோம். இவ் ஒன்பதின்மர் காலமும் 10 - 11 ஆகிய நூற்றாண்டுகளே. 11ஆம் நூற்றாண்டில் முற்பாதியில் ஆட்சி புரிந்த கங்கை கொண்ட சோழன் என்னும் முதல் இராசேந்திர சோழன் தன் பெயர் கொண்ட பெருங்கோயிலைக் கட்டியதோடு திருவிசைப் பாக் காலம் முடிவு பெறுகிறது. இவ் ஒன்பதின்மருள், நால்வர் இக்காலப் பகுதிக்கு உரியோர். அவர்களாவர் பூந்துருத்தி நம்பி காட நம்பி, புருடோத்தமநம்பி, சேதிராயர், கருவூர்த்தேவர் ஆகியோர். இதுபற்றி ஒன்பதாம் திருமுறை குறித்த தொகுப் பான சில பொதுக் கருத்துக்களை இங்கு கூற எண்ணுகிறோம்.

திருமுறைகள் அனைத்திலும் இதுவே அளவால் மிகவும் சிறியது. பாடல் தொகை கூறுகின்ற ஒரு பழம் பாடல் இதன் பாடல்கள் 365 என்று கூறும். ஆனால் கிடைக்கின்ற பாடல்

களின் தொகை 301 தான். கருவூர்த்தேவருடைய திருப்பூவணப் பதிகம் எட்டே பாடல்கள் கொண்டது; பூந்துருத்தி நம்பி காட நம்பியின் திருவாரூர்ப் பதிகம் இரண்டே பாடல்கள் கொண்டது. இவ்விரண்டிலும் முறையே இரண்டு, எட்டுப் பாடல்கள் இறந்து போயின எனக் கருதக்கூடும். ஏனைய பாடல்கள் எப்பதிகங் களுக்குரியன, எவ்வாறு இறந்து போயின என்பதொன்றும் விளங்கவில்லை.

இதன் சிறப்புக்கள் மிகப் பல. ஒன்று, சிவாலயங்களில் நெடுநாளாக வழங்கி வருகின்ற பஞ்சபுராணம் பாடுதல் என்ற திருப்பதிகம் விண்ணப்பிக்கின்ற மரபில், இத்திருமுறைக்கு இரண்டு பாடல்கள் இடம் தரப்பட்டிருப்பது பெரும் வியப்பாய் உள்ளது. திருமுறைக்கு ஒரு பாசுரம் வீதம் ஓதுவதே பொதுமுறை. சிறப்பாக இவற்றைச் சுருக்கி ஐந்தாக ஓதுவது பஞ்சபுராணம் எனப்படும். எண்ணாயிரத்துக்கு மேற்பட்ட பாடல் கொண்ட தேவாரத்தில் ஒரு பாடலும், திருவாசகத்தில் ஒன்றும், திருவிசைப் பாவில் ஒன்றும், திருப்பல்லாண்டில் ஒன்றும் பெரிய புராணத்தில் ஒன்றுமாகப் பாடுவது பஞ்ச புராணம்.* இது இத்திருமுறைக்கு ஆன்றோர் அளித்துள்ள பெருஞ் சிறப்பைக் குறிக்கும்.

பின்னுள்ள அட்டவணையால் 29 பதிகங்களில் 16 பதி கங்கள் கோயிலாகிய தில்லைக்குரியன. பெரும்பான்மை பற்றி இதைத் தில்லைத் திருமுறை என்றுகூடச் சொல்லலாம். ஒன்பதின் மருள் சேந்தனார், கருவூர்த்தேவர், பூந்துருத்தி நம்பி காட நம்பி ஆகிய மூவரும், பிற தலங்களோடு தில்லைக்கும் ஒரு பதிகம் பாடியிருக்கிறார்கள். ஏனைய ஆறு அடியவர்களும் கோயில் ஆகிய தில்லை ஒன்றையே பாடினார்கள். அவ்வறுவருள் ஒருவர், கண்டராதித்தர் என்ற சோழ சக்கரவர்த்தி (10ஆம் நூற்றாண்டு).

இத்திருமுறையுள் பயிலும் பண்கள் ஆறு. அவற்றுக்குரிய பதிகங்கள்: பஞ்சமம் 21, காந்தாரம் 2, புறநீர்மை 3, நட்டராகம் 1, இந்தளம் 1, சாளரபாணி 1. இவற்றுள் சாளரபாணிப் பண் தேவாரத்துள் காணப்படாதது. பதிகங்களுக்குப் பண் வகுத்தார் யார், எக்காலம் என்பது விளங்கவில்லை. எனினும், கருவூர்த் தேவர் தாம் பாடிய திரைலோக்கிய சுந்தரம் இறுதிப்பாடலில் காந்தாரப் பண்ணையும், புருடோத்தம நம்பி தமது கோயில்

---

* பஞ்ச புராணம் என்ற தலைப்பில் சைவ சித்தாந்த சமாஜ வைர விழா மலரில் மலரில் (1965) யாம் எழுதிய கட்டுரை, பக்கம் 20 - 26 காண்க.

## திருவிசைப்பா அட்டவணை

| ஆசிரியர் எண் | பதிக எண் | ஆசிரியர் பெயர் | பதிகம் | தலம் | பாடல் பெயர் | பண் | பாடல் தொகை | சிறப்பு | காலம் நூற்றாண்டு |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 1 | திருமாளிகைத் தேவர் | 4 | கோயில் | ஒளிவளர்விளக்கு | பஞ்சமம் | 11 | | 10 |
| | 2 | | | கோயில் | உயர்கொடியாடை | பஞ்சமம் | 11 | பாதாதிகேசம் | |
| | 3 | | | கோயில் | உறவாகியயோகம் | பஞ்சமம் | 12 | அகத்துறை | |
| | 4 | | | கோயில் | இணங்கிலா ஈசன் | காந்தாரம் | 11 | | |
| 2 | 5 | சேந்தனார் | 3 | வீழிமிழலை | ஏக நாயகனை | பஞ்சமம் | 12 | | 10 |
| | 6 | | | ஆவடுதுறை | பொய்யாத வேதியர் | பஞ்சமம் | 11 | அந்தாதி | |
| | 7 | | | திருவிடைக்கழி | மாலுலா மனம் | பஞ்சமம் | 11 | அந்தாதி, அகத்துறை | |
| 3 | 8 | கருவூர்த் தேவர் | 10 | கோயில் | கணம்விரி குடுமி | புறநீர்மை | 11 | | |
| | 9 | | | களந்தை ஆதித் தேச்சரம் | கலைகள்தம் பொருளும் | புறநீர்மை | 10 | | 11 |
| | 10 | | | கீழ்க்கோட்டூர் மணியம்பலம் | தளிரொளிமணி | பஞ்சமம் | 11 | | |
| | 11 | | | முகத்தலை | புவனநாயகனே | பஞ்சமம் | 10 | | |
| | 12 | | | திரைலோக்கிய சுந்தரம் | நீரோங்கி | காந்தாரம் | 11 | அகத்துறை | |
| | 13 | | | கங்கைகொண்ட சோழேச்சுரம் | அன்னமாய் | பஞ்சமம் | 11 | | |

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| | 14 | | | பூவணம் | திருவருள் புரிந்து | பஞ்சமம் | 8 | | |
| | 15 | | | சாட்டியக்குடி | பெரியவா கருணை | பஞ்சமம் | 10 | | |
| | 16 | | | தஞ்சை இராச-ராசேச்சுரம் | உலகெலாம் தொழ | பஞ்சமம் | 11 | | |
| | 17 | | | இடைமருதூர் | வெய்ய செஞ்சோதி | பஞ்சமம் | 10 | | |
| 4 | 18 | பூந்துருத்தி நம்பி காட நம்பி | 2 | ஆரூர் | கைக்குவான் | பஞ்சமம் | 2 | | 11 |
| | 19 | | | கோயில் | முத்து வயிர | சாளர பாணி | 10 | | |
| 5 | 20 | கண்டராதித்தர் | 1 | கோயில் | மின்னாருருவம் | பஞ்சமம் | 10 | | 10 |
| 6 | 21 | வேணாட்டடிகள் | 1 | கோயில் | துச்சானசெய் | புறநீர்மை | 10 | | 10 |
| 7 | 22 | திருவாலி அமுதனார் | 4 | கோயில் | மையல்மாது | பஞ்சமம் | 11 | பாதாதிகேசம் | 10 |
| | 23 | | | கோயில் | பவளமால்வரை | நட்டராகம் | 10 | அகத்துறை | |
| | 24 | | 4 | கோயில் | அல்லாய்ப்பகலாய் | இந்தளம் | 11 | அந்தாதி | |
| | 25 | | | கோயில் | கோலமலர் | பஞ்சமம் | 10 | அந்தாதி | |
| 8 | 26 | புருடோத்தம நம்பி | 2 | கோயில் | வாரணி நறு | பஞ்சமம் | 11 | அகத்துறை அந்தாதி | 11 |
| | 27 | | | கோயில் | வானவர்கள் | பஞ்சமம் | 11 | அகத்துறை அந்தாதி | |
| 9 | 28 | சேதி ராயர் | 1 | கோயில் | சேலுலாம் வயல் | பஞ்சமம் | 10 | அகத்துறை அந்தாதி | 11 |
| | | | | திருப்பல்லாண்டு | | | | | |
| 2 | 29 | சேந்தனார் | 1 | கோயில் | மன்னுகதில்லை | பஞ்சமம் | 13 | | |

திருப்பதிகத்தின் முதல் பாடலிலேயே பஞ்சமப் பண்ணையும் குறிப்பிட்டுப் பாடுவது கருதத்தக்கது.

திருவிசைப்பா பாடப்பெற்ற காலம் பொதுவாக கி.பி. 950 முதல் 1040க்கு உள்ளாக; அதாவது ஏறக்குறைய ஒரு நூறு ஆண்டுக் காலத்துக்குள் இவ்வடியவர்கள் வாழ்ந்து இப்பதிகங் களைப் பாடியிருக்கிறார்கள். இக்காலத்தில் அரசு புரிந்தோர் இந்த நூறு ஆண்டுகளிலும் கண்டராதித்தர், அவருக்குப் பின் வந்த அரிஞ்சய சோழன், இரண்டாம் பராந்தகன் என்னும் சுந்தரசோழன், கண்டராதித்தர் புதல்வரான மதுராந்தகன் என் னும் உத்தம சோழன், பெருங்கீர்த்தி வாய்ந்த முதலாம் இராச ராச சோழன், கங்கை கொண்ட சோழன் என்னும் பிரசித்தி பெற்ற முதலாம் இராசேந்திரன் ஆகிய சோழமன்னர் அறுவர் காலங்கள். இதில் பெரு வியப்புக்கு இடமான செய்தி ஒன்று உண்டு. கண்டராதித்தர் தந்தையான முதல் பராந்தகர் காலம் தொடங்கி, செம்பியன் மாதேவி என்ற பெயருடைய சோழ அரசியார், கண்டராதித்தர் மனைவியாகி, அவர் இறந்த பின் இராசராசன் பட்டம் ஏற்று 16ஆண்டுகள் வரையில், முதலாம் இராசேந்திரன் இளவரசாக இருந்த காலத்திலும் கூட, அரச குடும்பத்தில் இருந்து வந்திருக்கிறார். இவ்வம்மையார் வாழ்ந்த காலமே திருவிசைப்பா பெரும்பகுதி பாடப்பெற்ற காலம்.* இராசராசேச்சுரம், கங்கைகொண்ட சோழேச்சுரம் ஆகிய இரு கோயில்களும் இவ்வம்மையார் உயிரோடு இருந்த காலத்தில் எழாதபோதும்கூட, இவர் வளர்த்தெடுத்த பிள்ளைகள் சக்கர வர்த்திகளாய் வீற்றிருந்த காலத்தில் இக்கோயில்களை எழுப் பினர்; இவை கருவூர்த்தேவரால் உடன் காலத்தில் திருவிசைப் பாவும் பெற்றன. ஆகவே, திருவிசைப்பாக்கள் யாவும் எழுந்த மைக்கும் மூலம் இவ்வம்மையாருடைய பக்திப் பெருக்கும் அடியவர்களுக்குத் தந்த பேராதரவுமே ஆகும்.

இனி, பாடல் பெற்ற தலங்களைப் பார்க்கும்போது, வியப்பு மிக்க செய்தி ஒன்றை மீண்டும் காண்கிறோம். இத்தலங்கள் யாவும் சோழ நாட்டுக்குள்ளேயே அமைந்திருக்கின்றன; இதற்கு விலக்காய் உள்ளது திருப்பூவணம் என்ற பாண்டி நாட்டுத் தலம் ஒன்றே. இதுபற்றிய குறிப்பு ஒன்றைப் பின்னே கருவூர்த் தேவர் பற்றிய கட்டுரையில் கூறுகிறோம். இங்கு பாடல் பெற்ற

* இது பற்றிப் பின்னும் அதிக விளக்கத்தை 10ஆம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கிய வரலாற்றில் இதே பகுதியில் காண்க.

தலங்கள் 14. கோயிலை எல்லோரும் பாடியிருக்கிறார்கள். கோயிலையும் திருப்பூவணத்தையும் நீக்கிப் பார்க்க, ஏனைய தலங்கள் 12. இவற்றுள் தேவாரப்பதிகம் பெற்ற தலங்கள் வீழிமிழலை, ஆவடுதுறை, இடைமருதூர், ஆரூர் ஆகிய நான்கு. ஏனையவை வைப்புத் தலங்களாகக் கருதவேண்டும். இவற்றுள் ஏழு கருவூர்த்தேவர் பாடியவை; ஒன்று மட்டும் சேந்தனார் பாடிய திருவிடைக்கழியாகும். அன்றியும், ஒன்பது திருமுறைகள் வரையில் முருகனுக்குத் தனியான பாடலோ பதிகமோ இல்லை. பின்னால் பதினொராம் திருமுறையில்தான் முருகன் துதி பாடுகின்ற திருமுருகாற்றுப்படை சேர்க்கப்பட்டுள்ளது. ஆனால் இங்கு, ஒன்பதாம் திருமுறையில் திருவிடைக்கழிப் பதிகம் முருகனுக்கே உரியது. இனி, பதிகங்களின் அமைப்பைப் பார்க்கும் போது, இரண்டு பதிகங்கள் பாதாதி கேசத் தோத்திரம்; அகத்துறைப் பதிகங்கள் 7; அந்தாதியாக அமைந்தவை 7 பதிகங்கள். திருப்பல்லாண்டு, வைணவத்தில் பெரியாழ்வார் திருப்பல்லாண்டு போல, தனித்த சிறப்புடையதொன்று. முற்காட்டிய அட்டவணையைப் பார்த்தால், இத்திருமுறை ஆசிரியர்கள் கால முறைப்படி, இங்கு அமைக்கப் பெறவில்லை என்பது தெரியும். நம்பியாண்டார் நம்பிக்குப் பதிகங்கள் கிடைக்கக் கிடைக்கத் தொகுத்துக் கொண்டே போய், இனிப் பதிகங்கள் இல்லை என்று முடிவான பின் திருப்பல்லாண்டை மட்டும் தனியே இறுதியில் சேர்த்து முடித்தார் எனக் கருதுகிறோம்.

கருவூர்த்தேவர் பாடியவற்றுள் ஏழும், சேந்தனார் பாடிய திருவிடைக்கழியும், திருவிசைப்பாப் பெற்ற வைப்புத்தலங்கள் என நாம் கருதலாம்; இவற்றுள் ஒன்றும் தேவார வைப்புத்தலமல்ல; தஞ்சை இராசராசேச்சரம் மட்டும் தஞ்சைத் தளிக்குளம் என்று அப்பர் பாடிய வைப்புத் தலமாகலாம் என்று கருதுவதும் உண்டு. இத்தலங்கள் எட்டு மட்டும் அல்லாமல், கோயில் ஒன்று நீங்க, பிறவற்றுள் ஒருவர் பாடிய தலத்தை மற்றவர் பாடவில்லை. இராசராசேச்சுரம், திரைலோக்கிய சுந்தரம், கங்கைகொண்ட சோழேச்சுரம் ஆகிய மூன்று மட்டும், கற்றளிகள் கட்டிய காலத்து, கருவூர்த்தேவர் உடனிருந்து பதிகம் பாடினார் என்பது தெரிகிறது. ஏனையவை பற்றி இவ்வாறு ஒரு செய்தி தெரியவில்லை. இவற்றுள் பல பழைய கோயில்கள். பாடிய ஆசிரியர்களும், திருமாளிகைத்தேவர் சேந்தனார் நீங்கலாக, வரலாற்றினால் விளங்காதவர்கள். ஒருகால் அவர்களில் பலர் - வேணாட்டடிகள் திருவாலி அமுதனார் போன்ற

வர்கள் - கண்டராதித்தர் காலத்தில் வாழ்ந்து அவர் சென்ற நெறியிலே தாங்களும் சென்று பதிகம் பாடியிருக்கலாம்; அல்லது, அவருடைய மனைவியும், சிவபக்திச் செல்வத்தால் சிறந்தவரும், நீண்ட காலம் ஆயுளோடு இருந்து சிவபெருமான் பணியிலேயே தம்முடைய காலத்தைச் செலவிட்டவருமாகிய செம்பியன் மாதேவியாரால் தூண்டப்பெற்று இத்திருவிசைப் பாக்கள் பாடியிருக்கலாம். இவர்களைப் பற்றிய விளக்கம் நமக்குக் கிடைக்கவில்லை. எல்லாக் கல்வெட்டுக்களும் படி யெடுத்தாகவில்லை. படியெடுத்தவை வெளியிட்டாகவுமில்லை. ஆகவே, எல்லாம் படியெடுத்து எல்லாம் வெளியாகின்ற நிலை யில் இத்துறையில் இன்னும் விளக்கம் கிடைத்தல் கூடும்.

பிற்காலத்தில் பட்டினத்துப் பிள்ளையார் திருவெண் காட்டுக்கு ஒரு திருவிசைப்பாப் பாடினார் என்ற வரலாறு சொல்லப்படும். அவ்வூர்த் தல வரலாற்றில் இருபாடல்கள் காணப்படுகின்றன. இவ்வரலாற்றுக்கு ஆதாரமில்லை. பட்டினத் தார் பாடல்களில் இவை இல்லை. பட்டினத்தார் இருவர். ஒருவர் பதினோராம் நூற்றாண்டில் வாழ்ந்து பதினோராந் திருமுறையில் அவர் பெயரால் காணப்படும் ஐந்து பிரபந்தங் களையும் பாடியவர். மற்றவர் பதினைந்தாம் நூற்றாண்டில் பத்திரகிரியாருடன் சமகாலத்தில் வாழ்ந்த ஒரு சித்தர். நாம் கருதும் காலத்துக்கு இவ்விருவரும் உரியவரல்லர்.

## பூந்துருத்தி நம்பி காட நம்பி

### ஆசிரியர்

இவர் திருவிசைப்பா ஆசிரியருள் நான்காமவர். அந்நூலில் 18 - 19 ஆகிய இரு பதிகங்களை இவர் பாடியுள்ளார். இவை முறையே திருவாரூரையும் தில்லையையும் பற்றிப் பஞ்சமப் பண்ணிலும் சாளரபாணிப் பண்ணிலும் அமைந்த 2, 10 பாடல் களைக் கொண்டவை. ஆரூர்ப் பதிகத்தில் ஏனைய பாடல்கள் இறந்தனபோலும். தில்லைப் பதிகத்தின் இறுதிப் பாடலில் இவர் தம்மைப் “பூந்துருத்திக் காடன்” என்று கூறிக்கொள் கிறார். திருப்பூந்துருத்திக் காடர் என்றும் காட நம்பி என்றும் பெயர் ஏடுகளில் காணப்படுகிறது. பூந்துருத்தி, சோழ நாட்டில் திருவையாற்றின் அருகுள்ள சிறப்பான ஒரு சிவத்தலம்; ஐயாறு சப்தஸ்தானங்களில் ஒன்று. கண்ணப்பருடன் வேட்டைக்குச் சென்ற தோழருள் ஒருவன் பெயர் காடன் என்பது இங்கு

கருதத்தக்கது; ஒருகால் இப்பெயர் காடவன் என்பதன் மரூஉ என்று கருதி இவரைப் பல்லவ வமிசம் என்றும் சிலர் கூறினர். இது பற்றிக் காலம் என்ற பகுதியில் சிறிது விளக்கம் சொல்வோம். இவர் தில்லையம்பலத்தையும், அங்கு பணியும் முத்தீ வேள்வி மூவாயிரவரையும் குறிப்பிடும் வகையால் இவரும் அந்தண குலச் சான்றோர் என்று சொல்லத் தோன்றுகிறது. நல்லூர்ப் பெருமணத்தில் சம்பந்தர் கைப்பிடித்த மணமகளின் தந்தை நம்பியாண்டார் நம்பி. பதினோராம் நூற்றாண்டில் திருமுறை தொகுத்தவர் நம்பியாண்டார் நம்பி. பின்னால் பதின்மூன்றாம் நூற்றாண்டில் திருவிளையாடற் புராணம் பாடியவர் பெரும் பற்றப்புலியூர் நம்பி. பின்னே காட்டப்படும் கல்வெட்டுத் தொடரினால் இவர் ஆத்திரேய கோத்திரம் உடையவர் என்று அறியுமாறு உள்ளது.* நம்பி என்பது பொதுவாக ஆடவருள் சிறந்தவனைக் குறிப்பிடும் ஒரு பொதுச்சொல். எனினும், இந் நம்பி ஓர் அந்தணர் என்றே கருதுகிறோம். இவர் சிவபக்தி மிகுந் தவர். தம் பாடல்களில் நாயன்மார்களையும், அவர்கள் பாடல் களையும் சுவைபடக் கூறுகிறார். வேறு இவர் வரலாறு அறிவ தற்கில்லை. இவருடைய சிறப்பு, தேவாரங்களில் காணப்படாத சாளரபாணி என்ற பண்ணைக் குறிப்பிடுவதாகும். தில்லையம் பலத்தில் மிக்க ஈடுபாடுடையவர்.

**காலம்**

திருமுறையுள் இவர் பாடல்கள் கண்டராதித்தர் பாடலுக்கு முன்னே காணப்படுகின்றன. ஆனால் இத்திரு முறையுள் பாடல்கள் கால முறைப்படி தொகுக்கப்பெறாமையால், இது கொண்டு காலம் முடிவு செய்தல் இயலாது. காலத்தை வரை யறை செய்ய இருவேறு கருத்துக்களை ஆராய்ச்சியாளர் குறிப் பிடுகின்றனர். ஒன்று, காடவர் என்ற பெயர் உணர்த்தும் குறிப்பு. திருவிசைப்பாப் பாடினோரையும் அவர்களுடைய பதிகம், தலம், பண் ஆகியவற்றையும் குறிப்பிடும் பழைய பாடல்கள் மூன்று உள்ளன.❖ அம்மூன்றும் இவரை முறையே நம்பிகாடவர் கோன், வீறிற் சிறந்தவர், காடவர்கோன் என்று குறிப்பிடுகின்

---

* ஆத்திரேய கோத்திரத்துப் பேராசிரியன் என்பவரொருவர் 10ஆம் நூற்றாண்டில் தொல்காப்பியத்துக்கு 'வலம்புரி முத்திற் குலம்புரி பிறப்பும்' என்ற தொடக்கமுடைய பொதுப்பாயிரம் பாடினார்.

❖ இப்பாடல்களை எமது 10ஆம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கிய வரலாற்றின் சைவ இலக்கியப் பகுதியில் காணலாம்.

றன. காடவர் பல்லவ மரபினர். ஐயடிகள் காடவர்கோன் என்ற பதினோராம் திருமுறை ஆசிரியர் ஒருவர் பல்லவ மரபில் வந்த அரசர். இத்தொடர்பு பற்றி இவரும் பல்லவ மரபினர் என்றும், ஆகவே காலத்தால் பல்லவர் ஆட்சி இறுதிக் காலமாகிய ஒன்பதாம் நூற்றாண்டினர் என்றும் கருதுவோர் உளர். இங்கு அறியவேண்டியது ஒன்று. முன்குறித்த பாடல்கள் மிகவும் பிற் காலத்தில் பாடப்பட்டவை. இப்பாடல்களைப் பாடியவர் ஒருகால் ஐயடிகள் காடவர்கோன் என்ற நினைவினாலே காட நம்பியையும், காடவர்கோன் என்று பாடி விட்டாரோ என்று கருதத் தோன்றுகிறது. ஆதலால், இதுகொண்டு நம்பி காலத்தை வரையறை செய்யமுடியாது.

மற்றொன்று கல்வெட்டுக் குறிப்பு: முதல் இராசாதி ராச னுடைய முப்பத்திரண்டாம் ஆட்சியாண்டில் பொறிக்கப் பட்ட திருவையாற்றுக் கல்வெட்டு ஒரு குறிப்புத் தருகிறது. "லோகமா தேவீச்சுரத்து ஸ்தானமுடைய க்ஷேத்திர சிவப் பண்டிதருக்காகத் திருவாராதனை செய்யும் ஆத்திரேயன் நம்பி காடன் நம்பி" என்ற தொடர் இங்கு வருகிறது. திருவையாறு, பூந்துருத்தி நம்பியின் ஊருக்கு அருகிலுள்ள பெரிய தலம். அன்றியும் இவ்வரசன் ஆட்சியாண்டுகள் 1018 - 1054. ஆகவே சாசனத்தின் காலம் 1018 + 32 = கி.பி. 1050. கங்கை கொண்ட மன்னனுடைய புதல்வன் இவ்வரசன். அவன் கட்டிய கங்கை கொண்ட சோழேச்சுரத்திற்குக் கருவூர்த் தேவர் திருவிசைப்பா பாடினார். காலம் சுமார் 1030. ஆதலால் கருவூர்த் தேவர் திரு விசைப்பாவையும் நம்பியாண்டார் நம்பி உடன் காலத்தில் இருந்து தொகுத்திருக்கிறார். ஆதலால், இடத் தொடர்பினா லும், கால அமைதியினாலும், இந்நம்பி இந்தப் பதினோராம் நூற்றாண்டு முதற் பாதியில் ஆட்சிபுரிந்த சோழ மன்னர் இராசராசன், இராசேந்திரன், இராசாதிராசன் ஆகிய மூவர் காலத்திலும் வாழ்ந்திருந்தார் என்று கருதுகிறோம். சாசனத்தில் குறிப்பிடப்பட்ட நம்பி இவரே. நம்பி காட நம்பி என்ற தொட ரால் இதை நன்கு உணரலாம். ஆராதனை செய்கின்றவர் என்ற மையினாலே இவர் சிவாசாரியர் போலும். கி.பி. 1030இல் இவர் திருவிசைப்பா பாடியிருக்கலாம். சாசனம் கூறுகின்றபடி 1050இல் இவர் உயிர் வாழ்ந்திருத்தல் நிகழக் கூடியதே.

சேக்கிழார் தம் புராணத்தில் சுந்தரர் வெள்ளானை மீது இவர்ந்து கைலை செல்ல, சேரமான் தம் குதிரை ஏறிக் கைலாயம்

சென்றார் என்று பாடியிருக்கிறார். இதை நம் நம்பி பின்வரும் பாடலில் குறிப்பிடுகின்றார்:

களையா உடலோடு சேரமான் ஆரூரன்
விளையா மதமாறா வெள்ளானை மேல்கொள்ள
முளையா மதிசூடி மூவா யிரவரொடும்
அளையா விளையாடும் அம்பலம்நின் ஆடரங்கே.

இது கொண்டு இந்நம்பி காலத்தால் சேக்கிழாருக்குப் பிற்பட்டவர் என்று கருதுபவர் சிலர். இக்கருத்துச் சரியன்று. நாயன்மார் கதைகள் பல ஆங்காங்கு நாட்டின் பல பகுதிகளிலும் வழங்கி வந்தன. அவற்றை நம்பியாண்டார் நம்பியும், சேக்கிழாரும் கேட்டறிந்து முறையே திருத்தொண்டர் திருவந்தாதியிலும், பெரியபுராணத்திலும் அமைத்துக் கொண்டார்கள். இவர்களைப் போலவே பூந்துருத்தி நம்பியும் தமக்கு முன் வழங்கிய செய்திகளைக் கேட்டறிந்து பாடினார் என்று கருத வேண்டும். ஆதலால் பூந்துருத்தி நம்பி காடநம்பி 1030க்கு முன் தம் திருவிசைப்பாக்களைப் பாடினார், பின்னும் நெடுங்காலம் வாழ்ந்திருந்து, கல்வெட்டிலும் குறிப்பிடப்பட்டுள்ளார் என்று கருதுவது பொருத்தமுடையது.

பாடல்

திருவாரூர் திருவிசைப்பாவில் இரண்டு பாடல்களிலும் பெருமான் ஆரூர் ஆதியாய், வீதி விடங்கராய், நடம் குலாவினரே என்று பாடுகிறார். ஆரூர்த் தியாகருடைய இருந்தாடும் நடனம் என்னும் அசபா நடனத்தை இது குறிப்பிடுகின்றது. பின்வரும் பாடல் இவர் பாடியுள்ள பாடலின் சிறப்பான பக்திச் சுவைக்கு எடுத்துக் காட்டாகும்:

பத்தியாய் உணர்வோர் அருளைவாய் மடுத்துப்
பருகு தோறு அமுதமொத் தவர்க்கே
தித்தியா இருக்கும், தேவர்காள், இவர்தம்
திருவுரு இருந்தவா பாரீர்!
சத்தியாய்ச் சிவமாய், உலகெலாம் படைத்த
தனிமுழு முதலுமாய், அதற்கோர்
வித்துமாய், ஆரூர் ஆதியாய், வீதி
விடங்கராய், நடம்குலா வினரே!

இரண்டாம் பதிகத்தில் நடராசப் பெருமானுடைய திருக் கூத்தையே போற்றுகின்றார். 'ஆடகத்தால் மேய்ந்து அமைந்த அம்பலம்' என்று முதற் பராந்தகசோழன் தில்லையைப் பொன் வேய்ந்த வரலாற்றைக் குறிப்பிடுகின்றார். கணம்புல்லர் கண்ணப்பர் என்ற இருவரையும் ஆட்கொண்ட செய்தியை இரண்டாம் பாடல் கூறுகின்றது. திருநாவுக்கரசர் திருவாமூரில் பிறந்தவர் என்பதையும், அவரைச் சைவ நெறியில் சிவபெருமான் சார்வித்தார் என்பதையும் (ஆமூர் நாவுக்கரசைச் செல்ல நெறி வகுத்த சேவகனே) கூறுகின்றார். அடுத்து 'எம்பந்த வல்வினை நோய் தீர்த்திட்டு எமையாளும் - சம்பந்தன் காழியர் கோன் தன்னையும் ஆட்கொண்டருளி' என்று இவர் குறிப்பிடுவதை, தாயுமான சுவாமிகள் எந்நாட்கண்ணியில் அப்படியே எடுத்து வைத்திருக்கிறார்:

எம்பந்த வல்வினை நோய் தீர்த்திட்டு எமையாளும்
சம்பந்தனை அருளால் சாரும்நாள் எந்நாளோ!

சேரமானும், ஆரூரனும் களையா உடலோடு கைலாயம் சென்றதையும், ஆரூரர் வெள்ளானை மேல் கொண்டு சென்ற தையும், அடுத்த பாடலில் கூறுகின்றார். இங்கு இவர் கணம் புல்லர், கண்ணப்பர், நாவுக்கரசு, சம்பந்தர், சேரமான், ஆரூரர் ஆகியோரை முறையாகக் குறிப்பிடுவது காலமுறைப்படி அமைந் திருக்கிறது. 'அடியவர்கள் தற்சூழ' என்ற இவர் பாடலில் வரும் தொடர் குலசேகர ஆழ்வார் பாடலிலும் வருகிறது. இறுதிப் பாடலில் இவருடைய தமிழ் மாலை பத்தையும் கருத்தறிந்து பாடுவது பற்றிச் சொல்வது மிக்க நயமுடையது:

சேடர் உறைதில்லைச் சிற்றம் பலத்தான்தன்
ஆடல் அதிசயத்தை ஆங்கறிந்து பூந்துருத்திக்
காடன் தமிழ்மாலை பத்தும் கருத்தறிந்து
பாடும் இவை வல்லார் பற்றுநிலை பற்றுவரே.

இவ்வாறு இவர் தம் இரு பதிகங்களிலும் பெருமானுடைய ஆடல் அதிசயத்தில் ஈடுபட்டு, அறிந்து சொல்வது இவருடைய பக்திச் சிறப்பை நன்குணர்த்துகிறது. இப்பாடல்கள் தேவாரம் பாடுவோரிடையே இன்னும் அதிக ஆட்சி பெறுதற்குரியன.

# புருடோத்தம நம்பி

## ஆசிரியர்

திருவிசைப்பாப் பாடிய ஆசிரியர்களில் இவர் எட்டாமவர். நம்பி என்பது ஒரு சிறப்புப் பெயர்; சிவபிரானுக்கும் திருமாலுக்கும் வழங்குவது: இருவர் அடியார்களுக்கும் வழங்குவது. அங்ஙனமே, புருடோத்தமன் என்ற சொல் மனிதருள் சிறந்தவன் என்று மட்டுமே பொருள்படுவது; சிறப்பாகத் திருமாலுக்கு வழங்கப் பெறும். இவர் இப்பெயரைத் தாங்கிய சிவனடியார்; வைணவராயிருந்தாரா அல்லது வைணவமரபா என்பது விளங்கவில்லை.

இவர் ஒன்பதாந் திருமுறையாகிய திருவிசைப்பாவில் 26 - 27 ஆகிய இரு பதிகங்களைப் பாடியிருக்கிறார்: இரண்டும் தில்லையைக் குறித்தவை, பஞ்சமப் பண்ணில் உள்ளன; தனித் தனி 11 பாடல்கள் உடையன. இரண்டின் இறுதிப் பாடலிலும் இவர் தம் பெயரைக் குறிப்பிடுகிறார். முதல் பதிக இறுதிப் பாடலில் "மாசிலா மறை பல ஓதும் நாவன் வண்புருடோத்தமன் கண்டுரைத்த வாசக மலர்கள்" என்று கூறுகிறார். இதனால் இவர் அந்தண மரபினர் என்பது தெளிவு. இவர் தில்லையிலே வாழ்ந்திருந்தவர் போலும். இரண்டாம் பதிக இறுதிப் பாடலில் புருடோத்தமன் என்று மட்டுமே கூறுகிறார்.

## காலம்

காலத்தை அறிவதற்குச் சான்றுகள் இல்லை எனினும், நம்பியாண்டார் நம்பியால் திருவிசைப்பா தொகுக்கப்பெற்றது என்பதைக் கொண்டு முடிவு செய்தல் பொருந்தும். நம்பி முதலாம் இராசேந்திரன் காலத்திலும் வாழ்ந்திருந்து அவன் கட்டிய கங்கைகொண்ட சோழேச்சுரம் பற்றிக் கருவூர்த்தேவர் பாடிய பதிகத்தைத் தொகுத்திருக்கிறார். ஆதலால் இராசேந்திரன் காலத்துக்குச் சற்று முன்னதாக இவர் தம் பதிகங்களைப் பாடினார் என்று நாம் கருதலாம். அதாவது 11ஆம் நூற்றாண்டின் தொடக்க ஆண்டுகள் என்பது பொருத்தமாகும்.

## பாடல்

இரு பதிகங்களும் அகத்துறையில் அமைந்தன. அந்தாதித் தொடையாக உள்ளன. முதல் பதிகம் தலைவி கூற்றாகவும்,

மற்றது வளை இழந்த தலைவி இரங்கலாகவும் உள்ளது. முதல் பதிகம், பாடலின் இறுதியடியில் பாதி (நான்கு சீர்) அடுத்த ஒரு பாடலின் தொடக்கமாக வருகிறது. பஞ்சமம் என்ற பண்ணை முதல் பாடலிலேயே குறிப்பிடுகிறார். பயலைமை, நீவி (சோர்வு), வல்வினையாட்டியேன் என்ற சொற்கள், அப்பர் கூறும் தொடராகிய எடுத்த பொற்பாதம், "ஆசையை அளவறுத்தார் இங்காரே" என்ற பழமொழித் தொடர் ஆகியன இவன் பாடல்களில் பயில்கின்றன. முப்புரம், மார்க்கண்டேயன், யமன், இராவணன், மாலுக்கு ஆழி ஈந்தது ஆகிய வரலாறுகள் குறிப்பிடப்பட்டுள்ளன. இரண்டு பாடல்களில் தில்லையைத் திருச்சிற்றம்பலமென்றே பாடுகிறார். எடுத்துக்காட்டாக ஒரு பாடலைக் குறிப்பிடலாம்; "திருச்சிற்றம்பலத்தெங்கள் செல்வனே, நீ தாயினும் மிக நல்லை என்று அடைந்தேன். என் தனிமையைக் கருதி நீ அருள் புரியவில்லை" என்று தன்னைத் தன்மையிடத்திலும், ஆடுகின்ற செல்வனை முன்னிலையிலும் வைத்துப் பாடுகின்ற தலைவி, உணர்ச்சி வேகத்தினாலே, தன்னை மறந்து பாடலைத் தொடர்ந்து படர்க்கையில் வைத்துப் பாடுவது, உள்ளத்தைப் பிழிந்து காட்டுவதுபோல் உள்ளது:

**சேயிழை யார்க்கினி வாழ்வரிது,**
**திருச்சிற் றம்பலத் தெங்கள் செல்வனே! நீ**
**தாயினும் மிக நல்லை என்ற டைந்தேன்;**
**தனிமையை நினைகிலை; சங்கரா! உன்**
**பாயிரும் புலியத ளின்னுடையும்**
**பையமே லெடுத்தபொற் பாதமுங்கண்டு,**
**ஏயிவள் இழந்தது சங்கம், ஆ ஆ!**
**எங்களை ஆளுடைய ஈசனேயோ!**

இவ்வாறே இவர் பாடலில் அப்பர் கூறும் தொடர்கள் இரண்டை எடுத்து அமைத்திருப்பது, அவருடைய தேவாரத்தில் இவருக்கு இருந்த ஈடுபாட்டை நன்கு உணர்த்துகிறது. "தாயினும் மிக நல்லை சங்கரா" - தாயினும் நல்ல சங்கரன் : அப்பர்; எடுத்த பொற்பாதம் - இனித்தம் உடைய எடுத்த பொற்பாதம் 4941; ஆட எடுத்திட்ட பாதமன்றோ 4948. ஆவியின் பரமன்று என் ஆதரவே (முதல் பதிகம் பாடல் 1, 2) என்ற தொடரின் கருத்து, பெருமானிடத்து யான் கொண்ட காதல் என் ஆவி தாங்கக்கூடிய அளவினதன்று என்பதாகும்; "சிறுகோட்டுப் பெரும்பழம் தூங்கியாங்கு, இவள் உயிர் தவச்சிறிது, காமமோ

பெரிதே" என்ற குறுந்தொகைப் பாடலை (18) ஒப்பு நோக்குக. முதல் பதிகத்தில் 'எழுந்தருளாய் எங்கள் வீதியூடே' என்று வேண்டுகிற தலைவி, அடுத்த பதிகத்தில், 'என்னையும் பலியேற்க வந்து கைவளைகள் கொண்டாரோ? என்று பாடுகிறாள். 'தாயிவரே எல்லார்க்கும் தந்தையும் ஆம் என்பாரால்' என்ற பொருள் இங்கும் வரக் காண்கிறோம்.

## சேதிராயர்

### ஆசிரியர்

திருவிசைப்பா பாடிய ஆசிரியருள் இவர் பாடல்கள் இறுதியில் வைக்கப்பட்டுள்ளன. திருவிசைப்பாவுக்குப் பதிக அடைவு கூறும் தனிப்பாடல், இது பற்றியே சேதிராயருடைய திருக்கடைகாப்பு ஒன்று என்று இவர் பதிகத்தைக் குறிப்பிடு கின்றது. இவர் பாடியது தில்லைக்குரிய பதிகம் ஒன்றே. இது, சிவபிரானிடத்தில் மால் கொண்ட பெண்ணைக் குறித்து நற்றாய் இரங்கலாக, கலித்துறையில் அந்தாதித்தொடை அமைந்த 10 பாடல்கள் கொண்டது. இறுதிப் பாடலில் தம்மை "எழிற் சேதிபர் கோன்" என்று புலப்படுத்துகிறார். சேதிபர் கோன், சேதி நாட்டாருக்கு அரசன். சேதி நாடென்பது, மலையமான் நாடு, மலாடு என்றும் சொல்லப்பெறும்: இது திருக்கோவ லூரைத் தலைநகராக உடைய தென் ஆர்க்காடு ஜில்லாவின் வடமேற்குப் பகுதியாகும். மெய்பொருள் நாயனாரும், நரசிங்க முனையரையரும், இங்கு ஆட்சி புரிந்தார்கள். இவரும் அவர்கள் வழி வந்தவர் போலும்; கோன் என்றமையால் குறுநில மன்னராவார்.

### காலம்

உத்தமசோழன் (970 - 985) காலத்தே, சேதி நாட்டு அரச னொருவன் திருக்கோவலூரிலிருந்து அரசு செய்து கொண்டு, அச்சோழனுக்குத் திறை செலுத்தி வந்தான். அவன் நரசிங்க வர்மன் என்ற அபிடேகப் பெயருடையவன். இதனால், அவன் சுந்தரமூர்த்தியை ஆதரித்த நரசிங்க முனையரையர் வழியினன் என்று கருத இடமுண்டு; அவன் பெயர் 'சித்தவடத்தடிகள்'. பிற்காலத்தில், முதற் குலோத்துங்கன் (1070 - 1120 ) காலத்திலும், இராசராசச் சேதிராயன், இராசேந்திர மலையமான் என்று பட்டம் தரித்தவர்கள் சிறு தலைவர்களாய், திருக்கோவலூர், கிளியூர் ஆகிய நகரங்களைத் தலைநகராய்க் கொண்டு வாழ்ந்

திருந்தார்கள். இதனால் 11 - 12 நூற்றாண்டுகளில் சேதிராயர் குறுநில மன்னராய்ச் சோழரின் கீழ் வாழ்ந்தமை தெளியப்படும். இவர்களுள் திருவிசைப்பாப் பாடியவரும் ஒருவர். சேதிராயர் என்ற குலப்பெயர் மட்டும் தெரிகிறதே ஒழிய, பட்டப்பெயர் தெரியவில்லை. எனினும், திருவிசைப்பாப் பாடினோர் பலரும், நம்பியாண்டார் நம்பிக்குக் காலத்தால் முற்பட்டிருத்தல் வேண்டுமென்பது உறுதி. மேலும் இவர்கள், இராசராசன் தஞ்சைக் கோயில் கட்டிய காலத்தில் சிவலாய வழிபாட்டிலும் சைவ சமயத்திலும் ஏற்பட்ட பேர் எழுச்சியினால் உந்தப்பட்டு, ஆங்காங்கு அருள் வசத்தால் திருப்பதிகம் பாடியவர்கள். பலர் பல பதிகங்கள் பாடியிருத்தலும் கூடும்; சிலவே நம்பிக்குக் கிடைத்துத் தொகுக்கப்பெற்றன என்று நாம் கருத இடமுண்டு. அவ்வாறு பாடியவர்களுள் சேதிராயரும் ஒருவராவார். எனவே, இவர் காலம், கருவூர்த்தேவர், பூந்துருத்தி நம்பிகாட நம்பி, புருடோத்தம நம்பி முதலியோரைப் போல, கி.பி. 1010 - 1030க்கு உட்பட்ட காலமாகும்.

**பாடல்**

சேதிராயர் பத்துப் பாடல்களுள் யானையுரித்த செய்தி இருமுறை கூறுகிறார். வேறு இவர் கூறுவன: பன்றிபின் சென்றது, நான்முகன் சிரம் கிள்ளியது, அருக்கன் பல் இறுத்தது; புரம் எரித்தது, விடம் உண்டது, காலனைக் கோளிழைத்தது என்பன.

ஏயு மாறுஎழிற் சேதிபர் கோன்தில்லை
நாய னாரை நயந்துரை செய்தன
தூய வாறுரைப் பார்துறக் கத்திடை
ஆய இன்பம் எய்தி இருப்பரே.

என்பது பதிகத்தின் இறுதிப் பாடல் தம்மைச் சேதிபர் கோன் என்று குறிப்பிடுவது அன்றி, வேறு இவர் வரலாறு அறிவதற் கான குறிப்புகள் எவையும் நூலகத்து இல்லை. ஒரு பெண்ணின் தாய், தன் பெண் தில்லை நடராசப் பெருமானைக் காதலித்து அவனது அருள் பெறாமையால் அவனை நினைத்து விம்மி அழுவதையும், அவனது அருளைப் பெற விரும்பி இரத்தலை யும், திருவாசகத்துத் தசாங்கத்தில் கிளியை விளித்துக் கூறியது போல அவனது பெயரைக் கூறுமாறு கிளியைக் கேட்டலையும், கூறுவதாகப் பதிகம் அமைந்துள்ளது. பாடலில் தேவாரத் தொடர்கள் பயில்கின்றன.

# கருவூர்த் தேவர்

ஒன்பதாந் திருமுறையுள் அடங்கிய ஒன்பது ஆசிரியரில், ஒரே பதிகம் பாடினோர் மூவர்; இரண்டு பதிகம் பாடினோர் இருவர் நான்கு பதிகம் பாடினோர் மூவர்; பத்துப் பதிகம் பாடினோர் கருவூர் தேவர் ஒருவரே; இவர் பாடிய பாடல்கள் 103. இவர் பாடிய பத்துப் பதிகங்கள் இத்திருமுறையுள் சேர்ந் திருப்பது இவருடைய சிறப்பைக் காட்டும். திருவிசைப்பாப் பாடினோர் வரிசையில் இவர் மூன்றாம் ஆசிரியர்.

## ஆசிரியர்

கருவூர்த்தேவர் வரலாறெதுவும் நாட்டில் பிரசித்தமாக வழங்கவில்லை. கருவூர்த் தேவருக்காக திருப்புடை மருதூரில் சுவாமி முடியைச் சாய்த்தார் என்ற வரலாறு உண்டு. இவருடைய இயற்பெயரும் தெரியவில்லை. கருவூர் என்ற அடையாலே இவர், இப்போது கரூர் என வழங்கும் கருவூரினர் என்று கருதுவர்; இவ்வூர்க்கோயில் கருவூர் - ஆனிலை என்ற பெயரு டையது; சம்பந்தர் பதிகம் பெற்றது. 1129 பாடல்கள் கொண்ட இவ்வூர்த் தலபுராணம், எறிபத்தர், புகழ்ச்சோழர் ஆகிய நாயன் மார் வரலாறுகளை இரு சருக்கங்களாற் சொல்லிய பிறகு, கருவூர்த்தேவர் கதிபெறு சருக்கம் என்ற இறுதிச் சருக்கத்தில் 157 பாடல்களால் கருவூர்த்தேவர் சரித்திரத்தைக் கூறுகிறது. இப்புராண ஆசிரியர் பெயர் தெரியவில்லை; எனினும், இவர் மெய்கண்ட பரம்பரையில் 15ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த சத்தியஞான பண்டாரத்தின் மரபில் வந்த மற்றொரு சத்திய ஞானியின் மாணாக்கரென்றும், கி.பி. 1618இல் புராணம் பாடினாரென்றும் பாயிரத்தால் அறிகிறோம். இதிற் கூறப்பட்ட வரலாறு பின்வருவதாகும்.

இவர் கருவூரில் அந்தணர் மரபில் பிறந்த சிவனடி மறவாத சித்தர். காய சித்தி கைவந்தவர். இவருடைய சித்த மார்க்கச் செயல்கள் பிற அந்தணருக்குப் பிடிக்காமலிருக்க, இவர் அவர் களை நல்வழிப்படுத்த எண்ணி, அவர்கள் கண்டு அதிசயிக்கும் படியாக அகாலத்திலே மழை பெய்யச்செய்து, நதி பெருகிவரப் பண்ணி, கோயில் கதவம் தாள் திறக்கச்செய்து, பூதங்கள் குடை பிடித்துவரச் செய்து, பின்னும் பல அற்புதங்களும் செய்து காட்டினார். கொங்கு, குடநாடு முதலான பல நாடுகளிலும்

சென்று தல வழிபாடு செய்து, காசி, காஞ்சி, காளத்தி, அருணை, மதுரை வழிபட்டுத் திருக்குருகூர் என்ற நம்மாழ்வார் தலம் அடைந்தார். திருமால் கட்டளையின்படி பாகவதர்கள் இவரை வணங்கிப் போற்றினர். செந்தில் கன்னியாகுமரி சுசீந்திரம் நெல்வேலி அடைந்து பெருமானை அழைத்தும் வாராமையால், ஊரையே சபித்தார். பெருமான் திருவிளையாட்டால் ஓர் அடியவர் பின்னர் இவரை வழிபட, தம்மை வழிபட்டதற்கு மகிழ்ந்து இவர் சாப நீக்கம் செய்தார். அடுத்து இவர் ஒரு சிவ லிங்கத்தைத் தழுவ அது குழைந்தது.

திருப்புடை மருதூரில் திருவிசைப்பாப் பாடி மற்றொரு திருமால் பதி பணிந்து முன்றீசரை வணங்கி, காளியால் மதுக் கொணர்வித்தார். பின்னர் அங்கு வன்னி மரத்தை மீன் மழை பொழியச்செய்து, மதுவும் மாமிசமும் அற்பக்காரியம் என்று கரும யோகியருக்குக் காட்டி நல்லறிவு ஊட்டிக் குற்றாலம் சென்று திருவிசைப்பாப் பாடி பொதிகை அகத்தியரைத் தரிசித்து, அங்கு தங்கி இருந்தார்.

அக்காலத்து, தஞ்சையில் இராசராச மன்னன், தான் பிரதிட்டை செய்த பெருவுடையார் எவ்வாறு மருந்து சாத்தியும் மருந்து இளகிப் பிடிக்காமல் இருந்தது கண்டு, மிகவும் மனம் வருந்தினான். 'கருவூர்த் தேவரால்தான் இது முடியும்' என்னும் அசரீரி எழுந்தது. அப்போது, அங்கு தம் உருக்கரந் திருந்த போகநாதர் என்ற சித்தர், கருவூர்த்தேவரை அங்கு வருமாறு அழைக்க, ஒரு காக்கையின் காலில் ஓலை கட்டி அனுப்பினார். ஓலை பெற்ற கருவூர்த்தேவரும் வந்து செய்தி அறிந்து, சிவலிங்கத்தை நேரே நிறுத்தி மருந்து இறுகிப் பொன் போல் ஆகிப்பிடித்துக் கொள்ளுமாறு செய்தார்.

பின்னர் இவர் திருவானைக்கா வணங்கி, திருவரங்கம் சென்று, தம்மை விரும்பிய ஒரு பொதுமகளுக்குத் திருஅரங்க நாதன் திருமார்பில் உள்ள மாணிக்க மாலையைத் தந்து, பின்னர் அவள் மாலையைத் திருடினாள் என்று குற்றம் சாட்டப்பட்ட போது, நாதனே தோன்றி 'யாமே தந்தோம்' என்று அசரீரியாகக் கூறுமாறு செய்தார். பொறாமை கொண்ட அந்தணர் தூண்டுதலால், இவர் இருக்கையில் மதுவும் ஊனும் இருக்குமென்று அரசன் சோதனை செய்வித்தபோது, அங்கு வைதிக பூசைக்கேற்ற உபகரணங்கள் நிரம்பி இருக்கவும், இவரைப்

பழித்த அந்தணர் இல்லங்களில் மதுக் குடங்களும் ஊனும் நிறைந்திருக்கவும் அரசன் கண்டு, இவருடைய பெருமையை உணர்ந்தான். அந்தணர் ஊரை விட்டு ஓடிவிட்டனர். உரிய காலத்தில் இவர் கருவூர் ஆனிலை அடைந்து, அங்கு கோயில் கொண்ட பசுபதீசுவரரோடு இரண்டறக் கலந்தார்.

இப்புராணக் கதை நாம் இங்கு கருதும் வரலாற்று ஆராய்ச்சிக்கு அப்பாற்பட்டது. இவர் அந்தணர் குலத்தினர் என்பது திருவிசைப்பாவிலிருந்து அறியப்படுகிறது. மற்று இவருடைய அற்புதம் பற்றிய கதைகள் யாவும் அற்புதங்களையே நம்பிருந்த அக்காலத்திற்குப் பொருந்துவனவாகலாம். அன்றியும், உலகியலுக்கு வரலாறு எவ்வளவு அப்பாற்படுகிறதோர் அவ்வளவுக்குச் சித்தருக்குச் சிறப்பு என்று அக்காலத்தோர் நினைத்தார்கள். பலரால் சொல்லப்பட்டுள்ள (இங்கு சொல்லப்படாத) கதைகள் அக்காலத்திற் பொருந்தாதன என்றே யாம் எண்ணுகிறோம். இவருடைய சித்த மார்க்கத்துக்கு ஏற்றம் தரப் பிற்காலத்தில் புனைந்த கதைகள் என்றே அவை கொள்ளத்தக்கன.

### தேவரும் சித்தரும்

மேலும் இங்கு, இரண்டு நிலைமைகளை ஒன்று சேர்த்துப் புராணக் கதையாக ஆக்கிய தன்மையைப் பார்க்கிறோம். திருவிசைப்பாக்களைப் பாடிய ஆசிரியர் ஒருவர். அவர் சோழ நாட்டில் பல இடங்களிலும் வாழ்ந்திருந்து பல கோயில்களுக்குத் திருவிசைப்பாப் பாடினார். அவர் பாடிய தலங்களை இப் புராண வரலாறு குறிப்பிடவில்லை. அவர் பாடியவற்றுள் திருப்பூவணம் ஒன்றே சோழ நாட்டிற்கு வெளியே இருந்தது. மற்ற யாவும் சோழநாட்டில் உள்ள தலங்கள். மேலும் அவர், இராசராசன் தஞ்சைப் பெருங்கோயில் அமைத்த காலத்தில் மட்டுமன்றி, அவனுடைய மகன் இராசேந்திர சோழன் கங்கை கொண்ட சோழபுரம் கட்டிய காலத்திலும் அக்கோயிலுக்குப் பதிகம் பாடினார். இச்செய்தியைப் புராண வரலாறு குறிப்பிடவேயில்லை. மற்றப்படி, சித்தர்களுள் ஒருவராகக் கருவூர்ச் சித்தர் என்ற ஒருவரை, கருவூரார் பூசாவிதி கருவூரார் ஞானம் என்ற நூல்களால் அறிகிறோம்.

கருவூர்ச் சித்தர் வரலாற்றில் அருவருப்பான ஒரு சம்பவம் சொல்லப்படும். தஞ்சைப் பெருங்கோயில் கட்டியபோது அஷ்டபந்தன மருந்து இறுகாதபடி இளகிக் கொண்டிருந்த

தென்றும், கருவூர்ச்சித்தர் வந்து தம் வாயிலிருந்த தம்பலத்தை உமிழவே, மருந்து இளகிப்பிடித்துக் கொண்டதென்றும் சொல்வர். சித்தர்கள் எதை வேண்டுமானாலும் செய்யலாம் என்ற ஓர் அறிவுக்குறைவான கருத்துக்கு இது எடுத்துக்காட்டு. மனித இயல்புக்கு மேம்பட்ட காரியங்களைச் சித்தர்கள் செய்தார்கள் என்பதில் கெடுதல் இல்லை. மனித இயல்பினும் தாழ்ந்த, அல்லது விலக்கான, செயல்களைச் செய்ததாகச் சொல்வது நன்மை பயவாது. கருவூர்ச்சித்தர் ஒருகால் 15ஆம் நூற்றாண்டில் இருந்திருக்கலாம். கால உணர்வின்மையால், கதை புனைந்தவர்கள், இராசராசன் காலம் வாய்ப்பாக உள்ளதென்று கருதி, அவன் காலத்துக்கு இக்கதையை மாற்றிக் கொண்டார்கள். பிற்காலச் 'சித்தர்கள்' இடையே இத்தகைய வரலாறுகள் அதிகம். கன்னட நாட்டில் எடையூர் சித்தலிங்கேசர் என்ற ஒரு சித்தர் இக் காலத்தில் வாழ்ந்தார் (15நூ.) என்று சொல்வர். இவர் கோகர்ணம் சென்று நீரால் சூழப்பட்டிருந்த மகா பலேசுவரர் லிங்கத்தின் முடி மீது தம் காலை ஊன்றித் தியானத்தில் அமர்ந்தாராம். பார்த்த அர்ச்சகன்மார் அடித்து வெருட்டினர். நீர் வற்றிவிட்டது. பின் அவர்கள் இவர் காலில் விழ, இவர் மறுபடியும் லிங்கத்தின் தலையில் காலை வைக்க, நீர் ஊறிற்றாம். இக்கதையும் கருவூர்ச் சித்தர் கதையும் ஒரே காலத்தில் எழுந்திருக்கக் கூடும். எவ்வளவுக் கெவ்வளவு சித்தர்கள் அநாகரிகமான காரியம் செய்கிறார்களோ அவ்வளவுக்கவ்வளவு அவர்களுக்குப் பெருமை! சித்தர்களை யாம் வணங்கத் தயார். ஆனால் இப்படி மட்டமான கதைகளைக் கட்டிவிடுவது சமூக வாழ்வுக்கும் மேம்பாட்டுக்கும், சித்தர்களுக்குமே பெரிதும் பாதகமாகும்.

சித்தர் என்று நூல்கள் சொல்லும் பெயருக்கேற்ப, இவர் அற்புதம் பல செய்து காட்டியது பொருந்தக் கூடியதே. புராணம் எழுதிய (17ஆம் நூற்றாண்டு) ஆரம்ப காலத்தில் அதற்கு 600 ஆண்டுகளுக்கு முற்பட்டு இருந்த பெரும் பக்தராகிய கருவூர்த் தேவர் என்ற திருவிசைப்பா ஆசிரியர் வரலாறு மக்கள் மனத்தில் மறைந்து போயிருக்கலாம். ஆனால், அற்புதக் கதைகள் ஒன்று பத்தாய்க் கிளைத்து நிலைத்திருப்பதை இன்றும் காண்கிறோம். ஆகவே, புராணகாரர் தாம் கருவூருக்குப் புராணம் பாடிய காலத்தில், கருவூர்ச்சித்தர் வேறு, கருவூர்த்தேவராகிய திருவிசைப்பா ஆசிரியர் வேறு என்ற தெளிவில்லாமல், இருவர் கதைகளையும் ஒரே வரலாறாகப் புனைந்து விட்டார் போலும்.

காலத்தால் இன்னும் சற்றுப் பின் வந்த சாமிநாதமுனிவர் என்பவர் தாம் பாடிய திருவாவடுதுறைப் புராணத்தில் 58ஆவது அத்தியாயம் திருமாளிகைத் தேவர் பெருமையை உரைக்கு மிடத்தில், கருவூர்ச் சித்தர் வரலாற்றையும், திருவிசைப்பாப் பாடிய கருவூர்த் தேவர் வரலாற்றையும் சிறிது குறிப்பிட்டிருக் கிறார். சிவலிங்கத்தை நிலை பெறுவித்த செய்தி இங்கு கங்கை கொண்ட சோழேச்சுரத்திற்கு மாற்றப்பட்டிருக்கிறது. இங்கு, கருவூர்த் தேவர் திருமாளிகைத் தேவருக்கு அடியவராக வாழ்ந் தார், இவர் திருவீழிமிழலைத் திருவிசைப்பாப் பாடினார் என்று சொல்லப்படுகிறது. சில திருவிசைப்பாப் பாடல்களும் இங்கு குறிப்பிடப்பட்டுள்ளன. இவ்வரலாற்றிலும், கருவூரில் சித்தரையும் பத்தரையும் ஒன்றாக எண்ணியதால் விளைந்த ஒரு குழப்பத்தையே காண்கிறோம். திருமாளிகைத் தேவரின் அடிய வராய்த் திருவாவடுதுறையில் வாழ்ந்தவரானால், இவர் அவ் வூருக்கு ஒரு திருவிசைப்பாப் பாடாத காரணம் விளங்க வில்லை. பாடாமையால் புராணக்கதை குறிப்பிடும் கருவூர்ச் சித்தர் கருவூர்த் தேவர் அல்லர் என்பது தெளிவாகின்றது. அன்றி யும், திருவாவடுதுறைக்கு வேறு ஆசிரியர் (சேந்தனார்) திருவிசைப் பாப் பாடியிருக்கும் நிலைமையும் காண்கிறோம். கருவூர்ச் சித்தர் காளத்தியில் சமாதி கொண்டார் என்பர்.

கருவூர்த் தேவருடைய திருஉருவம் கருவூர் ஆனிலைக் கோயிலிலும் தஞ்சை இராசராசேச்சுரத்திலும் தனிச் சந்நிதியாக எழுந்தருளுவிக்கப் பெற்றிருக்கிறது.

தேவாரத்துப் பத்தர் சித்தர் என்று சேர்த்துக் கூறப் பெறு கின்றனர். 'பத்தரொடு சித்தர் பயில்கின்ற பழுவூரே' (சம்பந்தர்), 'பந்தர் சித்தர் பலரேத்தும் பரமா' (சுந்தரர்) என்பன காண்க. கருவூர்த் தேவர், பத்தர்; கருவூர்ச் சித்தர் என்பவர் சித்தர். ஒரே பெயராயிருப்பதனால் இருவரையும் ஒருவராக மயங்கலாகாது. பத்தர் (தேவர்) காலம் 11ஆம் நூற்றாண்டு; சித்தர் காலம் 17ஆம் நூற்றாண்டு. புராணங் கூறிய அற்புதங்களைச் செய்தவரும், பூசாவிதி முதலான பிற்காலச் சித்தர் பாடல்களைப் பாடியவரு மான கருவூர்ச்சித்தர் (இவர் ஒருவரேயாயினும், இருவராயினும்) நாம் ஆராயும் திருவிசைப்பா ஆசிரியரல்லர். அப்படி ஒருவர் உண்மையில் இருந்திருந்தால். அவர் காலம் 16-17ஆம் நூற் றாண்டு ஆக இருக்கலாம்.

இதுகாறும் கூறியவற்றால் இவர் வரலாற்றில் நாம் அறிவது, கருவூரில் அந்தணர் குலத்தில் பிறந்த இவ்வடியவர் பெரும் பான்மையும் சோழ நாட்டில் தங்கி, சோழர் கட்டிய கோயில் களில் சிறப்பானவைகளான, (ஆதித்தேச்சுரம்), திரைலோக்கிய சுந்தரம், இராசராசேச்சுரம், கங்கை கொண்ட சோழேச்சுரம் என்ற நான்கிற்கும் திருப்பதிகங்கள் உடன் இருந்து பாடினார் என்பதாகும். இவர் இராசராசனாலும் அவன் மகன் இராசேந் திரனாலும் பெரும் சிறப்புப் பெற்று வாழ்ந்தார் என்பதில் தடையில்லை. இனி இவர் பாடல்களால் அறியப்படும் செய்தி களை மட்டும் சுட்டிப் பாடல்களை அடுத்துப் பார்ப்போம்.

### வரலாறு

கருவூர்த் தேவர் ஒவ்வொரு பதிகத்தின் இறுதிப் பாடலிலும் மிகவும் பொருள் பொதிந்த சொற்களால் தம்மைக் குறிப்பிடு கின்றார். அறிவுறு கருவூர்த் துறை வளர் தீந்தமிழ் மாலை, கலைபயில் கருவூர் ஆரணம் மொழிந்த பவளவாய் சுரந்த அமுத மூறிய தமிழ்மாலை, ஆரணம் பிதற்றும் பித்தனேன் மொழிந்த மணி நெடுமாலை, ஆலையம் பாகின் அனைய சொற் கருவூர் அமுதுறழ் தீந்தமிழ்மாலை, ஆரணத்தேன் பருகி அருந்தமிழ் மாலை கமழவரும் கருவூரன் தமிழ்மாலை, அங்கையோடு ஏந்திப் பலி திரி கருவூர் அணிந்த சொல்மாலை, செழுமறை தெரியும் கருவூரன் உரைத்த பாவணத் தமிழ்கள், கலைபயில் கருவூரன் கழறு சொல்மாலை, அருமருந்து அருந்தி அல்லல் தீர் கருவூர் அறைந்த சொல்மாலை, செழுஞ்சுடர் விளக்கம் கலந்தெனக் கலந்து உணர் கருவூர் தரும் கரும்பனைய தீந்தமிழ் மாலை - என்ற தொடர்கள் முறையே பத்துப் பதிகங்களுக்கும் உரியனவாகும். இத்தொடர்களால் நமக்கு மூன்று கருத்துக்கள் எழுகின்றன.

முதலாவது, இவர் அந்தணர் என்ற கருத்து. ஆரணம் பிதற்றும், ஆரணத்தேன் பருகி, ஆரணம் மொழிந்த பவளவாய், செழுமறை தெரியும் என்ற தொடர்கள் வேதத்தைக் குறிப்பிடு கின்றமையால், இவர் வேதம் ஓதும் அந்தணர் என்ற கருத்து நிலவுகின்றது. இது ஒருவகையில் பொருத்தமே. திருஞான சம்பந்தர் சிவ வேதியர் அல்லவா? ஆயினும், இவ்விடம் சிறிது சிந்தித்து ஆராய்தற்குரியது, சைவத்தில் ஆசாரியப் பதவிக்கு வந்தவர்களுக்கு அவர்களுடைய வருணம் பற்றிப் பெயர் சொல்லப்படும் என்ற ஒரு வழக்கு வடமொழி நூல்களில்

பார்க்கிறோம். பிராமணராய் இருந்தால் சிவம் எனப்படுவார்; அரசராய் இருந்தால் தேவர் எனப்படுவார். வடமொழியில் இதற்கு உதாரணங்கள் மிகப்பல. சைவ நூல்கள் பல சிவாசாரிய ரால் செய்யப்பட்டவை. தத்துவப் பிரகாசிகை என்ற ஒன்று மட்டும் ஓர் அரசரால் செய்யப்பெற்றது; அவர் பெயர் போஜ தேவர் என்று நூல்கள் சொல்லும். அதே கண்ணோடு இங்கு நாம் பார்த்தால், திருமாளிகைத் தேவரும், கருவூர்த் தேவரும் அந்தணர் அல்லர் என்று கருத இடம் உண்டு. கருவூர்த் தேவர் சிவஞானம் கைவரப் பெற்ற பெருஞானி ஆனமையால், அவர் தம்மைச் 'செழுமறை தெரியும் கருவூரன்' என்று சொல்லு வதில் வியப்பில்லை.

இனி, இரண்டாவது கருத்தும் இதை ஒட்டியதே. ஆறாவது தொடர் கங்கை கொண்ட சோழேச்சுரத்தைக் குறித்தது. இங்கு இவர், 'அங்கையோடேந்திப் பலிதிரி கருவூர்' என்று தம்மைக் குறிப்பிடுகின்றார். கருவூரன் என்று சொல்லாமல் கருவூர் என்று ஊரை மட்டும் சொல்லித் தம்மைக் குறிப்பிட்டுக்கொள்வது இவருக்கு ஓர் இயல்பு. இங்கு இவர் ஓடே கலனாய் ஊரிடு பிச்சை ஏற்று உண்பதைக் கூறுகிறார். இவருடைய காலம் இராச ராசன் காலம். சோழ மன்னர் அந்தணரைக் குடியேற்றி எண்ணில் லாத சதுர்வேதி மங்கலங்கள் அமைத்த போதிலும்கூட, பிரா மணரைத் தங்கள் குருவாகக் கொண்டதில்லை; சிவாசாரிய ரையே கொண்டனர் என்று சாசனங்கள் கூறுகின்றன. அன்றி யும் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டில் தொடக்கத்தில் வாழ்ந்த சங்கராசாரியருக்குப் பின் அவர்கள் 'நானே பிரமம்' என்று சொன்னவர்கள். அவர்கள் துறவிகளாய் இருக்கலாம்; அவர்கள் பிச்சை ஏற்றிருக்கலாம். ஆனால் அங்கையில் ஓடேந்தினார்கள் என்பது அவர்களுக்குப் பொருந்தாது; ஓடேந்தினர் சைவர் மட்டுமே. ஆதலால், இவ்வாறு தம்மைக் கூறும் கருவூர்த்தேவர் அந்தணர் அல்லர் என்றே கருதவேண்டும்.

மூன்றாவது கருத்து: 'அருமருந்து அருந்தி அல்லல் தீர் கருவூர் அறைந்த சொல்மாலை' என்பது; மருந்து காய கற்ப மருந்து; அதை அருந்தி அதனால் ஆயுள் நீடிக்கப் பெற்று இவர் சித்தராகிப் பல அற்புதங்கள் செய்து வாழ்ந்தார் என்று நினைக்கிறார்கள். இது பொருந்தாத கருத்து. இறைவனை 'அடியார் தம் அல்லல் தீர்க்கும் அருமருந்து' என்கிறார் அப்பர் சுவாமிகள் (6.1.5) அருமருந்தாவது கிடைத்தற்கரிய அமுதம்;

இறைவனே அமுதம்; 'கன்னலே தேனே அமுதமே' என்று இவரும் பல சமயம் பாடுகிறார். ஆதலால் இங்கே குறிப்பிடுவது, இறைவன் அருளே அன்றிக் காயகற்ப மருந்தன்று. களந்தைத் திருவிசைப்பாவில், 'பாவியேன் செய்யும் பிழையெலாம் பொறுத்து என் பிணி பொறுத்து அருளாப் பிச்சரே' என்பது, இவர் உடலில் இருந்த ஒரு நோயைக் குறிக்கும் என்றும், 'அரு மருந்து அருந்தி அல்லல் தீர் கருவூர்' என்பது இப்பிணி நீங்கத் தையே குறிக்கும் என்றும் எழுதியிருக்கிறார்கள். இதுவும் பொருந்தாது. பிணி என்பது பிறவிப் பிணியே; பிறவிப் பிணிக்கு மருந்தாகிய திருவருளைப்பெற்று, அத்துன்பத்தினின்றும் நிலைத்த விடுதலை பெற்ற கருவூர் என்பதே பொருள். அதே பாடலில், தொடர்ந்து, 'அல்லல் தீர் கருவூர் அறைந்த சொல் மாலை ஈரைந்தின் பொருள் மருந்து உடையோர்' என்று இவர் சொல்வதில், பாடலின் கருத்தான திருவருளாகிய மருந்து உடையோர் என்பதே பொருளாதல் தெளிவு. இதனால் இங்கு கூறியது உடற்பிணியுமன்று, அதற்கு மருந்துமன்று என்பது விளங்கும். இவர் இராசராசனுக்குக் குருவாயிருந்தார் என்று சொல்வர்.

**பாடல்**

இவர் பத்துத் தலங்களுக்குப் பத்துப் பதிகங்கள் பாடினார். ஐந்து பதிகங்கள் 11 பாடலும், நான்கு 10 பாடலும், ஒன்று 8 பாடலும் கொண்டவை. இவர் பாடிய பண்கள் புறநீர்மை காந்தாரம், பஞ்சமம்; காந்தாரப்பண்* திரை லோக்கிய சுந்தரப் பதிகம் மட்டும். இதன் இறுதிப் பாடலில் காந்தாரம் என்று பெயர் குறிப்பிடுகிறார். இவ்வொரு பதிகம் மட்டும் அகத்துறையில் அமைந்துள்ளது; இது நான்கு சீர்கொண்ட கொச்சகக் கலிப்பா; ஏனைய ஒன்பதும் ஒரே யாப்பு - எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்; ஆதலால் இவை ஒன்பதும், ஒரே பண்ணுக்கு உரியனவாயிருந்திருக்கலாம்; அப்பண் பஞ்சமமே; புறநீர்மை என்று முதல் இரு பண்களுக்கு அமைத்த தலைப்பு ஒருகால் ஏடு எழுதினோரால் விளைந்த பிழை - என்ற கருத்துக்கள் மேலும் ஆராய்ச்சிக்குரியன. பண்ணடைவு சொல்லுகின்ற தனிப்பாடல், கருவூர்த் தேவர் பதிகங்களில் இரண்டு புறநீர்மை என்று கூறுவது உண்மை எனினும், இப்பதிகங்களுடைய யாப்பிலேயே அமைந்த கருவூர்த் தேவருடைய பிற பதிகங்களில் ஏழும் திரு

* ஏட்டில் காந்தாரப் பஞ்சமம் என்றும் காணப்படுகிறது.

மாளிகைத் தேவர் பதிகங்களில் முதல் மூன்றும் பஞ்சமமே; இவற்றின் யாப்பும் மேற்கூறிய எழுசீர் விருத்தமே; இவ்விருத்தங்கள் விளம் மா விளம் மாவிளம் விளம் மா என்ற வாய்பாடுடையன. பஞ்சமப் பண்ணிலுள்ள 21 பதிகங்களில், இந்த யாப்புடைய பதிகங்கள் 15. (ஒரே யாப்புடைய பதிகங்களுக்கு வேறு வேறு பண்கள் அமைந்திருத்தல் கூடாது என்று விதியில்லை)

இவர் நெல்வேலி திருப்புடைமருதூர் குற்றாலம் போன்ற தலங்களுக்கும் திருவிசைப்பாப் பாடி வழிபட்டார் என்று கருவூர்ப் புராணம் கூறுகிறது. பதிக அடைவு கூறுகின்ற பாடல் இப்படிச் சொல்லவில்லை. இதன் உண்மை விளங்க வழியில்லை. ஒருகால் இப்படிப்பட்ட பாடல்கள் எல்லாம் சேர்ந்தால் ஒன்பதாம் திருமுறை மொத்தப் பாடல் 365 என்ற கணக்கு நிறை வடையும் போலும்.

தலப் பெயரையும் கோயில் பெயரையும் இவர் இணைத்தே அழகாகப் பாடுகின்றார். பெரும்பற்றப் புலியூர்த் திருச்சிற்றம் பலம்; களந்தை ஆதித்தேச்சுரம்: கீழ்க்கோட்டூர் மணியம்பலம்; கோடை - திரைலோக்கிய சுந்தரம்; சாட்டியக்குடி ஏழிருக்கை; (ஆவண வீதிப் பூவணம் என்றே எங்கும் சொல்வார்;) தஞ்சை இராசராசேச்சுரம்.

இவர் பதிகந்தோறும் இறுதிப் பாடலில், திருஞான சம்பந்தர்போல, தமது பெயரைக் குறிப்பிட்டு, பல சுருதியும் சொல்லுகிறார். தம்முடைய பாடலைப் பாடினால், அஞ்ஞானம் விலகும், திருமகள் முகமலர்ந்து எதிர்கொள்வாள், சாலோகமும் சாரூபமும் சித்திக்கும், உலகில் திருமால் என்ன அரசு வீற்றிருந்து சிவபதம் பெற்றுச் சிவனது அருட்கடலில் திளைப்பார்கள் என்று குறிப்பிடுகிறார். சம்பந்தர் போலவே தமது பாடலை இவர் எப்போதும் போற்றியே பேசுகிறார். அமுதமூறிய தமிழ் மாலை, அமுதுறழ் தீந்தமிழ் மாலை, கரும்பனைய தீந்தமிழ் மாலை என முன் காட்டிய தொடர்களைக் காண்க.

இவர் பத்துப் பதிகங்களிலும் மிகவும் அழகான செப்ப மான தொடர்களை அமைத்து மீண்டும் மீண்டும் அவற்றை எடுத்து ஆளுவார். என்மனம் புகுந்த எளிமையை என்றும் நான் மறக்கேன், தேவர் பன்னெடுங்காலம் நிற்காண்பான் ஏம்பலித்திருப்பார், தமியனேன் தனிமை நீங்குதற்கு, ஒழிவற நிறைந்த ஒண்சுடரே என்பன முதலான தொடர்கள் பலமுறை பயில்கின்றன. ஒவ்வொரு தலத்துக்கும் இவர் அடைகொடுத்துப்

பெயரைச் சொல்வது அருமையாக உள்ளது: அரும்பும் பெரும் பற்றப் புலியூர் திருவளர் திருச்சிற்றம்பலம், அவரிடம் களந்தை அணி திகழ் ஆதித் தேச்சுரம், கெழுவு கம்பலைசெய் கீழ்க் கோட்டூர் ... மணியம்பலத்துள் நின்றாடும் மைந்தன், பவளவாய் மணியே பன்னகா பரணா, ஆவண வீதிப் பூவணம், இஞ்சி சூழ் தஞ்சை இராசராசேச்சுரம் என்பன சில எடுத்துக் காட்டுக்கள்.

கருவூர்த் தேவர் ஓரளவுக்கு உலகச் சூழலில் இருந்து தம்மை விடுவித்துக் கொண்டு தனித்த ஆன்ம வாழ்க்கை உடையவராக இருந்தார். மக்களோடு கலந்து வாழ்ந்தவரல்லர். இயல்பான தமது ஞான முதிர்வினாலும், ஒப்பற்ற சக்கரவர்த்திகளின் போற்றுதலாலும், இவருக்கு இந்த நிலை ஏற்பட்டிருந்தது. இதுபற்றியேதான் புதிய சொல்லாட்சிகளும், கருத்துக்களும் இவர் பாடலில் காண்கிறோம், அருஞ்சொல்லாட்சிகள் அனேகம் இவரிடம் காணப்படுகின்றன. மொழுப்பு - செறிவு; பத்து இடங்களில் இப்படிக் குறிப்பிடுகிறார். அபூர்வமாய்த் திருவிசைப்பாவில் மற்றோர் இடத்திலும் இச்சொல் வருகிறது; வேறெங்கும் காண்பதற்கில்லை. அக்கடா - வியப்பைக் குறிக்கும் ஓர் அசை. அலச - வருந்த. அமரித்து - அமர்ந்து கித்துதல், கெந்துதல் - விளையாடுதல். கிடையனார் - நீரில் கிடக்கும் தக்கை போன்றார். கவந்திகை - போர்வை. கிழை - ஒளி. துகுக்கும் - கட்டுகின்ற. தொண்டு - கற்றை. பட்டவர்த்தனம் - இடப வாகனத்தின் பெயர்.

இறைவனுடைய உருவத் திருமேனியில் மிகவும் திளைத்து நின்று பதிகந்தோறும் சுவைத்துப் பாடுகிறார்; பாடும் போதும், அடுக்குச் சொற்களையும் தொடர்களையும் அதிகமாகப் பெய்து பாடுவதில் இவருக்கு விருப்பம் மிகுதி.

பவளமே மகுடம், பவளமே திருவாய்,
　　பவளமே திருவுடம்பு, அதனில்
தவளமே களபம், தவளமே புரிநூல்,
　　தவளமே முறுவல், ஆடரவம்
துவளுமே.

துண்டவெண் பிறையும், படர்சடை மொழுப்பும்
　　சுழியமும், சூலமும், நீல
கண்டமும், குழையும், பவளவாய் இதழும்,
　　கண்ணுதல் திலகமும், காட்டி –.

ஐயபொட் டிட்ட அழகுவாள் நுதலும்,
அழகிய விழியும், வெண்ணீறும்,
சைவம் விட்டிட்ட சடைகளும், சடைமேல்
தரங்கமும், சதங்கையும், சிலம்பும்,
மொய்கொள் எண்திக்குங் கண்டநின் தொண்டர்
முகமலர்ந் திருகணீர் அரும்பக்
கைகள் மொட்டிக்கும்.

குமுதமே திருவாய், குவளையே களமும்,
குழையதே இருசெவி ஒரு பால்,
விமலமே கலையும் உடையரே, சடைமேல்
மிளிருமே பொறிவரி நாகம்,
கமலமே வதனம், கமலமே நயனம்,
கனகமே திருவடி நிலை, நீறு*
அமலமே.

அனலமே, புனலே, அனிலமே, புவனி
அம்பரா, அம்பரத் தளிக்கும்
கனகமே, வெள்ளிக் குன்றமே, என்றன்
களைகணே.

பாந்தள் பூணாரம், பரிகலம் கபாலம்,
பட்டவர்த்தனம், எருது, அன்பர்
வார்ந்த கண் அருவி மஞ்சன சாலை,
மலைமகள் மகிழ்பெரும் தேவி,
சாந்தமும் திருநீறு, அருமறை கீதம்,
சடைமுடி, சாட்டியக் குடியார்
ஏந்தெழில் இதயம் கோயில் மாளிகை, ஏழ்
இருக்கையுள் இருந்த ஈசனுக்கே.

*அடுத்து இவர் தமது நிலையைக் குறிப்பிடுவதும் மிக்க சுவையுடையது.*

*புலன்களின் செயலைக் கண்டு இவருக்கும் அச்சம் தான். ஏழையேற்கு என்னுடன் பிறந்த ஐவரும் பகையே (81); ஐவரோ டென்னொடும் விளைந்த இக்காலம் முழுதும் ஒழிய வந்து (116); கடுவினைப் பாசக் கடல் கடந்து ஐவர் கள்ளரை மெள்ளவே துறந்து அடைந்தேன் (145) என்கிறார்.*

---

* *அச்சுப்புத்தகங்களில் நீர் என்று இருப்பது ஏட்டிலுள்ளபடி நீறு என்று இருக்க வேண்டும்.*

*இவ்வாறு தம், நிலையைத் தாழ்த்தி இவர் கூறியது வேறு இல்லை. எனவே, இவர் இறைவன் திருவருளில் பூரணமாய்த் தோய்ந்து சீவன் முத்தி நிலையில் நின்றவர் என்று கருத இட முண்டு. தமக்கு இறைவன் அருள்புரிந்த கருணைத் திறத்தைப் பலவாறாக அனுபவித்துக் கூறுகிறார்.*

உண்ணெகிழ்ந் துடலம் நெக்கு, முக் கண்ணா
ஓலமென் றோலமிட் டொரு நாள்
மண்ணினின் றலறேன், வழி மொழி மாலை
மழலையுஞ் சிலம்படி முடி மேல்
பண்ணி நின் றுருகேன், பணி செயேன்.

கலைகள்தம் பொருளும் அறிவுமாய் என்னைக்
கற்பினிற் பெற்றெடுத் தெனக்கே
முலைகள் தந்தருளுந் தாயினும் நல்ல
முக்கணான் உறைவிடம் போலும்.

புழுங்குதீ வினையேன் வினை கெடப் புகுந்து
புணர்பொருள் உணர்வுநூல் வகையால்
வழங்குதேன் மொழியும் பவளவாய் முக்கண்
வளரொளி மணி நெடுங் குன்றே.

என்னையுன் பாத பங்கயம் பணிவித்து
என் பெலாம் உருக நீ எளிவந்து
உன்னையென் பால்வைத் தெங்கும் எஞ்ஞான்றும்
ஒழிவற நிறைந்த ஒண் சுடரே.

*பெருமானது அருளை நாடி நிற்கின்ற அன்பர்கள் நிலையையும் சுவை ததும்புமாறு உரைக்கிறார்:*

கண்பனி அரும்பக் கைகள் மொட்டித்து என்
களை கணே ஓலம் என்று ஓலிட்டு
என்பெலாம் உருகும் அன்பர் தம் கூட்டம். 84

*பழையராம் தொண்டர்க்கு எளியரே மிண்டர்க்கு அரியரே (94); திக்கடாம் நினைந்து நெஞ்சிடிந்து உருகும் திறத்தவர் (97); செம்மனக் கிழவோர் அன்பு தா என்றுன் சேவடி பார்த்திருந்து அலச (149).*

*இவர் உலகத் தொடர்பையெல்லாம் விட்டு நீங்கி, இறைவனை நோக்கித் திருவருள் பெறத் தவம் கிடந்த காலத்தில்,*

*நள்ளிரவில் இறைவன் காட்சி தந்து அருள் புரிந்தான் போலும். இந்த நிலையைத் திருவிடை மருதூர்ப் பதிகத்தில் ஐந்திடங்களில் குறிப்பிடுகிறார். 'மலைமகள் உடனாய்த் தூங்கிருள் நடுநல் யாமத்து என் மனனிடை அணுகி நுணுகியுள் கலந்தோன்' (175) என்கிறார். 'நெஞ்சம் இடர்ப்படா வண்ணம் தூங்கிருள் நடுநல் யாமத்தோர் மழலையாழ் சிலம்ப வந்து அகம் புகுந்தோன்' (179) 'புன்மாக்கள் உறங்கிருள் நடுநல் யாமத்தோர் கருங்கண் நின்றிமைக்கும் செழுஞ்சுடர் விளக்கம் கலந்தெனக் கலந்து' (182) இவ்வாறு அருள் பெற்ற நிலையில், பூரணமாய் அருளில் தோய்ந்து நின்று பாடுகிறார்: என்னையாள் விரும்பி மற்றொரு பிறவியிற் பிறந்து பொய்க்கடா வண்ணம் காத்தெனக்கு அருளே புரியவும் வல்லரே (97);*

யாது நீ நினைவது? எவரையாம் உடையது?
எவர்களும் யாவையும் தானாய்ப்
பாது கை மழலைச் சிலப்பொடு புகுந்தென்
பனிமலர்க் கண்ணுள் நின்றகலான். 109

*சிந்தையால் நினையிற் சிந்தையும் காணேன் (110); முகத் தலை அமர்ந்தெனக்கே எம்பிரானாகி ஆண்ட நீ மீண்டே எந்தையும் தாயும் ஆயினையே (120).* திருவைந் தெழுத்தையும் *ஒரு பாடலில் கூறுகின்றார்:*

அற்புதத் தெய்வம் இதனின் மற்றுண்டே?
அன்பொடு தன்னை அஞ்செழுத்தின்
சொற்பதத் துள்வைத் துள்ளம் அள்ளூறும்
தொண்டருக்கு எண்திசைக் கனகம்
பற்பதக் குவையும், பைம்பொன் மாளிகையும்
பவளவா யவர் பணை முலையும்,
கற்பகப் பொழிலும், முழுதுமாம் – கங்கை
கொண்டசோ ழேச்சுரத்தானே.

*இலக்கியம் என்ற அளவில் பார்க்கும்போது, 'என் செய் கோம் தோழி - தோழி நீ துணையாய் இரவு போம்' என்ற இவர் பாடல் (106) பண்டை இலக்கண உரை மேற்கோளாக வருகின்ற 'ஆழி யிழைப்பப் பகல்போம் இரவெல்லாம், தோழி துணையாய்த் துயர்தீரும்' என்ற திரையனைப் பற்றிய வெண்பா வின் சொல்லையும் தொடரையும் கொண்டிருப்பது தெரியும்.*

திரைலோக்கிய சுந்தரப் பதிகம் முழுமையும் அகத்துறையிலேயே அமைந்தது என்றோம். கோட்டூர் மணியம்பல பதிகமும், பின்னும் பல பாடல்களும் இவ்வாறு உள்ளன. ஒரு பாடல் மட்டும் குறிப்பிட்டு மேலே செல்வோம். வீதியில் திருவுலா வந்த பெருமானைக் கண்டு காதல் வயப்பட தலைவியின் தளர்ந்த நிலைக்கு இரங்க வேண்டும் என்று தலைவனாகிய பெருமானை வேண்டுகின்ற பாடலின் ஓசையே நெகிழ்ந்து ஒலிப்பது பெரிதும் சுவைத்து இன்புறத்தக்கது (131):

சரிந்த துகில் தளர்ந்த இடை, அவிழ்ந்த குழல் இளந்தெரிவை
இருந்தபரி சொருநாள் கண்டிரங்காய், எம்பெருமானே!
முரிந்தநடை மடந்தையர்தம் முழங்கொலியும் வழங்கொலியும்
திருந்துவிழ வணிகோடைத் திரைலோக்கிய சுந்தரனே.

உலகத்தாருக்கு இவர் செய்யும் உபதேசம் பலவாயினும், ஒன்றை மட்டும் காட்டலாம். உலகப்பற்றில் நூறாயிரத்தில் ஒரு கூறு இறைவனிடத்தில் வைத்தால் அவன் அமருலகு அளிக்கிறான் என்கிறார்:

தத்தையங் கனையார் தங்கள் மேல் வைத்த
தயாவைநூ றாயிரங் கூறிட்டு
அத்திலங் கொருகூறு உன் கண் வைத்தவருக்கு
அமருல களிக்கும் நின் பெருமை.

போற்றி என்று கூறி வழிபடுகின்ற மரபை இவரும் கைக்கொண்டு திருச்சாட்டியக்குடிப் பதிகத்தில் போற்றி என்றும் அருளாய் என்றும் இரு பாடல்கள் அமைத்துள்ளார். திருமுகத் தலைப்பதிகம் மிகவும் சிறப்புடைய தொன்று. அதிலேயே இறைவன் திருநாமம் அக்னீசுவரர் என்பதை மனத்தில் கொண்டு அவ் அக்கினி வடிவத்தையே பாடுகிறார்.

இவரைச் சித்தர் என்று பிறர் குறிப்பிட்டதற்கு ஒரு காரணமும், இவர் யோகத்தைக் குறித்துப் பாடியிருத்தலாகும். 'மங்கையோடு இருந்தே யோகு செய்வானை' என்றும்,

பண்ணிய தழல் காய் பாலளா நீர் போல்
பாவமுன் பறைந்து பாலனைய
புண்ணியம் பின் சென்றறிவினுக் கறியப்

புகுந்ததோர் யோகினில் பொலிந்து
நுண்ணியை.....

என்றும் இவர் பாடியிருப்பது காண்க.

இவர் பாடியுள்ள பதிகங்கள் எல்லாமே சிறப்புடையன என்றாலும், அவற்றுள் கங்கை கொண்ட சோழேச்சுரப்பதிகம் பெருஞ் சிறப்புடையது. இதன் சிறப்புக்களை விரித்தெழுத இடம் போதாது. 'பெரிய நீ சிறிய என்னை யாள் விரும்பி என் மனம் புகுந்த எளிமையை' என்று சொல்லுவது நுட்பப் பொருளாய் இருந்தும் கூட, நேரே அத்தலத்தில் உள்ள சிவலிங்க மூர்த்தியின் மிகப்பெரும் உருவைக் கண்ணால் பார்த்தவர்களுக்குப் பருப்பொருளாகவே விளங்கும். இவர் பாடிய பாடல்களில் இதுவே கடைசியாகப் பாடியது போலும். சொல்தோறும் அவனுடைய பெருமையைச் சொல்ல முடியாத நிலையில் வியந்து வியந்து பாடுகிறார். 'அற்புதத் தெய்வம் இதனின் மற்றுண்டே?' என்கிறார். அவனது விசுவரூபம், 'அண்டமோரணுவாம் பெருமை கொண்டு அணுவோர் அண்டமாம் சிறுமை கொண்டு உள்ளது. மிகவும் பிற்காலத்தில் பரஞ்சோதி முனிவர், 'அண்டங்களெல்லாம் அணுக்களாக அணுக்களெல்லாம், அண்டங்களாகப் பெரிதாய்ச் சிறிதாயினான்' என்று பாடவும் காண்கிறோம்.

எல்லாம் அவனே, யார் எந்த வடிவத்தில் வழிபட்டாலும் அவ்வழிபாடு அவனுக்கே சேரும் என்பதை அரியதொரு பாடலில் உணர்த்துகிறார். கருவூர்த் தேவர் திருவருளனுபவம் பூரணமாய்ப்பெற்று அனுபவித்த பெருஞானி. ஆதலால் இறைவன் கருதுவார் கருதும் உருவமெல்லாமாகி வந்து அருள் செய்கிறான் என்று நயம் பொருந்தவும் சமயம் கடந்தும் பாடுவதில் வியப்பில்லை.

கருதிவா னவனாம், திருநெடு மாலாம்,
சுந்தர விசும்பின் இந்திரனாம்,
பருதி வானவனாம், படர்சடை முக்கட்
பகவனாம், அகவுயிர்க் கமுதாம்,
எருதுவா கனனாம், எயில்கள் மூன்றெரித்த
ஏறு சே வகனுமாம், பின்னும்
கருதுவார் கருதும் உருவமாம், கங்கை
கொண்டசோ ழேச்சரத்தானே!

சமயாசாரியர்களும் பிற திருமுறை ஆசிரியர்களும் பாடுவது போல, இவரும் ஒரே பரம்பொருள் எல்லாமாய் இருந்து அருள் செய்கிறது என்ற கருத்தைத் தெரிவிக்கிறார். இது சைவத்தின் சிறப்பு.

இறுதியாக, சைவசித்தாந்த மரபில் உள்ள சோபான முறையை மிகவும் நயமாகத் திருவிடைமருதூர்ப் பதிகத்தில் குறிப்பிடுகிறார். நூல்கள், ஆன்மா எவ்வாறு பாசங்களால் பிணிக்கப்பட்டுத் தன்னையும் அறியாது தலைவனையும் அறியாது தலைவனைப் பிரிந்து தளைப்பட்டு நிற்கிறது என்பதைச் சொல்லுகின்றன. அந்த நிலையில் இறைவனுடைய திருவருளானது, ஆன்மா பக்குவப்பட்ட காலை, சிந்தையுள் புகுந்து ஆன்மாவிடத்துப் பாசஞானம் பசுஞானங்களை நீக்கி, பதிஞான மயமாக நிற்கும்படி செய்கிறது. இது நமசிவாய என்ற பஞ்சாக்கர நிலையால் குறிப்பிடுகின்ற பொருள். சிவமும் அருளும் ஆன்மாவுமாக நின்று சிவானந்தப் பெருக்கை ஆன்மா அனுபவிக்கிறது;

பந்தமும் பிரிவும் தெரிபொருட் பனுவல்
படிவழி சென்று சென்றேறிச்
சிந்தையுந் தானும் கலந்த தோர் கலவி
தெரியினும் தெரிவுறா வண்ணம்
எந்தையுந் தாயும் யானும் என் றிங்ஙன்
எண்ணில்பல் லூழிகள் உடனாய்
வந்தணு காது நுணுகியுள் கலந்தோன்
மருவிடம் திருவிடை மருதே.

இப்பாடல் பாடிய கருவூர்த்தேவர், சித்தாந்த சாத்திரங்கள் தோன்றுவதற்கு இரு நூற்றாண்டுகளேனும் முற்பட்டவர். இங்கு இவர் இப்படிக் கூறியிருப்பது சைவ சித்தாந்தத்தின் சாரமாகும். இப்பாடல், சைவசித்தாந்த நுண் பொருள்கள் எவ்வாறு சைவமக்கள் உள்ளத்தில் பல நூறு ஆண்டுகளாக நிலவி இருந்தன என்று தெளிவாகக் காட்டுகிறது.

### கருவூர்த் தேவர் பாடிய தலங்கள்

கருவூர்த்தேவர் பாடிய பத்துத் தலங்களையும் நாம் ஒரு சேர நோக்கும்போது சில கருத்துக்கள் தெரிகின்றன. இவற்றுள் தேவாரப் பாடல் பெற்ற தலங்கள் மூன்றே: தில்லை, இடைமருது, பூவணம். தில்லைத் தலமாகிய கோயில் அனைவரும் பாடுவது. அடுத்து இடைமருது. இதன் அருகேயுள்ளது, திரை

லோக்கிய சுந்தரம். கோடைத் திரைலோக்கிய சுந்தரம் என்று சொல்லப் பெறுகிறது. கோடை - கோட்டூர்; இது ஊர்ப்பெயர்; திரைலோக்கிய சுந்தரம் கோயிற் பெயர். இக்கோயிலானது இராசராசன் மூன்றாம் மனைவியாகிய திரைலோக்கிய மாதேவியால் கற்றளியாக அமைக்கப்பெற்றது. அவள் பெயரைக் கொண்டு இது திரைலோக்கிய மாதேவீச்சுரம் என்று வழங்கப் பெற்றது. சுவாமி திரைலோக்கிய சுந்தரர். இது மண்ணி நாட்டு ஏமநல்லூராகிய திரைலோக்கிய மாதேவிச் சதுர்வேதி மங்கலம் என்று இங்குள்ள சாசனம் சொல்லுகிறது. மண்ணியாறு அருகே ஓடுகிறமையால் இது மண்ணிநாடு. ஏமநல்லூர் என்பது அப்பர் குறிப்பிடுகின்ற வைப்புத் தலங்களுள் ஒன்று. அரசு இங்கு கற்றளி கட்டியதற்குக் காரணங்களுள் இது ஒன்று. மேலும் ஒரு காரணம் உண்டு என்று ஊகிக்க முடிகிறது.

பாண்டியன் வரகுணனுக்கும் அப்போதிருந்த சோழ மன்னனுக்கும் பெரும்போர் நிகழ்ந்து, அதில் பாண்டியன் வெற்றிபெற்றுத் தங்கிய இடம், நில அமைப்பைக் கொண்டு இடை மருதுக்கும் (திருவிடை மருதூருக்கும்) இத்திரைலோக்கிய சுந்தரத்துக்கும் இடையிலுள்ள பகுதியில் முற்காலத்தில் இருந்த இடவை என்ற நகர் என்று ஆராய்ச்சியாளர் பலர் எழுதியிருக்கின்றனர். இவ்விடவை அவ்வரகுணன் காலத்தில் சிறப்பாக இருந்தது போலும். மாணிக்கவாசகர் கூட, திருவாசகத்தில் இடவை மட நல்லாளுக்கு அருள் செய்தமை குறிப்பிடுகிறார். இந்தப் பிரதேசத்தில் இன்று எச்சிறப்புமில்லாத இடையாற்று நல்லூர் (இடையானூர்) என்ற ஊர் உள்ளது. ஒருகால் வரகுணன் காலத்தில், இவ்விடையானூரையும் திரைலோக்கிய சுந்தரத்தையும் அருகிலுள்ள கோட்டூரையும் தன்னகத்தே கொண்டதாய் இடவை (இடைவை) என்ற பெருநகர் இருந்தது போலும். இது தனியே பலதுறை ஆராய்ச்சிக்குரிய பொருளாகும்.

இவ்வாறு கூறியவற்றால் 11ஆம் நூற்றாண்டில் பெருஞ் சிறப்புடைய அடியவராக விளங்கிய கருவூர்த்தேவர் திரைலோக்கிய சுந்தரம் பாடிய தொடர்பு விளங்கும். தமக்கு நெருங்கிய காலத்து விளங்கிய ஒரு நகரத்தின் பகுதியாதலாலும், எல்லாச் சிறப்புமுடைய திருவிடைமருதூருக்கு அருகிலிருப்பதாலும் தம் அன்புக்குப் பாத்திரமான மன்னனது தேவியால் எழுப்பப் பெற்றமையாலும், இவர் அதைப் பாடியிருக்கிறார்.

திரைலோக்கிய மாதேவி கட்டிய கோயிலை யன்றி, இதற்குக் கிழக்கில் ஒரு பர்லாங் தூரத்தில் பழைய கைலாய நாதர் கோயி லொன்று உள்ளது. இக்கோயில் பல கல்வெட்டுகளைக் கொண்ட பெருங்கோயிலாயிருந்து இப்போது கிலமாகி விட்டது; இருப் பினும், கருவரையும் மூர்த்தியும் நல்ல நிலையில் இருக்கின்றன. முன்னமே இது வரகுணன் காலத்தில் சிறப்புடையதாக இருந் திருக்கலாம்; இச்சிறப்பே இராசராசன் தேவி இங்கு வேறு பெரிய கற்றளி எடுக்கத் தூண்டியிருக்கும் ஒரு கால் அப்பர் கூறும் ஏம நல்லூராகவும் மற்றது திரைலோக்கிய சுந்தரமாகவும் ஆகலாம்.

அடுத்து, சோழர் தலைநகரங்களும் பேரூர்களுமான தஞ்சை யையும், கங்கை கொண்ட சோழேச்சுரத்தையும் பாடியிருக் கிறார். இவ்விரண்டிலும் இராசராசேச்சுரம் எழுந்த தஞ்சை நகரம் அன்று முதல் எவ்வித அழிவும் இல்லாமல், மராத்தியருக் குத் தலைநகராய் இருந்து, ஆங்கிலேயர் ஆட்சிக்கு உட்பட்டு வந்து, இன்றுவரை ஜில்லா தலைநகராய் இருந்து வருகிறது. கங்கை கொண்ட சோழேச்சுரமோ இராசராசனுக்குப் பின் சோழ மன்னருக்குத் தலைநகரமாய் விளங்கி, பின்னர் நாட்டின் அரசியல் சீர்கெட்ட காலத்தில், முகம்மதியராலும், பின்னர் ஆங்கிலேயராலும், இடிக்கப் பெற்றது. கோயில் ஒன்று மட்டும் சிறுபகுதி இடிக்கப்படாமல் இருக்கும் நிலையைப் பார்த்தால் யாரும் மனம் வருந்திக் கண்ணீர் விடுவர்.

இவைபோக இவர் பாடிய தலங்கள் ஐந்து. அவற்றுள் களந்தை ஆதித்தேச்சுரம், கோட்டூர் மணியம்பலம், திருச் சாட்டியக்குடி, திருமுகத்தலை ஆகிய நான்கும், மன்னார்குடி திருத்தருப்பூண்டி ஆகிய பிரதேச எல்லைகளுக்குள் அமைந் துள்ளன. ஒருகால் கருவூர்த்தேவர் இங்கு வந்து தமக்கு அன்பரா யிருந்தார் வேண்டுகோளுக்கு இணங்கி இத்தலங்களைப் பாடியிருக்கலாம் அல்லது களந்தை நீங்கலாகப் பிற மூன்று தலங்களும் கருவூர்த்தேவர் காலத்திலேயே புதிதாகக் கட்டப் பெற்று இவருடைய பாடலை ஒருகால் உடனே பெற்றும் இருக்கும். கீழ்க்கோட்டூர் மணியம்பலம் என்பது, தேவாரப் பாடலுடைய திருக்கோட்டூர் என்ற தலத்தில் அக்கோயிலுக்குக் கிழக்கே தனிச் சிறு கோயிலாய் உள்ளது. திருமுகத்தலை என்பது திருத்தருப்பூண்டிக்கு நான்கு மைல் வடகிழக்கே பன்னகத்தெரு என்ற பெயரால் வழங்கும் சிற்றூர். பன்னகத்தெரு என்பது பன்னகாபரணர் என்ற பெயரின் திரிபு சுவாமி பெயர் இங்கு

பன்னகாபரணர். கருவூர்த்தேவர் திருவிசைப்பாவில் இப்பெயரை நான்கு முறை குறிப்பிடுகிறார். கோயிலில் திருமுகத்தலை ஈசர் என்ற தனியான ஒரு சிவலிங்கமூர்த்தியும் உள்ளார். மற்றச் சாட்டியக்குடி என்பது தேவூருக்கும் தெற்கே உள்ளது. சாட்டியம் - சுரம்; சுவாமி இங்கு அக்கினி வடிவமானவர்.

நான்காவது தலமாகிய களந்தை ஆதித்தேச்சுரம் என்பதும் தஞ்சை இராசராசேச்சுரம் கங்கைக்கொண்ட சோழேச்சுரம் என்பனபோல, கட்டிய அரசனால் பெயர் பெற்றதாகும். ஆதித்த சோழன் கி.பி. 871 - 907இல் ஆண்ட சோழ மன்னன். இவன் கட்டிய கோயில் ஆதித்தேச்சுரம். முத்தரையர் முதலானவர்களை வென்று முதன் முதலாக ஒன்பதாம் நூற்றாண்டில் சோழ மரபைத் தஞ்சையில் நிலை நாட்டிய விசயாலய சோழனுடைய மகன் இந்த ஆதித்தன். திருவிசைப்பாப் பாடிய கண்டராதித்தருக்கு இவன் பாட்டன். இக்களந்தையில் தான் நாயன்மார்களுள் ஒருவர் ஆகிய கூற்றுவ நாயனார் பிறந்தார். அவர் பெயரால் இன்று இங்கு கூற்றுவ நாயனார் திடல், கூற்றுவ நாயனார் குளம் என்பன உள்ளன. கோயிலிலும் கூற்றுவ நாயனாருடைய பழமையான செப்புச்சிலை உள்ளது. மற்றப்படி செங்கற்பட்டு ஜில்லா பொன்விளைந்த களத்தூரிலுள்ள கோயில் தான் களந்தை ஆதித்தேச்சுரம் என்றும், பொள்ளாச்சி தாலுக்காவிலுள்ள பெரிய களந்தைதான் களந்தை ஆதித்தேச்சுரம் என்றும் சொல்வோர் கூற்றுக்கள், கருவூர்த்தேவருடைய பாடல் தொடர்பு நோக்கி, ஏற்றுக்கொள்ளத்தக்கன அல்ல. குடந்தை உறந்தை என்பனவற்றை எடுத்துக்காட்டிப் பேராசிரியர் (சங்க நூல் அகம் 60, புறம் 89?) மேலையார் திரித்த வகையானே இக்காலத்துத் திரித்துக் கொள்ளப்படுவன உள. அவை களந்தை என்ற தொடக்கத்தன. பிறவும் இவ்வாறு வருவனவும் அறிந்து கொள்க என்கிறார். அவை சோழநாட்டுத் தலங்கள். ஆகவே களந்தையும் சோழநாடே.

இவர் கொங்குக் கருவூரில் பிறந்தாலும்கூட, வாழ்ந்ததும் வழிபட்டதும், புகழ்பெற்றதும், பாடியதும் சோழநாடே. கொங்கு நாட்டுத் தலமெதுவும், இவர் பாடவில்லை; தம் கருவூரையே பாடவில்லை. கருவூரில் இவர் முத்தி அடைந்தார் என்று கதை சொன்ன போதிலும்கூட, தஞ்சை இராசராசேச்சுரத்தில்தான் இவருடைய சமாதி குறிப்பிடப் பெறுகிறது. ஆகவே, சோழ மன்னர்களால் பெரிதும் போற்றப்பெற்றிருந்து

சோழநாட்டுத் தலங்கள் பலவற்றுக்கும் பாடல் பாடிய இவ்வனு பூதிமான், சோழ நாட்டிலேயே முடிவெய்தினார் என்று கருது வதுதான் இவர் வரலாற்றுக்குப் பொருத்தமாக இருக்கும்.

இவர் பாடிய தலங்களுள் சோழநாட்டுக்கு வெளியில் உள்ளது திருப்பூவணம் ஒன்றே. இது பாண்டிநாட்டுப் பதிகம் பெற்ற பதினான்கு தலங்களுள் ஒன்று. இதற்குரிய பதிகத்தின் முதல் பாடலில் வைகை சொல்லப்பட்டுள்ளமையால், இது பாண்டி நாட்டுத்தலம் என்று கொள்ள வேண்டும். இவ்வூருக்குக் கருவூர்த்தேவர் சென்று பாடியிருப்பாரா என்று ஆராயும்போது, ஒரு குறிப்பு தெரிகிறது. பூவணத்தில் புகழ்வாய்ந்த நிகழ்ச்சி, அலவாய்ப்பெருமான் அங்கு பொன்னனையாளுக்காக இரசவாதம் செய்த திருவிளையாடல். இதுபற்றிய சாமானிய மக்கள் நிலையைக் கடந்து மேம்பட்ட நிலைக்குச் சென்று சிவ போதத்தில் திளைத்திருந்த கருவூர்த் தேவர், சிவபெருமான் பொன்னனை யாருக்காக எளிவந்த கருணையை எண்ணி அத்தலத்திற்கே சென்று வழிபட்டார் என்று கருதத் தோன்று கிறது; பாண்டிய நாட்டுக்குச் சென்றவர் பிரசித்தமான மதுரை யைப் பாடவில்லை. எனினும், இவரது திருப்பூவணப் பதிகத் தில் பொன்னையாள் வரலாற்றை இவர் குறிப்பிடவில்லை.

### காலம்

கருவூர்த் தேவர் காலம், ஏனை ஆசிரியர் காலம் போலன்றி, மிகவும் திட்டமாய்த் தெரிகிறது. (முதல் ஆதித்த சோழன் எடுத்த களந்தை ஆதித்தேச்சுரத்தையும்) இராசராசன் காலத் தில் திரைலோக்கியமாதேவி கட்டிய திரைலோக்கிய சுந்தரத்தை யும், இராசராசன் எடுத்த தஞ்சைப் பெருங்கோயிலையும், முதல் இராசேந்திர சோழன் எடுத்த கங்கைகொண்ட சோழேச் சுரத்தையும் இவர் நான்கு பதிகங்களால் பாடியிருக்கிறார். பிந்திய மூன்று கோயில்கள் எழுப்பிய காலத்தில் இவர் உடன் இருந்தார். கட்டிய அரசர்களின் காலம் முறையே 985 - 1014, 1012 - 1044. எனவே, இந்தக் காலங்களில் இவர் வாழ்ந்திருந்தமை தெளிவு. கங்கை கொண்ட சோழேச்சுரம் எடுத்த காலம் உத் தேசம் கி.பி. 1040. ஆதலால் அதைப் பாடிய நம் கருவூர்த்தேவர் சிறப்பாக வாழ்ந்த காலம் கி.பி. 1000 - 1040 என்று கொள்ளுவது பொருத்தமுடையதே.

ооо

*அத்தியாயம் 7*

# சைவ இலக்கியம் – 2

## நம்பியாண்டார் நம்பி

### *முன்னுரை*

*சைவ சமயம் அனாதிகாலமாகத் தமிழ்நாட்டில் தோன்றி வழங்கிய பெரும் சமயம், ஒரே தனித்தமிழ்ச் சமயம், அன்பே சிவம் என்று போதித்த பெருநெறி; வைதிகச் சமயமாகவும் தன்னை ஆக்கிக்கொண்டது. வைணவம் முதலான சமயங்கள் தன் னிடத்தே கிளைத்தெழுந்து தன்னைப் பகைத்துக் கொள்ளவும் இடங்கொடுத்தது. மிகப்பழங்காலத்தில், முதற்சங்கம் இருந்த காலம் தொடங்கி நிலவிய ஒரே சமயம் சைவ சமயம். முதல் சங்கத்தின் தலைவர், திரிபுரமெரித்த விரிசடைக் கடவுளான இறையனார் என்றெல்லாம் பழைய நூல்கள் பேசும். இடையில் சில நூற்றாண்டுக் காலம் சைனம் வந்து புகுந்து பேரிடர் விளைத்துப் பின்னர் ஒடுங்கிவிட்டது. பௌத்தம் வந்து நுழைந் தது; ஆனால் இடர் விளைக்கவில்லை; எக்காரணத்தாலோ மக்கள் அதைத் தனிச் சமயமாக ஏற்றுக் கொள்ளாமையால், இந்நாட்டில் இல்லாமலே மறைந்து விட்டது. இடைக்காலத் தில் வைணவ சமயம் தோன்றி மிகப்பெரும் சமயமாக வளர்ந்தது; தமிழ்நாட்டில் மட்டுமின்றி, வடநாட்டிலும் பெருகி அந்நாடு முழுமையும் தன் வசப்படுத்திக் கொண்டது. அத்தகையதொரு பேராற்றல் அதனிடம் அமைந்திருந்தது உண்மை.*

*இனி, மிகவும் பிற்காலத்தில் பொதுவாக மக்களுடைய பண்புகள் தாழ்ந்து போன காரணத்தால், வேற்று நாடுகளி லிருந்து பிற சமயங்களுக்குரிய படைகள் இந்திய நாட்டுக்குள் புகுந்து இந்திய நாட்டின் பண்பாட்டையே அழிக்கத் தலைப்*

பட்டன. வடநாடு பெரும் அழிவிற்குள்ளாகியது; தமிழ்நாடு அவ்வளவு அழிவு அடையவில்லை. இவ்வாறு ஆட்சியின் பெயராலும், வாணிபத்தின் பெயராலும், தென்நாட்டிற்குள் நுழைந்தவர்களால் தமிழ் நாட்டில் புராதனச் சமயமாகிய சைவ சமயமும் பெரும் நலிவு எய்தியது. இதுவே கி.மு.10ஆம் நூற்றாண்டுகளுக்கு முன் தொடங்கி கி.பி. 20ஆம் நூற்றாண்டு வரையில் ஏற்பட்ட சமய மாறுதலின் பொதுவான போக்கு. இதற்கிடையில் சில பேரியக்கங்களைக் காண்கிறோம். கி.பி. 5ஆம் நூற்றாண்டு முதல் 9ஆம் நூற்றாண்டு வரையில் தமிழ் நாட்டில் ஒரு பெரும் கிளர்ச்சி தோன்றியது. சைவ சமய ஆசாரியர்களும், வைணவ சமய ஆழ்வார்களும் தோன்றிப் பெரும் வெள்ளமாக அருள் பாசுரங்களைப் பாடினார்கள். அக்காலப் பகுதியின் தொடக்கத்தில் தமிழ் நாடானது ஒருவகையில் அன்னியர் ஆட்சிக்கு உட்பட்டு அல்லலுற்றது. 'களப்பிரன் என்னும் கலியரசன்' பாண்டி நாட்டினுள் புகுந்து நாட்டின் சமயத்தையும், பண்பாட்டையும், கலையையும் நாசம் செய்தான் என்று பாண்டியர் சாசனங்கள் கூறுகின்றன. அந்நாசம் சோழ பல்லவ நாடுகளிலும் பரவியிருந்தது. அதைத் தடுத்து நிறுத்தும் சைவப் பெரும் சக்தியானது சம்பந்தர் என்றும், அப்பர் என்றும் வடிவு கொண்டது. இருவரும் முறையே பாண்டி நாட்டிலும், பல்லவ நாட்டிலும் புகுந்திருந்த சமணக் களையைக் களைந்து சைவப் பயிர் தழைக்கச் செய்தார்கள். மீண்டும் தமிழர் சமயமும், பண்பாடும் தலைஎடுத்து ஓங்கலாயின. இது தமிழர் சமயத்தின் முதற் பொற்காலம்.

ஒரு நிலைமையை இங்குக் குறிப்பிட்டு ஆக வேண்டும் சைவ சமயசாரியருக்குச் சமமாக வைணவ சமய ஆசாரியரான ஆழ்வார்களும் தோன்றிப் பிரபந்தங்கள் பாடி, திருமால் நெறியை வளர்த்தார்கள். ஆனால் பிற சமயக் களையைக் களையும் தொண்டில் அவர்கள் பங்கு கொள்ளவில்லை. இந்தப் பணியைச் சைவ அருளாளர்களே செய்ய, திருமால் அடியார்கள் பயனை அனுபவித்தார்கள். இந்த விசித்திரமான நிலைமையையும் நாம் காண்கிறோம்.

இனி, சைவத்தின் இரண்டாவது பொற்காலம் என்று சொல்லத்தக்கது, சோழ மன்னர் காலம். விசயலாயன் தஞ்சையில் இரண்டாவது சோழப் பேரரசை நிலை நாட்டிய காலம் தொடங்கிச் சைவப் பயிர் மிக நன்றாகத் தழைத்து வளர்ந்து

பயன்பட்டது; இக்காலத்தில் தமிழ் நாட்டில் எண்ணற்ற பெரும் கோயில்கள் தோன்றலாயின. இதை வேறு இடங்களிலும் நன்கு விளக்கியிருக்கிறோம். இக்காலத்தின் சிகரமாக விளங்கியது இராசராச மன்னனுடைய ஆட்சி. பெரும் சக்கரவர்த்தியாக விளக்கித் தமிழகம் முழுமையும் தன் குடைக்கீழ்க் கொண்டு வந்த பெருமை இவனுக்குரியது. ஆனால், இதைவிட இன்னும் சிறந்த பெருமை, இம்மன்னன் நம்பியாண்டார் நம்பியை வேண்டி அவர் மூலமாக, விளக்கமில்லாதிருந்த தேவாரங்களைக் கண்டுபிடித்து, அவற்றைச் செப்பேட்டில் எழுதி வைத்து, ஆலயங்கள் தோறும் தேவாரம் பாடும்படி செய்து, அதன் பொருட்டு எண்ணற்ற நிபந்தங்களையும் அமைத்த அருஞ் செயலாகும். இராசராசனுக்கு முன்னரே ஆலயங்களில் தேவாரம் ஓதப்பட்டு வந்தது உண்மை; இதைச் சாசனங்களால் அறிகிறோம். ஆனால், சில தலங்களில் மட்டுமே ஆங்காங்கு வாழ்ந்த அடியவர்கள், தங்கள் தலத்திற்குரிய பதிகங்களைச் செவி வழியாகக் கேட்டு வந்து, பாடினார்கள். தேவாரங்கள் என்ற ஒரு பெரும் தொகுப்பு இருந்தது என்பது பலருக்கும் தெரியாது போலும். இதைத் தெரிந்து வெளிப்படுத்த எண்ணி நம்பியாண்டார் நம்பியைக் கொண்டு வெளிப்படுத்திய மன்னன் இராசராசன் ஆதலால், ஆட்சியில் மட்டுமின்றிச் சமயத்துறையிலும் இது ஒரு பொற்காலம் என்பதில் தடையில்லை.

ஒன்பதாம் நூற்றாண்டில், நாதமுனிகள், தனி ஒரு வைணவ அடியவர் குடந்தையில் ஆராவமுதன் சந்நிதியில் 'ஆராவமுதே' என்று பாடிய பதிகத்தைக் கேட்டு, அவர்கள் 'ஓராயிரத்துள் இப்பத்தும்' என்றமையால், பின்னும் பாடல்கள் உள என்று அறிந்து, நம்மாழ்வார் பேரருளால் அவற்றை அருளப் பெற்றார் என்ற செய்தி இராசராசன் செயலை ஒத்தது. காலத்தால் நூறு ஆண்டுகள் முற்பட்டது. நாதமுனிகள் எந்த அரசருடைய துணையும் இல்லாமல், தாமாகவே இச்செயலைச் செய்தார் என்பது குறிப்பிடத்தக்கது; நாதமுனிகளே ஆழ்வார் பிரபந்தங்களைத் தொகுத்து முறைப்படுத்தினார். அந்தப் பணியை நம்பியாண்டார் நம்பி சைவத்தில் செய்தார்; இராசராசன் செய்வித்தான் நம்பி, தாம் சைவ அருள் பாசுரங்களைத் தொகுத்து முறைப்படுத்தி வைத்ததோடு அமையாது, தாமும் பத்துப் பிரபந்தங்கள் பாடினார். இத்தகைய பெரும் சிறப்புக்கொண்ட இவரது வரலாற்றையும் இவர் தம் நூல்களையும் இந்த அத்தியாயத்தில் ஆராய்கிறோம்.

## நம்பியாண்டார் நம்பி

தமிழ் வியாசர் என்று புகழ் பெற்றவர் நம்பியாண்டார் நம்பி. பலவாறு சிதைந்து கிடந்த வேதங்களைத் திரட்டி வியாசர் ஒழுங்குபடுத்தியது போல, நம்பியாண்டார் நம்பி என்பவர் இறைவன் திருவருளால், இராசராச மன்னன் அபயகுல சேகரன் என்ற சோழ அரசன் விரும்பியவாறு, சைவத் திருமுறைகள் இருக்குமிடந்தேடி வெளிப்படுத்தி ஒழுங்கு செய்து பண் வகுத்துத் திருமுறைகளாகச் செய்தார். இச்செயல் திருமுறை கண்ட வரலாறு எனச் சொல்லப்பெறும். இவ்வரலாற்றை உமாபதி சிவாசாரியர் 45 பாடல் கொண்ட "திருமுறை கண்ட புராணம்" என்ற நூலாகப் பாடினார் என்று கூறுவது மரபு. இதனுட் சொல்லப்பட்ட நம்பியாண்டார் நம்பி சரித்திரத்தை இங்கு கூறுவோம்.

### வரலாறு

இராசராச மன்னன் திருவாரூரிலிருந்து* அரசு செய்து வந்த காலத்தில், சில சிவனடியார், மூவர் பாடல்களுள் இரண்டொன்றை மட்டும் ஓதக் கேட்டு, முழுமையும் காண வேண்டும் என்ற விருப்பம் உடையவனாய், அறிந்தவரைத் தேடிக் கொண்டிருந்தான். அக்காலத்தே தில்லைக்கு அருகிலுள்ள திருநாரையூர் என்ற தலத்தில் எழுந்தருளிய விநாயகராகிய பொல்லாப் பிள்ளையாருக்குப்❖ பூசை செய்து வந்த ஆதி சைவரொருவர் இருந்தார். சைவம் ஈடேறச் செய்ய வல்ல ஒரு நற்புதல்வர் அவருக்குத் தோன்றினார். முறைப்படி கல்வி பயின்று அவர் வளர்ந்து வந்த நாளில் ஒரு நாள், தந்தை அயலூர் செல்ல நேரிட்டது. அவர் சொற்படியே இப்பிள்ளை பொல்லாப் பிள்ளையாருக்குப் பூசைசெய்து நைவேத்தியத்தை அவர் முன் வைக்க, அவர் உண்ணாதிருந்தமை கண்டு, "பெருமானே, யான் செய்த பிழை உண்டோ, திருவமுது செய்யாத தென்னே?" என்று கேட்டுத் தம் தலையைக் கல்லில் மோதப் பிடிக்கும்போது,

---

* அரசு செய்தது தஞ்சையிலிருந்து எனினும் மனுச் சோழன் வரலாற்றால் பெருமை பெற்ற திருவாரூரையே சோழர் தலைநகராக வழங்குவது ஒரு மரபு.

❖ பொல்லாப் பிள்ளையார் - உளியினால் பொள்ளுதல் செய்யாது (பொள்ளாது) தாமே தோன்றியவர்.

பொறு என்று சொல்லிப் பிள்ளையார் திருவமுதை உண்டார். மகிழ்ந்த நம்பி, "இனி நான் பள்ளிக் கேகில் ஆசான் அடிப்பான்; ஆதலால் நீரே எனக்குக் கலைகளைக் கற்பிக்க வேண்டும்" எனக் கேட்டு, அவ்வாறே விநாயகப் பெருமானிடத்தில் பயின்று வருவாராயினார். கல்வியில் மேம்பட்ட நம்பியின் புகழ் எங்கும் பரவிற்று. விநாயகர் துதியாக நம்பி மூத்த பிள்ளையார் இரட்டை மணிமாலை பாடினார்.

இதையறிந்த சோழமன்னன் பழவர்க்கம் முதலியன ஏராளமாய் எடுப்பித்து வந்து அவற்றைப் பிள்ளையாருக்கு நிவேதிக்கும்படி நம்பியை வேண்ட, நம்பியின் விருப்பப்படி பிள்ளையார் அவற்றையும் உண்டார். மகிழ்ந்த அரசன், மூவர் தேவாரங்களையும் பெறவேண்டும் என்ற விருப்பத்தைச் சொல்ல, தில்லையில் நடராசப் பெருமான் சபையின் பக்கல் மூவர் கை அடையாளமுடைய அறையில் அவை உள்ளன என்பதைப் பிள்ளையார் கூறி, தொண்டர் சரிதமும் அறிவித்தார். அரசன் சென்று அவற்றை எடுத்துத் தரும்படி தில்லை மூவாயிரவருக்கு அறிவிக்க, அவர்கள், "மூவர் வந்தால்தான் அறை திறக்கும்" என்றார்கள். அரசனும் மூவர் சிலையைச் செய்து மூவர் விழா முடித்து வீதியுலா வருவித்து, திருமுறை அறைக்கெதிரே கொணர்ந்து நிறுத்தி, அறையைத் திறப்பித்துப் பார்க்க, திரு முறை ஏடுகள் யாவும் கறையான் மூடியிருக்க கண்டான். எண் ணெய் சொரிந்து, மண் அகற்றி ஏடுகளைப் பார்க்க, பெரும் பகுதி பழுதாகியிருந்தது. வருந்தி நின்ற அரசன் முதலியோர் கேட்க, "மூவர் பாடலில் ஈண்டு வேண்டுவன மட்டும் வைத்தோம்" என்று ஒரு வாக்கு எழுந்தது.

பின்னர் அரசன் தேவாரங்களைத் திருமுறைகளாக வகுக்க எண்ணி நம்பியை வேண்ட, அவர் சம்பந்தர் திருமுறை மூன்று, அப்பர் திருமுறை மூன்று, சுந்தரர் திருமுறை ஒன்று, திருவாசகம் ஒன்று, திருவிசைப்பாமாலை யொன்று, திருமந்திரம் ஒன்று ஆகப் பத்துத் திருமுறைகள் ஆக்கினார். பின்னர் அரசன் நம்பியை வணங்கி, "திருமுகப் பாசுரம் முதலாம் பதிகங்களை யும் ஒரு முறையாகச் செய்க" என வேண்ட, அவர் பதினொான் றாந் திருமுறையைத் தொகுத்தார்: அதன்மேல் அவரே திருத் தொண்டத்தொகையை யொட்டித் திருத்தொண்டர் அந்தாதி பாடினார். பின்னர் பண்ணடைவு பெற வேண்டி, திருநீலக் கண்ட யாழ்ப்பாணர் அவதாரத் தலமாகிய திரு எருக்கத்தம்

புலியூர் அடைந்து, "அரனே, இன்னிசை தந்தருள்" என்று குறையிரந்தார். அப்போது ஒரு வாக்கு, "பாணர் மரபிலே வந்த பெண்ணொருத்திக்குப் பண்களை அருளிச் செய்தோம்" என்று எழுந்தது. அரசனும் நம்பியும் அவளைத் தில்லையம்பலத்துள் ஆடுவார் திருமுன்பு கொண்டுசென்று பாடுவித்து, இசை வகுத்துக் கொண்டார்கள். இவ்வாறு நாடு எங்கும் அருட்சென்னி சிவம் பரப்பினான். அதுமுதல், அரசன் திருமுறை கண்ட சோழன் எனப்பெற்றான்.

இதுவே திருமுறை கண்ட புராணத்துள் சொல்லியுள்ள வரலாறு. பண்ணடைவு மிகவும் விரிவாக ஒன்பது பாடல்களால் சொல்லப்பட்டுள்ளது. திருத்தொண்டர் அந்தாதி ஒன்றையே இது குறிப்பிடுகிறது. நம்பி பாடிய ஏனையவற்றைச் சொல்ல வில்லை. நம்பி, முதலில் விநாயகர் அருள் பெற்றவுடனே இரட்டைமணி மாலையையும், பின்னர் அந்தாதி பாடிய பிறகு ஏனைய பதிகங்கள் முதலியவற்றையும், பாடினாரென்று நாம் கருத வேண்டும். இவர் நூல்களைப் பதினொராந் திருமுறையுள் சேர்த்த வரலாறு இங்கு குறிப்பிடப்படவில்லை. ஆனால் பின்னால் சேக்கிழார் பெரியபுராணம் பாடியபோது, அந்நூல் பன்னிரண்டாந் திருமுறையாகச் சேர்க்கப்பெற்றதென்று சேக்கிழார் புராணம் (96) கூறுமிடத்து, "பாசுரமந்தாதி யாகக் கோவை செய்த முறையொன்று" என்று மட்டும் கூறுகிறது; பெரியபுராணம் முறை வகுத்த காலத்தில் நம்பி பாடல்களும் பதினொராந் திருமுறையிறுதியில் கோக்கப் பெற்றிருந்தன என்றே நாம் கொள்ள வேண்டும்; நம்பி கோத்த பின்னர் கோக்கப் பெற்றனவா என்பது எங்கும் சொல்லப்படவில்லை.

நம்பியாண்டார் நம்பி வரலாறு, திருநாரையூர்ப் புராணத் திலும் சொல்லப்பட்டுள்ளது. இத்தமிழ்ப் புராண வசனம், 38 அத்தியாயம் கொண்டது, மிக விரிந்தது. 29ஆம் அத்தியாயம், நம்பிக்கும் அருள் செய்தலாகிய விநாயகரின் எட்டாவது திரு விளையாடல் என்னும் தலைப்புடையது. இங்கு சொல்லப் பட்ட வரலாறு பின்வருவது; திருநாரையூர் விநாயகர் அருளால் நம்பியாண்டார் என்ற பெயருடைய குருக்கள் புதல்வராக நம்பி அவதரித்தார். பத்த பால சுபத்தன் என்பதன் தமிழாகிய நம்பியாண்டார் நம்பி என்ற பெயர் இவருக்கு இடப்பட்டது. இச்சிறுவர் மண்ணால் சோறு அட்டுப் படைத்த நிவேதனத்தைப் பிள்ளையார் ஏற்று உண்டார். ஒருநாள் இவர் பிள்ளையார்

ஆலயம் அடைந்து, அங்கு உண்மைப் பூசை செய்ய, நிவே தனத்தையும் பெருமான் உண்டார். பள்ளியில் சேர்ந்த பிறகும் தெரியாமல் போய் இவ்வாறு பூசை செய்தார். வெளியே போன தற்காக அடித்த ஆசிரியர் பின் உண்மை அறிந்து, இவரிடம் அமைந்திருந்த கல்விப் பெருக்கைக் கண்டு அதிசயித்தார். உரிய காலத்தில் தீட்சை முதலியன செய்து இவரையே பூசைக்கு அனுப்பியபோது, நிவேதனத்தைப் பெருமான் உண்டமையால் இவர் வெறுங்கையோடு திரும்பியமை கண்டு, பின் சோதித்து, பெருமான் உண்டது உண்மையே என்று தந்தை அறிந்தார். பூசை நேரம், இவர் இரட்டை மணிமாலை பாடினார். அசரீரி இவருடைய பெருமையை உலகுக்கு உணர்த்திற்று. பின்னர் நம்பி சர்வசார நிர்ணயம் என்ற வடமொழி நூலைச் செய்தார். அதன்பின் சோழ அரசன் விரும்பியபடி அவனது நிவேதனம் முதலியன விநாயகர் உண்டார். தேவார ஏடுகள் வெளிப்படுத்தி னார். பின்னர் நம்பி, சம்பந்தர் மீது பல பதிகங்களும் அப்பர் பதி கமும் பாடி, உரிய காலத்தில் முத்தியடைந்தார். இவ்வரலாறு திருமுறை கண்ட புராணச் செய்தியை வைத்து மேலும் சில செய்திகள் சேர்த்துப் பிற்காலத்தில் புனைந்த ஒரு கதை. நம்பி செய்ததாய்ச் சொல்லிய சர்வசார நிர்ணயம் பற்றி ஒன்றும் தெரியவில்லை; ஒருகால் வடமொழிப் புராணம் செய்தவர் அதைப் பார்த்திருந்தார் போலும். நம்பியின் தந்தை பெயர் அனந்தேச சிவாசாரிய ரென்றும், அவர் தந்தையின் பாட்டனா ராகிய சந்திரசேகரர் என்பவர். இவர் போலவே பிள்ளையாருக்கு நிவேதங்கள் உண்பித்து, அவரால் நம்பி என்று ஒரு பெயரிடப் பட்டாரென்றும், அப்புராணம் கூறுகிறது.

புலவர் புராணமுடையார் இவ்வரலாறுகளைச் சிறிது மாற் றிச் சொல்கிறார். நம்பியின் தந்தை, ஒரு பெண் மோகத்தால் நிவேதனங்களை அவளிடமே கொடுத்துவிட்டு, விநாயகரே உண்டார் என்று பொய் சொல்லி வந்தார்; ஒருநாள் நம்பி நிவேதனத்தைப் பெருமான் உண்டமை கேட்டு அதிசயித்தார்; மறுநாள் நம்பி படைக்கவும் அவர் உண்ணவும் நேரே கண்டார்; அரசன் ஐயமெய்தி வண்டியில் நிவேதனங்களைக் கொண்டு வந்து தந்தபோதும், பெருமான் நம்பிக்காக உண்டார். பார்த்த அரசன் இச்சிறுபிள்ளைக்கு நம்பியாண்டார் நம்பி என்று பெயரிட்டான்; நம்பி இல்லற வாழ்வு வாழ்ந்தாரா என்பது தெரியாது - என்பன இவர் கூறும் கதை வேறுபாடுகள்.

## திருமுறை ஆசிரியர்களின் காலம்

| திருமுறை எண் | பாடலின் பெயர் | ஆசிரியர் | காலம் நூற்றாண்டு | உடன் காலத்து அரசர் | உடன் காலத்து இருந்த பிறர் |
|---|---|---|---|---|---|
| 1, 2, 3 | தேவாரம் | திருஞான சம்பந்தர் | 640 - 656 | அரிகேசரி நின்றசீர் நெடுமாறன் 640 - 670 | திருநாவுக்கரசர் |
| 4, 5, 6 | தேவாரம் | திருநாவுக்கரசர் | 580 - 661 | மகேந்திரவர்ம பல்லவன் 615 - 630 | திருஞானசம்பந்தர் |
| 7 | தேவாரம் | சுந்தரமூர்த்தி | 692 - 710 | இராசசிம்ம பல்லவன் 690 - 720 | சேரமான் பெருமாள் |
| 8 | திருவாசகம் திருக்கோவையார் | மாணிக்கவாசகர் | 800 - 832 | வரகுண பாண்டியன் I 792 - 835 | |
| 9 | திருவிசைப்பா - கோயில் 4 பதிகம் | திருமாளிகைத் தேவர் | 10 முற்பகுதி | கண்டராதித்தர்? | |
| | திருவிசைப்பா மூன்று தலங்கள், திருப்பல்லாண்டு | சேந்தனார் | 10 இடைப் பகுதி | கண்டராதித்தர்? | |
| | திருவிசைப்பா 10 தலங்கள் | கருவூர்த் தேவர் | 11 முற்பகுதி | இராசராசன் I இராசேந்திரன் I | நம்பியாண்டார் நம்பி |
| | திருவிசைப்பா 2 தலங்கள் | பூந்துருத்தி நம்பி காட நம்பி | 11 தொடக்கம் | | நம்பியாண்டார் நம்பி |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| | திருவிசைப்பா கோயில் | கண்டராதித்தர் | 950 - 957 | சோழ அரசர் | திருமாளிகைத் தேவர் |
| | திருவிசைப்பா கோயில் | வேணாட்டடிகள் | 10 இடைப் பகுதி | கண்டராதித்தர்? | சேந்தனார் |
| | திருவிசைப்பா கோயில் 4 பதிகம் | திருவாலியமுதனார் | 10 இடைப் பகுதி | கண்டராதித்தர்? | |
| | திருவிசைப்பா கோயில் 2 பதிகம் | புருடோத்தம நம்பி | 11 தொடக்கம் | இராசராசன் I ? | நம்பியாண்டார் நம்பி |
| | திருவிசைப்பா கோயில் 1 பதிகம் | சேதிராயர் | 11 தொடக்கம் | இராசராசன் I ? | நம்பியாண்டார் நம்பி |
| 10 | திருமந்திரம் | திருமூலர் | 5 அல்லது 6 | ? | |
| 11 | திருமுகப்பாசுரம் | திருவாலவா யுடையார் | கி.பி. 705 | | சேரமான் பெருமாள் |
| | திருவாலங்காட்டுப் பதிகம் முதலான மூன்று | காரைக்காலம்மை | 5 - 6 | | |
| | க்ஷேத்திரத் திருவெண்பா | ஐயடிகள் காடவர் கோன் | 7 பிற்பாதி | பரமேசுவரவர்மன் 670 - 685 | |
| | பொன்வண்ணத் தந்தாதி, ஞான உலா ஆரூர் மும்மணி | சேரமான் பெருமான் | 650 - 710 | | சுந்தரமூர்த்தி |
| | திருமுருகாற்றுப் படை | நக்கீரர் | 2 | | சங்கப் புலவர் |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| | கயிலை பாதி காளத்தி பாதியந்தாதி முதலான பிற பிரபந்தங்கள் | நக்கீரதேவ நாயனார் | 10 பிற்பாதி | | |
| | திருக்கண்ணப்ப தேவர் திருமறம் | கல்லாட தேவர் | 10 பிற்பாதி | | |
| | மூத்த நாயனார் திரு இரட்டைமணி மாலை முதலியன மூன்று | கபிலதேவர் | 10 பிற்பாதி | | கபில தேவர், பரண தேவர், நம்பி யாண்டார் நம்பி நக்கீர தேவரும் பரண தேவரும் |
| | சிவபெருமான் திருவந்தாதி | பரண தேவர் | 10 பிற்பாதி | | நக்கீர தேவரும் கபில தேவரும் |
| | சிவபெருமான் திரு மும்மணிக்கோவை | இளம்பெரு மானடிகள் | 8 | | |
| | மூத்த பிள்ளையார் திரு மும்மணிக்கோவை | அதிராவடிகள் | 8 | | |
| | கோயில் நான்மணி மாலை முதலிய ஐந்து | பட்டினத்துப் பிள்ளையார் | 10 | | 9 நூ. வரகுண-னுக்குப் பின் திருவிசைப்பாப் பாடினோர் சிலர் |
| | திருநாரையூர் விநாயகர் திருவிரட்டை மணி மாலை முதலிய 10 பிரபந்தம் | நம்பியாண்டார் நம்பி | 11 முற்பாதி | இராசராசன் I | |
| 12 | திருத்தொண்டர் புராணம் என்னும் பெரிய புராணம் | சேக்கிழார் | 12 முற்பாதி | குலோத்துங்கன் II | |

## நம்பியாண்டார் நம்பி காலம்

திருமுறை வகுப்புக்கே முக்கிய ஆதாரமாயுள்ள நம்பியின் காலம் பலராலும் பலவிதமாகச் சொல்லப்பட்டு மிக்க குழப்ப மான நிலையிலுள்ளது. இதை ஆராயப் புகுமுன் பொதுவாக எல்லாத் திருமுறைகளின் காலத்தையும் ஒரு வரையறை செய்து கொள்ளுதல் அவசியமாகும்.

திருமுறையாசிரியராவார் சம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர், திருமூலர், சேக்கிழார், ஒன்பதாந் திருமுறை யாசிரியர் ஒன்பது பேர், பதினொராந் திருமுறையாசிரியர் பன்னிருவர் ஆக மொத்தம் 27 பேர். இவர்கள் பெயர்களையும் காலத்தையும் ஓர் அட்டவணையாக அமைத்து உடன் தரு கிறோம் (பக்கம் 242 - 4).

பதினொராந் திருமுறையாசிரியர் வரிசையில் இறுதியில் உள்ள நம்பியாண்டார் நம்பியின் காலம் இராசராசசோழ மன்னன் (I) காலம் என்பதே பொதுவாக ஒப்புக்கொள்ளப் பட்டிருந்த கருத்து. ஆனால் பண்டிதர்கள் சிலர் பெரிதும் மாறுபட்ட கருத்துக்களைக் கூறியிருக்கிறார்கள். அவற்றைச் சீர்தூக்கிப் பார்ப்பது அவசியமாகிறது. சைவ இலக்கிய வரலாறு என்ற நூலை எழுதிய ஔவை - துரைசாமிப் பிள்ளையவர்கள், 9-11 திருமுறை ஆசிரியர் காலம் வரையறை செய்யப்புகுந்து, பின்வரும் குறிப்புக்களைத் தந்திருக்கிறார்:

9ஆம் நூற்றாண்டு - பட்டினத்தடிகள், சேந்தனார், பெருமானடிகள்.

10 - நம்பியாண்டார் நம்பி, கண்டராதித்தர்.

11 - நம்பிகாடநம்பி, கருவூர்த்தேவர்.

12 - வேணாட்டடிகள், புருடோத்தம நம்பி.

13 - சேதிராயர், கல்லாடதேவர், நக்கீரர், பரணர்.*

இவற்றை ஆராயுமுன் ஒரு நிலையை நன்கு நினைவு கூர வேண்டும். திருமுறைகள் அருள் நூல்கள் - அருள் பெற்ற ஆன்றோர் அவற்றைத் தொகுத்தார்கள். அது காரணம் பற்றியே

---

* ஏழாம் நூற்றாண்டு தொடங்கி இவர் காட்டும் பட்டியலில் திரு மாளிகைத்தேவர், திருவாலியமுதனார், அதிராவடிகள், கபிலதேவர் காணப்படவில்லை. தமிழ் இலக்கிய வரலாறு, சைவ இலக்கியம்: ஔவை -சு துரைசாமிப்பிள்ளை 1956, அண்ணாமலைப் பல்கலைக் கழகம்.

பிற்காலத்தில் திருமுறைகளைப் பெருக்குவதோ அவற்றின் எண்ணைப் பெருக்குவதோ இல்லை. பெரியபுராணத்தின் சிறப்பினாலே அதைப் பன்னிரண்டாம் திருமுறையாக அக் காலத்திருந்த பெரியோர் அமைத்தார்கள். பின்னர் எத்துணைச் சிறப்பான நூலாயினும், அதைத் திருமுறை என்று கொண்டதில்லை. ஆகவே, சேக்கிழாருக்குப் பின் வந்த நூல் எதுவாயினும் திருமுறையாகாது. அன்றியும், 12ஆம் திருமுறை வகுத்தபோது திருமுறைகள் பதினொன்று நிறைவு பெற்றிருந்தன; பின்னால் சேர்க்கை இல்லை. அது மட்டும் அன்று. திருமுறை கண்ட புராணத்தின்படி, நம்பியே திருவிசைப்பா மாலையையும் பதினொராம் திருமுறையையும் தொகுத்தார். இங்கு சில கருத்துக்களைக் கவனிக்கவேண்டும். ஒன்று, திருவிசைப்பா மாலையைத் தொகுத்து முடித்துப் பின் திருமந்திரம் 10ஆக அமைத்தார். ஆக்கத் தொடங்கியபோது, பதிகம் எதுவும் மிச்சம் இல்லை. இருந்திருந்தால் 9இல் சேர்த்திருப்பார்; ஆகவே இல்லை என்பது உறுதி. தொகுத்த தொகுப்புக்கு இசைப்பா மாலை என்பது பெயர். இது இசைப்பாக்களை மட்டுமே கொண்டது. இங்கு ஒரு நிலையைக் காணலாம். ஒன்று முதல் ஒன்பது வரையுள்ள திருமுறைகள் இசைப்பாக்கள்: தேவாரம் ஏழு, திருவாசகம் எட்டு, திருவிசைப்பா ஒன்பது என இவை அமைந்தன. (இவற்றுள் திருக்கோவை மட்டும் விலக்கு; இது இயற்பா; ஆயினும் மாணிக்கவாசகர் செய்தார் என்ற எண்ணத்தினால், எட்டாம் திருமுறையுள் இது கொள்ளப்பட்டது)

பின்னர் மன்னர்பிரான் வேண்டுகோளின்படி (திருமுறை கண்ட புராணம் 27), 11ஆம் திருமுறையை இறை மொழிந்த திருமுகப் பாசுரம் முதலாம் பதிகங்களை ஒரு முறையாகச் செய்க என, இவர் செய்தார். செய்தபோது தமக்குக் கிடைத்த எல்லாத் துதிப் பாடல்களையும் பதினொராந் திருமுறையில் அடக்கிவிட்டார். இங்கு மற்றும் ஒரு நிலைமை கவனிக்கத் தகுந்தது. ஒன்பதாந் திருமுறை இசைத் தமிழ் என்றதுபோல, பதினொராந் திருமுறை இயற்றமிழ். இதன்கண் உள்ள 40 நூல்களும் இயற்றமிழில் உள்ளன. இங்குள்ள காரைக்காலம் மையார் பிரபந்தங்கள் மூன்றில் திருவாலங்காட்டுப் பதிகங்கள் இசைத்தமிழ்; இவை மட்டும் இந்நூலமைப்புக்கு விலக்கானவை: மற்ற இரண்டான இரட்டை மணிமாலையும் அற்புதத் திருவந் தாதியும் இயற்பாக்கள். அடங்கன்முறை ஏட்டுச் சுவடிகள்

*பெரும்பாலானவற்றில், அம்மையாருடைய திருவாலங் காட்டுப் பதிகங்கள் இரண்டும் முதலில் எழுதப்பட்டு, பின்னரே தேவாரம் தொடங்கப் பெற்றிருப்பதைக் காணலாம். ஏடெழுதினோர் காலத்து, மூத்த திருப்பதிகங்களான இவை முதலிலே சொல் லத்தக்கன என்ற கருத்து நிலவிற்றுப் போலும். எனவே, 1-9 திரு முறைகள் இசைப்பா; 10 - 12 இயற்பா. (இசைப்பாப் பகுதியில் உள்ள திருக்கோவை அத்தன்மைக்கு விலக்கு; இயற்பாப் பகு தியில் உள்ள அம்மையார் திருவாலங்காட்டு மூத்த திருப்பதி கங்கள் இவ்வியல் தன்மைக்கு விலக்கு)*

*இனி, திருமுறை கண்ட புராணத்தைப் பார்க்கலாம்:*

பண்புற்ற திருஞான சம்பந்தர் பதிகம்முந் நூற்று
எண்பத்து நான்கினால் இலங்குதிரு முறைமூன்று;
நண்புற்ற நாவரசர் முந்நூற்றேழ் மூன்றினால்;
வண்பெற்ற முறையொன்று நூற்றினால் வன்தொண்டர்;

ஆகவளர் திருமுறை ஏழ்; அருட்டிருவா சகமொன்று;
மோகமெறி திருவிசைப்பா மாலைமுறை யொன்று; சிவ
போகமிகு மந்திரமாம் முறையொன்று: புகழ்பெறவே
பாகமிகுந் திருமுறைகள் பத்தாக வைத்தார்கள்.

வைத்ததற்பின் நம்பிகழல் மன்னர் பிரான் மகிழ்ந்திறைஞ்சிச்
“சித்திதரும் இறைமொழிந்த திருமுகப்பா சுரமுதலாம்
உய்த்தபதி கங்களையும் ஒருமுறையாச் செய்க” எனப்
பத்திதருந் திருமுறைகள் பதினொன்றாப் பண்ணினார்.

*இவை ஒன்பதில் சேர்க்காமல் விடப்பட்ட காரணம், இவை பொதுவாக இசைப்பாவல்ல என்பதே என்று நாம் யூகிக்கிறோம். இவ்வாறு பதினொன்று ஆக்க இசைந்தமைக்கு ஒரு காரணமும் சொல்லப்பட்டுள்ளது.*

மந்திரங்கள் எழுகோடி ஆதலினால், மன்னுமவர்
இந்தவகை திருமுறைகள் ஏழாக எடுத்தமைத்து;
பந்தமுறு மந்திரங்கள் பதினொன்றும் ஆதலினால்,
அந்தமுறை நான்கினொடு முறைபதினொன் றாக்கினார்.

*நம முதலான மகா மந்திரங்கள் எழுகோடி (கோடி - முடிவு; எழுவகை) ஆதலினால் தேவார அடங்கன் முறை ஏழு திருமுறை யாக்கப்பட்டது; பின்னர், பதினொன்றாக்கச் சொன்னபோது, சங்கிதா மந்திரங்கள் பதினொன்று ஆதலினால், இவ்வெண்ணும்*

பொருத்தமே என்று கருதி அவர் செய்தார்; நம்பி சிவாசாரிய மரபு ஆதலினால், இப்பொருத்தம் அவருக்குத் தோற்றியது இயல்பே. இங்கு நாம் கருதவேண்டுவது, 11ஆம் திருமுறையை நம்பி தொகுத்தார், 9இல் சேர்க்க இயலாது விட்டுப் போன வற்றைச் சேர்த்துக் கொண்டார் என்பதாகும். தம்முடைய பாடல்களை இவர் ஒருகால் தொகுக்காமலிருக்கலாமே யொழிய, ஏனையவை யாவும் இவரே தொகுத்தார் என்பதில் முரண் இல்லை, ஐயமும் இல்லை.

ஒன்பதாந் திருமுறையைப் பொறுத்தவரையில், கங்கை கொண்ட சோழேச்சுரத்துக்கான திருவிசைப்பாவே காலத்தால் பிந்தியதென நாம் கருதலாம். இராசராசன் 985 - 1014 வரை யிலும், அவன் மகன் இராசேந்திரன் 1012 - 1044 வரையிலும் ஆட்சி புரிந்தனர். தந்தை கட்டிய இராசராசேச்சுரத்துக்கும், மகன் இராசேந்திரன் கட்டிய கங்கை கொண்ட சோழேச்சுரத் துக்கும், கருவூர்த்தேவர் திருவிசைப்பா பாடியிருக்கிறார். பிந்தியது பாடிய காலம் சுமார் 1035ஆக இருக்கலாம். ஆகவே இக்காலம் வரையுமேனும் நம்பியாண்டார் நம்பி இருந்து, அவர் பாடலையும் தொகுத்தார் என்று நாம் கருத வேண்டும். ஆதலால், நம்பியாண்டார் நம்பி இராசேந்திர சோழன் காலத் தில் பெரும்பகுதி வாழ்ந்திருக்கிறார். இராசராசன் பட்ட மெய்திச் சில ஆண்டுகளுக்குப் பின்னரே தேவாரப் பாடல் களில் மனம் செலுத்தியிருக்கிறான். பட்டமேற்றது கி.பி. 985. தேவாரம் தேட ஆரம்பித்தது 995 என்று நாம் கொள்வோம். அவன் இக்காலத்தில் நம்பியாண்டார் நம்பியின் பெருமையைக் கேள்வியுற்று, திருநாரையூர் அடைந்தான். இவருடைய வயது இப்போது 15 என்று கொள்வோம். நம்பி முதலில் விநாயகர் திரு இரட்டை மணிமாலை பாடியது இக்காலத்தில் இருக்க லாம். இறுதியாக, திருவிசைப்பாத் தொகுப்பு முடிந்தது, 1035இல். இதனால் நம்பி காலம் சுமார் 980 தொடங்கிக் குறைந்தது 1035 வரையிலேனும் என்று கொள்வோம்; இவர் 11ஆம் நூற்றாண்டில் இருந்தார் என்பது பொருத்தமே. திரு முறைத் தொகுப்பு இவரோடு - இந்தக் காலத்தோடு - முடிந்து விட்டது. இதற்குக் கடைசி எல்லை இராசேந்திரன் காலம் (1012 - 1044). விரிவும் சேர்க்கையும் இதுவரையில் தான், பிறகு இல்லை. இவ்வாறு கருதும்போது, தொடக்கத்தில் காட்டிய துரைசாமிப் பிள்ளை கால அமைப்பு சிறிதும் பொருந்தாது என்பது தெளிவு.

சேக்கிழாரின் பெரிய புராணம் பன்னிரண்டாம் திருமுறையாக அமைக்கப்பட்டமை இவற்றின் இயல்பான நிறைவு அல்லது மலர்ச்சி என்று கருதவேண்டும். இது ஒரு தனியான பெரு நிகழ்ச்சி. நம்பி திருவிசைப்பாத் தொகுத்த உடனேயே பதினொராந் திருமுறையையும் தொகுத்தார். இவற்றுள் தம்முடைய பாடல்களை இவர் தாமே தொகுத்திருக்கமாட்டார் என்பது பலர் ஆட்சேபம். சம்பந்தர் பல சுருதி தவறாமல் பாடுகிறார். இது சைவத்திலும் வைணவத்திலும், தமிழிலும் வடமொழியிலும் ஒரு மரபு. இதுபோல, நம்பி பாடிய பாடல் களைப் பயின்ற அன்பர்கள் அருகிலிருந்து அவற்றையும் தொகுப்பில் சேர்க்க வேண்டும் என்று கேட்டிருந்து, நம்பியும் அப்படியே சேர்த்திருக்கக்கூடும். இதில் தவறோ பொருத்தக் குறைவோ இல்லை. 'எனதுரை தனதுரையாக' என்று சம்பந்தர் இலம்பையங் கோட்டூர்ப் பதிகம் முழுமையும் பாடுகிறார். அவரையே பெரிதும் போற்றிய நம்பி, தாம் தொகுத்த பிரபந்த மாலையுள் தம் பிரபந்த மாலைகளைச் சேர்த்ததில் பிழையொன்றும் இல்லை.* இவ்வாறு நாம் முடிவு செய்த போதிலும் கூட, பலர் வேறு வகையான முடிவு செய்திருக்கிறார்கள். அவற்றையும் குறிப்பிட்டு இப்பகுதியை முடிப்போம்.

பொதுவாக, சோழர் காலத்தில் சைவ எழுச்சி அதிகமாகப் பெருகிய காலம் இராசராச சோழன் காலம். அவன் பாட்டனின் தமையனாரான கண்டராதித்தர் திருவிசைப்பாப் பாடிய பெருமையுடையவர். சோழர் அனைவரும் தில்லை நடராசப் பெருமானிடத்துப் பேரன்பு பூண்டவர்கள். முதற் பராந்தகன் தொடங்கியே இதைச் சாசனங்களிற் காணலாம். கண்டராதித்த னுடைய மனைவியாரான செம்பியன் மாதேவியார் பின்வந்த சோழ மன்னர் அனைவருடைய எண்ணத்தையும் செயல்களையும் சிவாலய அமைப்பில் திருப்பிவிட்ட பெரும் புண்ணியமுடையவர். அவரால் வளர்க்கப் பெற்ற இராசராசன் தஞ்சைப் பெருங்கோயில் கட்டியது, சோழர் பொற்காலத்தின் முதற் சின்னம். சேக்கிழார் நூற்றைம்பது ஆண்டுகள் கழித்துப் பெரிய புராணம் பாடியது மற்றொரு சின்னம்.

---

* தமது சீபாதத்து முதலிகள் வேண்டுகோளின்படி, இராமானுசர் தம்மீது அமுதனார் பாடிய இராமானுச நூற்றந்தாதியையும் நாலாயிரப் பிரபந்தத்துள் சேர்த்து ஓதச்செய்தார் என்ற வைணவ வரலாறும் இங்கு அறியத்தக்கது.

பொதுவாக இவ்வரலாறுகளை உணர்ந்த சைவ மக்கள், நம்பியின் காலம் இராசராசன் காலமே என்று எண்ணி வருகிறார்கள். ஆனால் இவ்வரலாற்றை ஆராய்ந்த இருவர் வேறு இரு மன்னர்களைக் குறிப்பிடுகிறார்கள். சதாசிவ பண்டாரத்தார் முதலாம் ஆதித்தன் என்றும், சோமசுந்தர தேசிகர் இரண்டாம் ஆதித்தனாகிய ஆதித்த கரிகாலன் என்றும் குறிப்பிடுகிறார். இவ்விருவர் கூற்றையும் காண்பது அவசியமாகிறது.

நம்பி தம் திருத்தொண்டர் திரு அந்தாதியில் சோழ மன்னரான நாயன்மாரைக் குறிப்பிடும்போது, ஆதித்த சோழனைக் குறிப்பிடுகின்றார் என்பது ஒன்று. குறிப்பிடும் இடம் பின்வரும் பாடல்கள்: புகழ்ச் சோழர், இடங்கழி நாயனார், கோச்செங்கட் சோழர் என்ற சேழ அரச குலநாயன்மார் வரலாறுகள் (50, 65, 82):

புலமன் னியமன்னைச் சிங்கள நாடு பொடிபடுத்த
குலமன் னியபுகழ்க் கோகன நாதன் குலமுதலோன்
நல மன் னியபுகழ்ச் சோழன தென்பர் நகுசுடர்வாள்
வலமன் னியஎறிபத்தனுக் கீந்ததோர் வண்புகழே.

சிங்கத் துருவனைச் செற்றவன் சிற்றம் பல முகடு
கொங்கிற் கனக மணிந்த ஆதித்தன் குலமுதலோன்
திங்கட் சடையர் தமரதென் செல்வ மெனப்பறைபோக்
கெங்கட் கிறைவன் இருக்கு வேளூர்மன் இடங்கழியே.

செம்பொன் அணிந்து சிற்றம்பலத்தைச் சிவலோக மெய்தி
நம்பன் கழற்கீழ் இருந்தோன் குலமுதல் என்பர், நல்ல
வம்பு மலர்த்தில்லை யீசனைச் சூழ மறைவளர்த்தான்
நிம்ப நறுந்தொங்கற் கோச்செங்க ணான் எனும் நித்தனையே.

இவற்றுள் இரண்டாம் குறிப்பு ஆதித்தன் என்று கூறுகிறது. மூன்றாவது, சிற்றம்பலத்தைப் பொன் அணிந்தது மட்டும் கூறுகிறது. முதற் குறிப்பு சிங்களம் வென்றது கூறுகிறது. ஆதித்தன் சிங்களம் வென்றதாகச் சாசனத்திலிருந்து தெரியவில்லை. சிங்களம் வென்றவர் முதல் பராந்தகனும் இராசராசனும். முதல் பராந்தகன் சிங்களம் வென்ற செய்தியைக் கண்டராதித்தர் தம் திருவிசைப்பாவில், 'வெங்கோல் வேந்தன் தென்னன் நாடும் ஈழமும் கொண்ட திறல் செங்கோற் சோழன்' என்று குறிப்பிடுகின்றார். இப்பராந்தகன் ஆதித்தனது புதல்வன். ஆகவே இப் பாடல் ஆதித்தனைக் குறிக்க இயலாது. இராசராசனுக்கு

“சிங்களாந்தகன்” என்ற பட்டம் இருந்தமை இங்கு கருதத் தக்கது. இம்மூன்று பாடல்களையும் குறிப்பிட்டுச் சதாசிவ பண்டாரத்தார் ‘இதில் ஆதித்த சோழன் சிங்கள நாட்டோடு போர் நிகழ்த்திய செய்தியை நம்பியாண்டார் நம்பி குறிப்பிட் டுள்ளார். ஆனால் அதனை விவரிக்கக் கூடிய வேறு ஆதாரங் கள் கிடைக்கவில்லை’ என்று எழுதுகிறார். (பிற்காலச் சோழர் சரித்திரம் I. 1958, பக்கம் 34) ஏன் கிடைக்கவில்லை என்றால், ஆதாரங்கள் இல்லை. ஆதித்தனையே சொல்ல வேண்டும் என்று இவர் முன்னதாகவே முடிவுசெய்து கொண்டமையால், இங்கு, இராசராசனுக்குச் சிங்களாந்தகன் என்ற பட்டமிருந்தும், அவ னைக் குறிப்பிட மனமில்லாமல் இடர்ப்படுகிறார்.

இரண்டாவது பாடல் ஆதித்தன் என்று குறிப்பிடுகிறது. ஆதித்தன் என்பது திருப்புறம்பயத்தில் தன்னை எதிர்த்த பகை மன்னர் அனைவரையும் முறியடித்து விசயாலயன் தோற்றுவித்த புதிய சோழர் பரம்பரையை நன்கு நிலை நாட்டிய பேரரசன் என்ற முறையில் இவ்வாதித்தனைக் குறிப்பிடுவதாகக் கொள்ள வேண்டுமேயன்றி, நம்பி தமது சமகாலத்து அரசனைக் குறிப் பிடுவதாகப் பொருளாகாது. அடுத்து, மூன்றாம் பாடல் சிற்றம் பலத்தைப் பொன் அணிந்தது மட்டுமே குறிப்பிடுகிறது. ஆகவே இதுவும் முன்னோனைக் குறிப்பிடுவதாகக் கொள்ள வேண்டுமே அன்றி, சமகாலத்து அரசன் என்று கொள்ளலாகாது.

தேசிகர் இவ்வாதித்தன், இராசராசனுக்கு மூத்த ஆதித்த கரிகாலன் என்று எழுதுகிறார். இவ்வாதித்த கரிகாலன் சிறந்த வீரனாக இருந்தது உண்மை. தன் தந்தையின் காலத்தில் தான் இளைஞனாக இருந்தபோது பாண்டியனை எதிர்த்துப் பெரு வீரத்தோடு போர் புரிந்து, கி.பி. 966இல் போரில் அவனைக் கொன்றான். அது பற்றி அவன் “வீர பாண்டியனைத் தலை கொண்ட கோப்பரகேசரிவர்மன்” என்று பட்டம் பெற்றிருந் தான். இவ்வாதித்தன், இராசராசன் இருவருடைய தந்தையாகிய இரண்டாம் பராந்தகன் என்ற சுந்தரசோழன் இராசகேசரி என்ற பட்டம் பெற்றவன். அவனுக்குப் பின் ஆதித்த கரிகாலன் பட்டத்துக்கு வரக்கூடும் என்ற முறை பற்றி அவனுக்குப் பரகேசரி என்ற பட்டம் குறுகிய கால அளவில் வழங்கியிருந்தது. ஆனால் இவ்வாதித்தன் பட்டத்துக்கு வரவில்லை. கி.பி. 969இல் சில வஞ்சகர்களால், பாண்டியன் தூண்டுதலின் மேல் போலும், இவன் கொல்லப்பட்டான் என்று உடையார் குடிக்கல்வெட்

டால் அறிகிறோம். (இதன் விவரங்களைப் பண்டாரத்தார் நன்கு ஆராய்ந்து கூறுகின்றார். சோழர் வரலாறு I, பக்கம் 76 - 81) பட்டத்துக்கே வராதிருந்த இளவரசன் ஆதித்த கரிகாலன் மிக்க இளம்வயதிலேயே நம்பியைக் கண்டு போற்றி இவ்வளவு பெருஞ்சிறப்புச் செய்தான் என்பது இயலாததொன்று. ஆதலால், பட்டத்துக்கு வராமல் பெருவீரனாய் விளங்கி இளமையில் இறந்துபோன ஆதித்த கரிகாலனையே நம்பி குறிப்பிடுகிறார் என்பது வரலாற்றுக்குச் சிறிதும் பொருத்தமில்லாதது.

மேலும், இராசராச மன்னன் அபயகுலசேகரன் என்று திருமுறைகண்ட புராணம் கூறுவது பொருத்தமில்லாத் தொடராய் இருக்கிறது என்று சிலர் கூறி இருக்கிறார்கள். இப்புராணம் பாடிய உமாபதியார் 14ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வாழ்ந்தவர். 13ஆம் நூற்றாண்டின், 1279இல் மூன்றாம் இராசேந்திரன் இறந்ததோடு சோழர் பரம்பரை முடிவடைந்துவிட்டது. தம் காலத்தில் மறைந்துபோன இச்சோழர் பரம்பரையைத் திருத்தமாக அறிந்தே உமாபதி குறிப்பிடுகிறார். சேக்கிழார் சோழராட்சி சிறந்து விளங்கிய சமயத்தில் நூல் செய்தபடியால், நம்மை விட அவர் மிகவும் திருத்தமாகக் குறிப்பிடுதல் இயலும்.

அன்றியும், இராசராச மன்னன் என்று தெளிவாய்க் கூறி இருக்கும்போது, அதை விட்டு வேறொரு மன்னனைத் தேடுவது அவசியமில்லாத குழப்பம். அபயன் என்ற சொல் பிற்காலத்தில் ஒரு சிறப்புச் சொல்லாக மாறிற்று. அபயன் - முதற்குலோத்துங்கன்; அகளங்கன் - விக்கிரமன்; அநபாயன் - இரண்டாம் குலோத்துங்கன்; கண்டன் - இரண்டாம் இராசராசன் என்பன போன்ற சிறப்புப் பெயர்களைக் காண்க. ஆனால் முதல் இராசராசன் காலத்தில் அபயன் என்பது ஒரு புதுச்சொல்லாக இருந்தது; ஆதலால் இது முதலாம் இராசராசனைக் குறிப்பதில் தவறில்லை.

அன்றியும், ஆனைமங்கலம் செப்பேடும் திருவாலங்காட்டுச் செப்பேடும் வடமொழிச் சுலோகங்களால் சுந்தர சோழன் மகனாகிய ஆதி ,தனைக் குறிப்பிடுகின்றன. *

“இந்த இர ஜேந்திரன் (சுந்தர சோழன்) இராஜராஜனான ஆதித்தன் என்ற சூரியவம்ச குலசேகரனைப் பெற்றான். பராந்தக தேவன் தேவலோகத்தை யாட்சி செய்யுங்கால் ஆதித்தன்

* சோமசுந்தர தேசிகர்: சைவ சிகாமணிகள் இருவர், 1930, பக்கம் 42.

பூலோகத்தை அரசாண்டு வந்தான். இந்த மனுவம்சதீபமான ஆதித்தன் போரிலே வீரபாண்டியனோடு தன் வலிமையறிந்த ஒரு மத்தகஜத்தோடு இளஞ்சிங்கமொன்று விளையாடுவது போல விளையாடினான். (ஆனைமங்கலம் செப்பேடு, சுலோகம், 26-28)".

"இவனுக்குப் (சுந்தரசோழனுக்கு) பிறகு இவன் மகன் ஆதித்தன் அரசு கட்டிலேறினான். மதனனை அழகில் வென்ற இந்த ஆதித்தன் பாண்டியனைப் போரிற் கொன்றான். அவன் தலைநகரிலே (மதுரை) ஜயஸ்தம்பம் நட்டு அதனில் பாண்டியன் தலையை நட்டுவிட்டுச் சுவர்க்கத்தைக் காணவேண்டிப் பூமியினின்றும் மறைந்தனன். (திருவாலங்காட்டுச் செப்பேடு, சுலோகம் 67 - 68)"*

முதல் சுலோகம் இராசராசனான ஆதித்தன் என்றும், மனுவம்ச தீபமான ஆதித்தன் என்றும் சொல்லுகிறது. இராசராசன் என்பது மிகவும் தெளிவு. ஆதித்தன் என்று சொல்லும் போது, சோழர் அனைவரும் தங்களைச் சூரிய குலம் என்று சொல்லிக் கொள்வதனாலே சோழர் அனைவருக்கும் உரிய ஒரு பொதுவான குலப்பெயர் என்று கருதவேண்டும். பராந்தகதேவன் என்று சொல்லியிருப்பது முதல் பராந்தகன் பேரனும் அரிஞ்சயன் புதல்வனும் இராசராசனின் தந்தையுமாகிய இரண்டாம் பராந்தகன் என்னும் சுந்தர சோழனைக் குறிப்பிடுகின்ற தொடர். இரண்டு கல்வெட்டுக்களிலும் அவன் பாண்டியனோடு செய்த போர் சொல்லப்பட்டிருக்கிறது. இவ்வாறு பாண்டிய நாட்டை வென்றவன் முதல் இராசராசனேயாவான். வடமொழிச் சாசனங்களில் குலசேகரன் என்ற பெயரைக் கண்டு மருள வேண்டியதில்லை. அது ஒரு பொதுவான சொல். எல்லா அரசர்களுக்கும் பொருத்திச் சொல்லப்படுகிறது. குலசேகர பாண்டியர் என்ற பாண்டிய மன்னரும் குலசேகரப் பெருமாள் என்ற சேர மன்னரும் தம்மை இப்படிச் சொல்லிக் கொள்ளக் காண்கிறோம். ஆனால் சோழ மன்னர் இவ்வாறு சொல்லிக் கொண்டதில்லை. வடமொழி யறிந்த உமாபதியார் இப்பெயரை இராசராசனுக்குப் பொருத்திச் சொல்கிறார். இவன் அபயகுலத் தோன்றலாக விளங்கினான் என்ற கருத்துப்பட அவர் பேசுகிறார். ஆகவே, முன்னே குறிப்பிட்டபடி பொதுப் பெயர்களான அபயன், குலசேகரன் என்ற பெயர்களைக் கண்டு திகைக்க வேண்டியதில்லை.

---

* சோமசுந்தர தேசிகர்: சைவ சிகாமணிகள் இருவர், 1930, பக்கம் 42.

அன்றியும், சுந்தர சோழன் காலத்திலேயே அவன் இறப்பதற்கு ஓராண்டு முன்னதாக (969) ஆதித்த கரிகாலன் இறந்தான். அதுமுதல் 985 வரையில் கண்டராதித்தன் புதல்வனாகிய உத்தம சோழன் ஆண்டான். இதற்குப் பிறகு பட்டத்திற்கு வந்தவன் இராசராசன். ஆகவே, சாசனம் எழுதினவர்கள் சுந்தர சோழன் மகன் இராசராசன் என்று அறிவார்களே அன்றி, இடையில் உத்தம சோழன் ஆட்சி நடைபெற்றிருந்தமையினாலே குழப்பத்தோடு பெயர்களைச் சொல்லியிருக்க நேரலாம். அன்றியும் இராசராசன் பட்டத்திற்கு வந்தபோது, அருண்மொழித்தேவன் என்ற பட்டத்தோடுதான் பட்டம் ஏறினான்.

'கொங்கிற் கனகமணிந்த ஆதித்தன் குலமுதலோன்' என்று சொல்லிய இடத்து, சூரிய குலத்து மன்னன் என்று பொருள் செய்தலே பொருந்தும். மேலும் கொங்கிற்கனகம் என்றபோது இராசராசன் சேரநாடு அதை அடுத்துள்ள குடகு நாடு கங்கபாடி நுளம்பபாடி முதலியவற்றையெல்லாம் தன் திக்கு விஜயத்தின் போது வென்றிருக்கிறான். ஈழத்தையும் பாண்டிய நாட்டையும் இவன் அடிப்படுத்தான் என்பது முன்னமே குறிப்பிட்டோம். ஆதலால் இவன் கொங்கிற் கனகத்தைக் கொணர்ந்து தில்லையைப் பொன் வேய்ந்திருத்தல் நடந்திருக்கக் கூடியதே.

இதுகாறும் கூறியவற்றைத் தொகுத்துக் கூறுவோம். திருமுறை கண்டவன் ஆதித்தன் என்று சொல்லுவது செப்பேட்டுச் சான்றுகளுக்குப் பொருத்தமாயில்லை. ஆதித்தன் பல கோயில்களைக் கற்றளிகளாகக் கட்டிய பெருமை உடையவன் என்றாலும், பெரும்போர்கள் அவன் ஆட்சியில் நடந்தன. முதல் போரில் தோல்வியுற்று மற்றொரு போரில் பெரு வெற்றியை எய்தியிருக்கிறான். ஆதலால் திருமுறைகளைக் கண்டு வெளிப்படுத்திப் பெருவிழாச் செய்வதற்கான சூழ்நிலை அவன் காலத்தில் நிலவவில்லை. ஆதலால் அவனைத் திருமுறை கண்ட சோழன் என்று சொல்வது சிறிதும் பொருத்தமன்று.

இராசராசனுக்கு மூத்தவனும் இளமையில் இறந்துபோனவனுமாகிய ஆதித்த கரிகாலனைக் குறித்த தேசிகர் கருத்துக்களைக் குறிப்பிட்டோம். இவன் அரசனாகிப் பெருந்தகுதி பெறாமையால் திருமுறைகளை வெளிப்படுத்தும் தகுதி பெற்றிருக்கவில்லை. மேலும் தேசிகர் காலத்தில் கோபிநாதராயர் எழுதிய சோழ வம்ச சரித்திரச் சுருக்கம் என்ற நூல் ஒன்றே (1905) ஆதார நூலாயிருந்தது. நீலகண்ட சாஸ்திரியார் ஆங்கிலப்

புத்தகங்கள் அப்போது வெளிவரவில்லை. ஆதலால் தேசிகர் எவ்வளவுதான் கல்வெட்டு ஆராய்ச்சியில் சிறந்து இருந்த போதிலும்கூட, தொடர்பான வரலாறு கூறும் ஆதார நூல் இன்மையால் கருத்துக்கள் பிழைபடுவது இயல்பு.

மேலும், இராசராசனான அபயகுல சேகரன் என்று சொல்லும்போது, பொதுப் பெயர்களாகிய அபயன் குலசேகரன் இரண்டையும் நீக்கவே இராசராசன் என்ற பெயரே எஞ்சுகிறது. இது சிறப்புப் பெயர், இங்கு பொதுப்பெயர் அல்ல. இராச ராசனே திருமுறை கண்ட சோழன்.

மிகவும் திறமையாகச் சோழர் வரலாறு எழுதிய சதாசிவ பண்டாரத்துக்குத் தமிழுலகம் பெரிதும் கடமைப்பட்டது என் பதில் ஐயமில்லை. எத்தனையோ வரலாறுகளையும் தொடர்பு களையும் புதிதாகக் கண்டறிந்து நன்கு விளக்கியிருக்கிறார். ஆனால் ஒரு குறைபாடு காணப்படுகிறது. நீலகண்ட சாஸ்திரி யாருடை கருத்துக்களை மறுக்கவேண்டும் என்ற ஓர் எண்ணம் அவர் எழுத்து எங்கும் நூல் போலத் தொடர்ந்து வருகிறது. இதுவே அவர் பல இடங்களில் தவறான முடிவுகளைச் சொல்ல நேர்ந்திருக்கிறது. திருமுறை கண்ட சோழன் இராசராசன் அல்லன் என்பதும் இவ்வாறு விளைந்த ஒரு தவறேயாகும். இத்தவற்றுக்குப் பின்னும் சில சைவ அறிஞர்கள் துணை போவதும் வியப்புக்கிடமாயுள்ளது. சிங்கள நாடு வென்ற செய்தி முன்னமே குறிப்பிட்டோம். இராசராசனே சிங்களாந்தகன் என்ற பட்டம் பெற்றவன். ஆனால் பன்னிரு திருமுறை வரலாறு எழுதியவரும் ஏனோ பண்டாரத்தாரை அடியொற்றிச் சொல் கிறார்:

"ஆதித்தன் சிங்களநாடு வென்ற செய்தியொன்று நம்பி யாண்டார் நம்பியால் திருத்தொண்டர் திருவந்தாதியிற் சொல்லப்பட்டுள்ளது. அதனை உறுதிப்படுத்தக்கூடிய வேறு சான்றுகள் இந்நாளிற் கிடைக்கவில்லை. எனினும், அதனை எளிதாகத் தள்ளிவிட இயலவில்லை. சோழர் பேரரசை நிறுவும் பொருட்டு வடக்கும் மேற்கும் படையெடுத்துச் சென்று முறையே தொண்டை மண்டலத்தையும் கொங்கு மண்டலத்தை யும் கைப்பற்றித் தன் ஆளுகையின் கீழ்க்கொண்டு வந்த இம் மன்னர்பிரான், தென்கிழக்கேயுள்ள சிங்கள நாடாகிய ஈழ மண்டலத்தின் மேலும் படையெடுத்துச் சென்றிருத்தல் கூடும். இவன் புதல்வன் முதற் பராந்தக சோழன் அந்நாட்டின் மேல்

படையெடுத்துச் சென்று அதனைக் கைப்பற்றினான் என்பது, அவன் கல்வெட்டுக்களால் அறியப்படுகின்றது. எனவே, ஆதித்த சோழன் முதலில் தொடங்கிய அச்செயலை அவன் புதல்வன் தன் ஆட்சியில் நிறைவேற்றியுள்ளமை குறிப்பிடத்தக்கது. ஆகவே, ஆதித்தனது சிங்கள நாட்டுப் படையெழுச்சியைப் பற்றி நம்பி யாண்டார் நம்பி கூறியிருப்பது சிறிதும் புனைந் துரையாகா தென்க." இராசராச அபய குலசேகரன் என்ற தொடர், சிங்கள நாடு அடிப்படுத்தவன் போன்றன, நேரே சிங்களாந்தகன் என்ற பட்டமுடைய இராசராசனைக் குறிப்பிடமாட்டா, அவன் பாட்டனுக்குப் பாட்டனாகிய ஆதித்தனைக் குறிப்பிடும் என்று இவர்கள் கூறுவதைக் குறித்து நாம் மேலும் சொல்லுவதற் கொன்றுமில்லை.

திருமுறைகண்ட புராணத்தில், திருமுறை கண்ட சோழன், சிந்தையருட் சிவமாகத் தெளிவித்தான் அருட்சென்னி என்று கூறுகிறது. இங்கு கூறப்பட்ட தொடரினால் அருள்மொழித் தேவனாகிய இராசராசசோழனே திருமுறை கண்ட இராசராச மன்னன் எனக் கொள்ளுதற்கிடமுண்டாயிற்று என்று பன்னிரு திருமுறை வரலாறு முதற் பகுதி கூறுகிறது. இது வெறுங் கொள்கை மட்டுமன்று, உண்மையே ஆகும்.

இதுகாறும் கூறியவற்றால், நம்பியாண்டார் நம்பியை வேண்டித் திருமுறை வகுத்துக் கொடுக்கப்பெற்ற சோழமன்னன் ஆதித்தனும் அல்லன், ஆதித்த கரிகாலனும் அல்லன்; பெரும் சிறப்புடைய முதலாம் இராசராசன் என்பதும், நம்பி இவன் காலத்திலும், இவன் புதல்வன் முதலாம் இராசேந்திரன் காலத் திலும் இருந்தார் என்பதும் தெளிவாகும்.

### நம்பி பாடிய நூல்கள்

நம்பி செய்த நூல்கள் பதினொராந் திருமுறையில் சேர்க்கப் பெற்றுள்ளன. இவை 31 முதல் 40 வரை எண்ணுள்ள பத்துப் பிரபந்தங்கள். பெயர்கள் பின்வருவன: திருநாரையூர் விநாயகர் திரு இரட்டை மணிமாலை, கோயில் பண்ணியர் திருவிருத்தம், திருத்தொண்டர் திருஅந்தாதி; அடுத்து ஆளுடைய பிள்ளை யார் மீது ஆறு பிரபந்தங்கள்: ஆளுடைய பிள்ளையார் திரு அந்தாதி, திருச்சண்பை விருத்தம், திருமும்மணிக்கோவை, திருஉலா மாலை, திருக்கலம்பகம், திருத்தொகை என்பன. பத்தாவது, திருநாவுக்கரசர் திரு ஏகாதசமாலை என்பது. இவை

குறித்து ஒரு கருத்துச் சொல்லத்தகுந்தது. சம்பந்தருக்கு ஆறு பிரபந்தங்களும், அப்பருக்கு ஒரு பிரபந்தமும் பாடிய நம்பி, திருத்தொண்டர் அந்தாதியில் சுந்தரரைப் பத்துப் பாடல்களால் துதித்திருக்கிறார். சமயாசாரியருள் நான்காமவராகிய மாணிக்க வாசகர் நூலை இவர் எட்டாந் திருமுறையாகத் தொகுத்தும் கூட, அவர் மீது ஒரு பாடல்கூடப் பாடவில்லை. கோயில் பண்ணியர் திருவிருத்தம் 58ஆம் பாடலில், திருக்கோவையைக் குறிப்பிடும்போது திருவாதவூர்ச் சிவபாத்தியன் என்று சொல் கிறாரேயன்றி, மாணிக்கவாசகர் என்றோ, அவர் திருவாசகம் பாடினாரென்றோ சொல்லவில்லை. இனி இவர் நூல்களைச் சிறிது ஆராயலாம்.

## திருநாரையூர் விநாயகர் திரு இரட்டை மணிமாலை

இது நம்பி தமக்கருள் செய்த திருநாரையூர் பொல்லாப் பிள்ளையார் மீது பாடிய சிறுபிரபந்தம். வெண்பாவும் கட்டளைக் கலித்துறையுமான இரு சொல் மணிகளாகிய பாடல்கள் தம்முள் மாறிவரும்படி அந்தாதித் தொடையால் மண்டலித்து வரப்பாடிய இருபது பாடல் கொண்டது இரட்டை மணிமாலை. தமிழ் மொழியில் முதல் இரட்டை மணிமாலை காரைக்கா லம்மையார் பாடியது. பின்னர் இரண்டு மாலைகள் கபிலதேவ நாயனார் பாடியவை: இதே திருமுறையுள் சேர்க்கப்பட்டுள்ளன.

தாம் நூல் பாடியதை 13ஆம் பாடலில் 'யான் ஏத்திய வெண்பா' எனக் குறிப்பிடுகிறார். இவர் பாடிய பாடல்கள் யாவும் பக்திச்சுவை ஒன்றே கொண்டவை. விநாயகரைப் போற்று வாரைத் துன்புறுத்த எண்ணுகின்ற பாசங்கள் நெருப்பை உண்ண எண்ணும் எறும்பின் நிலை அடையும் என்கிறார் (7):

மருப்பை ஒரு கைக்கொண்டு நாரையூர் மன்னும்
பொருப்பை அடி போற்றத் துணிந்தால் – நெருப்பை
அருந்த எண்ணு கின்ற எறும்பன்றே, அவரை
வருந்த எண்ணுகின்ற மலம்.

இந்நூலின் பதின்மூன்றாம் பாடல் பின்வருவது:

யாணேத் தியவெண்பா என்னை நினைந்தடிமை
தானே சனார்த்தனற்கு நல்கினான் – தேனே
தொடுத்தபொழில் நாரையூர்ச் சூலம் வலன் ஏந்தி
எடுத்த மதமுகத்த ஏறு.

இதனுள் உள்ள குறிப்பு முழுமையும் தெளிவாக இல்லை. 'என்னை நினைந்து' என்று யான் இயற்றிய வெண்பாவைக் கேட்டு, நாரையூர் மதமுகத்த ஏறு அடிமை சனார்த்தனற்குத் தானே நல்கினான் என்று இப்பாடலை உரைநடை ஆக்கலாம் போலும். 'என்னை நினைந்து' என்பது இந்நூலின் முதற்பாடல். இதன்படி சனார்த்தனன் என்பதைக் காத்தல் தொழிலுடைய திருமாலாகிய மன்னன் இராசராசன் என்றும், 'அடிமை நல்கினான்' என்பதை ஆட்கொண்டான் என்றும் கொள்க; இதன் பொருளாவது, விநாயகர் நம்பியின் நூலைக் கேட்டு மகிழ்ந்து மன்னனுக்குத் திருமுறைகளை வெளிப்படுத்திய குறிப்பு இப் பாடலில் உள்ளது என்பர்.

வீரணக்குடிப் பெண்ணானவள் தவம் செய்து, சிவபிரானின் புதல்வியாகி விநாயகருக்குத் தங்கையாகவும் குமரனுக்குத் தமக்கையாகவும் கருதப்பெற்றாள் என்று தெரிகிறது. திருநாரையூர்த் தலச்சிறப்பையும் பொல்லாப் பிள்ளையாரின் திருவிளையாடல்களையும் விரிவாகச் சொல்லும் திருநாரையூர்ப் புராணம் (வடமொழியும் அதன் மொழிபெயர்ப்பும்) இவ்வரலாற்றைக் குறிப்பிடவில்லை.

பின்வருவது இந்நூலின் பாடல்களுள் ஒன்று:

நாரணன் முன்பணிந் தேத்தநின் றெல்லை நடாவிய அத்
தேரணவும் திரு நாரையூர் மன்னு சிவன் மகனே,
காரணனே, எம் கணபதியே, நற் கரிவதனா,
ஆரண நுண் பொருளே என்பவர்க்கில்லை அல்லல்களே.

அடுத்த பாடல் (14) இத்தல வரலாறு ஒன்றை உள்ளடக்கியிருக்கிறது போலும். 'வீரணக்குடி ஏந்திழை' என்ற ஒரு பெண்ணின் வரலாறு இங்கு வருகிறது. 'ஏறிய சீர் வீரணக்குடி ஏந்திழைக்கும் இருந்தேன் - நாறிய பூந்தார்க் குமரற்கும் முன்னினை' என்று இங்கும், 'வீரணக்குடிவாய்ப் போதகப் போர்வைப் பொறிவாள் அரவரைப் பொங்குசினச் சாதகப் பெண்பிள்ளை தன்னையன் தந்த தலைமகனே' என்று அடுத்த பிரபந்தமாகிய கோயில் பண்ணியர் திருவிருத்தத்திலும் (29) இதைக் குறிப்பிடுகிறார்.

### கோயிற் பண்ணியர் திருவிருத்தம்

கோயில் - தில்லை; பண்ணியர் - அருள் திருவை நமக்குப் பண்ணுபவராகிய சிவபெருமான்; அவர்மீது பாடப்பட்ட 70

கட்டளைக் கலித்துறைப் பாடல்கள், அந்தாதித் தொடை; 'நின் ஆர் அருள் திருவை நான் பெறுமாறு எங்ஙனே' என்று அயர்ந்து பாடுகின்ற பாடல்கள் எனலுமாம். 70 பாடல்கள் பாடுவது ஒரு மரபு. ஈங்கோய்மலை எழுபது என்ற பதினொராந் திருமுறைப் பிரபந்தமும், பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள் சிலவும் காண்க. பிற்காலத்தில் தோன்றிய நூல்கள் ஏரெழுபது முதலியன. அப்பருடைய திருவிருத்தமும் நம்மாழ்வாருடைய திருவிருத்தமும் கட்டளைக் கலித்துறை யாப்பில் இயன்றவை. அக்காலத்தில் விருத்தம் என்ற பெயர் கட்டளைக் கலித்துறையைக் குறித்தது போலும். இந்நூலும் அத்தகையதே. பண்ணியர் என்ற சொல்லைப் பண்ணியல் என்பதன் திரிபாகக்கொண்டு பண் பொருந்திய பாடல் என்று பொருள் சொல்லவும் கேட்டிருக்கிறோம். இது பொருந்தாது. கட்டளைக் கலித்துறை யாப்பைப் பண்ணுக்குச் சிறப்பித்துச் சொல்வது பொருத்தமில்லாதது.

இப்பிரபந்தத்தில் சிறப்பான செய்திகள் பல உள்ளன. இரண்டாம் பாடலில் 'அடியேன் உரைத்த வன்புன் மொழிகள் பொறுத்தி கொலாம்' என்று தம் பாடலைக் குறிப்பிடுகிறார். சரபமூர்த்தியை இங்கு இருமுறை சொல்வது சிறப்பு. நாயன்மார்களுள் அப்பர், சுந்தரர், சேரமான், கண்ணப்பர், கலையர், கலிக்காமர், சாக்கியர், அதிபத்தர் என்போர் சொல்லப்பட்டுள்ளனர். வரகுணன் வழிபாட்டைக் குறிப்பிடுகிறார். இவ்வரலாறு பட்டினத்தாரால் சிறப்பித்துச் சொல்லப்பட்டுள்ளது.* இவ்வாறு பெரிதும் போற்றிச் சொல்லப்படுபவன் இரண்டாம் வரகுணன். சேந்தனார் தில்லையில் களி நிவேதனம் செய்த வரலாற்றைத் தெளிவுபடுத்திக் கூறுகிறார்.

விரிதுணிமேல்
ஆந்தண் பழைய அவிழைஅன் பாகிய பண்டைப்பறைச்
சேந்தன் கொடுக்க அதுவும் திருவமிர் தாகியதே.

இங்கு இவர் 'பண்டைப் பறைச் சேந்தன்' என்று கூறுகிறார். இக்கூற்று, சேந்தனார் வரலாற்றைத் தெளிவுபடுத்துவதற்குப் பேருதவியாய் உள்ளது. பொதுவாக உள்ள ஒரு நினைப்பு, பட்டினத்தார் பெருஞ்செல்வராய் வாழ்ந்த நிலையில், அவரிடம் அமைச்சராய் இருந்தவர் நாங்கூர்ச்சேந்தன் என்பவர்; இவரே ஒன்பதாம் திருமுறையில் காணும் திருவிசைப்பாவும், திருப்பல்

* எமது தமிழ் இலக்கிய வரலாறு, பத்தாம் நூற்றாண்டு பார்க்க.

லாண்டும் பாடினார் என்று மேலெழுந்த வாரியாகப் பலர் நினைப்பதுண்டு. ஆனால் இவர் வேறு, இங்கே குறிப்பிட்ட பறைச் சேந்தர் வேறு. முந்தியவர் சரித்திரத்தில், களி படைத்த வரலாறோ, பல்லாண்டு பாடித் தேர் நடக்கச் செய்த வரலாறோ இல்லை. இவை இரண்டும் பின்கூறிய சேந்தர் வரலாற்றுக்குரி யன. நம்பி இங்குப் பண்டைப் பறைச் சேந்தர் என்று சொல்கிறார். ஆகவே, இவர் நம்பி காலத்துக்கு முந்திய காலமாகிய 10ஆம் நூற்றாண்டில், ஒருகால் கண்டராதித்தர் காலத்தில் வாழ்ந்திருக் கலாம் என்று கருதுகிறோம். (இவர் சரிதமும் நூல்களும் எமது 10ஆம் நூற்றாண்டு இலக்கிய வரலாற்றில் ஆராயப் பெற்றுள்ளன) இவர் நாங்கூர் சேந்தரல்லர். செப்புறைச் சேந்தர்.

திருக்கோவை பாடிய செய்தியை 58ஆம் பாடலில் கூறுகிறார்:

வருவா சகத்தினில் முற்றுணர்ந்தோனை வண்தில்லை மன்னைத்
திருவாத வூர்ச்சிவ பாத்தியன் செய்திருச் சிற்றம்பலப்
பொருளார் தருதிருக் கோவைகண் டேயுமற்றப் பொருளைத்
தெருளாத உள்ளத் தவர் கவி பாடிச் சிரிப்பிப்பரே.

இப்பாடல் குறித்துச் சில வார்த்தைகள் கூறி மேற்செல்லலாம். திருவாதவூர்ச் சிவபாத்தியர் செய்த திருச்சிற்றம்பலக்கோவையின் பொருள் நலத்தைக் கண்டபின்கூடத் தெளிவில்லாத உள்ளத் தவர், தாங்களும் அகப்பொருள் கவிபாடுதல் நகையை விளை விக்கிறது என்று இவர் கூறுகிறார். சிவபாத்தியர் - சிவபக்தர். திருவாதவூர்ச் சிவபக்தர் மாணிக்கவாசகரே என்பது பொது வான கருத்து. அன்றியும், திருச்சிற்றம்பலக் கோவை, எட்டாம் திருமுறையில் நம்பியாலேயே சேர்க்கப்பட்டுள்ளது. திருச்சிற் றம்பலமுடையாரே மாணிக்கவாசகரைப் நோக்கிப் 'பாவை பாடிய வாயால் கோவை பாடுக' என்று வேண்டி இக்கோவை பாடிக் கொடுக்கப்பெற்றார் என்பது வரலாறு. இதுபற்றிக் கருத்து வேற்றுமை உண்டு. இக்கருத்தை யெல்லாம் மாணிக்க வாசகர் வரலாற்றை ஆராயுமிடத்து விளங்கக் கூறுவோம். இங்கு நம்பியாண்டார் நம்பியின் பாடலை மட்டும் குறிப்பிட் டோம்; மாணிக்கவாசகர் என்று இவர் பெயர் சொல்லவில்லை; திருவாசகத்தையும் சொல்லவில்லை.

25ஆம் பாடலில் 'அம்பலக்கூத்த - அடியமிட்ட முகிழ்சூழ் இலையும் முகைகளும் ஏயும் கொல்' என்று இவர் கேட்பது அப்பர் தேவாரம் ஒன்றின் தொடர்களைக் கொண்டது:

நின்போல் அமரர்கள் நீண்முடி சாய்த்து நிமிர்த்துகுத்த
பைம்போ துழக்கிப் பவளந் தழைப்பன, பாங்கறியா
என்போலிகள் பறித்திட்ட இலையும் முகையுமெல்லாம்
அம்போ தெனக்கொள்ளும், ஐயன் ஐயாறன் அடித்தலமே.

இதனுள் அகத்துறைப் பாடல்கள் மிகச் சிலவே என்பது குறிப்பிடத்தக்கது. ஆரூரரும் சேரமானும் கயிலாயம் சென்ற செய்தியைச் சொல்லுகிறார். 45ஆம் பாடலில் 'திருமலைமேல் தன்தலையால் நடந்தேறிச் சரங்கொண்டிருந்தது' என்ற வரலாறு விளக்கமாயில்லை. 'தில்லை மன்னனைத் தம், சித்தகக் கோயில் இருத்தும் திறத்து ஆகமிகர்க்கல்லால், புத்தகப் பேய்களுக்கு எங்குத்ததோ அரன் பொன்னடியே, என்று கேட்கிறார்; இவர் ஆகமிகரைக் குறிப்பிடுவது இவரது சிவாசாரிய மரபுக்கு ஒத்துள்ளது. 40ஆம் பாடல் ஆராயத்தக்கது: 'வேட்டுவன் (கண்ணப்பர்) இறைச்சியளித்தது, கலையன் விருக்குழங்கல் (?) அளித்தது, அதிபத்தன் படுத்திட்ட மீன் என்பன பழிக்கத்தக்கன வாயிலும் இறைவன் இகழான் அமுது செய்தான்' என்கிறார். இது கலையர் அளித்த (விருக்குழங்கல்) குங்குலியத் தூபத்துக்கு எவ்வாறு பொருந்தும் என்பது விளங்கவில்லை; ஒருகால் அத் தூபம் இடலாகாது என்பது இவர் கருத்துப்போலும்.

இந்நூல் பாடல்களுள் ஒன்றை எடுத்துக்காட்டாகத் தருகிறோம்:

ஏழைஎன் புன்மை கருதா திடையறா அன்பெனக்கு
வாழிநின் பாத மலர்க்கே மருவ அருளுகண்டாய்,
மாழைமென் நோக்கிதன் பங்க வளர்தில்லை அம்பலத்துப்
போழிளந் திங்கள் சடைமுடி மேல்வைத்த புண்ணியனே.

## திருத்தொண்டர் திருவந்தாதி

திருத்தொண்டர் பெயர்களைத் தொகுத்துச் சுந்தர மூர்த்தி சுவாமிகள் பாடிய பதிகம் திருத்தொண்டத் தொகை எனப் பெயர்பெறும். அதனுள் அவர் தொகையடியார் ஒன்பதின் மரையும் தனியடியார் அறுபது பேரையும் குறிப்பிட்டார்; சுந்தரரையும் அவர் தந்தை தாய் இருவரையும் கூட்டித் தனியடி யார் அறுபத்து மூவர் என வழங்குவது சைவமரபு. இவர்களனை வரையும் ஒவ்வொரு பாடலில் சிறப்பித்துக் கட்டளைக் கலித் துறைப்பாவில் அந்தாதியாகப் பாடிய நூலே இதுவாகும். திருத்

தொண்டத்தொகைக்கு இது வகை என்றும், இவற்றையொட்டிச் சேக்கிழார் பாடிய திருத்தொண்டர் புராணம் விரியென்றும் சொல்வது மரபு.

முதற்பாடல் அந்தாதிக்குச் சிறப்புப் பாயிரமாகப் பிற்காலத்தார் செய்தது; நாரையூர் பொல்லாப் பிள்ளையார் அருளால் நம்பி, வகையாக, அறுபத்து மூவர் பதி தேயம் மரபு செயல் சொன்னார் என்று இது கூறுகிறது; இது தனியான காப்புச் செய்யுள். பின்னுள்ள 89 பாடல்களில் திருத்தொண்டத் தொகை திருவந்தாதி ஒவ்வொன்றிலுமுள்ள அடியார்களைப் பாடி முடித்தவுடன், சுந்தரமூர்த்திக்கு ஒரு தனிப்பாடலில் வணக்கம் சொல்லி, பின் அடுத்த பாசுரத்துக்குச் செல்லுகிறார். திருமுறை கண்ட புராணம், அரசன் விரும்பியவாறு நம்பி நாயன் மார் சரித்திரத்தைச் சுருக்கி இவ்வந்தாதி பாடினார் என்று கூறும். இங்கு, சம்பந்தர், அப்பர், சேரமான், கோச் செங்கட் சோழன் ஆகியோருக்கு மட்டும் இரண்டு பாடல் வீதம் பாடி யிருக்கிறார். பாடல் தோறும் நாயனார் குலம், ஊர், செய்த அரிய செயல் ஆகியவற்றை விளக்கமாகச் சொல்லுகிறார். இவ்விளக்கங்களே பின்னர் சேக்கிழாருக்குப் பெரிய புராணம் பாடுவதற்குப் பேருதவியாயிருந்தன என்பது தெளிவு. இறுதி யில் மூன்று பாடல்களால் அடியார் தொகை, திருத்தொண் டத் தொகைப் பாடல் முதற்குறிப்பு ஆகியவை சொல்லி, கடை சிப் பாட்டில், அந்தாதியைச் சொல்லப் புலன்கள் ஒடுங்கும், ஊழ்வினைகள் வாடும் என்று பலசுருதி கூறுகிறார்.

இந்நூலிற் காணும் சில குறிப்புக்களை இங்கு தொகுத்துக் கூறுவோம். தாம் சம்பந்தருக்கு அந்தாதி பாடியதை, 'அடியேன் கொடுத்த அந்தாதி கொண்ட பிரான் அருட்காழியர் கொற்ற வனே' (34) என்று குறிப்பிடுவதால் இவ்வந்தாதி பாடுவதற்கு முன்னமேயே ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதி பாடி யிருந்தார் என்று அறிகிறோம். எல்லாப் பாடல்ளிலும் அந்த அந்த நாயன்மாரின் வரலாற்றுச் சிறப்பு நிகழ்ச்சிகளைக் குறிப் பிட்டுப் பாடியிருப்பது மிக்க அருமையுடையது. காரைக்கா லம்மையையும் சேரமானையும் பாடியபோது இவர்கள் பிர பந்தம் பாடிய செய்தி குறிப்பிடவில்லை; ஐயடிகள் வெண்பாப் பாடியது மட்டும் குறிப்பிட்டிருக்கிறார். சுந்தரரைக் குறித்த பாடல்களிலும், அவருடைய வாழ்க்கை வரலாற்றுச் செய்தி களைத் தொடர்பாகச் சொல்கிறார்.

சோழர் மூவரைக் குறித்துப் பாடியவிடத்துச் சில வரலாற்றுக் குறிப்புக்களைத் தருகிறார்: புகழ்ச்சோழர் (50) சிங்களநாடு பொடி படுத்த குலமன்னிய புகழ்க் கோகன நாதன் குலமுத லோன்: சிங்கள நாடு வென்று சிங்களாந்தகன் என்று பட்டம் பெற்றவன் முதல் இராசராசன். இவன் காலத்து வாழ்ந்த நம்பி, இவனது குல முதலோன் என்று புகழ்ச்சோழரைக் குறிப்பிடுதல் இயல்பே. இடங்கழி நாயனாரைப் பாடும்போது, 'சிங்கத்துரு வனைச் செற்றவன், சிற்றம்பல முகடு, கொங்கிற் கனகம் அணிந்த ஆதித்தன் குலமுதலோன்' (65) என்கிறார். தில்லையம்பலத்தைப் பொன் வேய்ந்தவன் முதற்பராந்தக சோழன்; இப்பாடல் குறிப்பிடுவது ஆதித்தன் குலமுதலோன் என்பது; சூரிய குல முதலோன் என்றே இது பொருளாகும். சோழர் குலம் சூரிய குலம். ஆதித்தன் என்ற சொல் அப்பராந்தகன் தந்தை ஆதித்த னைக் குறிக்கும் எனக் கருதுவது அவ்வளவு பொருத்தமன்று எனத் தெரிகிறது. கோச்செங்கட் சோழரைக் குறிப்பிடும்போது 'செம்பொன் அணிந்து சிற்றம்பலத்தைச் சிவலோகம் எய்தி நம்பன் கழற்கீழ் இருந்தோன் குல முதல்' (81) என்கிறார். காரைக் காலின் மேய குலதனம் என்பார். குலச்சிறை மீனவன் தன் அதிகாரி என்பார்.

களப்பாளனாகிய கூற்றுவன் என்று கூறுவதும், மூர்த்தி யார் கருநடன் ஆகிய சமண மன்னன் ஆட்சியில் முழங்கையால் சந்தனம் அரைத்தார் எனவும் நமிநந்தி நீரால் விளக்கிட்டார் எனவும் கூறுவதும், கண்ணில்லாத தண்டியடிகள் தொண்டு செய்ததும், களப்பிரர் ஆட்சிக்காலமாகும்.* 'கழுவா உடலம் கழுவின ஆக்கிய வித்தகனே' என்று முரண்தொடையாக இரு பாடல்களில் நீராடாத சைனரைக் குறிப்பிடுகிறார்.

கோச்செங்கட் சோழரைக் குறித்த பாடலில் 'மை வைத்த கண்டன் நெறியன்றி மற்றோர் நெறி கருதாத் - தெய்வக் குடிச் சோழன்' என்று இவர் பாடுவது பொருள் உடையது. இவர் காலத்துக்கு முன், சோழர் எண்மர் அரசாண்டனர்; அவர்கள் அனைவரும் சிவபக்தரே. பாண்டிய மரபும் பல்லவ மரபும் இத் தகையன அல்ல. அங்கு மன்னர் சைனராயும் வைணவராயும் இருந்துள்ளனர். இதை நன்குணர்ந்தே நம்பி இவ்வாறு தெளிவு படக் கூறியுள்ளனர். இவர் வாக்கு விசேடத்தினால், பின்னும்

---

* மெய்ப்பொருள் நாயனாரிடம் பகைத்து வஞ்சத்தால் அவரை வீழ்த்திய முத்தநாதனும் களப்பிரனாகலாம்.

பதின்மூவர் சோழர் அரசாண்டிருப்பினும் அவர்கள் அனைவரும் சிவபக்தராகவே ஆட்சி புரிந்தனர். சோழர் மரபில் வேற்றுச் சமயக் கலப்பில்லை.

சம்பந்தருக்குத் தாம் இப்பாடல் பாடியதைப் பல பாடல்களில் குறிப்பிடுகிறார் (34, 59, 99,).

'தத்தா நமரே' எனச் சொல்லி வானுலகம் பெற்றவன் சேதிபன் மெய்ப்பொருளாம் (5) என்பார். அடுத்து வந்த காலத்தில் இம்மெய்ப்பொருள் நாயனார் படிமம் 'தத்தா நமர்' என்றமிலாடுடையார் என்று சிலையின் கீழ்க் கல்வெட்டில் பொறிக்கப்படும் சிறப்புப் பெற்றது.

சுந்தரரைக் குறித்த ஒரு பாடலில் (48) 'கோல் தொத்து கூனனும் கூன்போய்க் குருடனும் கண் பெற்றமை சாற்றித் திரியும் பழமொழியாம்' என்கிறார். வரலாற்று விளக்கமில்லை. பொய்யடிமை இல்லாத புலவரைக் குறித்த பாடலில் (49) 'பொய்ம்மையிலாத் தமிழ்ச் சங்கமதில் கபிலர் பரணர் நக்கீரர் முதல் நாற்பத்தொன்பது பல்புலவோர்' என்று மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் வரலாற்றுக் கதையைத் தழுவித் தெளிவாகச் சொல்கிறார். இருந்தும், பொய்யடிமை இல்லாத புலவர் மாணிக்கவாசகரே என்று சொல்லி இடர்ப்படுவோரும் உளர். சிவபிரான் ஆணை விரையாக் கலி என்று கோட்புலியின் பாடலில் (68) கூறுகிறார். சங்கிலியாரைப் பற்றிப் பேசும்போது, 'தருமகட் பேசினோன் வீயவே நூல் போன சங்கிலி' (69) என்கிறார். இக்கருத்து, திலகவதியாருக்கு மணம் பேசிய கதையை ஒரு பகுதி ஒத்துள்ளது; சேக்கிழார் இப்படிச் சொல்லவில்லை. பரமனையே பாடுவார், வடமொழி தென்மொழி எதிலும் இயலிசை பொருந்தப் பாடுபவர் (71) என்கிறார். அடுத்து, 'முப்போதும் நீடாக மத்தின் அறிவால்' வணங்கி அர்ச்சிப்பவர் என்கிறார் (74).

நம்பி, சோழமன்னனிடத்து மிக்க ஈடுபாடு உடையவராதலினாலே, சோழரான நாயன்மார் வருமிடங்களில் மிக்க சிறப்பாகவே செய்திகளைக் குறிப்பிடுகிறார். சில முன்காட்டப்பட்டன. கோச்செங்கணானைக் குறிப்பிடும்போது, "மை வைத்த கண்டன் நெறியின்றி மற்றோர் நெறி கருதாத் - தெய்வக் குடிச் சோழன்" என்பார். உண்மையே. பாண்டியரும் பல்லவரும் சைன வைணவ சமயங்களில் புகுந்திருக்க சோழ மன்னர் மட்டுமே

சைவ நெறி ஒன்றை மட்டும் பற்றி வாழ்ந்தவர்கள் என்று சரித்திரம் கண்ட உண்மைச் செய்தி. இதை முன்னோருக்கு இவர் ஏற்றிச் சொல்வது மிக்க பொருளுடையது. அன்றியும் "செம்பொன் அணிந்து சிற்றம்பலத்தைச் சிவலோகம் எய்தி - நம்பன் அடிக்கீழ் இருந்தோன் குலமுதல்வன் என்று மேலும் சொல்கிறார். இச்சோழரை இரு பாடல்களில் சிறப்பித்திருப்பதும் இத்தகுதி கருதியேயாகும்.

88ஆம் பாடலில் திருத்தொண்டத் தொகைப் பாடல் முதல் தொடரை அடிவரவாக அமைத்துப் பாடுகிறார். இப்படியே திருச்சண்பை விருத்தத்திலும் அந்நூலுக்கு அடிவரவு பாடியிருக்கிறார். அடிவரவு கூறுதல் வைணவர் பிற்காலத்தில் கொண்ட தவறாத ஒரு மரபு. சைவத்தில் பின்னும் பெரும்பற்றப் புலியூர் நம்பி திருவிளையாடல் பதிகத்துக்கும், சுவாமி நாததேசிகர் தசகாரியத்தில் சிவப்பிரகாசத்தின் சூத்திரத் தொடக்கத்துக்கும் உள்ளன. யாப்பருங்கலக் காரிகை மேற்கோள் பாடலுக்குமே ஓர் அடிவரவு உள்ளது.

## ஆளுடைய பிள்ளையார் திரு அந்தாதி

ஆளுடைய பிள்ளையார் ஆவார் திருஞான சம்பந்தர். இந்நூலானது கலித்துறையில் அந்தாதித் தொடையில் மண்டலித்து வரும் 100 பாடல் கொண்டது. இறுதியில் தனிவெண்பா ஒன்றும் உடையது. தாம் பாடல் பாடியதை 99ஆம் பாடலிலும், சீகாழியின் பன்னிரு பெயர்களை 100ஆம் பாடலிலும், குறிப்பிடுகிறார். இவ்வந்தாதியில் பல பாடல்கள் அகத்துறையில் அமைந்தன. நூல் முழுமையிலும் சம்பந்தருடைய அற்புதச் செயல்களை மிகவும் பாராட்டிப் பாடுகிறார். சம்பந்தர் மீது இவர் ஆறு பிரபந்தம் பாடியிருப்பது அவரிடம் உள்ள பேரன்பைப் புலப்படுத்தும். சம்பந்தர் பதினாறு ஆயிரம் பதிகம் பாடினார் என்பது வழக்கு. இதை இவரும் குறிப்பிடுகிறார் (15); ஆனால் இன்று கிடைப்பன 384. தமிழாகரன் என்ற சம்பந்தர் பெயரில் இவருக்கு ஈடுபாடு மிகுதி; கவுணியர்தீபன், அருகாசனி என்ற பெயர்களும் அப்படியே.

திருஞானசம்பந்தர் திருநனிபள்ளி என்ற தலத்தில் பாலையை நெய்தலாகும்படி பாடினார் என்ற ஒரு வரலாற்றை நம்பி இங்கு 17ஆம் பாடலிலும், அடுத்த திருச்சண்பை விருத்தம் 4ஆம் பாடலிலும் குறிப்பிடுகிறார்:

நாதன் நனிபள்ளி சூழ்நகர் கானகமாக்கி யஃதே
போதின் மலிவயல் ஆக்கிய கோன்;
கள்ளம் பொழில் நனிபள்ளித் தடங்கடம் ஆக்கி அஃதே
வெள்ளம் பணி நெய்தல் ஆக்கிய வித்தகன்.

*திருவுலா மாலையிலும் (75) நனிபள்ளியது பாலை நெய்தல் ஆக்கியும் என்கிறார். இவ்வரலாற்றைப் பெரிய புராணம் கூற வில்லை. சம்பந்தர் பாடிய நனிபள்ளித் தேவாரத்தில் மருதவளம் பொருந்திய ஒரு நகரத்தைப் பாடுகிறாரே அன்றி, பாலை யையோ நெய்தலையோ பாடுவதாகத் தெரியவில்லை. ஆனால் 12ஆம் நூற்றாண்டில் எழுந்த திருக்களிற்றுப்படியார் என்ற சைவ சித்தாந்த சாத்திர நூல், சம்பந்தர் கரணமெல்லாம் சிவ கரணம் இருந்தது என்று சொல்ல வந்த இடத்து, பாலையை நெய்தலாகப் பாடினார் என்று கூறுகின்றது (12):*

பாலை நெய்தல் பாடியதும், பாம்பொழியப் பாடியதும்,
காலனை அன் றேவிக் கராங்கொண்ட – பாலன்
மரணந் தவிர்த்ததுவும், மற்றவர்க்கு நந்தம்
கரணம் போல் அல்லாமை காண்.

*இம் மூன்று பாடல்களிலும் சிறிது முரண் காணப்படுகிறது.*

*'கொங்குதேர் வாழ்க்கை' என்ற பாடலின் பொருளைக் கொண்டது, தலைவியைத் தலைவன் புகழ்வதாகிய 65ஆம் பாடல். போக மார்ப்பு என்ற பதிகம் வேகாதிருந்தது 72; சிறுத் தொண்டர் கறி சமைத்தது 72; கோலக்கலாவில் சம்பந்தர் எழுத்தைந்தும் இட்ட பொற்றாளங்கள் பெற்றது 72; நந்தனைப் பூசுரனாக்கியது 37; பதிகப் பெருவழி காட்டி அருள்பெற வைத்தது 2; நனிபள்ளியைக்கானகம் (முல்லை) ஆக்கி அஃதே வயல் (மருதம்) ஆக்கியது 17 - இவை இப்பிரபந்தம் கூறும் சில செய்திகள். பின்வருவது இதன் பாடல்களுக்கு எடுத்துக் காட்டாகும் (42):*

பெறுவது நிச்சயம், அஞ்சல் நெஞ்சே, பிர மாபுரத்து
மறுவறு பொற்கழல் ஞானசம் பந்தனை வாழ்த்துதலால்
வெறியுறு கொன்றை மறியுறு செங்கை விடைஎடுத்த
பொறியுறு பொற்கொடியம்எம் பெருமான் அமர் பொன்னுலகே.

*அருகருக்குத் தென்னாட்டில் ஆதிக்கம் இருந்தது காஞ்சி யிலும் மதுரையிலும்; மதுரையே தென் தமிழ்நாடு என்னப்*

பெறும். காஞ்சி ஆதிக்கத்தைப் போக்கினார் அப்பர் சுவாமிகள். தென்னாட்டு ஆதிக்கத்தைப் போக்கினார் சம்பந்தர். இதைச் சுவைபட 'அருகர் தங்கள் தென்னாட்டரண் அட்ட சிங்கத்தினை' என்று அவரைக் குறிப்பிடுமுகமாக நம்பி உணர்த்துகிறார் (43). துலுக்குதல் (66), சிறுக்கன் (73), இல்லை யமாலயமே (யமவாதனை இல்லை) என்ற சொற்களும் தொடர்களும் கருதத்தக்கன.

## ஆளுடைய பிள்ளையார் திருச்சண்பை விருத்தம்

இது பத்துப் பாடல் கொண்ட ஒரு பதிகம். பதினோராம் பாடல் முதல் பத்துக்கும் அடிவரவு. விருத்தம் என்பது முன்கூறிய படி கட்டளைக் கலித்துறை. சண்பை என்பது சீகாழி. சண்பையர் காவலன் சம்பந்தனே என்பது மகுடமாதலால் சண்பை விருத்தம் என்று பெயர் பெற்றது. சம்பந்தருடைய அற்புதச் செயல்களை யும் தமிழ்ப் பாடல்களையும் பாடுகிறார். 'சடையான் அருள் மேவ அவனியர்க்கு வீறது ஏறும் தமிழால் வழி கண்டவன்' என்பது ஒரு நயமான தொடர்.

## ஆளுடைய பிள்ளையார் திருமும்மணிக்கோவை

ஆசிரியப்பா வெண்பா கட்டளைக் கலித்துறை என்ற பாடல்கள் முறையாக அந்தாதித்து வரவும் நூல் மண்டலித்து வரவும் தொடுத்த முப்பது பாடல்கள். யாப்பின் வேறுபாட்டால் சொற்களின் நயமும் கருத்தின் அழகும் சுவையும் பின்னும் சிறப்பு எய்தி இருக்கின்றன. சம்பந்தருடைய திருவடிப் பெருமை யைக் கூறும் பாடல் மிக்க சுவை பொருந்தியது; பிற்காலத்தில் பலர் இவ்வாறு பாட இடம் கொடுத்துள்ளது.

> என்றும் அடியவர் உள்ளத் திருப்பன, இவ்வுலகோர்
> நன்று மலர்கொடு தூவித் துதிப்பன, நல்லசங்கத்து
> ஒன்றும் புலவர்கள் யாப்புக்கு உரியன, ஒண்கலியைப்
> பொன்றும் கவுணியன் சைவசிகாமணி பொன்னடியே.

இதனுள்ளும் அகத்துறைப் பாடல்கள் பல. சில பாடல்கள் சம்பந்தருடைய வரலாற்றுச் செய்திகளைத் தொடர்ந்து குறிப் பிடுவன. 4ஆம் பாடல் நீண்ட பாடல் எனினும், சுவையுடையது; எனவே இங்கே எடுத்துக் காட்டுகிறோம்:

> அடுசினக் கடகரி அதுபட உரித்த
> படர்சடைக் கடவுள் தன் திருவருள் அதனால்,
> பிறந்தது,

கழுமலம் என்னும் கடிநக ரதுவே;
வளர்ந்தது,
தேங்கமழ் வாவிச் சிலம்பரையன் பெறு
பூங்குழல் மாதிடு போனகம் உண்டே;
பெற்றது,
குழகனைப் பாடிக் கோலக்காப் புக்கு
அழகுடைச் செம்பொன் தாளம் அவையே;
தீர்த்தது,
தாதமர் மருகல் சடையனைப் பாடிப்
பேதுறு பெண்ணின் கணவனை விடமே;
அடைத்தது,
அரைசோ டிசையா அணிமறைக் காட்டுக்
குரைசேர் குடுமிக் கொழுமணிக் கதவே;
ஏறிற்று.
அத்தியும் மாவும் தவிர, அரத்துறை
முத்தின் சிவிகை முன்னாட் பெற்றே;
பாடிற்று,
அருமறை ஒத்தூர் ஆண்பனை அதனைப்
பெருநிறம் எய்தும் பெண்பனை யாவே;
கொண்டது,
பூவிடு மதுவில் பொறிவண் டுழலும்
ஆவடு துறையில் பொன்னா யிரமே;
கண்டது,
உறியொடு பீலி ஒருகையிற் கொள்ளும்
பறிதலைச் சமணைப் பல்கழு மிசையே;
நீத்தது,
அவிழ்ச்சுவையே அறிந் தரனடி பரவும்
தமிழ்ச்சுவை அறியாத் தம்பங் களையே;
நினைந்தது,
அள்ளற் பழனக் கொள்ளம் பூதூர்
இக்கரை ஓடம் அக்கரைச் செலவே;
மிக்கவர்,
ஊனசம் பந்தம் அறுத்துயக் கொளவல
ஞானசம் பந்தன் இஞ் ஞாலத் திடையே.

*தமிழ்ச்சுவை அறியாத் தம்பங்களை என்றது, வசையும் நகையும் கலந்தது. ஞானசம்பந்தரை வணங்காதாரை, 'வணங்கார் - ஓதியம் பணை போல் விழுவர் அந்தோ சில ஊமர்களே' என்பார். பின்வரும் பாடல் சிறப்புடையது:*

பிறவிஎனும் பொல்லாப் பெருங்கடலை நீந்தத்
துறவிஎனும் தோல்தோணி கண்டீர் – நிறை உலகில்
பொன்மாலை மார்பன் புனற்காழிச் சம்பந்தன்
தன்மாலை ஞானத் தமிழ். 11

## ஆளுடைய பிள்ளையார் திரு உலா மாலை

*உலாப் பிரபந்தங்களின் வரிசையில் முதலாவதாக எழுந்தது சேரமான் பெருமாள் பாடிய ஆதி உலா என்னும் திருக்கயிலாய ஞான உலா. அடுத்த நூல் நம்பி பாடிய இத்திரு உலா மாலையே ஆகும். உலா சம்பந்தமாக முன்னமே பாட்டியல் நூல் உண்டா என்பது தெரியவில்லை. கிடைக்கிற பாட்டியல் இலக்கணங்களுள் பழமையானது பன்னிரு பாட்டியலாகும். இதற்கு முற்பட்ட காலத்தில் தோன்றியது சேரமான் பெருமாள் பாடிய உலா. பன்னிரு பாட்டியல் உலா பற்றிப் பன்னிரண்டு சூத்திரங்கள் சொல்லுகிறது. இதில் குறிப்பிட்ட பொருள்கள் - பாட்டுடைத் தலைவன் குடி நெறி மரபு, நீராடல், நல்லணி அணிதல், நகர் எதிர் கொளல், வீதியில் மதகளிறு ஊர்தல்; இவை முதல் நிலை என்றும், இதனுள் குழாங்கொளல் என்று எடுத்து ஓதிய புலவரும் உளர் என்று சொல்லிப் பேதை பெதும்பை மங்கை மடந்தை அரிவை தெரிவை பேரிளம்பெண் என்போர் எழுபருவ மகளிர் என்றும், இவர்கள் வயது முறையே 5 - 8, 9 - 10, 11 - 14, 15 - 18, 24, 29, 36 என்றும் பொய்கையார் சூத்திரம் செய்ததாக இதனுள் தரப்பட்டுள்ளது. இந்த இலக்கணம் ஆதி உலாவில் இருந்து கொள்ளப்பட்டது என்று தெரிகிறது. இவ்வுலா உலாப் புறம் எனவும் பெயர் பெறும்.*

*ஆனால் நம்பி பாடிய திருவுலா மாலை என்பது இந்த இலக்கணத்தை அமைத்துப் பாடப் பெறவில்லை. நம்பி, நூல் அமைப்பை மட்டும் சேரமானிடமிருந்து எடுத்துக்கொண்டு, நூல் செய்தார் என்றும் கருதுகிறோம். உலாவில் முக்கியமான ஒரு பகுதி, பருவமகளிர் எழுவரும் உலாவரும் தலைவனைக் கண்டு காமுற்றுத் தங்கள் தங்கள் பருவத்துக்கு ஏற்பப் பேசு*

கிறார்கள், வசம் இழக்கிறார்கள், மெய்ப்பாடு அடைகிறார்கள் என்று தனித்தனியே விரித்துச் சொல்வதாகும். இங்கு நம்பி, பேரிளம் பெண் ஈறாகப் பேதை முதலாக மடநல்லார் ஆளுடைய பிள்ளை யானைமீது வரக் காண்டலுமே இன்னவாறு ஆனார் கள் என்று பொதுவாக 21 கண்ணிகளில் சொல்லிவிடுகிறார். சொல்லியது சுவையுடையதாக இருந்தாலும், இக்கூற்று முன் வந்த உலாவை ஒட்டி இல்லை. அடுத்த நூற்றாண்டில் ஒட்டக் கூத்தர் பாடிய மூவர் உலாக்கள் தொடங்கி உலாப்பிரபந்தங்கள் மிகப் பலவாகப் பெருகின. யாவும் சேரமானைப் பின்பற்றி எழுந்தனவே.

நம்பி பாடியது திருவுலா மாலை. மாலை என்ற பெயர் சிலப்பதிகாரப் பகுதிகளுக்கும் பெயராக வழங்குவதைக் காண் கிறோம். அதன் பகுதிகள் பொதுவாக பாட்டு என்ற பொரு ளுடைய காதை என்று வழங்கப்பெறும். அவை ஆசிரியப்பாவில் அமைந்தவை. ஆனால் மாலை என்ற பெயரில் வழங்குகின்ற சில பகுதிகள் கலிவெண்பாவினால் இயன்றவை. துன்பமாலை, வஞ்சினமாலை என்ற பகுதிகள் காண்க. இங்கு இத்தலைப்புக் கள் இப்பகுதிகளின் பொருளாகிய துன்பத்தையும் வஞ்சினம் கூறுவதையும் உணர்த்துகின்றன. மாலை என்ற சொல்லுக்கு இயல்பு, தன்மை என்ற பொருள் உண்டு. இப்பொருளை அடியார்க்கு நல்லாரும் குறிப்பிடுகிறார். ஆதலால், திருவுலா மாலை என்ற பெயருக்கு ஆளுடைய பிள்ளையார் திருவுலா வரும் தன்மையைச் சொல்லும் கலிவெண் பாட்டு என்ற ஓர் அமைதி சொல்லலாம்.

நம்பி, இலக்கணத்தைப் பார்த்துப் பாடியவர் அல்லர். இவருக்குச் சற்று முன்னாகப் பன்னிரு பாட்டியல் தோன்றி யிருக்கலாம். ஆனால் இவர் முன்னோர் சென்ற வழியில் சென் றாரே அன்றி, பாட்டியல் இலக்கணத்தைத் தழுவியவர் அல்லர்.

இனி, நூற்பொருளைச் சுருக்கிக் காட்டலாம். இது 143 கண்ணிகள் உடையது. சோலை வளம் கண்ணி 16-21. நாட்டின் சிறப்பு கண்ணி 24 வரை. நகரச் சிறப்பு 38, மக்கட் சிறப்பு 48, பின்னும் நகரச் சிறப்பு 55, பன்னிரு பெயர் 58, சம்பந்தர் தோற்றமும் பெருமையும் 70, அவர் செய்த அற்புதங்கள் 85, மறையோர் உலா வருமாறு வேண்டல் 86 - 89, அலங்கரித்தல் 90 - 100, யானையின் செயல் 101 - 113, உலா வருதல் 114 - 116, கண்ட மகளிர்

செயல் 117 - 143. இவ்வாறு அமைந்த இந்நூலில் காணப்படும் இரண்டொரு குறிப்புக்களை மட்டும் இங்கு சொல்வோம்.

கேதகையும் எங்கும் கெழீஇஇ என்று இங்கு ஈர்அள பெடைகள் வந்தது இலக்கியத்துள் அபூர்வம். நம்பி சிவா சாரியர் என்பதற்கேற்ப வியாகரணங்கள் ஆகமங்கள் என்று குறிப்பிடுகிறார். இங்கு நானூற்றுவர் மறையோர் மன்னி வாழ்ந் தனர் என்கிறார். தில்லை மூவாயிரவர், திருவீழிமிழலை ஐஞ்னூற்றுவர் என்பதுபோல, சீகாழி நானூற்றுவர் என்பது மரபு போலும்; பலமுறை இதைச் சொல்லுகிறார். சம்பந்தர் பதினாறாயிரம் நற்பனுவல் பாடினார் என்பார். பாலையை நெய்தலாக்கியதைக் குறிப்பிடுகிறார். சித்திரக் கவிகளாகிய திரு இராகம், திரு இருக்குக்குறள், திருப்பாசுரம், பல்பெயர்ப் பத்து, யாழ்மூரி, சக்கரமாற்று ஈரடி முக்கால் முதலான செய்யுள் விகற்பங்களையும் குறிப்பிடுகிறார். இவர் யானையின் செயலை விவரித்து இருப்பது, சோழ அரசருடைய ஆதரவு பெற்று இவர் திருமுறை கண்டு வாழ்ந்தமையால் பொருத்தமுடையதே. 'யானை உடைய படை காண்டல் மிக இனிதே' என்ற இனியவை நாற்பது பாடலும் இங்கு எண்ணத்தக்கது.

## ஆளுடையபிள்ளையார் திருக்கலம்பகம்

9ஆம் நூற்றாண்டில் எழுந்த நந்திக் கலம்பகமே முதல் கலம்பகம். இக்கலம்பகமும் இலக்கணத்துக்குப் பொருந்த ஒரு போகு கொச்சகக் கலிப்பாவில் தொடங்குகிறது. அப்படியே பாடல்கள் அந்தாதியாக வருகின்றன. நூறு பாடல் இருக்க வேண்டிய நூலில் நாற்பத்தொன்பது பாடல்களே உள்ளன; மண்டலித்து வரவில்லை. 36 - 37, 41 - மடக்கு, 48 - 49 பாடல் களுக்கு இடையில் அந்தாதி இல்லை. இதனுள் காணப்படும் உறுப்புக்கள் பின்வருவன: குறம், களி, கழிக்கரைப் புலம்பல், மடல், சம்பிரதம், மறம், பாண், மதங்கியார், பாணாற்றுப் படை, கைக்கிளை, மடக்கு முதலியன. பல பாடல்கள் (32) நய மான சந்தப் பாடல்கள். நம்பி சந்தம் பாடுவதில் நிபுணர். பல பாடல்களில் தமிழ்ச் சிறப்பைக் குறிப்பிடுகிறார்.

அறிவாகி இன்பஞ் செய் தமிழ் வாதில் வென்றந்த
அமணான வன்குண்டர் கழுவேற முன்கண்ட
செறிமாட வண்சண்பை நகராளி என் தந்தை
திருஞான சம்பந்தன் அணிநீடு திண்குன்றில். 8

*இந்நூலுக்கு எடுத்துக் காட்டாகச் சந்தமல்லாத ஒரு பாடலை இங்கே தருவோம்.*

யாரே எம்போல அருளுடையார், இன்கமலத்
தாரேயுஞ் சென்னித் தமிழ் விரகன், – சீரேயும்
கொச்சை வயன்தன் குரைகழற்கே – மொச்சி
அடிமை செயப் பெற்றேன் அறிந்து. 44

## ஆளுடைய பிள்ளையார் திருத்தொகை

*இது 65 அடிகளை உடையது. தொடக்கத்தில் 40 வரிகள் (20 கண்ணிகள்) கலி வெண்பா அமைப்புடையன. ஏனைய வரிகள் தனிச் சீர் பெறாத கலிவெண்பாப் போல, ஒரே எதுகை யோடு சென்று முடிவன. சம்பந்தருடைய அற்புதச் செயல் களைக் கூறும் நூல். இதனுள் பாலை நெய்தல் பாடிய செய்தி யும் பதினாறாயிரம் பதிகம் பாடிய செய்தியும் குறிப்பிடப்பட் டுள்ளன. நல்லூர்த் திருமணத்தில் சோதியில் கலந்த வரலாற் றோடு பாடல் முடிகிறது. இந்நூற் பெயர் திரு ஆளுடைய பிள்ளையார் தொகை என்று கொள்ளத்தக்கது. கொண்டால் திருத்தொண்டர் தொகைபோல இதையும் கொள்ளலாம்; ஆளுடைய பிள்ளையாரின் சரித்திரத் தொகுப்பு என்று பொருள் படும். இடையில் 9 - 16 அடிகள் ஒரே எதுகையில் அமைந்து கலிவெண்பாவாக இல்லை. இதிலுள்ள நயம்மிக்க சில தொடர் களைக் குறிப்பிடலாம்: ஞானத் திரளாகி முன் நின்ற செம்மல், நாவாய் அது கொடுப்ப உள்ளமே கோயிலாக ஊன்றினான், புத்தன் தலையைப் புவிமேல் புரள்வித்த வித்தகப் பாடல், தான் செய்த பச்சைப் பதிகம், ஆணை நமது என்ன வலான், பத்தித் தனித் தெப்பம் பார் வாழத் தந்த பிரான். இந்நூலின் இறுதியடி நாற்சீர் பெற்றது. பாடல் முழுமையும் மிக்க சுவை பெற்றிருக்க, இவ்வடி சுவையற்று முடிகிறது: "அத்தன் அடியே அடைந்தான் அழகிதே."*

## திருநாவுக்கரசு தேவர் திரு ஏகாதச மாலை

*அப்பர் சுவாமிகளைப் போற்றுகின்ற சிறப்பான பதினொரு சந்த விருத்தங்கள்: அவருடைய வரலாற்றுச் செய்திகள் அனைத்தும் சொல்லப்பட்டுள்ளன. அப்பர் பாடிய பதிகங்கள் 4900. பதிகம் 'ஏழு எழுநூறு பகரும் மாகவியோகி பரசு நாவரசு' என்ற ஏழாம் பாடல் காண்க. (3ஆம் பாடலில் இதயம் எழுநூறு*

அரும்பதிகம் என்று கூறுமிடத்தில் ஏதேனும் எழுத்துப் பிழைகள் இருக்குமென்று தோன்றுகிறது) சுந்தரரும் தம் திருநின்றியூர்த் தேவாரத்தில் அப்பர் பாடியது ஏழு எழு நூறு பதிகங்களே என்று கூறுகிறார். இந்நூல் அந்தாதியாக மண்டலித்து வருவது. பின்வருவது இந்நூல் பாடலுக்கு ஓர் எடுத்துக் காட்டு.

இலைமாடு என்று இடர்பரியார், இந்திர –
    னேயொத்து உறுகுறை வற்றாலும்
நிலையாது இச் செல்வம் எனவே கருதுவர்,
    நீள் சன்மக் கடலிடையிற் புக்கு
அலையார், சென்று அரன் நெறியாகுங்கரை
    அண்ணப் பெறுவர்கள், வண்ணத்திண்
சிலை மாடம் திகழ் புகழ் ஆமூர் உறை
    திருநாவுக்கரசு என்போரே.

இவ்வேகாதச மாலையோடு பதினொராம் திருமுறை முடிகிறது. நம்பியாண்டார் நம்பி சிறுபிள்ளையாக இருந்த போது விநாயகருடைய அருளைப் பெற்றார். தம்மைப் போலவே இளங்குழந்தையாகச் சிவபிரான் அருளைப்பெற்ற ஞான சம்பந்தப் பிள்ளையிடம் இவருக்கு ஈடுபாடு மிகுதியானது இயல்பு. ஆகவே சம்பந்தர் மீது அதிகமான பாடல்களைப் பாடினார். நாவுக்கரசர் மீதும் ஒரு நூல் பாடியிருப்பதைப் பார்க்கும்போது, சுந்தரர் மீதும் பாடி இருக்கலாமோ என்று எண்ணத் தோன்றுகிறது. ஆனால் அப்படி எந்தப் பிரபந்தமும் கிடைக்கவில்லை.

## குறிப்பு

பதினொராந் திருமுறைப் பிரபந்தங்கள் இவைதான் என்று சொல்லியதற்கு எந்தப் பழைய ஆதாரமும் இல்லை. முதலில் அச்சிட்டவர் இப்போதுள்ள பிரபந்தங்களை அச்சிட்டார். தொடர்ந்து இவையே பதினொராந் திருமுறை என்று வழங்கி வருகின்றன. திருவிசைப்பாப் பாடல்கள், ஆசிரியர், பண்கள் இவை என்று வரையறை செய்து பாடம் ஏற்பட்டமைபோல, பதினொராந் திருமுறைக்கு ஏற்படவில்லை.

ooo

## அத்தியாயம் 8

# வைணவ இலக்கியம்

### முன்னுரை

முதல் ஆழ்வார்கள் தொடங்கி நம்மாழ்வார்கள் வரையிலுமுள்ள ஆழ்வார்கள் பரம்பரை, நம்மாழ்வார் மதுரகவியாழ்வாரோடு ஒன்பதாம் நூற்றாண்டில் முடிவடைகிறது. ஆசாரியர்களுடைய வரலாறும், இந்த நூற்றாண்டில் வாழ்ந்தார் என்று சம்பிரதாயமாகச் சொல்லுகின்ற நாதமுனிகளோடு தொடங்குகிறது. நாதமுனிகள் தொடங்கி, இருந்த ஆசாரியர் அனைவரும், ஆழ்வார்கள் பிரபந்தங்களில் எவ்வளவுதான் ஈடுபட்டிருந்தாலும் கூட, தமிழில் ஒரு நூலும் செய்யவில்லை. நம்மாழ்வாருக்குப் பின் வைணவத்தில் தமிழ்நூல் வறட்சி ஏற்பட்டது என்பது உண்மை. பத்தாம் நூற்றாண்டில் எந்த நூலும் எழவில்லை. பதினொராம் நூற்றாண்டில் இராமானுசர் என்ற பிரசித்தி பெற்ற ஆசாரியர் தோன்றினார். வைணவம் என்ற புதுச் சமயம் வகுத்து, நூறாயிரக்கணக்கான சைவர்களை வைணவர்களாக ஆக்கினார். ஆனால் அவர் வாழ்ந்த காலத்தில் ஒரு வைணவ நூல் எழவில்லை. பன்னிராண்டாம் நூற்றாண்டில் இராமானுசரின் மாணாக்காரன திருவரங்கத்து அமுதனார் இராமானுசரைப் புகழ்ந்து ஓர் அந்தாதி பாடினார். பதிம்மூன்றாம் நூற்றாண்டில் எந்தத் தமிழ் நூலும் வரவில்லை. பிறகு பதினான்காம் நூற்றாண்டில் வேந்தாந்த தேசிகரும், பதினைந்தாம் நூற்றாண்டில் மணவாள மாமுனிகளும் பதினாறாம் நூற்றாண்டில் பிள்ளைப்பெருமாள் ஐயங்கார் போன்றவர்களும் தமிழ் நூல் செய்திருக்கிறார்கள். இங்ஙனம் பார்க்கும்போது, நம்மாழ்வாருக்குப் பிறகு வேதாந்த தேசிகர் காலம் வரையில் நான்கு நூற்றாண்டுக்காலம், இராமானுச நூற்றந்தாதி ஒன்று

நீங்க, வைணவ சமயத்தில் எந்தப் புதிய தமிழ் இலக்கியமும் எழவில்லை.* வடமொழியிலும் மணிப்பிரவாளத்திலும், சமய விளக்கங்களும் பிரபந்த வியாக்கியானங்களுமே செய்யப்பட்டிருந்தன. இக்காலத்தை வைணவத்தில் இலக்கிய வறட்சிக் காலம் என்று குறிப்பிடுவது பொருந்தும்.

எனினும், இக்காலப்பகுதியில் சில ஆசாரியர் தனிப் பாடல்கள் செய்ததாகச் சம்பிரதாயங்கள் சொல்லுகின்றன. வைணவ மரபில் நாலாயிரப் பிரபந்தங்களுக்குச் சிறப்புப் பாயிரமாகச் செய்யப்பட்ட பாடல்களைத் தனியன் என்று சொல்லுவதுண்டு. பிரபந்தங்கள் அனைத்திற்கும் இப்படிப்பட்ட பாடல்கள் அனுசந்திக்கப்படுகின்றன. இன்னின்ன ஆசாரியர் இன்ன பாடலைச் செய்தார் என்றும் சொல்வதுண்டு. இந்த ஆசாரியர் இதனைச் செய்தாரா என்பதற்குச் சம்பிரதாயத்தைத் தவிர வேறு ஆதாரமில்லை. ஆயினும், தமிழ்ப்பாடல் செய்த காரணத்தால், இந்த ஆசாரியர்களுடைய வரலாற்றை இங்கு சுருக்கமாகக் கூறுவோம். இவ்வாறு இங்கு சொல்லப்பெறுவோர் ஆளவந்தாரின் புதல்வர்களான திருவரங்கப் பெருமாளரையர், சொட்டை நம்பி; சீடர்களான திருக்கச்சி நம்பிகள், திருமாலை நம்பி; இராமானுசர்.

## திருக்கச்சி நம்பி

இவர் பூவிருந்தவல்லியில் கி.பி.1004இல் வணிககுலத்தில் பிறந்தார். தந்தை வீரராகவர், தாய் கமலையார். பெற்றோர் வைத்த பெயர் திருக்கச்சி நம்பி என்பது. இளமையில் வாணிபம் செய்து பொருளீட்டிப் பாகவதர்களுக்குத் ததியாராதனை செய்தார். திருவல்லிக்கேணி அடைந்து அங்கு பார்த்த சாரதியைப் பணிந்து வந்தார். ஒரு கனவின்படி செங்கழு நீர்ப் பூ சிந்திக் கிடக்கும் வழியே சென்று திருக்கச்சி வந்து அத்திகிரிப் பேரருளாளரைச் சேவித்துத் திரு ஆலவட்ட கைங்கரியம் செய்து வரலானார். அந்த நிலையில் பெருமான் இவரிடம் அன்புடன் வார்த்தையாடி வருவார் என்று வரலாறு கூறுகிறது. அவர் கட்டளைப்படி திருவரங்கம் அடைந்து பெரிய நம்பிகளைச்

*. அருளாளப் பெருமாள் எம்பெருமானர் செய்த பிரமேயசாரம், விஞ்ஞான சாரம் (12ஆம் நூற்றாண்டு), விளாஞ்சோலைப் பிள்ளை செய்த சப்த காதை (14ஆம் நூற்றாண்டு) என்பன மிகவும் சிறிய நூல்கள்.

சேவித்தார். அவர் காட்டச் சென்று ஆளவந்தாரைச் சேவித்து அவரிடம் திருவிலச்சினையும் மந்திரோபதேசமும் பெற்றார். இவர் காஞ்சியில் இருந்தபொழுது, ஒருசமயம் தீண்டாத சாதி யான் ஒருவன், தாம் நீராடித் திரும்பியவுடன் தமது அடிப் பொடியைச் சிரசில் அணிந்து கொள்வதைக் கண்டு, அதன் மூலம் பெருமாள் அபிமானம் ஆசாரிய அபிமானம் இரண்டை யும்விடப் பாகவத அபிமானமே பேறு தருவது என்று நம்பெரு மாளால் உணர்த்தப்பட்டு, பெரிய நம்பியிடம் சென்று மாறு வேடம் பூண்டு மாடு மேய்த்தும், வண்டி ஓட்டியும் சேவை செய்து வந்தார். ஒரு சமயம் மழையிலும், சேற்றிலும் பெரிய நம்பியின் வண்டி சிக்கியபோது, தோள் கொடுத்துக் கரை யேற்றிப் பின், நனைந்த மாறுவேடத் துணிகளை உலரவைத்துத் தாம் பெருமாளுக்கு ஆலவட்டம் பரிமாறியபோது தரித்திருந்த துணிகளைக் களைந்து ஒரு மூலையில் ஒதுங்கியிருந்தார். வண்டிக்காரன் மழையில் நனைந்து போனானே என்று பெரிய நம்பி பரிதாபத்தோடு உலர்ந்த வஸ்திரங்களை எடுத்துக் கொண்டு வந்து, ‘மாட்டுக்காரா’ என்று கூப்பிட்ட அளவில் இவர், ஓடி வணங்க, அவர் அப்போதுதான் தம் மாட்டுக்காரனே திருக் கச்சிநம்பி என்று அறிந்து, இவருடைய பாகவத பக்தியைப் பெரிதும் பாராட்டினார். பின்னர் நம்பி காஞ்சி அடைந்து முன்போல் ஆலவட்ட கைங்கரியம் செய்து வந்தார். அக்காலத் தில் இராமானுசர் பிறந்து வளர்ந்து தமக்குக் குருவான யாத வப் பிரகாசரை விட்டு நீங்கி நம்பியிடம் வந்து கற்று வந்தார். பேரருளாளர் கட்டளைப்படி இராமானுசருக்கு ஆறுவார்த்தை களைக் கற்பித்தார். பல அற்புதங்கள் இவரால் நிகழ்ந்தன. பெருமாள் முன்பு வைத்திருந்த பிரசாதத்தை எடுத்து அவருக்கு ஊட்டினார். மற்றும் ஒரு நாள் தாமும் நம்பியுமாகப் பிரசாதத் தில் பெரும் பகுதி உண்டார்கள். உலகத்தார் நம்பிகள் உண்டு விட்டார் என்று அவதூறு சொல்ல, அதை மாற்றும் பொருட்டு ஒரு கோசாயியைக் கொண்டு தாம் தளிகை உண்டதைச் சாட்சி யாக இருந்து காணும்படி செய்தார். ஒரு சமயம் பெருமாள், தம் திருத்தோளிலே இருந்த ஓர் ஆபரணம் காணாமல் செய்ய, எல்லோரும் திருக்கச்சிநம்பி எடுத்தார் என்று சந்தேகிக்க, பின்னர் பெருமாள் தம் தோளிலே தோன்றச் செய்தார். பிறகு பூவிருந்தவல்லியில் கோயில், திருமலை, பெருமாள் கோயில் ஆகிய மூன்று தலத்துப் பெருமாளையும் பிரதிட்டை செய்தார்.

*வரதராசாஷ்டகம் என்ற வடமொழித் தோத்திர நூல் செய்து வழிபட்டிருந்து, உரிய காலத்தில் ஆளவந்தார் திருவடிகளைத் தியானித்தபடியே திருநாடு அலங்கரித்தார். இவருடைய வாழித் திருநாமம் பின்வருவது:*

மருவாருந் திருவல்லி வாழவந்தோன் வாழியே
மாசிமிருக சீரிடத்தில் வந்துதித்தோன் வாழியே
அருளாள ருடன் மொழிசொல் லதிசயத்தோன் வாழியே
ஆறுமொழி பூதூரர்க் களித்தபிரான் வாழியே
திருவால வட்டஞ்செய்து சேவிப்போன் வாழியே
தேவரா சாட்டகத்தைச் செப்புமவன் வாழியே
தெருளாரும் ஆளவந்தார் திருவடியோன் வாழியே
திருக்கச்சி நம்பியிரு திருவடிகள் வாழியே.

*திருமழிசை ஆழ்வாருடைய திருச்சந்த விருத்தத் தனியன்கள் இரண்டும் இவர் செய்தவை.*

தருச்சந்தப் பொழில் தழுவு தாரணியின் துயர்தீர
திருச்சந்த விருத்தம் செய் திருமழிசைப் பரன்வருமூர்
கருச்சந்தும் காரகிலும் கமழ்கோங்கும் மணநாறும்
திருச்சந்தத் துடன் மருவு திருமழிசை வளம்பதியே.

உலகும் மழிசையும் உள்ளுணர்ந்து தம்மில்
புலவர் புகழ்க்கோலால் தூக்க, – உலகுதன்னை
வைத்தெடுத்த பக்கத்தும், மாநீர் மழிசையே
வைத்தெடுத்த பக்கம் வலிது.

*இப்பாடல் 'உலகம் ஒரு துலையர்' என்ற பரிபாடல் வெண் பாவைத் தழுவியது. இராமானுசருடைய பஞ்ச குருமாருள் இவருமொருவர். இவர் செய்த அற்புதங்கள் பல என்று இராமானுசார்ய திவ்வியசரிதை கூறும். அப்போது சேற்றிலே நட்ட செங்கழு நீர்க் கிழங்கிலே பூ உண்டாகும்படி இவர் பின் வரும் பாடல் பாடினார்:*

வாக்கினால் என் மனத் தால் எனையுனக்கு
ஆக்கினாய் நீ அருளாள வள்ளலே
தேக்கும் ஓடையில் செங்கழுநீர் நின்று
பூக்குமாறு அருள் பூமகள் நாதனே.

*பின்வரும் பாடல் திருக்கச்சி நம்பியின் பெருமை கூறுவது:*

பெருக்கச் சிவந்திடுந் தானவ னாகம் பிளந்தளைந்த
திருக்கைத் தலத்தின் மிதியடி பற்றித் திருமகளார்
நெருக்கச் சிவந்திடுந் தாளிணை கன்ற நெடிதுவந்து
திருக்கச்சி நம்பி பின்னே திரி வாரெங்கள் தேசிகரே.

## *திருவரங்கப் பெருமாளரையர் 954 – 1059*

*ஆளவந்தார் புதல்வர்களில் ஒருவர். அவருக்குச் சீடருமாவார். திருவரங்கத்தில் திருவாய்மொழியே அபிநயித்துப் பாடியருளுகிறவர். இவரே வரதராசர் முன்னே தமிழை இசையோடு அபிநயித்துப் பாடி, அப்பெருமாள் இராமானுசரைக் காஞ்சி விட்டுத் திருவரங்கம் அனுப்பச் செய்தாரென்றும், இசையில் ஈடுபட்டு இராமனுசர் தாமே அப்படி வருமாறு செய்தாரென்றும் வரலாறுகள் உள்ளன. இவர் தொண்டரடிப் பொடியாழ்வார் திருப்பள்ளியெழுச்சிக்கு ஒரு தனியனும். திருமாலைக்கு ஒரு தனியனும் பாடியுள்ளார். அவை பின்வருவன:*

மண்டங் குடி என்பர் மாமறையோர் மன்னியசீர்த்
தொண்ட ரடிப்பொடி தொன்னகரம் – வண்டு
திணர்த்தவயல் தென்னரங்கத் தம்மானைப் பள்ளி
உணர்த்தும் பிரான் உதித்த ஊர்.

மற்றொன்றும் வேண்டா மனமே மதிலரங்கர்
கற்றினம் மேய்த்த கழலிணைக்கீழ் – உற்ற
திருமாலைப் பாடும்சீர்த் தொண்ட ரடிப்பொடி எம்
பெருமானை எப்பொழுதும் பேசு.

## *திருமலை நம்பி (974 – 1074)*

*இவர் திருமலையில் அவதரித்தவர்; ஆளவந்தாரின் சீடர். இராமானுசருடைய தாய்மாமன்; அவருடைய சீடரும் தத்த புத்திரருமாய்த் திருவாய்மொழி ஆறாயிரப்படி செய்த திருக் குருகைப் பிரான் பிள்ளான் என்பவர், இவருடைய திருப் புதல்வர். இவர் செய்ததாக வழங்குவது அமலனாதிபிரானுக் குரிய தனியன்:*

காட்டவே கண்ட பாத கமல நல் லாடை உந்தி
தேட்டரும் உதரபந்தம் திருமார்பு கண்டம் செவ்வாய்
வாட்டமில் கண்கள் மேனி முனியேறித் தனிபுகுந்து
பாட்டினால் கண்டு வாழும் பாணர்தாள் பரவினோமே.

### சொட்டை நம்பிகள்

*இவர் ஆளவந்தாரின் புதல்வர். ஆளவந்தார் சிரேஷ்ட (உயர்ந்த) குலம், பிராம்மண குலம் (சிரேஷ்ட - சொட்டை) இவர் செய்த திருவாய்மொழித் தனியன்:*

மனத்தாலும் வாயாலும் வண்குருகூர் பேணும்
இனத்தாரை யல்லாது இறைஞ்சேன் – தனத்தாலும்
ஏதும் குறைவிலேன் எந்தை சடகோபன்
பாதங்கள் யாமுடைய பற்று.

### திருக்கோட்டி நம்பிகள் தனியன்

விசயன் வினையொழித்த மெய்ப் பொருளைப் பூதூர்
வசையின் முனிக் களித்த வள்ளல் திசைகமழும்
தேமலர்ப் பூஞ்சோலைத் திருக்கோட்டியூர் நம்பி,
தாமரைப் பூந்தாளே சரண்.

## *இராமானுசர்*

### *முன்னுரை*

*தமிழ்நாட்டில் வைணவ மதத்தை நிறுவி அதன் மூலம் வட நாடெங்கும் கூட வைணவ சமயம் பரவும்படி செய்த இராமானுசர் வரலாறு தமிழ்நாடு நன்கறிந்தது. பொதுவாக ஆங்கிலம் கற்றவர்களும் வடமொழி வாணரும் அறிந்த வேதாந்த மதம் மூன்று. முதலாவது சுத்தாத்வைத நிரூபணம் செய்த சங்கரருடைய மதம்; காலம் ஒன்பதாம் நூற்றாண்டு விசிஷ்டாத் வைத நிரூபணம் செய்தவர் இராமானுசர்; இவர் பிறந்தது தமிழ்நாட்டு ஸ்ரீ பெரும்புதூர்; சென்னைக்கு அருகில் உள்ளது; காலம் 11 - 12 நூற்றாண்டு. துவைதமத நிரூபணம் செய்தவர் மத்துவாசாரியர்; இவர் துளு நாட்டில் பிறந்தவர்; ஊர் சிவரூப்பிய (பாஜக) கிராமம். காலம் கி.பி. 1238 - 1317. மூவரும் பிராமணர்; மூவரும் தென்னாட்டினர். இம்மூவருள் இராமானுசர் ஒருவரே தமிழர். இவருடைய வரலாறு எல்லா வைணவக் குருபரம்பரை நூல்களிலும் இராமானுசார்ய திவ்ய சரிதையிலும் சொல்லப் பட்டுள்ளது. இவர் பிறந்தது கி.பி. 1017; திருநாட்டுக்கு எழுந் தருளியது. 1137; இவர் 120 திருநட்சத்திரம் உயிர் வாழ்ந்திருந் தார். இவர் தமிழில் எந்த நூலும் செய்யவில்லை. எனினும், வரலாற்றறிவு நிறைவு பெறுவதற்காக இவர் வரலாற்றையும் இங்கு சுருக்கிக் கூறுகிறோம்.*

சங்கரர் மலையாளம் வழங்கும் காலடியில் பிறந்து சாத்திரம் செய்தார். உள்பொருள் பிரமம் ஒன்றே, இரண்டாவது இல்லை என்பது அவருடைய ஒரே கோட்பாடு. அவர் காசி வரை சஞ்சரித்துச் சாத்திரம் செய்தாலும், தமிழ்நாட்டில் அவர் காலத்தில் வழங்கிய சைவ மதத்தைப் பொறுத்தவரையில், அவரால் சைவத்துக்குத் தீங்கே விளைந்தது. அவருக்குமுன் சிவவேதியராயிருந்த தமிழ்நாட்டுப் பிராமணருட் பெரும்பாலோர், பின்னர் வெறும், அறிவுத் தேட்டமாகிய ஆன்ம விசாரத்தைக் கைக்கொண்டு, நானே பிரமம் என்ற கொள்கையை அவலம்பிப்பவர்களாகி, பிற்காலத்தில் சித்தாந்திகளால் கண்டிக்கப்பெறும் மாயாவாத வேதாந்தக் கொள்கையுடையவர்களானார்கள். கோயில் வழிபாட்டை இவர்கள் விலக்கியமையால், இவர்களால் சிவ வழிபாட்டுக்குக் குறைவு ஏற்பட்டது. இதுவே பின்னர் இராமானுசர் மூலம் வைணம் கால்கொண்டு பரவவும் இடம் அமைத்துக் கொடுத்தது. சங்கர வேதாந்தத்தால் வேறிரு பெருங்கேடுகள் விளைந்தன. ஒன்று, பார்ப்பனமே உயர்வு என்ற கருத்து. இது இருபதாம் நூற்றாண்டில் பெரும் சாதிப்பிணக்கில் கொண்டு போய்விட்டது. மற்றது, தமிழ் மொழிக்கு விளைந்த தீங்கு; அவர் எல்லா நூல்களும் வடமொழியில் செய்தமையால் பார்ப்பன மக்கள் வடமொழியே உயர்வு தாய்மொழி தாழ்வு* என்றெண்ணத் தலைப்பட்டார்கள்; அல்லாத மக்களும் அப்படி எண்ணத் தொடங்கினார்கள். தமிழ்மொழி வளர்ச்சியை இது பெரிதும் குறைத்தது என்பதில் ஐயமில்லை.

மத்துவாசாரியர் உபதேசித்த துவைத மதம் தமிழ்நாட்டினுள் பிரவேசிக்கவில்லை. ஆதலால் அவரைக் குறித்துத் தமிழ் இலக்கிய வரலாற்றில் எந்த ஆராய்ச்சியும் நிகழ்த்தவில்லை.

ஆனால் இராமானுசருடைய நிலைமை வேறு. இவர் தமிழ் நாட்டில் பிறந்தது மட்டுமல்ல; ஆழ்வார்கள் பாடிச் சென்ற பக்தி நெறியும் அவர்கள் பாடிய பிரபந்தப் பாடல்களுமே இவருடைய சமயப் பிரசாரத்துக்கு மூலமாயிருந்தன. ஆதலால் இவருடைய வரலாற்றை அறிவது அவசியமாகும்.

---

* எமது 13ஆம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கிய வரலாற்றில் வைணவ இலக்கியம் என்ற 9ஆம் அத்தியாயத்தின் முன்னுரையைப் படித்தறிவது இங்கு பயனுடையதாயிருக்கும்.

**வரலாறு**

ஆளவந்தாரின் சீடர்களில் ஒருவர் திருப்பதியில் வசித்து வந்த பெரிய திருமலை நம்பி என்பவர். அவர் சகோதரிகள் இருவர் - காந்திமதி, ஸ்ரீதேவி என்போர். காந்திமதியம்மை ஸ்ரீ பெரும்பூதூரில் வாழ்ந்த கேசவ சோமயாஜி என்னும் ஆசூரி கேசவபட்டரின் மனைவியாவார். இவர்களுடைய புதல்வராய் இராமானுசர் பிறந்தார். குழந்தையைப் பார்க்கவந்த பெரிய திருமலை நம்பி, இவன் இலக்குமணன்போல் இருக்கிறான் என்று சொல்லி, இராமன் தம்பி என்று பொருள்படுகின்ற இராமானுசன் என்ற பெயரைக் குழந்தைக்குச் சூட்டினார். பிற்காலத்தில் இளையபெருமாள் என்றும், இளையாழ்வார் என்றும் பெயர்கள் வழங்கின. இவருடைய சிற்றன்னை ஸ்ரீதேவி, மழலை மங்கலம் கமல நயனபட்டரை மணந்தார். அவர்களுக்குக் கோவிந்தன் என்ற பெயரையுடைய குழந்தை பிறந்தான். கேசவ பட்டரின் நண்பரான திருக்கச்சி நம்பிகள் குழந்தையை வந்து பார்த்து ஆசீர்வதித்தார். இந்நம்பி வைசிய மரபினர்.

இராமானுசரும் கோவிந்தனும் அக்காலத்தில் அத்வைத சாத்திரத்தில் பெரும்புலமை படைத்திருந்த திருப்புட்குழி யாதவப் பிரகாசரிடம் சென்று காஞ்சியில் கல்வி பயின்றார்கள். இராமானுசருக்குத் திருமாலின் திருவருள் பூரணமாயிருந்தது. அது காரணமாக, இளமை முதலே மெய்ப்பொருளை நன் குணர்ந்து வந்தார். தாம் கல்வி பயின்ற காலத்திலெல்லாம் திருக்கச்சி நம்பிகளின் தொடர்பைப் பெருக்கிக் கொண்டே வந்தார். திருக்கச்சி நம்பி பக்தி வழியில் நின்றவர். இந்நெறியில் இராமானுசருக்கு ஈடுபாடு அதிகமாயிற்று. இவருக்கு முறை யாகக் கல்வி போதித்த யாதவப் பிரகாசருடைய கொள்கை வரட்டு அத்வைதம்; அது அறிவு நெறியாகும். அன்பு நெறியில் சென்ற இராமானுசருடைய மனம், அறிவு நெறியை மட்டும் பற்றி ஒழுகிய யாதவப் பிரகாசரிடம் பெரிதும் மாறுபாடு கொண்டது. சில சமயம் இவர் யாதவருடைய கருத்துக்கள் பிழை யாயிருந்தமையால் மறுத்துக் கூறினார். இதனால் அவருக்கு இவர் மீது கோபமும் வெறுப்பும் ஏற்பட்டன. இவருடைய கருத்துக்களின் சிறப்பை மதித்துப் போற்றும் அளவு பெருந் தன்மை அவரிடம் இல்லை. 'வேறிடம் சென்று பாடம் கேட்க லாம்' என்று கூட அவர் இவரைச் சொல்லிவிட்டார்.

அக்காலத்தில் மாணாக்கர் ஆசிரியருக்கு எல்லா வகையான பணிவிடைகளும் செய்து வந்தார்கள். ஒரு சமயம் இராமானுசர் யாதவருக்கு எண்ணெய் தேய்த்துக் கொண்டிருந்தார். அப்போது நடந்த ஒரு சம்பவம் எல்லோரும் நன்கறிந்தது. ஓர் உபநிடத வாக்கியத்திற்குப் பொருள் கூறும்போது அவர் உசிதமில்லாத* ஒரு பொருளைச் சொன்னார். கேட்ட இராமானுசர் மிகவும் மனம் நொந்து கண்ணீர் பெருக்கினார். அக்கண்ணீர் அவருடைய தொடையில் விழுந்து சுட்டது. அதை உணர்ந்த யாதவர் 'இது என்ன?' என்று மாணாக்கரைக் கேட்டார். மாணாக்கர் உபநிடதப்பொருள் அவர் சொன்னது அல்ல என்றும், பிரம்மத்தின் கண்கள் காலையில் மலரும் தாமரை போலிருந்தன என்பதாகும் என்றும் சொன்னார். இவ்வாறு இருவருக்குமிடையில் கருத்து வேற்றுமைகள் அதிகமும் பெருகின. இவரால் அத்வைத மதத்திற்கு ஆபத்து வரும் என்று உணர்ந்து, எப்படியேனும் கங்கா யாத்திரை செய்யும் நிமித்தமாகச் சென்று இவரை கங்கையில் தள்ளிக் கொன்றுவிட வேண்டும் என்று யாதவர் தமக்குள் முடிவு செய்தார். அப்படியே அவர் மாணாக்கர்களோடு புறப்பட்டுச் சென்றார். விந்திய மலைச்சாரலை அடைந்தபோது, அங்கு இராமானுசருடன் பயின்று உடன் வந்த கோவிந்தர், யாதவருடைய நோக்கம் இன்னதென்று உணர்த்தி, பிரிந்துபோய் விடுமாறு இவரை எச்சரித்தார்.

அப்படியே காஞ்சிக்குச் செல்ல எண்ணி இராமானுசர் மற்றவர்களைப் பிரிந்து தனித்துச் செல்லலானார். மிகவும் பசித்தும் களைத்தும் சோர்ந்திருந்த இவர்முன் பெருமாளும் பிராட்டியும் வேடர் வடிவத்தில் தோன்றி வழிநடத்தி அழைத்துக் கொண்டு காஞ்சிவரையில் துணை வந்தார்கள். தாகத்துக்காகக் கிணற்றில் நீர் எடுக்க இவர் பிரிந்தபோது உடன் வந்தோர் மறைந்தனர். தாம் காஞ்சி அருகே வந்திருந்தமை உணர்ந்தார். பெருமாளின் திருவருளை எண்ணிப் பெரிதும் உருகினார். தம் தாயைக் கண்டு நிகழ்ந்தவை சொல்லி அங்கு தங்கியிருந்தார். மூன்று மாதம் ஆனபின் யாதவப் பிரகாசர் திரும்பினார். வன விலங்குகள் இவரைக்கொன்று தின்றிருக்கும் என்று எண்ணிய

---

* உசிதமற்ற பொருளாவது, பிரம்மனுடைய கண்கள் குரங்கினுடைய ஆசனம் போல் சிவந்திருந்தன என்பதாகும். இவ்விளக்கம் ஆறாயிரப்படி குருபரம்பரையில் சொல்லப்படவில்லை.

தற்கு மாறாகக் காஞ்சியில் இவரைக் கண்டபோது அவர் திடுக்கிட்டார். மீண்டும் அவரிடம் இவர் படித்து வந்தபோதிலும், மன அமைதியில்லை,

யாதவரோடு கோவிந்தர் திரும்பி வாராதது கண்ட அனை வருக்கும் கவலை சூழ்ந்தது. யாதவரோடு அவர் சென்று கங்கை யில் மூழ்கியபோது, அவர் கையில் ஒரு சிவலிங்கம் வந்து தங்கியது. யாதவப்பிரகாசர் மகிழ்ச்சி அடைந்து, அவருக்கு 'உள்ளங்கை கொணர்ந்த நாயனார்'* என்று பெயரிட்டு, திரும்பி வரும் வழியில், 'இந்த லிங்கத்தை நீர் பூசை செய்து கொண்டி ரும்'என்று சொல்லி அவரை நிறுத்திவிட்டு, காஞ்சி வந்தார். கோவிந்தர் திருக்காளத்தியில் சிவலிங்கத்தைப் பூசை செய்து கொண்டிருந்தார்.

இந்த நிலையில் காஞ்சியில் இராமானுசரின் பெருமையை எடுத்துக்காட்டும் சம்பவமொன்று, நிகழ்ந்தது. அருகிலிருந்த ஒரு சிற்றரசன் பெண்ணைப் பிரமராக்கதன் பிடித்திருப்பதாக எல்லோரும் எண்ணினார்கள். அரசன் யாதவரை அழைத்து அதை ஓட்டுமாறு பணித்தான். யாதவர் மந்திரம் பலன் தர வில்லை. அடுத்து இராமானுசர் செய்த வைத்தியத்தால் அது நீங்கியது. கண்டு அரசனும் பிறரும் இவரைப் புகழவே, பொறாமை கொண்ட யாதவர், இனித் தம்மிடம் கற்க வர வேண்டாமென்று இவரை நீக்கி விட்டார். அதன்மேல் இவர் காஞ்சிப் பூரணர்❖ என்றும் பக்தி காரணமாகப் பிரசித்தி பெற் றிருந்த திருக்கச்சி நம்பியிடம் கற்கத் தொடங்கினார். அவர் இவரைத் திருமஞ்சன நீர் கொண்டுவந்து தரும் பணியில் ஈடு படுத்தினார்.

தமக்குப் பின் தகுதியுடைவரொருவர் ஆசாரிய நிலைக்கு வர வேண்டுமே என்று கவலையுற்றிருந்த ஆளவந்தார் இவருடைய சிறப்பைக் கேள்வியுற்று ஒரு சமயம் இவரைப் பார்க்க வந்தார்.

---

* உள்ளங்கை குளிர்ந்த நாயனார் என்றும் சொல்வதுண்டு.

❖ தமிழ்நாட்டில் தமிழ்ப் பெயராக - நம்பி என்று அழகாக - பெயர் பூண்டிருந்தவர்களையெல்லாம், வைணவக் கதைகளும் வடமொழிக் கதைகளும் வடமொழிப் பெயர் சூட்டியிருக்கும்: திருக்கச்சி நம்பி - காஞ்சிபூரணர். பெரிய நம்பி - மகாபூரணர். பெரிய திருமலை நம்பி - ஸ்ரீ சைலபூரணர். திருக்கோட்டி நம்பி - கோஷ்டி பூரணர். வடுக நம்பி - ஆந்திரபூரணர். வில்லிதாசர் - தனுர்தாசர். பொன்னாச்சி - கன காம்பாள். திருமாலையாண்டான் - மாலாதரன்.

இவருடைய உருவப்பொலிவையும் பக்தி விசேடத்தையும் அறிவின் திறனையும் இவர் அறியாமலே ஆராய்ந்து கண்ட ஆளவந்தார், இவர் ஆசாரியராகும் தகுதியுடையவர் என்று கண்டு மகிழ்ந்து, தம்மிடத்துக்கு மீண்டார். யாதவரை நீங்கி இவர் திருக்கச்சி நம்பியிடம் சேர்ந்தது அவர் மகிழ்ச்சியைப் பின்னும் அதிகமாக்கியது. சிலநாளில் தம் அந்திமகாலம் நெருங்கியதுணர்ந்து, இராமானுசரைத் தம்மிடம் அழைத்து வருமாறு பெரிய நம்பிக்குக் கட்டளையிட்டார். அவ்விதமே காஞ்சியடைந்த பெரிய நம்பி, காலையில், ஆளவந்தார் செய்த தோத்திர ரத்னம் என்ற பாடல்களை இசையோடு பாடிக் கொண்டிருந்த நேரம் அதைக்கேட்டு இராமானுசர் அதன் பொருட் சுவையிலும் இசையிலும் ஈடுபட்டு மெய்மறந்து நின்றார். பாடல் முடிந்து பெரிய நம்பியை இவர் கேட்டபோது ஆளவந்தாரின் பாடல் என்று அவர் கூறி, ஆளவந்தாரின் கட்டளையையும் சொல்லி இவரை உடன் அழைத்துக் கொண்டு திருவரங்கம் நோக்கிப் புறப்பட்டார்.

இருவரும் அந்நகர எல்லையை அடைந்தபோது, ஆள வந்தார் திருநாடலங்கரித்த செய்தியறிந்தார்கள். இராமானுசர் அவருடைய உடலை மட்டுமே கண்டார். கண்டபோது, வலக் கையில் மூன்று விரல்கள் மட்டும் மடங்கியிருக்கக் கண்டார். ‘ஆளவந்தாருக்கு ஏதேனும் மனக்குறையுண்டோ?’ என இவர் கேட்க, சீடர் சிலர், ‘அவருக்கு மூன்று குறைகள் இருந்தன: பிரம்ம சூத்திரத்துக்கு விசிஷ்டாத்வைத பரமாக ஒரு பாஷ்யம் எழுத எண்ணியிருந்தார். அது நிறைவேறவில்லை. பராசர முனிவருடைய பெயர் விளங்கும்படியாகவும் திருவாய்மொழி அருளிச் செய்த நம்மாழ்வாருடைய பெயர் விளங்கும்படி யாகவும் இரண்டு பிள்ளைகளை வளர்த்துக் கல்வி பயிற்ற வேண்டும் என்றும் எண்ணியிருந்தார். அதுவும் நிறைவேற வில்லை. இவையே அவருக்கு இருந்த குறைகள்’ என்றனர். கேட்ட இவர் ‘பகவான் அருள்கொண்டு இவற்றை முடிக்கிறேன்’ என்று உறுதிசொல்லவே, விரல்கள் நிமிர்ந்தன. ஆளவந்தாரின் அந்திமக் கிரியைகளை முடித்து இவர் காஞ்சி திரும்பினார்.

காஞ்சியில் திருக்கச்சி நம்பிகளை அடைந்து அவரிடத்தில் ஆறு வார்த்தைகள் என்ற உபதேசம் பெற்றார். அவை பின் வருவன: பரதத்துவம் பெருமாளே; வேதமே முடிவான சாத்திரம்;

சரண் புகுதலே உபாயம்; அந்திம ஸ்மிருதி என்பது வேண்டுவ தில்லை; சரீரத்தை விட்டு விடுதலை பெறுவதே மோட்சம்; பெரிய நம்பி திருவடிகளை ஆசிரயிப்பாயாக. இதன்படி பெரிய நம்பியைச் சரண்புக வேண்டும் என்று அவரைத்தேடித் திருவரங்கம் நோக்கிப் புறப்பட்டார். பெரிய நம்பியும் இவரை அழைத்துவர வேண்டும் என்று அங்கிருந்து காஞ்சி நோக்கிப் புறப்பட்டார். இருவரும் மதுராந்தகத்தில் சந்தித்தார்கள். அங்கு, பெரிய நம்பி இவருக்குப் பஞ்ச சம்ஸ்காரம் செய்து மந்திரோபதேசம் செய்து துவயத்தையும் உபதேசித்தார். இவர் அவரைக் குடும்பத்தோடு காஞ்சிக்கு அழைத்துவந்து தம் இல் லத்துக்கு அருகே தங்கியிருக்கச் செய்தார்.

இவர் முதன் முதல் ஆளவந்தாரைக் காணத் திருவரங்கம் செல்லும் முன்னமேயே திருமணம் ஆகியிருந்தது. மனைவி பெயர் தஞ்சம்மாள். அவள் இவருடைய பக்தி ஞான வைராக் கியத்துக்கு ஒத்து ஒழுகுபவளாய் இல்லை. காஞ்சியில் நடந்த மூன்று சம்பவங்கள் மனைவியை விட்டு நீங்கித் துறவு பூண வேண்டும் என்னும் உணர்வை இவருக்குத் தந்தன. ஒருசமயம் இவர் திருக்கச்சி நம்பியைத் தம் திருமாளிகையில் திரு அமுது செய்ய அழைத்திருந்தார். அவர் விரைந்து வந்து தாம் அவசர மாகக் கோயிலுக்குத் திருவாலவட்டம் பணி மாறப் போக வேண்டும் என்று சொல்லி, அமுது படைக்கச்சொல்லி உண்டு அப்பாற் போய்விட்டார். அப்போது இவர் வீட்டில் இல்லை. இவர் வந்தபோது, தமது மனைவி திருக்கச்சி நம்பி அமுது செய்த இலையைக் கோலாலே தள்ளி, அவ்விடத்தில் சாணத்தால் சுத்தி பண்ணி, அந்த அநாசாரம் போக்குதற்காகத் தானும் நீராடி நின்றாள். இதை அறிந்த இராமானுசர் திருக்கச்சி நம்பிகளுக்குச் செய்த அபசாரம் என்று இதை எண்ணி மிகவும் வருந்தினார். மற்றொரு சமயம், பசித்துவந்த ஒரு வைணவருக்கு அமுது படைக்கச் சொல்ல மனைவி உணவு இல்லை என்று சொன்னாள். இவர் உள்ளே சென்று சோதித்தபோது, பாத்திரத்திலே அன்னம் இருந்தது கண்டு மனைவியைக் கோபித்தார். மூன்றாவது நிகழ்ச்சி கிணற்றில் நீர் எடுத்த ஒரு தோண்டி காரணமாக, தஞ் சம்மாள் பெரிய நம்பியின் மனைவியை அதிகமும் சண்டை பிடித்தாள். இதை அறிந்த பெரியநம்பி இனி இங்கிருப்பது சரியன்று என்று எண்ணி, யாரிடமும் சொல்லாமல் மனைவி யோடு திருவரங்கம் நோக்கிச் சென்றுவிட்டார். அனுட்டானம்

முடித்து வழக்கம் போல் பெரிய நம்பியை வணங்க வந்த இராமானுசர் அவரைக் காணாது தேடி நிகழ்ந்தவை அறிந்தார். இனி துறவே முடிவு என்று உறுதி செய்து, தம் மனைவியைப் பொருள்களோடு பிறந்தகம் அனுப்பிவிட்டு, உடனே வரதராசன் சந்நிதியில் தாமே துறவு பூண்டார். துறவின் சிறப்புக் காரணமாக இவருக்கு யதிராசர் என்ற பெயரும் வந்தது.

அதன்பின் இவர் பெரிய திருமலை நம்பியை அனுப்பி, காளத்தியில் சிவலிங்க ஆராதனை செய்துகொண்டிருந்த தமது சிற்றன்னை மகன் கோவிந்த பட்டரைத் திருத்தி ஆட்கொள்ளச் செய்தார். அவரும் அப்படியே கோவிந்தரை வாதத்திலே வென்று, வைணவராக்கி இராமானுசரிடத்தில் அனுப்பினார்.

பின்னர் இவர் தம் சகோதரி புதல்வரான முதலியாண்டான் என்பவரை உபதேசம் செய்து சீடராக்கிக் கொண்டார். காஞ்சியில் மிக்க செல்வராய் இருந்த கூரேசரும், கல்வியிற் சிறந்த அவருடைய மனைவியான ஆண்டாளும் சீடரானார்கள். சிறப்புக் காரணமாக முதலியாண்டான் இராமானுசருடைய தண்டம் எனவும், கூரேசர் பவித்திரம் எனவும் சொல்லப் பெற்றனர். இவருடைய இளம் பருவத்தில் இவருக்கு ஆசிரியராக இருந்த யாதவப் பிரகாசர் தம் தாயாரின் தூண்டுதலினால் இவரை வந்து அடுத்து இவருக்குச் சீடராகி கோவிந்த ஜீயர் என்று பெயர் சூட்டப் பெற்றார். பின்னர் இவர் காஞ்சியிலிருந்து திருவரங்கம் அடைந்தார். வைணவத்தை ஒரு புதிய இயக்கமாக ஆக்க எண்ணங்கொண்டார். கோயில் திருப்பணிகள் செய்தார். கோயில் கலைகளை வளர்த்தார்.

முன்னமே இவர் பெரிய நம்பியிடம் திருவாய் மொழி தவிர மற்றப் பிரபந்தங்களைக் கற்றிருந்தார். இப்போது அவரைச் சந்தித்துப் பழைய சம்பவங்களை நினைவூட்டி வருந்தினார். அதன்மேல் அவர் திருக்கோட்டியூர் நம்பியிடம் சென்று த்வயத்தின் ரகசியத்தை அறிந்து கொள்ளும்படி பணித்தார். அப்படியே இவர் அங்கு சென்று அவரைப் பணிந்து கேட்க, அவர் இவருடைய உறுதியைச் சோதித்தறிய வேண்டிப் பதினெட்டு முறை இவரை நடக்கச் செய்து இவருடைய உறுதியை உணர்ந்து இவரை அழைத்து ரகசியத்தை உபதேசித்தார். உபதேசிக்கும் முன், 'இதை யாருக்கும் வெளியிடக்கூடாது' என்று உறுதி பெற்றுக்கொண்டார்; ஆனால் திருமந்திர அர்த்தத்தை

உண்மையாக உணர்ந்தவர் நிச்சயம் பரமபதம் அடைவர் என்றும், குருவின் கட்டளையை மீறித் தாம் மற்றவர்களுக்கு அதைச் சொன்னால் தமக்கு நரகமே கிடைக்கும் என்றும் நம்பிய இராமானுசர், திருக்கோட்டியூர்க் கோயில் கோபுரத்தில் மீது ஏறி நின்றுகொண்டு எல்லா மக்களையும் அழைத்துத் திருமந் திர ரகசியத்தை உபதேசித்தார். இதை அறிந்த திருக்கோட்டியூர் நம்பி, இவரை அழைத்து விசாரித்தபோது, 'ஆன்ம கோடிகள் அனைவரும் பரமபதம் செல்லும்போது நான் ஒருவன் மட்டுமே நரகம் போவதானால் நான் அதை விரும்பி ஏற்கிறேன்' என்று இவர் மகிழ்ச்சியோடு சொன்னார். நம்பி இவர் உள்ளம் இருந்த தன்மையைப் பெரிதும் போற்றி, அன்று முதல் வைணவ தரி சனத்துக்கு இராமானுச தரிசனம் என்றும், இவருக்கும் எம் பெருமானார் என்றும் வழங்கும்படி பெயர்கள் சூட்டினார். பின்னர் நம்பி இவரைத் திருமலையாண்டானிடம் சென்று திருவாய்மொழி வியாக்கியானம் கேட்கும்படி அனுப்பினார்.

இவ்வாறு இவர் வைணவ சமய நூல்கள் எல்லாவற்றையும் நன்கு கற்று வைணவப் பேராசிரியராகவும், ஆசாரியராகவும் விளங்கினார். அப்போது வடநாட்டிலிருந்து யக்ஞமூர்த்தி என்ற அத்வைதம் வல்ல சிறந்த பண்டிதர் ஒருவர் திருவரங்கம் வந்தார். அவரோடு இவர் பதினெட்டு நாள் வாதம் நடத்தி அவரை வென்று சீடராக்கி அருளாளப் பெருமாள் எம்பெரு மானார் என்று பெயர் சூட்டினார். அவரும் இவருடைய மடத் தின் அருகிலேயே ஒரு மடம் அமைத்துக் கொண்டு அங்கு வாழ்ந்திருந்தார்.

இவர் திருவரங்கத்தில் வாழ்ந்திருந்தபோது நிகழ்ந்த சிறப் பான நிகழ்ச்சிகள் மிகப்பல. உறங்கா வில்லிதாசர் என்ற வேடர் வரலாறு ஒன்று. அவர் ஒப்பற்ற சௌந்தரியமுடைய தம் மனைவி யின் பேரழகில் ஈடுபட்டு இருந்தகாலத்து இராமானுசர் அவ ருக்குத் திருவரங்கநாதருடைய பேரழகைக் காணும் சக்தியை அளித்துப் பெருமானிடத்து வில்லியையும் அவர் மனைவியை யும் ஈடுபடுத்தித் தொண்டராக்கினார்.

இராமானுசர் சில வீடுகளில் பிட்சை ஏற்று உண்பார். இவரிடம் பொறாமை கொண்ட சிலர் பிட்சையில் நஞ்சைக் கலந்து இடுமாறு செய்ய, இவர் சந்தேகத்தால் அவ் உணவை எறிந்துவிட்டார். ஒரு சமயம் இவருடைய சீடரான அந்தணர்கள் இவருக்கு வில்லிதாசரான தாழ்ந்த குலத்தாரிடம் இருந்த

அன்பைப் போற்றத் தெரியாதபோது, ஒரு சோதனை நடத்திக் காட்டினார். எல்லோருடைய துணிகளையும் கிழித்து விடுமாறு செய்தார். சீடர்கள் கூக்குரல் இட்டதோடு தகாத வார்த்தைகள் சொல்லியும் பேசினார்கள். பொறுமையாகக் கேட்டிருந்த இராமானுசர் சில நாளில் இரு சீடரை அனுப்பி உறங்கா வில்லியின் மனைவி பொன்னாச்சி உறங்கியபோது அவள் அணிந்திருந்த நகைகளைத் திருட்டுத்தனமாகக் கழற்றிக் கொண்டு வருமாறு அனுப்பினார். ஒரு பக்கத்து அணிகளை இவர்கள் கழற்றியதும், கழற்றியவர் யார் என்று அவள் அறிந்து, இன்னொரு பக்கத்தையும் கழற்றட்டும் என்று புரண்டு படுத்தாள். விழித்துக் கொண்டாள் என்று இவர்கள் அஞ்சி ஓடி வந்துவிட்டனர். மறுநாள் வில்லி, தம் மனைவி மற்றொரு பக்கத்து நகையையும் கொடுக்கவில்லை என்று கோபித்து அவளோடு பேசவில்லை. இராமானுசர் இருவரையும் அழைத்து விசாரித்து உண்மை அறிந்தார். துணியைக் கிழித்தமைக்காக நெகிழ்ச்சியடைந்த தம் அந்தணச் சீடர்களுக்கு வில்லியின் பணிவுணர்ச்சியை எடுத்துக் காட்டி, வெட்கும்படி செய்தார். பெரிய நம்பியின் மகளான அத்துழாயைச் சீதன வெள்ளாட்டி கொண்டு வரவில்லை என்று மாமியார் கோபித்தபோது, முதலியாண்டானையே வெள்ளாட்டியாக அனுப்பி, நல்லுணர்வு வருமாறு செய்தார்.

பெரிய திருமலை நம்பியிடம் சென்று இராமாயணம் கேட்டார். செல்லும் வழியில் வரதையர் என்ற ஒரு ஏழைப் பிராமணன் தன் மனைவியின் கற்பை வணிகனிடம் அடகு வைத்து இவருக்கு விருந்து செய்தார். இருவருடைய அன்பு நெறியை உணர்ந்த வணிகன் அவர்களின் பாதங்களில் விழுந்து வணங்கினான். செய்தி அறிந்து இராமானுசர் அவனைத் தம் சீடனாக்கினார்.

திருமலையில் ஓராண்டுக் காலம் தங்கி இராமாயணம் பயின்றார். இவ்வாறு தம் தகுதியை மேம்படுத்திக் கொண்ட பிறகு ஸ்ரீ பாஷ்யம் எழுதுவதைச் சிந்திக்கலானார். காசுமீரத்தில் போதாயண விருத்தி என்ற நூல் இருப்பது அறிந்து அங்கு சென்று அதைப் பயின்றார். அப்பண்டிதர்கள் இவர் மீது பொறாமைப்பட்டு நூலைக் கொடுக்க மறுத்தபோதிலும் இவர் அரசன் துணைக்கொண்டு நூலைப் பெற்றுத் திரும்பினார். வழியில் அவர்கள் இவரிடம் இருந்த நூலை ஆட்களை ஏவிக் கவர்ந்து விட்டார்கள். அங்குள்ளபோது கூரேசர், அந்நூல்

முழுமையும் தமக்கு மனப்பாடம் ஆகிவிட்டதால் அது பற்றிக் கவலை வேண்டாம் என்று சொல்லி, இவரை ஊக்கமளித்து அழைத்து வந்தார்.

இராமானுசர் ஸ்ரீ பாஷ்யம் சொல்லக் கூரேசர் எழுதி வந்தார். நூல் முடிந்தது; ஆளவந்தார் குறைகளில் ஒன்று நிவர்த்தி யாயிற்று. தென்னாடெங்கும் யாத்திரை செய்து, மங்களாசாசன முடைய தலங்களைத் தரிசித்து, தமது பாஷ்யத்தையும் பிரசாரம் செய்தார். திருப்புளியங்குடிக்குச் சென்றபோது, எதிரே தீண்டா தார் குலத்துப் பெண்ணொருத்தி வந்தாள். இவருடைய சீடருள் ஒருவர், அவளை விலகிச் செல்லும்படி கூறினார். 'எந்தப் பக்கம் விலக வேண்டும்?'* என்று கேட்டாள். 'பகவான் சர்வ வியாபகன் ஆகையினாலே, எந்தப் பக்கம் விலகினாலும் அவனை அணுகத் தானே வேண்டும், அப்போது அவனுடைய பரிசுத்தம் தன்னால் எவ்வாறு கெடாதிருக்கும்?' என்பது அவள் கருத்து. அவள் சொல்லக் கேட்டு இவர் மிக்க மகிழ்ச்சியடைந்தார் என்று வரலாறுகள் கூறும்.

தென்னாட்டுப் பதிகள் தரிசித்த காலத்தில் ஆழ்வார் திரு நகரியை அணுகியபோது பக்திப் பரவசத்தால் பின்வரும் பாடல் பாடினார்:

**இதுவோ திருநகரி? ஈதோ பொருநல்?**
**இதுவோ பரமபதத்து எல்லை? – இதுவோதான்**
**வேதந் தமிழ்செய்து மெய்ப் பொருட்கும் உட்பொருளாய்**
**ஓதுஞ் சடகோபன் ஊர்?**

ஆண்டாளிடம் ஈடுபட்டுப் பின்வரும் பாடல்கள்❖ பாடினார்:

---

* இதையொத்த கதைகள் அவ்வை வரலாற்றிலும் சங்கரர் வரலாற்றிலும் சொல்லப்பெறும். கயிலாயம் சென்ற அவ்வை சிவபெருமானுக்கு நேரே கால் நீட்டியது கண்ட பார்வதி கோபித்து, வேறு திசையில் காலை நீட்டு என்று சொல்லவும், 'அம்மா, சிவபிரான் இல்லாத திசையைக் காட்டு; அங்கு நீட்டுகிறேன்' என்று அவ்வை சொன்னாராம். அதுபோல, காசியில் தம் எதிரில் வந்த சண்டாளனை விலகிப்போ என்று சங்கரர் சொல்லவும். 'யாரைச் சொல்லுகிறீர்? உடலையா உயிரையா?' என்று அவன் கேட்க சங்கரர் வெட்கி அவன் காலில் விழுந்தார் என்ற கதையும் உண்டு.

❖ இராமானுசார்ய திவ்விய சரிதை என்ற நூல் இவர் வரலாறு சம்பந்தப்பட்ட பல பாடல்களைத் தருகின்றது. இப்பாடல்கள் அந் நூலில் உள்ளன.

மெல்லிய பஞ்சடி யுந்துவ ராடையும் மேகலையும்
வல்லியை வென்ற மருங்குமுத் தார வனமுலையும்
சொல்லியல் வன்மையும் வில்லிபுத் தூரம்மை தோளழகும்
முல்லைய வென்றநகையும் மெல்லா மென்றன் முன்னிற்குமே.

வாழி திருப்பாவை பாடும் மடப்பாவை,
வாழி அரங்க மணவாளன், – வாழியவன்
மாடுநிற்கும் புள்ளரையன், வாழி பெரியாழ்வார்,
பாடுநிற்கும் வேதாந்தப் பா.

காசுமீரத்தில் சரசுவதி தேவி தோன்றி இவருடைய பாஷ்யத்துக்கு ஸ்ரீ பாஷ்யம் என்றும் இவருக்கு ஸ்ரீ பாஷ்யக்காரர் என்றும் பெயர் வழங்கினார்.* திரும்பிய சமயம், திருமலையில் சைவ வைணவப் போர். அங்குள்ள மூர்த்தி முருகன் என்று சைவர் கூற, வைணவர் திருமால் என்றனர். இவர் வந்து இரு திறத்தாருக்கும் ஒரு சமாதானம் சொன்னார். "இரு தெய்வங்களின் ஆயுதங்களையும் சுவாமி எதிரில் வைப்போம். மூர்த்தி எந்த ஆயுதம் எடுத்துக் கொள்கிறாரோ அதற்குரிய மூர்த்தி என்று கருதுவோம்" என்றார். எல்லோரும் சம்மதித்தார்கள். இரவு அப்படியே வைத்துக் கதவைப் பூட்டி விடிந்து பார்த்தால், மூர்த்தி சங்கு சக்கர தாரியாய்க் காட்சியளித்தார்.❖ அது முதல் திருமலை திருமால் கோயிலாயிற்று.

பின்னர் தம் முக்கிய சிஷ்யரான கூரத்தாழ்வார் புதல்வர் ஒருவருக்குப் பராசரபட்டர் என்று பெயர் வைத்து அவர் மூலம் விஷ்ணு சகஸ்ர நாமத்துக்கு விசிஷ்டாத்வைத பாஷ்யம் எழுதுவித்தார். ஒரு சமயம் இவர் ஓர் அறையில் புகுந்து தாளிட்டுச் கொண்டு திருவாய் மொழியில் ஒரு பாடலை மனத்துக்குள் சொல்லிச் சிந்தித்துக் கொண்டிருந்தபோது, பெரிய திருமலை நம்பியின் புதல்வரும் இவரது ஞானபுத்திரருமான பிள்ளான் என்பவர் கதவு இடுக்கு வழியாகப் பார்த்து, 'இன்ன திருவாய் மொழிப் பாசுரத்தை ஆலோசிக்கிறார்' என்று சொன்னார். இதை அறிந்த இராமானுசர் அவரைப் பாராட்டி, திருக்குருகைப்

* திருவண் பரிசாரத்தில் இந்நிகழ்ச்சி நடந்தது என்றும் சொல்வர்.

❖ இரவோடு இரவாய் அங்கிருந்த வைணவர் திருமாலின் சங்கு சக்கரங்களை எடுத்துச் சுப்பிரமணியமூர்த்தியின் கைகளில் வைத்து விட்டனர் என்றும், சைவர் ஏமாந்து போயினர் என்றும் சைவர் சொல்வர்.

பிரான் பிள்ளான் என்று பெயரிட்டுத் திருவாய்மொழிப் பொருளை உபதேசித்து, இவரைக் கொண்டு திருவாய்மொழி ஆறாயிரப்படி எழுதுவித்தார். அவ்வாறு இவர் ஆளவந்தாருக்குச் செய்து கொடுத்த உறுதி மொழிகள் மூன்றும் நிறைவேறின. பிள்ளான் எழுதிய உரையே திருவாய்மொழி வியக்கியானங்கள் ஐந்தில் முதலாவது.

இக்காலத்தில் சோழநாட்டை ஆண்ட சோழச் சக்கரவர்த்தியினால் இராமானுசருக்கு மிகுந்த இன்னல்கள் விளைந்தன என்பது வைணவ வரலாறுகள் அனைத்தும் ஒருமுகமாகச் சொல்லுகின்ற செய்தி. சகம் 1009இல் (கி.பி. 1087) சென்னி குலோத்துங்கன் என்ற சோழன் தில்லையிலிருந்த சித்ரகூடச் செங்கண்மாலைப் பெயர்த்துக் கடலில் எறிந்தான் என்பது வரலாறு. இதற்குச் சில ஆண்டுகள் முன் (கி.பி. 1078 - 79) குலோத்துங்க சோழன், இராமானுசர் சைவ மக்களைப் பெருவாரியாக வைணவத்துக்கு மாற்றுவது அறிந்து, அவரைத் தனது சபைக்கு வருமாறு அழைத்தான். சேவகர் சென்றபோது, இராமானுசர் நீராடிக் கொண்டிருந்தார். இதனால் பேராபத்து விளையப்போகிறது என்பதை மாணாக்கரான கூரத்தாழ்வார் உணர்ந்தார். இவரை மாறு வேடத்தோடு வெளிநாடு செல்லும்படி சொல்லிவிட்டு, அவர் குருவின் காவியுடையை அணிந்து, இராமானுசர் வேடத்தில், பெரிய நம்பியையும் உடன் அழைத்துக் கொண்டு, அரசவைக்குச் சென்றார். அரசன் சிவாத்பரதரம் நாஸ்தி (சிவனுக்கு மேலான தெய்வமில்லை) என்று எழுதியுள்ள ஏட்டில் கையெழுத்திடுமாறு சொன்னான். மறுக்க முடியாத கூரத்தாழ்வார் அதன் கீழ், ‘துரோணம் அஸ்தி ததப் பரம்’ என்று எழுதிக் கையெழுத்திட்டார். இதன் பொருள், சிவத்தைவிட துரோணம் பெரியது என்பது (சிவம், துரோணம் என்பன அக்கால அளவுகள்) கண்ட அரசன் மிக்க கோபம் அடைந்தான். பெருஞ்சக்கரவர்த்தியாகிய அவனுடைய சொல்லை ஒரு காவியுடைக்காரர் மீறினால் சீற்றம் வருவது இயல்பு தானே? அவர் கண்ணைப் பிடுங்கும்படி உத்தரவிட்டான் சேவகர் பிடுங்கும் முன் கூரேசர் தாமே பிடுங்கிக்கொண்டார். இருவரையும் நாட்டு எல்லைக்கு அப்பால் கொண்டு போய் விடும்படி உத்தரவிட்டான். போகிற வழியிலேயே முதியவரான பெரிய நம்பி உடல் தளர்ச்சியும் மனத்தளர்ச்சியும் சேர்ந்து, இறந்து விட்டார் (காலம் கி.பி. 1079).

இதற்கிடையில் இராமானுசர் வெள்ளை சாத்தி மேற்கு நோக்கி ஓடிவிட்டார். மைசூரில் இருந்த போசலவிட்டல தேவன் என்பவனுக்கு வைத்தியம் செய்து மகிழ்வித்து, சைனனாயிருந்த அவனை வைணவனாக்கி, விஷ்ணு வர்த்தனராயன் என்று பெயர் வைத்தார். அந்நாடு முழுவதும் வைணவம் பரவிற்று. மேல்கோட்டை சென்றபோது அங்கு திருமண்ணுக்காக மண்ணைத் தோண்டுகையில், ஒரு நாராயண விக்கிரகத்தைக் கண்டு அங்கு கோயில் கட்டி அவ் உருவத்தைப் பிரதிட்டை செய்தார். ஊர் திருநாராயண புரமாயிற்று. இந்த மூலவருக்குரிய உற்சவமூர்த்தி டில்லி பாதுஷாவின் மகளிடம் விளை யாட்டுப் பொம்மையாக இருக்கிறது என்று அறிந்து இவர் டில்லிக்குச் சென்று, மிக்க திறமையோடு அரசரை வசப்படுத்தித் திருவுருவத்தைப் பெற்று வந்தார். ஆனால் மீண்டும் சிலையைப் பிரிந்த துயரம் பொறுக்காமல் வருந்திய தன் மகளைத் தேற்ற வேண்டி, பாதுஷா தன் சேவகரை விட்டுச் சிலையைக் கைப்பற்றச் செய்தபோது இவர் ஓடோடியும் வந்து ஒரு சேரியில் ஒளித்துக் கொண்டார். சேரி மக்கள் பாதுஷாவின் சேவகரை வெருட்டி அடித்து இவரையும் உற்சவரையும் காப்பாற்றினார்கள். பின்னர் இவர் திருநாராயணபுரம் வந்து உற்சவரைக் கோயிலில் பிரதிட்டை செய்தார். சேரி மக்கள் தமக்குச் செய்த நன்றியைப் பாராட்டி அதுவரையில் ஆலயத்துக்குள் பிரவேசிக்க அனுமதி யில்லாதிருந்த அத்தீண்டாத குலமக்களுக்குத் தேர்த் திருவிழா வில் ஆலயத்தினுள் சென்று வழிபடலாம் என்று அனுமதியும் வழங்கிச் செய்தார். பாதுஷாவின் மகள் கொண்டிருந்த அன்பைப் போற்றி அவளுக்கும் திருவரங்கத்தில் ஒரு சிலை செய்வித்து டில்லி நாச்சியார் என்ற பெயரால் வழிபடச் செய்தார்.

இவர் இவ்வாறு திருவரங்கம் திரும்ப முடியாமல் பன்னீ ராண்டுகள் மைசூரில் இருந்தார். வைணவர் செய்த அபிசார ஓமத்தால் சோழன் நோய் கண்டு இறந்தான் என்றும் அவன் பெயர் கிருமி கண்ட சோழன் என்றும் வைணவ நூல்கள் சொல்லும்.*

---

* வரலாற்று உண்மை அதுவன்று. சமரச நோக்கம் படைத்திருந்த முதற் குலோத்துங்கன் சப்த விஷ்ணு வர்த்தனன் என்ற பட்டமும் தரித்திருந்தான். இவன் மிகச் சிறந்த சைவனாய் இருந்தது உண்மை. தன் சொல்லை அவமதித்த காரணத்தினால் கூரேசர் கண்ணைப் பிடுங்கச் செய்தானேயன்றி வைணவத்தில் எந்தத் துவேஷமும் இவன்

அரசன் தன் சொல்லை மீறிய கூரேசரையும் பெரிய நம்பியையும் சிரச்சேதம் செய்திருக்கலாம்: செய்யவில்லை. இரக்கப்பட்டு நாட்டுக்கு வெளியே கொண்டுபோய் விட்டு விடுமாறு மட்டும் உத்தரவு செய்தான்.

பிறகு இராமானுசர் திருவரங்கத்தில் கூரேசரைக் கண்டு, துன்புற்றபோதும் சலனமற்றிருந்த அவருடைய மன நிலையை அறிந்து மகிழ்ந்தார். திருவாய்மொழி உற்சவம் ஏற்படுத்தி அங்கு எல்லா ஆழ்வாருடைய திருஉருவங்களையும் பிரதிட்டை செய்தார். பின் கூரத்தாழ்வார் மாணாக்கரான திருஅரங்கத் தமுதனார் செய்த இராமானுச நூற்றந்தாதியை முதலில் நிராகரித்த போதிலும், பின் எல்லோர் வேண்டுகோளுக்கும் இணங்கி அதைக்கேட்டு மகிழ்ந்து, அதை நாலாயிரப் பிரபந்த வரிசையில் சேர்த்தார். அந்நூல் 'பிரபன்ன காயத்திரி' என்றும் பெயர் பெற்றது. இவர் திருமலை சென்றபோது சோழன் பெயர்த்துக் கடலில் எறிந்த கோவிந்தராசப் பெருமாளைக் கொணர்வித்துத் திருமலையடி வாரத்தில் பிரதிட்டைசெய்தார் என்று சொல்வர்; மந்திர பூர்வமாக ஆவாகனம் செய்து பிர திட்டை செய்தார் என்றே, நூல்களில் சொல்லப்பட்டுள்ளது. 'உடையவர்' என்றபெயரை இவருக்குத் திருவரங்கநாதன் பிர சாதித்தான். வைணவ சித்தாந்தத்தைப் பரப்பவேண்டி 74 சிம்மாசனாதிபதிகளை நியமித்தார். இவருடைய உருவச்சிலை இப்போது திருவரங்கம், ஸ்ரீ பெரும்பூதூர், திருநாராயணபுரம் ஆகிய கோயில்களில் பிரதிட்டை செய்யப்பட்டது.

---

பாராட்டவில்லை. வைணவ சைன ஆலயங்களுக்கும் நிபந்தங்கள் அளித்திருக்கிறான். மன்னார்குடி முதலான இடங்களில் குலோத் துங்க சோழ விண்ணகரங்கள் இவனால் கட்டப்பட்டன. ஆகவே, வைணவருக்குத் தீங்கு நேர்ந்தது என்றால் அதற்கு முழுப்பொறுப்பு அரசனுக்கு மட்டும் உரியதன்று.

சோழமன்னன், உறங்காவில்லிக்குத் தன்னிடம் வேலை செய்யாமலே வேலைக்குரிய ஊதியமாகிய ஆயிரம் வராகனைக் கொடுத்து, "நீ இனி இராமானுசரிடமே வேலை செய்வாயாக" என்று அனுப்பினான் என்று வரலாறு கூறுகிறது. இம்மன்னன் இராமானுசரிடம் சமயப் பொறையின்றித் தொந்தரவு செய்தான் என்பது பொருத்தமற்றதாக இருக்கிறது. முந்திய வரலாற்றை ஒப்புக் கொள்ளும்போது, பிந்திய வரலாறு பொய்யாகவே போகும். சோழன் வைணவத்தினிடம் மிக்க தாராள மனப்பான்மையையே காட்டியிருக்கிறான்.

தமது அந்திமதசை வந்தது உணர்ந்து எம்பார் மடியில் தலையை வைத்துக் கொண்டு வடகநம்பியின் மடியில் திருவடிகளை வைத்துக் கண்வளர்ந்தபடியே திருநாட்டுக்கு எழுந்தருளினார். இறுதியாக இவர் செய்த உபதேசங்கள் 82 வார்த்தை என்பது. ஆயுள் 120 திருநட்சத்திரம்.

பிற்காலத்தில் வந்து சமய வரலாறு எழுதுபவர்கள், தங்கள் மதாபிமானம் பற்றி, பண்டைய வரலாறுகளை எழுதும் காலத்து, சமய நிந்தையே கருத்தாக எழுதுகிறார்கள் 15ஆம் நூற்றாண்டிறுதியில் இராமானுசர் வரலாறு எழுதிய பிள்ளை லோகம் சீயர் சைவ சமயத்தை இவ்வாறு எங்கும் நிந்தித்தே எழுதியுள்ளார். சோழ அரசன் முன்னே, இராமானுசர் வேடத்தில் கூரத்தாழ்வாரும் அவருடன் பெரிய நம்பியும் சென்றார்கள் என்பதைப் பின்வருமாறு சீயர் வருணிக்கிறார்: "பிராட்டியும் பெரிய உடையாரும் ராவணன் கையிலே அகப்பட்டாப் போலே, அவர்களும் அப்படியே அசத்கோஷ்டியான ராஜாவகாசத்திலே செல்ல, அந்த ராஜாவும் அஸஜ்ஜனங்களாலே சூழப்பட்டு, சிவ பக்தனாய் அபரிமித பாபனாய், 'பரப்ரஹ்ம நிரூபணம் பண்ண வேணும்' என்று பிரார்த்தித்தழைப்பித்த வித்வான்களாலே சூழப்பட்டவனாய், சைவரென்ன, பாஷண்டிகளென்ன, காபாலிகளென்ன, அதுவுமன்றியே அண்டினவர்களுக்கு விபத்து பண்ணுவிக்கு மவர்களாலேயும் சூழப்பட்டவனாய், இனிமேலும் கிருமி கண்டன் என்று பேர் வரும்படியா யிருக்கிறவனாய், அசுராம்சமாகப் பிறந்திருக்கிறவனாகையாலே, சர்வாந்தர்யாமியான ஸ்ரீமந்நாராயணனை நிந்திக்கிறவனாயிருக்கிற அந்த ராஜாவை ஆழ்வானும் பெரிய நம்பியும் கண்டார்கள்."

அப்படியே சோழ மன்னனைத் திருவேங்கட முடையான் உடைவாளாலே கழுத்திலே குத்த, அவன் நோய்ப்பட்டான் என்று கேட்டபோது, இராமானுசர் அளவில்லாத மகிழ்ச்சியடைந்தார்* என்று சீயர் கூறியிருப்பது, ஒரு சமய ஆசாரியர் நிலைக்குப் பொருந்தாது: "பாபிஷ்டனான அந்தச் சோழன் கிருமி கண்டனாய்ப் புழுத்துப் புரண்டான் என்ன, உடையவரும் கர்ணாம்ருதமான வார்த்தையைக் கேட்டுத் தோளும் மார்பும் பூரித்து இத்தனை தூரம் நல்வார்த்தை கொண்டு வந்த இவர்களுக்கு நாம் கொடுக்கலாவதென் என்று விசாரித்தருளி, முன்பு பிரசாதித்தருளின த்வயத்தை மீளவும் பிரசாதித்தருளினார்."❖

---

* இராமானுசார்ய திவ்ய சரிதை பக்கம் 192.,

❖ பக்கம் 216

வைஷ்ணவ சமயநூல் கற்றலைக் காலட்சேபம் என்று சொல்வது மரபு. எம்பெருமானார் காலத்துக்கு முன் இவ்வுபதேசக் கிரமம் ஓராண் வழியாகவே நடந்தது. அதாவது ஆசாரியரிடம் ஒரு காலத்தில் ஒருவர் மட்டுமே ஒரு நூலைப் பயிலலாம். மற்றொருவர் பயில விரும்பினால் இவர் காலட்சேபம் முடித்த பிறகுதான். அதுவரை காத்திருந்து காலட்சேபம் செபிக்க முடியும். ஒரே சமயத்தில் இருவர் காலட்சேபம் செய்ய முடியாது. இராமானுஜர் இந்த வரம்பை அறுத்து எல்லோரும் ஒரே காலத்தில் பயிலவும் முடியுமென்று புதுவரம்பு ஏற்படுத்தினார். இதை மணவாள மாமுனிகள் தம் உபதேச ரத்தினமாலை 37ஆம் பாடலில் ஆசை உடையோருக்கெல்லாம் ஆசிரியர்கள் கூறுமின் என்று திட்டம் செய்தார் என்று சொல்வார். இராமானுசர் அடுத்த நூற்றாண்டிலும் 37 ஆண்டுகள் வாழ்ந்தவர். வைணவ சமயப் பிரசாரமும் மத மாற்றமுமே நோக்கமாய்க் கொண்டு, தமிழ்நாடு மட்டுமின்றி வடநாடெங்கும் சுற்றி, சைவ மக்களாய் இருந்தவர்களை வைணவராக்கினார். விரிந்த மனப்பான்மை கொண்டு, தாழ்த்தப்பட்ட மக்களையும் தமது சமயத்தில் சேர்த்தார். இவருடைய மத மாற்றச் செயலுக்கு இணையாகச் சொல்லத்தக்கது இயேசு கிறிஸ்து செய்த மதமாற்றமும், முகமது செய்த மதமாற்றமுமே யாகும். ஒப்பற்ற பேராவேசமும் ஆற்றலும் இவரிடம் இருந்தன என்பதில் ஐயமில்லை. சாதி வேற்றுமை பாகவதர்களிடத்தில் பாராட்டக் கூடாது என்பது இவரது அடிப்படைக்கொள்கை. (ஆனால் இவரைப் பின்பற்றி ஒழுகும் ஸ்ரீவைஷ்ணவரிடையே அடிப்படையில் சாதிப்பிரிவே இப்போது கொள்கையாக இருக்கிறது. எல்லாச் சமயங்களிலும் இதுவே நிலை. விவரிக்க வேண்டிய அவசியமில்லை. ‘ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்’ என்று சொன்ன சைவத்தை விடவா வேறொன்று?)

இந்த வரலாற்றில் முக்கிய செய்திகள் மட்டுமே தரப்பட்டன. இவர் நீண்ட காலம் வாழ்ந்தவர் ஆனபடியால் வாழ்க்கை நிகழ்ச்சிகளே மிக அதிகம். சுவையுடைய நிகழ்ச்சிகள், உரையாடல்கள் இன்னும் அதிகம். இடமின்மை கருதி அவற்றுள் ஒன்றையும் இங்கு சொல்லவில்லை. இவருக்குக் குருமார் ஐவர் என்பது மரபு. இவர்கள் பெரியநம்பி, திருமாலை ஆண்டான், திருக்கோட்டியூர் நம்பி, திரு அரங்கப் பெருமாள் அரையர், திருமலை நம்பி என்போர். சிலர் திருக்கச்சி நம்பிகளையும் சேர்த்துச் சொல்வர். இவர் செய்த ஒரு சிறப்பான காரியம்

*திருவரங்கத்தில் வழிபாட்டு முறைகளையும் விழாமுறைகளை யும் ஒழுங்குபடுத்தி வைத்ததாகும்.*

*மத மாற்றத்துக்குப் பக்தி வைராக்கியமும் ஞானமுமே காரணம் என்பதில்லை. வயிற்றுக்குச் சோறும், வாழ்க்கைக்குப் பெண்ணும், தொழிலுக்கு உத்தியோகமும் தந்து மதமாற்றம் செய்வது நெடுகிலும் நடந்து வந்திருக்கிறது. இன்றும் நடக்கிறது. இந்த யுக்திகளை இராமானுசரும் கைக்கொண்டார். வெறும் சாம்பல் மட்டுமே வாங்கிப் பூசிக்கொண்டு சிவசிவா என்று வழிபட்டவனை, சோறு கொடுத்தால் மாற்றுவது எளிது என்று இவர் கண்டார். இவர் காலம் முதல் திருமால் ஆலயங்களில் புளியோதரையும் ததிஅன்னமும் முக்கிய வினியோகப் பொருள். ஞானம் கண்டு மதம் மாறாதவர்கள் சோறு கண்டு மதம் மாறி னார்கள். எப்படியும் இவருடைய சாதனை, தமிழ்நாடு முன் னும் பின்னும் கண்டிராத சாதனை.*

*இவர் பாடியதாக நாலாயிரப் பிரபந்தத்தில் சில தனியன் கள் உள்ளன. அவற்றைக் கூறி இவர் வரலாற்றை முடிப்போம். பெரிய திருமொழி பாடிய திருமங்கை யாழ்வார் பாசுரங்களுக்கு இவர் அருளிச் செய்த தனியன்:*

வாழி பரகாலன் வாழி கலிகன்றி,
வாழி குறையலூர் வாழ்வேந்தன், — வாழியரோ,
மாயோனை வாள்வலியால் மந்திரங்கொள் மங்கையர்கோன்
தூயோன் சுடர்மான வேல்.

*திருமங்கை யாழ்வாரின் திருவெழுகூற்றிருக்கைக்கு அருளிச் செய்த தனியன்:*

சீரார் திருவெழு கூற்றிருக் கையென்னும் செந்தமிழால்,
ஆரா வமுதன் குடந்தைப் பிரான்தன் அடியிணைக்கீழ்,
ஏரார் மறைப்பொரு ளெல்லாம் எடுத்திவ் வுலகுய்யவே,
சோராமற் சொன்ன அருள் மாரி பாதம் துணைநமக்கே.

*நம்மாழ்வாரின் பெரிய திருவந்தாதிக்கு அருளிச்செய்த தனியன்:*

முந்துற்ற நெஞ்சே, முயற்றி தரித்துரைத்து
வந்தித்து வாயார வாழ்த்தியே — சந்த
முருகூரும் சோலைசூழ் மொய்பூம் பொருநல்
குருகூரன் மாறன்பேர் கூறு.

*இராமானுசர் வடகலை தென்கலை இரண்டுக்கும் பொது வான ஆசாரியர். வடகலையாருடைய தேசிகரைத் துதிக்கின்ற வடமொழித் தனியன் 'இராமானுச தயாபாத்ரம்' என்று தொடங்குவது. இப்படி ஒரே ஆசாரியரிடம் தொடங்கிப் பிரிந்த வர்கள் தங்களுக்குள் சண்டைபோட்டுக் கொள்வது வைணவத் திற்கு உள்ள குறை. கூரத்தாழ்வார் சீடரான திரு அரங்கத்து அமுதனார் இராமானுசர் துதியாக இராமானுச நூற்றந்தாதி என்று நூறு பாடல்களைப் பாடினார் என்றோம். இது நாலாயிரப் பிரபந்தத்திலேயே சேர்க்கப்பட்ட பெருமை உடையது. இராமா னுசர் வாழித் திருநாமங்கள் பல. ஒரு பாடல் பின்வருவது:*

அத்திகிரி யருளாளர் அடிபணிந்தோன் வாழியே
அருட்கச்சி நம்பியுரை யாறுபெற்றோன் வாழியே
பத்தியுடன் பாடியத்தைப் பகர்ந்திட்டான் வாழியே
பதின்மர்கலை யுட்பொருளைப் பரிந்துகற்றான் வாழியே
சுத்தமகிழ் மாறனடி தொழுதுய்ந்தோன் வாழியே
தொல்பெரிய நம்பிசரண் தோன்றினான் வாழியே
சித்திரையில் ஆதிரைநாள் சிறக்கவந்தோன் வழியே
சீர்பெரும் பூதூர் முனிவன் திருவடிகள் வாழியே.

*இவர் செய்த நூல்கள் யாவும் வடமொழியே என்று குறிப் பிட்டோம். அவை பின்வருவன: ஸ்ரீ பாஷ்யம், கீதா - பாஷ்யம், வேதாந்ததீப, வேதார்த்த சங்கிரகம், வேதாந்த சாரம், சரணாகதி - கத்யம், ஸ்ரீரங்க - கத்யம், ஸ்ரீவைகுண்ட - கத்யம், நித்யகிரந்தம்.*

*இராமானுச நூற்றந்தாதிப் பாடல்கள் யாவும் சிறந்த இலக்கியச் சுவையுடையன. இதன் ஆராய்ச்சியை 12ஆம் நூற் றாண்டு வரலாற்றில் காணலாம். எடுத்துக்காட்டாக ஒரு பாடலை இங்கு தருகிறோம் (52):*

பார்த்தான் அறுசமயங்கள் பதைப்ப; இப் பார்முழுதும்
போர்த்தான் புகழ்கொண்டு; புன்மையி னேனிடைத் தான் புகுந்து
தீர்த்தான் இருவினை; தீர்த்தரங்கன் செய்யதாளிணையோடு
ஆர்த்தான்; இவைஎம் இராமா னுசன்செயும் அற்புதமே.

T.N. *சுப்பிரமணியம், ராமானுசர் காலத்தைச் சிறிது மாற்றிக் கொள்ள வேண்டுமென்பர். இவர் மேல்நாட்டுக்கு ஓடியது 1133. சீரங்கம் திரும்பியது இரண்டாம் குலோத்துங்கன் இறந்த பின் 1150க்குப் பின். பாடியம் எழுதியது 1155-56 என்பர்.*

## வைணவ குருபரம்பரை வரலாறுகள்

இவை பற்றிய ஒரு விளக்கம் எமது 13ஆம் நூற்றாண்டு இலக்கிய வரலாற்றில் வைணவ இலக்கியம் என்ற பகுதியில் சொல்லப்பட்டது. அங்கு சொல்லப்பட்ட நூல்கள் யாவும் உரை நடை நூல்கள். பின்னும் இரண்டை இங்கு குறிப்பிடுவோம்; மற்றச் செய்யுள் நூல்களையும் அடுத்துக் கீழே காணலாம்:

### 1. இராமானுசாரிய திவ்விய சரிதை

பிள்ளை லோகஞ்சீயர். சித்ரகூடம் கந்தாடை - திருவேங் கடாசாரியர் பரிசோதித்து ஸ்ரீ சரஸ்வதி பண்டார முத்ராக்ஷர சாலையில் அச்சிட்டது: 1886, 301 பக்கம். மற்ற நூல்களைவிட இவர் வடமொழியை அதிகம் பயன்படுத்துகிறார். அதுவும் தர்க்கம் வருமிடங்களில் பக்கம் பக்கமாக வடமொழிச் சுலோகங் கள்; இவை 76 பக்கம் வரை கிரந்த எழுத்து; பின் தெலுங்கு லிபி. பின்பழகிய சீயர் கூறும் வரலாற்றுள் சிலவற்றைச் சுருக்கி யும் சிலவற்றை விரித்தும் செய்த நூல்.

இந்த நூலில் இராமானுசர் வரலாற்றையுரைக்கும் பல பாடல்கள் காணப்படுகின்றன. சீயர் காலத்தில் வழங்கினவா, அல்லது சீயரே பாடிச் சேர்த்தனவா, அல்லது பிற்காலத்தில் சேர்க்கப்பட்டனவா என்பது விளங்கவில்லை. இவ்வரலாறுகளில் பிற்கால இடைச் செருகல்கள் நிரம்ப உண்டென்று சொல்வர்.

### 2. யதீந்திரப்ரவண ப்ரபாவம்

மணவாள மாமுனிகள் வரலாறு: மேற்சொன்ன பிள்ளை லோகம் சீயர் எழுதியது. இந்தச் சீயர் மணவாள மாமுனியின் சீடர்; இவ்விரு மணிப்பிரவாள நூல்களும் 15ஆம் நூற்றாண்டின் இறுதிப் பகுதிக்கு உரியவை.

### 3. அரிசமய தீபம்

தஞ்சை ஜில்லா கீழையூர்ச் சடகோபதாசர். காலம் 17ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதி. 14 சருக்கம் 1400 பாடல்கள். அச்சு 1903 - 4. இதனுள் பன்னிரு ஆழ்வார் சரித்திரங்களும், நாதமுனி யாமுனா சாரியர், இராமானுசர் சரித்திரங்களும் சொல்லப்பட்டுள்ளன.

### 4. குரு பரம்பராப் பிரபாவம்

வடிவழகிய நம்பி தாசர். செய்யுள் 2965. இது இரு பிரிவு. பாயிரப் பகுதி 130 பாடல்; ஆழ்வார் வைபவங்கள் 1449. பின் பகுதி நாதமுனிகள் ஆளவந்தார், இராமானுசர் வரலாறுகள்; பல ஆண்டுகளில் அச்சாகி உள்ளது.

### 5. குருபரம்பரைப் புராணம்

ஊறை விசயராகவன் என்பவர் பாடியது. செய்யுள் 4361. ஆழ்வார்கள் நாதமுனிகள் முதலிய ஆசாரிய சரித்திரம் சொல்லும்.

### 6. பரமயோகி விலாசம்

விளக்கம் தெரியவில்லை.

### 7. இராமானுச சரிதை

பாகை சீதாராமதாசர் இராமானுசரது வைபவம் கூறவந்த தேனும், இடையே திருவரங்கப் பெருமாளரையர் இராமானுச ருக்கு அருளிச் செய்ததாகத் தோற்றுவாய் செய்யப்பட்டு 756 செய்யுட்களால் ஆழ்வார் வைபவங்களை எடுத்துரைக்கிறது.

### 8. திவ்விய சூரி சரிதம்

வங்கிபுரம் சீனிவாசாச்சாரி. இவர் காலம் 19ஆம் நூற்றாண் டின் பிற்பகுதி. ஆழ்வார்கள் வரலாறு கூறி, நாதமுனிகள் ஆள வந்தார் எம்பெருமானார் வேதாந்த தேசிகர் வைபவங்களும் கூறுகிறது.

தேசிகர் வரலாறு பூர்த்தியாகவில்லை என்று தெரிகிறது. செய்யுள் 2824. அச்சு 1939.

### 9. பெரிய திருமுடி யடைவு

கந்தாடையப்பன், 15 நூ. பார்த்தசாரதி ஐயங்கார் பதிப்பு 1929.

இவற்றுள் 5, 6, 7 அரிசமய தீபப் பதிப்பு முன்னுரையில் முத்துக்கிருஷ்ண நாயுடு என்பவர் குறிப்பிட்டவை.

கருடவாகன பண்டிதர் செய்த வடமொழி - திவ்விய சூரி சரிதம் என்பது இராமானுசர் சரிதம் வரையில் சொல்வது; அது இராமானுசர் உயிரோடிருந்த காலத்தில் எழுதப்பெற்றது என்பர். பிரபன்னாமிர்தம் என்பது பின்பழகிய பெருமாள் ஜீயருடைய குருபரம்பராப் பிரபாவத்தின் வடமொழிப் பெயர்ப்பாகும்.

குருபரம்பரை வரலாறுகளை து.அ. கோபிநாதராயர்தாம் 1917இல் எழுதிய ஆங்கில நூலில் நன்கு ஆராய்ந்திருக்கிறார். அவர் எழுதி இவ்வளவு காலம் ஆகியும் அதற்கு மேல் இவற்றை யாரும் அவரினும் சிறப்பாகத் தெளிவுபடுத்தியதாகத் தெரிய வில்லை.

கலி என்றும் சகம் என்றும் குறிப்பிடுகின்ற காலக்குறிப்புக் கள் மணவாளமாமுனி காலத்துக்குப் பிறகே வரலாறுகளுள் புகுந்தன. வடமொழி திவ்விய சூரி சரிதமும் தமிழ் பின்பழகிய சீயர்குரு பரம்பரை (ஆறாயிரப்படி)யும் காலத்தால் பழமை யானவை.

### பிள்ளை முதலி: சொல்லாட்சி

வைணவ சம்பிரதாயத்தில் ஒரு சொல்லாட்சி முறையை நன்கு அறிந்து கொள்ள வேண்டும். இராமானுசர் காலத்தில் சோழப் பேரரசு உயர்ந்த நிலையில் இருந்தது. அக்காலத்தில் எங்கும் நிலவியது சிவ வழிபாடுதான். திருமால் வழிபாடு சைவத் தின் ஓர் அங்கமாக இருந்தது - விநாயகரையும், முருகனையும் சிவாலயத்தில் வைத்து வழிபட்டமை போல இந்த நிலையில், சோழ நாட்டில் தோன்றினவர் நாதமுனிகள். மறைந்திருந்த நாலாயிரப் பிரபந்தங்களை அவர் வெளிப்படுத்தினார். அவற் றைச் சுவைத்துக் கற்றபோது, அவையே கதி என்று இருந்து விட்டால் போதுமென்று அவர் எண்ணினார். அப்படியே செய்யவும் செய்தார். சிவாலய வழிபாட்டில் ஓர் அங்கமாக இருந்த திருமால் வழிபாடே தனியான பூரண வழிபாடு என்ற நிலையை அவர் தமக்கு ஆக்கிக் கொண்டார். பின்வந்த ஆள வந்தார் காலத்தில் திருமால் வழிபாடு தனிச் சமயமாக விரிந்தது. இராமானுசர் அதைத் தனிச் சமயமாக நிலை நாட்டினார். கோயில், சடங்குகள், சம்பிரதாயங்கள் சமய தத்துவங்கள், நூல் கள் முதலான எல்லாம் செய்தார். அவர் செய்யத் தொடங்கிய இவ்வேற்றுமை காரணமாகவே அரசனுடைய பகைமை எல் லாம் விளைந்தது.

இறை வழிபாட்டில் சாதி வேண்டாம் என்று இராமானுசர் கருதினார். ஆனால் அவ்வாறு நிலைநாட்ட முடியவில்லை. சிவாலயங்களே பெருகியிருந்த சோழநாட்டில் சிவ பூசை செய்யும் அதிகாரம் பெற்ற சிவாசாரியருக்கே எல்லாச் சிறப்பும் இருந்தது. சிவ வழிபாடு செய்த சைவர், சமூகத்தில் உயர்ந்த நிலையில்

இருந்தனர். படைத் தலைவர்களாகவும், அரசியல் ஆதிக்கம் உடையவர்களாகவும் விளங்கினர். இவர்கள் இருவிதப் பட்டம் தரித்திருந்தனர். ஒன்று பிள்ளை. மற்றது முதலி. இந்தச் சிறப்பு நிலைகளை நன்குணர்ந்த இராமானுசரும் வைணவரும், இவற்றை வைணவத்திலும் கொண்டுவரத் தலைப்பட்டனர். ஆசாரிய பரம்பரையில் உபதேசம் பெற்றவர்களைப் பிள்ளை என்றார்கள். நம்பிள்ளை, பெரியவாச்சான்பிள்ளை, விளாஞ் சோலைப் பிள்ளை, திருவாய்மொழிப் பிள்ளை என்போரைக் காண்க. பிள்ளை என்றால் ஞானபுத்திரன்; தகப்பனுக்குப் பின் உரிய காலத்தில் சமூகத்தில் பிள்ளை வருவதுபோல. சமயத் துறையில் ஆசாரியன் பிள்ளை ஆனான். பிள்ளை என்றாலே ஆசாரியன். பிராமணரல்லாதவரும் இப்பெயருக்குரியராகச் சிலர் இருந்தனர்: உதாரணம் விளாஞ் சோலைப்பிள்ளை. ஆசாரியரல்லாதவர்களாய்த் திருமாலடியாரான பாகவதர் கோஷ்டியில் கலந்து கொண்டவர்கள் எல்லோரும் முதலிகள்; திருக்கூட்டத்து முதலிகள் எனப்பட்டனர். இங்கு இருவகைப் பாகுபாடு ஏற்பட்டிருந்தது. முதலிகளில் பிராமணர், பிராமணர் அல்லாதோர் என இரு பிரிவு பிராமணர் பூணூலுடையவர்கள்: இவர்கள் (பூணூல்) சாத்தின முதலிகள். மற்றையோர் பிராமண ரல்லாத (பூணூல்) சாத்தாத முதலிகள். இச்சொற்களுக்கு மற்றும் சிறப்பான பொருளும் சொல்வார்கள். வைணவத்தில் பெருமை எல்லாம் சைவத்தில் இருந்ததுபோல, தொண்டர்களுக்கே; பாகவத கோஷ்டி, பின் ஆசாரியர், பின்னரே பகவான்; இதை மாறனேர் நம்பி தம் இறுதி நாளில் பெரிய நம்பிக்குச் சொல்லிய வற்றாலும் நன்கு அறியலாம். ஆகவே பாகவத கோஷ்டியினர் முதன்மையால் முதலிகள் எனப்பெற்றனர். ஆசாரியர் பகவானு டைய பிள்ளை ஸ்தானத்தில் இருந்தால் பிள்ளை எனப்பட்டனர்.

இராமானுசர் சாதி வேற்றுமையை விலக்கவேண்டும் என்று எண்ணியும் கூட அவரது செயல் சாதியை நன்கு பாகவத ரிடையே நிலைநாட்டியதாக முடிந்தது; பூணூலுக்குப் பூரண மதிப்பு ஏற்பட்டு. பூணூல் சாத்திய முதலி, சாத்தாத முதலி என இரு பிரிவுகள் நிலைத்து விட்டன. இவற்றின் ஆட்சியை இன்று எல்லா விஷ்ணு ஆலயங்களிலும் வலிவாகக் காணலாம்.

ooo

*அத்தியாயம் 9*

# பிரபந்த இலக்கியம்

## *முன்னுரை*

பிரபந்தம் என்ற சொல் மிகவும் பிற்காலத்தில் வந்தது. ஆனால் பிரபந்தங்கள் பழமையான காலமுதலே இருந்து வந்திருக்கின்றன. சிலப்பதிகாரம் போன்ற காப்பியங்கள் பேரிலக்கியங்களாய் இருக்க, காப்பியத்தன்மை இல்லாது பாடப் பெற்றிருந்த சிற்றிலக்கியங்களுக்கெல்லாம் பிற்காலத்தில் பிரபந்தம் என்ற பெயர் பொருந்தலாயிற்று. ஏழாம் நூற்றாண்டில் நெல்வேலி வென்ற சீர் நெடுமாறன் மீது பாடப்பெற்ற பாண்டிக் கோவை தனியான முதல் பிரபந்தம் என்று கருதலாம். நாயன்மார் ஆழ்வார் பாடல்களிலும் பிரபந்தங்கள் பல அமைந்துள்ளன. அப்பர் பாடிய திரு அங்கமாலை. திருமங்கை ஆழ்வார் பாடிய பெரிய திருமடல், சிறிய திருமடல் போன்றன எடுத்துக் காட்டுக்கள்.

இந்த முறையில் பல பிரிவுகளிலும் பிரபந்தங்கள் வளர்ந்து வந்தன. நம்பியாண்டார் நம்பி வரலாற்றை இந்த நூற்றாண்டில் ஆராய்ந்தோம். அவர் செய்த நூல்கள் எல்லாமே பிரபந்தங்கள் ஆகும். இரட்டை மணிமாலை, அந்தாதி, மும்மணிக்கோவை, உலா, கலம்பகம் ஆகியன பிரபந்தங்கள் ஆகும். இவை நம்பிக்கு முன்னரே பலரால் பாடப்பெற்றிருக்கின்றன. நம்பி நூல்கள் சைவத் திருமுறையின் பகுதி ஆதலால், சைவ இலக்கியம் என்ற தலைப்பில் ஆராயப்பட்டன.

இவற்றை விட்டு, தனிப் பிரபந்தங்கள் என்று பார்க்கும் போது எந்தப் பிரபந்தங்களும் கிடைக்கவில்லை. இது வியப்

பாகவே உள்ளது. சோழர் ஆட்சி மிகச் சிறப்பாக வளர்ந்தோங்கி நிலைபெற்ற இந்தப் பொற்காலத்தில் எந்தப் பிரபந்தமுமே எழவில்லை என்பது பெரும் வியப்பிற்கு இடமாய் உள்ளது.

இதற்கு முன்னும் பிரபந்தங்கள் பல. பின்னும் பிரபந்தங்கள் பல. ஆனால் இந்த நூற்றாண்டில் எவையும் காணப்படவில்லை.

சோழமன்னர்கள் பல நாடுகளை வெற்றி கொண்டு தமிழகம் முழுமையும் வென்று இணையற்ற வெற்றி வீரர்களாக விளங்கினார்கள். இவர்கள் காலத்தில் போர்கள் மிகப் பல. ஆகவே போர் வெற்றியை உணர்த்துகின்ற பிரபந்தங்கள் பல தோன்றின;

முதற்குலோத்துங்க சோழன் இந்த நூற்றாண்டின் இறுதிப் பகுதியில் அரசு புரிந்தான் (1070 - 1120). இவனுடைய கலிங்கப் போர் 1105இல் நிகழ்ந்தது. இந்தப்போரில் இவன் பெற்ற வெற்றியைச் சிறப்பித்து, சயங்கொண்டார் என்னும் பெரும்புலவர் கலிங்கத்துப் பரணிபாடி கவிச்சக்கரவர்த்தி என்று பெயர் பெற்றார். இக்குலோத்துங்கனுக்குப் பிறகு மூன்றாவது பட்டம் ஏற்ற இரண்டாம் இராசராசன் என்ற மன்னனைச் சிறப்பித்து ஒட்டக்கூத்தர், தக்கயாக சங்காரம் என்ற புராணக் கதையைப் பரணியாகப் பாடினார். இவ்விரு பரணிகளும் சோழமன்னரைச் சிறப்பித்தன. இவை முழுமையும் இன்று கிடைக்கின்றன.

இவைபோல, அன்று தோன்றி இன்று இல்லாமற்போன சில பரணிப் பிரபந்தங்களை இலக்கியங்களில் காணும் குறிப்புக்களால் அறிகிறோம். இவ்வாறு அறியப்படுவன மூன்று. முதலாவது, இரண்டாம் இராசேந்திரன் பெற்ற கொப்பத்து வெற்றி குறித்த பரணி. இரண்டாவது, வீரராசேந்திரன் பெற்ற கூடல சங்கமத்து வெற்றியைக் குறித்த பரணி. மூன்றாவது, விக்கிரம சோழன் (12 நூ.) கலிங்கப் போரில் பெற்ற வெற்றியைக் குறித்து ஒட்டக்கூத்தர் பாடிய மற்றொரு பரணி. இவற்றுள் முதல் இரு பரணிகளும் இந்தப் பதினொராம் நூற்றாண்டில் தோன்றியவை. இவற்றைக் குறித்து இங்கு சில சொற்கள் கூறுகிறோம்.

இவையன்றி வேறு எந்தப் பிரபந்தங்களும் இந்த நூற்றாண்டில் தோன்றியதாகத் தெரியவில்லை.

## கொப்பத்துப் பரணி

பரணி என்பது 96 வகைப் பிரபந்தங்களில் ஒன்று. 'ஆயிரம் யானை அமரிடை வென்ற - மாணவனுக்கு வகுப்பது பரணி' என்று பிற்கால இலக்கணம் கூறும். ஆனால் இப்போது கிடைக்கின்ற பாட்டியல் இலக்கணம் நூல்களுள் முந்தியதான பன்னிரு பாட்டியல், 4 நூற்பாக்களால் (242 - 5) பரணி இலக்கணம் கூறுகிறது. அது கூறுகின்றபடி எழுநூறு யானைகளைப் படுகளத்து அட்டால் பரணி பாடலாம். 'யானை சாய்ந்த அடுகளத் தல்லது - யாவரும் பெறார் பரணிப்பாட்டே.' தோற்றோர் பெயரைச் சார்த்தியே பரணிப் பிரபந்தம் வழங்கப் பெறுதல் மரபு.

கிடைக்கின்ற பரணி நூல்களுள் பழமையானது, முதற் குலோத்துங்கன் மீது பாடப்பெற்ற கலிங்கத்துப் பரணி. இதற்கும் முந்தியது கொப்பத்துப் பரணி. கங்கை கொண்ட சோழனது இரண்டாம் புதல்வனாகிய இரண்டாம் இராசேந்திர சோழன் (1051 - 1063) மேலைச் சாளுக்கிய வேந்தனான ஆகவமல்லனுடன் கொப்பம் என்ற இடத்தில் பெரும்போர் நிகழ்த்திப் பெற்ற வெற்றியை இது குறிக்கும். இப்போர் நடந்த ஆண்டு 1054; நடந்த இடம் தெலுங்கு நாட்டில் கிருஷ்ணா நதிக்கரையில் உள்ள கொப்பம் என்ற ஊர். போர்மீது சென்றவன் அப்போது சோழ மன்னனாய் இருந்த முதலாம் இராசாதிராசன். கடுமையான போரில், யானை மீது இருந்து போர் செய்த இராசாதிராசன் யானையின் மீதே இறந்தான். இவனை 'யானை மேற்றுஞ்சிய தேவர்' என்று சாசனங்கள் கூறும். உடன் இருந்த இவன் தம்பியாகிய இராசேந்திரன் அப்போர்க் களத்திலேயே மீண்டும் படைகளை ஊக்கி, தன் புயவலியால் எதிரிப் படைகளைப் புறமுதுகிடச்செய்து வெற்றி கொண்டான். பின்வந்த கலிங்கத்துப் பரணியிலும் (191),

ஒரு களிற்றின் மேல் வருகளிற்றை யொத்து
உலகுயக் கொளப் பொருது கொப்பையிற்
பொரு களத்திலே முடி கவித்தவன்.

என்று சொல்லப்பட்டுள்ளது. ஒட்டக்கூத்தர் பாடிய விக்கிரம சோழன் உலாவும் இச்செய்தியைக் கூறுகிறது (19 - 20) கண்ணிகள்:

– பற்றலரை

வெப்பத் தடுகளத்து வேழங்கள் ஆயிரமும்
கொப்பத் தொரு களிற்றாற் கொண்டோனும்.

*வீரசோழியவுரையில் மேற்கோளாக வந்துள்ள பன்னிரு சீர் ஆசிரியர் சந்த விருத்தம் ஒன்று, இச்செய்தியை விளக்கமாகத் தெரிவிக்கிறது:*

தற்றுற் றன்றுவெம் போர் செய்த
விற்கைப் பன்மன்முன் போடவொர்
தத்திற் றுன்றுவன் பாய்பரி
உய்த்துத் தன்மெய்கொண் டோடிய
வெற்றிச் செம்பியன் பார்புகழ்
கொற்றைக் கண்டன்வன் பாரதம்
வெற்புக் கொண்டுதிண் போர்புரி
கொப்பத் தன்றெதிர்ந் தோர்பெறு
கொற்றத் தொங்கல்சிங் காதனம்
ஒற்றைச் சங்குவெண் சாமரை
குத்துப் பந்தர் முன் பாவிய
முத்துப் பந்திமுன் தான்மகிழ்
ஒற்றைப் பெண்டிர்பண் டாரமொடு
அற்றைத் தன்பெருஞ் சேனையும்
இட்டிட் டன்றுடைந் தான்வசை
பட்டுக் கண்டவங் காரனே.

*இந்நிகழ்ச்சி இவ்விராசேந்திரனுடைய மெய்க்கீர்த்தியில் விளக்கமாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. அன்றியும், இப்பாடற் செய்திகள் சில இவனது கல்வெட்டில் அப்படியே பயில்வதும் காணத்தக்கது.*

திருமருவிய செங்கோல் வேந்தன்றன்
முன்னோன் சேனை பின்னதாக
இரட்ட பாடி ஏழரை யிலக்கமும்
கொண்டெதி ரமர்பெறா து எண்டிசை நிகழப்
பறையது கறங்கின வார்த்தை கேட்டுப்
பேராற்றங்கரைக் கொப்பத்து வந்தெதிர் பொருத
ஆகவ மல்லன் அடற்சேனை யெல்லாம்

பாராது நிகழப் பகும்பிண மாக்கி
ஆங்கது கண்டு ஆகவ மல்லன்
அஞ்சிப் புறகிட் டோட அவன்
ஆனை குதிரையும் ஒட்டக நிரையும்
பெண்டிர் பண்டாரமுங் கைக்கொண்டு
விஜயாபிஷேகம் பண்ணி வீரசிம்மாசனத்து
வீற்றிருந்தருளி கோப்பர கேசரி வர்மரான
உடையார் ஸ்ரீராஜேந்திர தேவர்க்கு யாண்டு.

*இவனது 'திருமாது புவி எனும் பெருமாதர் இவர்கள் மதேவியர் களாக' என்ற தொடக்கமுடைய மெய்க்கீர்த்தி இவனது கொப் பத்து வெற்றி விசயாபிஷேகத்தை 36 வரிகளால் சிறப்பித்துக் கூறுகிறது. சில வரிகளைக் கீழே காண்க. இவ்வாறு போர் வென்ற இராசேந்திரன் மீது ஒரு பரணிப் பிரபந்தம் பாடப்பட்ட செய் தியை இராசராசன் உலாவும் கூறுகிறது:*

– கொலையானை
பப்பத் தொருபசிப் பேய் பற்ற ஒரு பரணி
கொப்பத் தொரு களிற்றாற் கொண்டோனும். 25

*பின்னரும் கொப்பத்துப் போரையும் பரணியையும் இம் மெய்க்கீர்த்தி குறிப்பிடுகின்றது.*

ஒண்திறல் இரட்ட மண்டல மெய்தி
நதிகளும் நாடும் பதிகளும் அனேகம்
அழித்தனன் வளவன் எனும் மொழிப்பொருள் கேட்டு
வேகவெம் சளுக்கி ஆகவ மல்லன்
பரிபவம் எனக்கிதென்று எரிவிழித் தெழுந்து
செப்பருந் திறத்த கொப்பத்-தகவையிற்
சென்றெதி ரேன்றும் அமர் தொடங்கிய பொழுது அவன்
செஞ்சர மாரிதன் குஞ்சர முகத்தினும்
தன்திருத் துடையினும் குன்றுறழ் புயத்தினும்
தைக்க வும்தன் னுடன் களிறு ஏறிய
தொடுகழல் வீரர்கள் மடியவும் வகையால்
ஒருதனி யனேகம் பொருபடை வழங்கி .....
எண்ணிலி யரைசரை விண்ணகத் தேற்றி .....
வராகவெல் கொடிமுதல் இராசபரிச் சின்னமும்
ஒப்பில்சத்தி யவ்வை சாங்கப்பை என்றிவர்முதல்

தேவியார் குழாமும் பாவையர் ஈட்டமும்
இனையன பிறவும் முனைவயிற் கொண்டு –
விசையாபி டேகம் செய்து .....

*கூத்தர் காலத்தில் வழக்கிலிருந்த இப்பரணி, பின்னர் இறந்து போயிற்று. இதுவே முதலில் தோன்றிய பரணிப் பிரபந்தம். இப்பரணி பாடிய புலவர் பெயர் முதலிய வரலாறுகள் எவையும் விளங்கவில்லை. இக்காலத்தில் கிடைக்கும் பரணிகளுள் முதலாவதாகிய கலிங்கத்துப் பரணியானது கொப்பத்துப் ப்ரணி கொண்ட இரண்டாம் இராசேந்திரன் சகோதரி அம்மங்காதேவியின் புதல்வனான முதற்குலோத்துங்கனைச் சிறப்பிப்பதாகும்.*

## கூடலசங்கமத்துப் பரணி

*இது இன்று கிடைக்காத மற்றொரு பரணியாகும். மேலைச் சாளுக்கியர் பரம்பரையாகச் சோழருடன் போர் தொடுத்து வந்தனர். முன்சொன்ன இரண்டாம் இராசேந்திர சோழன் தம்பியாகிய வீரராசேந்திர சோழன் (1063 - 1070) காலத்திலும் இப்போர்கள் தொடர்ந்து நடை பெற்றன. ஆனால் கீழைச் சாளுக்கியர், சோழர்குலத்தில் பெண்கொண்டு, உறவும் நட்பும் பெற்றனர். இதுபற்றி இவர் தாயத்தாராகிய மேலைச் சாளுக்கியர் பகைமையும் பூசலும் வளர்ந்து கொண்டே வந்தது. வீரராசேந்திரன், கீழைச் சாளுக்கிய நாடாகிய வேங்கி நாட்டின் மீது படையெடுத்த மேலைச் சாளுக்கியரோடு மூன்று முறை போர் செய்து வெற்றி பெற்றான். மூன்றாம் போர் கிருஷ்ணா நதியும் துங்கபத்திரை நதியும் கூடுமிடமாகிய கூடல சங்கமத்தில் நடைபெற்றது. காலம் கி.பி. 1064. சாளுக்கியப் படை மிகப் பெரும்படை என்பதைக் கல்வெட்டு, 'வடகடலென்ன வகுத்த அத்தானையைக் கடகளிறொன்றால் கலக்கி' எனவரும் வரிகளால் அறிவிக்கிறது. சாளுக்கியப் படைத்தலைவர் அனைவரும் போரில் மடிய, ஆகவமல்லன் புறமுதுகிட்டு ஓடினான். வீரராசேந்திரன் விசயாபிடேகம் செய்து கொண்டான். இவன் பெற்றவெற்றியைக் 'குந்தளரைக் கூடற்சங்கமத்து வென்ற கோன் அபயன்' (103) என்ற சொற்களால் கலிங்கத்துப்பரணியில் கவிச்சக்கரவர்த்தி சயங்கொண்டார் பாடுகிறார். அவன் புதல்வன் மீது உலாப் பாடிய ஒட்டக் கூத்தர்,*

– கூடலார்
சங்கமத்துக் கொள்ளும் தனிப்பரணிக் கெண்ணிறந்த
துங்கமத யானை துணித்தோனும். 21

என்று விக்கிரம சோழனுலாவிலும்,

பாட அரிய பரணி பகடொன்றின்
கூடலார் சங்கமத்துக் கொண்டகோன். 25

என்று இராசராச சோழனுலாவிலும் பாடுகிறார். இன்னும், பின்வந்த சங்கர சோழனுலா ஆசிரியர்,

– காப்பரணக்
கூடலார் சங்கமத்துக் குஞ்சரம் பல் கோடி
ஆடலம் பொற் பரணிக்கு அட்டோனும். 21 – 22

என்று பாடுகிறார். இவற்றால், வீரராசேந்திர சோழன் கூடல சங்கமத்துப் போரில் மேலைச் சாளுக்கிய மன்னனாகிய ஆகவ மல்லனை வென்று பரணிப் பாட்டுக் கொண்டான் என்பது தெரிகிறது. ஆகவமல்லனுடைய யானைப் படை மிகவும் சிறப் பானது. அப்படையை அழித்தது, பரணி பாடத்தக்க பெரு நிகழ்ச்சி என்பதில் ஐயமில்லை.

இவ் வீரராசேந்திர சோழன் ஆதரவிலேயே வீரசோழியம் என்ற இலக்கண நூல் பாடப்பெற்றது. அதன் உரையாசிரியர், கூடல சங்கமத்துப் போரைப்பாடும் இரு வெண்பாக்களை அதன் உரையில் காட்டுவதும் இங்கு குறிப்பிடத்தக்கது.

விண்கூ டலசங்க மத்துடைந்த வேல்வடுகர்
எண்கூ டலறும் இருங்கானிற் – கண்கூடப்
பண்ணினான் தன்னுடைய பாதம் பணியாமைக்கு
எண்ணினார் சேரும் இடம்.

மின்னார் வடிவேற்கை வீரரா சேந்திரன்தன்
பொன்னார் பதயுகளம் போற்றாது – கன்னாடர்
புன்கூ டலசங்க மத்தினொடும் போருடைந்தார்
நன்கூ டலசங்க மத்து.

ooo

*அத்தியாயம் 10*

# பிற ஆசிரியர்

## *முன்னுரை*

இதுவரை நன்கு தெரிந்த ஆசிரியர்களையும், நூல்களையும் பொருத்தமான தலைப்புக்களில் ஆராய்ந்தோம். இனி இத் தலைப்புக்களில் அடங்காத ஆசிரியர்களையும், நூல்களையும் இங்கு பார்க்கலாம். 11ஆம் நூற்றாண்டு, அரசியலில் மிக்க எழுச்சி பெற்ற காலம். எனினும், அக்காலத்துக்குரிய நூல்களாகத் தனி நூல்கள் எவையும் தெரியவில்லை. தெரிந்தவை சிலவே.

அடியார்க்கு நல்லார் உரையால் கனாநூல், ஓவிய நூல் என்பன பற்றி அறிகிறோம். கனாநூல் கிடைத்து அச்சாகியிருக் கிறது. ஓவிய நூல் பற்றி எச்செய்தியும் விளங்கவில்லை.

இக்காலத்தில் சோழப் பேரரசர்களுடைய மெய்க்கீர்த்தி கள் பல பாடப்பட்டன. அவை சாசனங்களில் பொறிக்கப் பட்டன. எனினும், அவற்றைப் பாடிய ஆசிரியர் பெயரோ வரலாறோ எதுவும் விளங்கவில்லை. அன்றியும், இராசராசன் முதலான பேரரசர்களுடைய வாழ்க்கை வரலாறுகளை அவர் கள் கட்டிய பெருங்கோயில்களில் விழா நாட்களில் கதையாகச் சொல்வதும், நாடகமாக நடிப்பதும் வழக்கமாக இருந்ததென்று தெரிகிறது. எழுச்சியோடு வளர்ந்து வந்த சோழப் பேரரசில் மக்கள் மனத்தில் எப்போதும் வீர உணர்ச்சியும் வெற்றி உணர்ச்சியும் ஊட்டுவதற்காக இத்தகைய நிகழ்ச்சிகள் நடைபெறுவது இன்றியமையாததாகலாம். இதன் பொருட்டு எழுந்தவையே இராசராச விஜயம் போன்ற பல சரித்திரங்களும் நாடகங்களும். இவ்வாறு எழுந்த சரித்திர நூல்கள் மிகப் பல. அவற்றுள் சில

வற்றின் பெயரும் செய்த ஆசிரியர்கள் பெயரும் கல்வெட்டுக்களால் தெரியவருகின்றன. இவ்வாறு தெரியவந்த ஐவர் இங்கே சொல்லப்படுகின்றனர். பின்னும் பலர் இருத்தல் கூடும்.

மேற்குறித்த நூல்களையும் ஆசிரியர்களையும் குறித்துத் தெரிந்த குறிப்புக்களைப் பின்னே காணலாம்.

## பொன்னவன் - கனாநூல்

இக்கனாநூல், கட்டளைக் கலித்துறையால் 30 பாடல்கள் மண்டலித்து வரும் அந்தாதியாக அமைந்த சிறுநூல். இந்நூலிலிருந்து நான்கு பாடல்களை (2, 4, 10, 15) அடியார்க்குநல்லார் தம் சிலப்பதிகாரவுரையில் (அடைக்கலக்காதை வரி 95 - 106) கனாநூல் என்று பெயர் குறிப்பிட்டு மேற்கோளாகத் தந்திருக்கிறார். எனவே, இது பழமையானதொரு நூல் என்பதும், இத்துறையில் பிரமாண நூலாகக் கொள்ளத்தக்கதென்பதும் தெளிவாகும். அடியார்க்கு நல்லார் காலம் 12ஆம் நூற்றாண்டின் இறுதிப் பகுதி; எனவே, இந்நூலின் காலம் இதற்கு நூறு ஆண்டுகள் முன் எனக் கொண்டாலும், இது 11ஆம் நூற்றாண்டுக்குரிய நூலாகிறது. இது மதுரைத் தமிழ்ச் சங்க வெளியீடாக ரா. ராகவையங்காரவர்களால் வெளியிடப்பட்டுள்ளது (இரண்டாம் பதிப்பு 1920).

'கட்டுரையார், மகப் பொன்னவன் சொன்ன கனவு நன்னூல்' என்ற 30ஆம் பாடலின் அடியால், நூல் செய்தார் பொன்னவன் என்று அறிகிறோம். ஆசிரியர் திருமாலுக்கு வணக்கம் கூறுவதால் இவர் சமயம் வைணவம் என்று கருதுகிறோம். 'உம்பர் குருப் பண்டுரைத்த கனவு நன்னூல்' (1) என்பதால், இதைப் பிருகஸ்பதி ஆதியில் வடமொழியில் செய்தாரென்று கருதவேண்டும். இந்நூலைத் தமிழில் அம்பரில் வாழ்ந்த கணபுரத்தேவன் என்பவன் சொல்ல, பொன்னவன் என்ற புலவர் நூலாகப் பாடினார் என்று அறிகிறோம். 'அம்பர்க் கணபுரத் தேவன் சொன்னான்' (1), 'கணிதரும் எந்தை கணபுரத் தேவன் தன் கட்டுரை' (29), 'கட்டுரையார் மகப் பொன்னவன் சொன்ன கனவு நன்னூல் எட்டும் இரண்டும் இருபதும்' (30) என்று இந்நூலில் வரும் தொடர்களைக் காண்க. எந்தை கணபுரத் தேவன் என்றமையாலும், மகப் பொன்னவன் என்றமை

யாலும் இவர் கணபுரத் தேவனுடைய புதல்வர் போலும். சில பாடல்கள் மகடூஉ முன்னிலையாக வுள்ளன.

பண்டைக் காலத்தில் இதுபோன்ற பலதுறை நூல்கள் தமிழ்ச் செய்யுளாகப் பாடப் பெற்றிருந்தன. அவற்றுள் இந் நூலும் கணக்கதிகாரமும் போன்ற சிலவே இன்று கிடைப்பன. வேறு பலவகை நூல்கள் இருந்தன என்று அறிந்தபோதிலும், அவை யாவும் இறந்தன போலும்.

இந்நூலானது கனவு இன்ன யாமத்தில் கண்டால் இன்ன காலத்துக்குள் பலன், இன்ன கனவுக்கு இன்ன பலன் என்று கூறுகிறது. ஓரளவு நல்ல செய்யுள் நடை பொருந்தியது.

கனாநூலை ஆராயும்போது ஒரு கருத்து எழுகிறது. நூல் செம்மையான நடையில் இயற்றப் பெற்றிருப்பினும், 11ஆம் நூற்றாண்டு என்ற காலப் பகுதிக்காக நாம் எதிர்பார்க்கும் இலக்கிய நடை இதனிடத்துக் காணப்படவில்லை. நடை நன்றாகத்தான் இருக்கிறது; ஆனால் நாம் எதிர்பார்க்கிறபடி இல்லை. இதனால் ஒன்று தெளிவாகின்றது. இலக்கிய இலக் கண ஆசிரியர் எழுதும் நடை தனி; பிற துறை நூலாசிரியர் எழுத்தும் நடையும் வேறு. முந்தியவர்கள் முயன்று, பேச்சு வழக்கை ஒதுக்கித் தங்கள் எழுத்தைச் செந்தமிழாக்கியிருக் கிறார்கள். ஆனால் இலக்கியப் பொருள் அல்லாமல் பிற பொரு ளைப் பற்றி நூல் எழுதினோர் இலக்கிய நடை அல்லாமல் சாமானிய நடையிலேயே எழுதியிருக்கிறார்கள். இந்த நடைக்குக் கனாநூல் ஒரு சான்று. பின்வரும் பாடலைப் பார்க்க:

விரைமலர்த் தாளிற் செருப்பு மிதியடி மென்குடையென்று
உரைசெயத் தக்கன கூறிய ஆயுதம் ஒண்கனவா
இரவிடைக் கண்டிடிற் றான்பர தேசத்தில் யாத்திரைபோம்
பரவிடத் தக்கன வாட்கே டிவற்றிவை பற்றிடுமே. 17

இப்பாடல் ஓரளவு பேச்சுநடையை ஒட்டியே எழுதப்பட்டிருக் கிறது. இதனால் ஒரே நூற்றாண்டில் எழுந்த இருவேறு நூல் களின் நடையும் சொல்வளமும் வெவ்வேறாக இருப்பதைக் காணலாம். ஆகவே, சொல்லாட்சியைக் கொண்டு மட்டும் இந்த நூலின் காலம் இன்னது தான் என்று முடிவான வரையறை சொல்ல முடியாது. சொற்களை ஆராயும்போது, இப்பொது வான எச்சரிக்கை நினைவில் இருத்துதற்குரியது.

## ஓவிய நூல்

*சிலப்பதிகார வுரையில் அடியார்க்கு நல்லார் குறிப்பிடும் நூல்களில் ஒன்று. வேனிற்காதை யுரையில் (அடி 25) அவர் பின்வருமாறு எழுதுகிறார்.*

*"ஓவிய நூலுள் நிற்றல், இருத்தல், கிடத்தல் இயங்குத லென்னும் இவற்றின் விகற்பங்கள் பலவுள; அவற்றுள் இருத்தல்: திரிதரவுடையனவும், திரிதர வில்லனவு மென இரு பகுதிய.*

*அவற்றுள் திரிதரவுடையன யானை தேர் புரவி பூனை முதலியன; திரிதர வில்லன ஒன்பது வகைப்படும். அவை: பதுமுகம், உற்கட்டிதம், ஒப்படியிருக்கை, சம்புடம், அயமுகம், சுவத்திகம், தனிப்புடம் மண்டிலம், ஏகபாதம் எனவிவை; என்னை?*

பதுமுகம் உற்கட் டிதமே யொப்படி
யிருக்கை சம்புட மயமுகஞ் சுவத்திதம்
தனிப்புட மண்டிலம் ஏக பாதம்
உளப்பட வொன்பது மாகும்
திரிதர வில்லா விருக்னக யென்ப.

*என்றாராகலானும்*

பன்னாள் கழிந்த பின்னர் முன்னாள்
எண்மைப் பாட்டினு ளிரக்க மெய்ந்நிறீஇ
யொண்வினை யோவியர் கண்ணிய விருத்தியுள்
தலையத னும்பர்த் தான்குறிக் கொண்ட
பாவை நோக்கத் தாரணங் கெய்தி.

*எனப் பெருங்கதையுட் கூறினமை யானுங் கொள்க."*

*தமிழ் இலக்கிய வளமும் கலையுணர்வும் முத்தமிழ் நெறியும் ஓங்கியிருந்த காலத்தில் பல்வேறு துறை நூல்கள் எழுந்திருந்தன. கனாநூலை அவர் குறிப்பிடுவதை முன்னமே கண்டோம். அந்நூல் கிடைத்து அச்சாகியுள்ளது. வேறு பல துறை நூல்கள் கிடைக்கவில்லை. அவற்றுள் ஓவிய நூலும் ஒன்று. அடியார்க்கு நல்லாருக்கு முந்தியதாகிய 11ஆம் நூற் றாண்டுக்கு இது உரியதென்று கருதி இங்கு இந்நூலைக் குறிப் பிட்டோம்.*

## *சாசனப் புலவர்*

தமிழ்நாட்டில் அரசாண்ட அரசர்களில் மிகவும் சிறப்புப் பெற்றவர் சோழர், பாண்டியர், பல்லவர் என்னும் மூவர். இம் மூவருள் பல்லவர் முதன்முதலாகக் கற்கோயில் கட்டும் கலையைத் தொடக்கம் செய்தார்கள். பாண்டியர் கட்டிய கற்கோயில்கள் மிகச் சிலவே. பல்லவர் கோயில்களும் குடைவரைக் கோயில்கள்; மலைகளைக் குடைந்து கோயிலும் கோபுரமும் விமானமும் வாயிலும் மண்டபமும் தூண்களும் நிற்குமாறு விட்டு ஏனைய பகுதிகள் முழுமையும் வெட்டி எடுத்து நிறுத்திய அருஞ்செயல். இவர்களுக்குப் பின்சோழர் தனிக் கற்களைக் கொண்டு போய்க் கல் காணாத இடத்தில் மலை மலையாகக் கற்கோயில் கட்டினார்கள். பல்லவரும், சோழரும் தாங்கள் செய்த தான தருமங்களைக் குறிப்பிட்டுக் கோயில் கற்சுவர்களில் சாசனம் எழுதி அமைத்தார்கள். இச்சாசனங்களே அவ்வவ்விடத்துக்குரிய பொது ஆவண ஓலைகளாக நிலவி வந்தன. பாண்டியர்களுடைய சாசனங்கள் ஆதியில் இவ்வாறு அமையாமல் செப்பேடுகளில் பொறித்து வைக்கப் பெற்றிருந்தன. இவ்விரு வகைச் சாசனங்களும், சம்பந்தப்பட்ட அரசர்களுடைய கீர்த்தியைக் கூறித்தொடங்கும். இக்கீர்த்தி கூறும் தொடக்கப் பகுதி மெய்க்கீர்த்தி எனப்படும். இம்மெய்க்கீர்த்தி, நடந்த செயல்களைக் குறிப்பிடுவது ஆதலால், குறிப்புக்கள் யாவும் உண்மையே. மேலும், சாசனத்தில் இன்ன அரசருடைய இன்ன ஆட்சியாண்டு என்று தெரிவது, பண்டைய தமிழ்நாட்டு வரலாற்றைத் தெரிந்து கொள்வதற்கும் பெருந்துணையாக அமைகிறது.

இதனோடு சில சமயம், பண்டைய புலவர் வரலாறுகள் நூல் வரலாறுகள் பாடல்கள் என்பனவும் அறிய முடிகிறது. சம்பந்தர் பாடிய திருவிடைவாய்த் தேவாரம் இப்படி கல்வெட்டிற் கண்டதே. திருமுறைத் தொகுதி வகுத்தமைத்த நம்பியாண்டார் நம்பி இதைக் கண்டதில்லை. 10ஆம் நூற்றாண்டில் எழுந்த சிராமலை யந்தாதியும் இவ்விதம் கல்வெட்டினால் கிடைத்ததே. மேலும், கல்வெட்டின் மூலம் பல புலவர் பெயர்களும் அவர்கள் செய்த நூற்பெயர்களும் தெரிய வருகின்றன. ஆனால் நூல்கள் கிடைக்கவில்லை. அத்தகைய சில வரலாறுகளை இங்கு

கருதுவோம். இதனால், தமிழ் அக்காலத்தில் இன்னும் எத்துணை வளமுடையதாயிருந்தது என்பதை அறிதலொன்றே பயனாவது.

## நாராயணன் பட்டாதித்தன்

தஞ்சையில் அரசாளத் தொடங்கிய சோழ மன்னர்கள் மிகப் பெரிய சக்கரவர்த்திகளாய் விளங்கினார்கள். அனைவரிலும் பெருவீரனான அரசன் முதலாம் இராசராசசோழன். இவன் மீது நாராயணன் பட்டாதித்தன் என்ற புலவர் இராசராச விசயம் என்ற நூலொன்று பாடியிருந்தார். இவர் சவர்ணன் என்ற சாதியினர். இவர்கள் சிறந்த வைத்தியர்களாய் அக்காலத்தில் விளங்கினார்கள். இந்தப் பட்டாதித்தன் தான் செய்த நூலை விசேட காலங்களில் படிப்பதற்காக, இராசராச சோழனால் நில தானம் செய்யப்பட்டிருந்தது. திருப்பூந்துருத்திக் கல்வெட்டு இதைக் குறிப்பிடுகிறது. இராசராசனது வெற்றிச் செயல்கள், வீரம், செங்கோன்மை, தருமங்கள் முதலியவற்றை இது விரித்துக் கூறும். சபையில் படிக்க வேண்டும் என்று விதித் திருந்ததால், இது தமிழ்மொழி நூல் என்று கருதலாம்; வட மொழியைப் படித்து விளக்கினால் அறிபவர் அரியர் அல்லவா? பிற்காலத்தில் கம்பண்ண கவுடர் மதுரையைக் கைப்பற்றி இருந்த முகம்மதியர்களை வென்று அந்நகரைக் கைப்பற்றி அந் நாட்டை அரசாண்ட வரலாற்றை அந்த வீரருடைய மனைவி யாகிய கங்காதேவி என்ற அம்மையார் ‘மதுரா விஜயம்’ என்ற பெயருடைய அறுநூறு பாடல்களுக்கு மேற்பட்ட ஒரு வட மொழிக் காவியமாக எழுதியிருந்தார் (இந்நூல் சமீபத்தில் வெளியாயிற்று) காலம் 14ஆம் நூற்றாண்டு. நாம் கூறும் இராசராச விசயம் 11ஆம் நூற்றாண்டுத் தொடக்கத்திற்குரியது. இதுவும், ஒருகால் குறிப்பிட்ட நிகழ்ச்சியைக் கூறுவதா என்பது தெரியவில்லை.

## இராச ராசேசுவர நாடகம்

இராசராச மன்னனுடைய சரித்திரம் அவன் காலத் திலேயே தஞ்சைப் பெருங்கோயில் விழாக் காலங்களில் நடிக் கப் பெற்றது என்பதை அக்கோயிலில் உள்ள கல்வெட்டு ஒன்று கூறுகிறது. அதற்கு வேண்டிய நிபந்தங்களை அவன் மகனாகிய இராசேந்திரன் செய்திருந்தான். ஒருகால் இது, இராசராச மன்னன் இராசராசேச்சுரம் என்னும் பெருங்கோயிலைக்

கட்டிய வரலாற்றைக் கூறியிருக்கலாம். இதை நடிப்பதற்கு இரண்டாம் இராசேந்திர சோழன் 120 கல நெல் நிபந்தமாக அளித்திருந்தான் என்றும் அறிகிறோம். நூல் இன்று இல்லை.

## பூங்கோயில் நம்பி

இவர் வீரராசேந்திர சோழன் மீது வீரணுக்க விசயம் என்ற நூலொன்று பாடியிருந்தார். இதற்காக இம்மன்னனது தந்தையின் 15ஆம் ஆட்சி ஆண்டில் நிலதானம் செய்யப்பட்டிருந்தது என்று அறிகிறோம். வீர அணுக்கன் என்பது வீரராசேந்திரனின் பட்டப் பெயர் போலும். இவன் தன் தந்தையின் காலத்தில் படையெடுப்பு நடத்தி வெற்றி பெற்றான் என்பது இச்சாசனத்தால் தெரிகிறது. மகன்மீது செய்யப்பட்ட நூலுக்குத் தந்தை மானியம் அளித்தான். இது திருவாரூர்க் கமலாலயத்தின் தெற்குத் திருமதிலில் காணப்படும் சாசனமாகும். பூங்கோயில் என்பது திருவாரூர்க் கோயிலின் பெயர். புலவர் இப்பெயர் தரித்திருந்தார் போலும்.

## மருதத்தூருடையான் திருச்சிற்றம்பலமுடையான்

இப்புலவர் தொண்டை மண்டலத்துக் களத்தூர்க் கோட்டத்துள்ள மருதத்தூரினர். திருச்சிற்றம்பலமுடையான் என்பது இவருக்கிடப்பட்ட பெயர் ஆகலாம். இவர் சோழநாட்டில் உறத்தூர்க் கூற்றத்தில் வாழ்ந்த பையூருடையான் வேதவனமுடையான் என்பவன் மீது ஒரு நூல் பாடினார் போலும். அதற்குப் பரிசிலாக அவன் இரும்பூதி என்ற ஊரை இவருக்கு அளித்தான். பின்னர் இவர் தாம் பெற்ற ஊராகிய குடிக்காட்டைப் பையூர்ச் சிவபெருமானாகிய திருப்பெருமான் ஆண்டாருக்குத் தானமாகக் கொடுத்துவிட்டார். இச்செய்தி புதுக்கோட்டை நாட்டில் குளத்தூர் தாலுக்கா நாங்குப்பட்டி மரத்துக் கோயில் பிரகார முகப்பில் உள்ள சாசனத்தால் தெரிகிறது. புலவருடைய பாடலொன்றும் அதன் கீழே சாசனமும் பொறிக்கப்பட்டுள்ளன. அவற்றைப் பின்னே காண்க:

"பையூருடையான் வேதவனமுடையானை நான் கவிபாடின கவிக்கு எனக்குப் பரிசில் தந்த தன் காணியான குடிக்காடு இரும்பூதி" .... திகுன்றன் திருச்சிற்றம்பலமுடையானேன் ..... திருப்பெருமானாண்டார் திருக்கை மலரிலே நான் நீர் வார்த்த குடிக்காடு:

வாளை வயிறு நிறைய மடற்கமுகம்
பாளைபசுந் தேனொழுக்கும் பையூரே – நாளையென்று
செப்பாத வாய்மையான் வேதன் திருமனுநூல்
ஒப்பனெம் கோமான்தன் ஊர்.

இச்சாசனம் குலோத்துங்கனுடைய 13ஆம் ஆண்டு எனவே, இது முதற் குலோத்துங்க சோழன் காலத்தில் கி.பி. 1083இல் எழுந்தது என்று அறிஞர் கணக்கிட்டிருக்கிறார்கள். 'நாளை என்று செப்பாத வாய்மையான்' என்ற தொடர் பொருட்சுவை நிரம்பப் பொதிந்தது; 'பின்னை என்னார் பெருமானடிகளே' என்பது கடவூர் மயானத் தேவாரம். இவ்வாசிரியர் சிறந்த புலவராய் இருந்திருப்பார் போலும்.

### கவிகுமுத சந்திர பண்டிதன் திருநாராயண பட்டன்

இப்புலவர் முதற் குலோத்துங்க சோழனுடைய சரித்திரத்தைக் குலோத்துங்க சோழ சரிதை என்ற பெயருடைய காவியமாக எழுதினார் என்று ஒரு சாசனத்தால் அறிகிறோம். இச்சாசனம் புதுச்சேரியில் உள்ள திரிபுவனி என்ற ஊரில் உள்ள சிவாலய மண்டபத்தின் தெற்குத் திருமதிலில் பொறிக்கப் பட்டுள்ளது. காலம் சோழனது 27ஆம் ஆண்டு: எனவே 1097 ஆகிறது. இந்நூல் திரிபுவன மாதேவிச் சதுர்வேதி மங்கலம் என வழங்கப்பட்டது. அவ்வூரில் அரசன் விருப்பப்படி அரங்கேற்றப் பெற்றுப் பாராட்டைக் கொண்டது. சபையார் புலவருக்கு அவ்வூரில் நிலதானம் செய்திருக்கிறார்கள். 1097 எனவே, இதற்குப் பத்து ஆண்டுகள் பின்னர் நடந்த கலிங்கப் போர் இச்சரிதையுள் சொல்லப்பட்டிராது. நீண்ட காலம் அரசாண்ட குலோத்துங்கனுடைய ஆட்சித் தொடக்கத்தின் வரலாறுகள் இதனுள் விளங்கக் காணப்படும். இவ்வாசிரியர் அந்தணர் என்பதைப் பட்டர் என்ற சொல் தெரிவிக்கும். இவர் இயற் பெயர் திரு நாராயணன். கவி குமுதசந்திர பண்டிதன் என்பது புலமையால் பெற்ற பட்டம். புலவராகிய குமுதங்களுக்கு இவர் சந்திரன் போல் விளங்கினார் போலும்.

மேற்குறித்த நூல்கள் எல்லாமே பிற்காலத்தில் வழக்கு வீழ்ந்தன. இக்காலத்தில் ஒன்றுமே இல்லை.

○○○

அத்தியாயம் 11

## உரைநடை

உரைநடையிலேயே நூல் செய்தல் என்பது தமிழுக்குப் புதிது; உரைநடை வசனம் எனப்படும். ஆயினும் செய்யுள் நூல்களில் உரைநடை இடையில் வந்துள்ளது. சிலப்பதிகாரம் 'உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுள்' என்று கூறப்பெறும். ஆனால் இங்கு உரைநடைப்பகுதி சில வரிகளே; அவையும் பெரும்பகுதி செய்யுளோசை பெற்று வருவன. தகடூர் யாத்திரையும் உரைநடையைக் கொண்டிருந்தது என அறிகிறோம்; ஆனால் நூல் இல்லை. பின்வந்த பெருஞ் சிறப்புடைய நூல் பெருந்தேவனார் பாடிய பாரத வெண்பா (9ஆம் நூற்றாண்டு) இந்நூல் உரையும் பாட்டுமாகவுள்ளது. உரை வருணனைப் பகுதியாகவும் வரலாற்றுப் பகுதியாகவும், பாட்டு கூற்றாகவும் உள்ளது. இங்கு உரைக்குப் பாட்டோடொத்த பெருமை உரியது. உரை ஓரளவு பேச்சு வழக்காயிருப்பதோடு, வடசொற்கள் அதிகமும் கலந்துள்ளது. முதற் பாட்டுக்கும் அடுத்த பாட்டுக்கும் இடையில் உள்ள வரலாற்றுப் பகுதியைக் கூறுவதான இந்த உரைப் பகுதி பெரும்பான்மை மிக நீளமான ஒரே வாக்கியமாக அமைந்திருக்கிறது. இந்த நூலின் சிறு பகுதிதான் கிடைக்கிறது.

உரைநடையில் மிகவும் சிறப்பான நடை அமைந்தது, இறையனார் களவியலுரையாகும். சூத்திரத்தின் விளக்கமாக இது எழுதப்பட்ட போதிலும் கூட, தனித்த சொல்லழகு பெற்றதாய், ஓரளவு எதுகையும் மோனையும் கொண்டதாய், சிறிய சொற்களால் ஓவியம் புனைந்தது போன்ற எழில் நலம் சான்றது. இயற்கையழகும் மக்கள் இயல்பும் உணர்வு வலையில் பின்னியது போன்ற நடையுடைய சிறு வாக்கியங்கள். தொடர்பாக உள்ளவை. இதையொத்த அழகு பொருந்திய நடை வேறு எழவில்லை என்று கூறுவர்.

## உரையாசிரியர்

இவற்றைக் கடந்து, நாம் கருதும் பதினொராம் நூற்றாண்டுக்கு வந்து இக்காலத்து உரைநடையை இனிக் காண்போம். இவற்றைக் கால முறைப்படி கீழே குறிப்பிடுவோம்:

இளம்பூரணர் - தொல்காப்பியவுரை.

சிலப்பதிகார அரும்பதவுரை.

யாப்பருங்கல விருத்தியுரை.

குணசாகரர் - காரிகையுரை.

பரிப்பெருமாள் - திருக்குறள் உரை.

இவ்வைவருள், இலக்கண உரைசெய்தார் மூவர், இலக்கிய உரை செய்தார் இருவர். இவர்தம் உரைகள் முன்னமே உரிய அத்தியாயத்துள் ஆராயப் பெற்றுள்ளன.

## இளம்பூரணர்

இவருடைய நடை எளிதானது. வடமொழி விரவாதது. சுருங்கிய சொற்களால் தாம் எடுத்த பொருளை விளக்கி, காரணகாரியத் தொடர்போடு முடித்துக் காட்டுவது. இவர் எழுத்தில் தம் புலமைத் திறத்தைக் காட்ட முற்படுவதில்லை. பின்வரும் பகுதி உதாரணமாகும்.

“பிற நூலாசிரியர் விரித்துக் கூறினாற் போல, அறமும் பொருளும் விரித்துக் கூறாதது என்னையோ வெனின், உலகத்தில் நூல் செய்வார் செய்கின்றது, அறிவிலாதாரை அறிவு கொளுத்த வேண்டியன்றே; யாதானும் ஒரு நூல் விரித்தோதிய பொருளைத் தாமும் விரித்தோதுவராயின் ஓதுகின்றதனாற் பயனின்றாம் ஆதலால், முன்னூலாசிரியர் விரித்துக் கூறினபொருளைத் தொகுத்துக் கூறலும், தொகுத்துக் கூறின பொருளை விரித்துக் கூறலும் நூல் செய்வார் செய்யும் மரபு என்றுணர்க. அஃதேல், இந்நூலகத்து விரித்துக் கூறிய பொருள் யாதெனின், காமப் பகுதியும் வீரப்பகுதியும் என்க. இன்பம் காரணமாகப் பொருள் தேடுமாகலானும், பொருளானே அறஞ் செய்யுமாகலானும், இன்பமும் பொருளும் ஏற்றமென ஓதினார் எனவுணர்க.”

• மற்றோர் எடுத்துக் காட்டு: “காமக் கிழத்தியராவார் பின் முறையாக்கிய கிழத்தியர். அவர் மூவகைப்படுவர். ஒத்த கிழத்தி

யரும் இழிந்த கிழத்தியரும் வரையப்பட்டாரும் என. ஒத்த கிழத்தியர் - முந்துற்ற மனையாளன்றிக் காமப் பொருளாகப் பின்னுந் தன் குலத்துள்ளாள் ஒருத்தியை வரைதல். இழிந்தா ராவார் - அந்தணர்க்கு அரச குலத்தினும் வணிக குலத்திலும் வேளாண் குலத்திலும் கொடுக்கப்பட்டாரும், அரசர்க்கு ஏனையிரண்டு குலத்தினுங் கொடுக்கப்பட்டாரும், வணிகர்க்கு வேளாண் குலத்திற் கொடுக்கப்பட்டாரும். வரையப்பட்டார் - செல்வராயினார் கணிகைக் குலத்தினுள்ளார்க்கு இற்கிழமை கொடுத்து வரைந்து கோடல். அவர், கன்னியில் வரையப்பட் டாரும் அதன்பின்பு வரையப்பட்டாரும் என இருவகையர். அவ்விருவரும் உரிமை பூண்டமையாற் காமக் கிழத்தியர் பாற் பட்டனர். பரத்தையராவார் யாரெனின், அவர் ஆடலும் பாட லும் வல்லராகி, அழகும் இளமையுங் காட்டி, இன்பமும் பொருளும் வெஃகி, ஒருவர் மாட்டுந் தங்காதார். இவருள்ளும் ஒருவரைப் பற்றி மறுதலைப் பெண்டிரைச் சார்த்திக் கூறுவன வும் காமக்கிழத்தியர் கூற்றின் பாற்படும். இவற்றின் வேறுபாடு அவரவர் கூற்றானறிக. இச்சூத்திரத்திற் காமக் கிழத்தியென ஓதாது 'கிழத்தியர்' என ஓதுதலானும் பல வகையார் என்பது கொள்க."

இவற்றால், எடுத்த பொருளை நன்கு விளக்கும் இவரது உரையியல்பும் அதற்கேற்ற தெளிந்த எளிமை பொருந்திய நடையும் புலப்படும்.

## சிலப்பதிகார அரும்பதவுரையாசிரியர்

நமக்குக் கிடைத்திருப்பது இவருடைய உரையன்று, உரைக் குறிப்புக்கள் மட்டுமே என்று கருத வேண்டும். இவையே மிக வும் சிறப்புடையவை யாயிருத்தலால், இவரைக் குறித்துத் தனியே பேசுகிறோம். கிடைத்த பகுதிகளைக் கொண்டு சொல் லும் போது, இவரும் எளிய நடையில் கருத்தை விளக்குவது ஒன்றே நோக்கமாய்க் கொண்டாரேயன்றி, அழகுபடுத்த வேண்டும், புலமைக்கு விளக்கமாக வேண்டும் என்று கருதினா ரில்லை என்பது நன்கு தெரிகிறது. பின்வரும் எடுத்துக் காட்டுக் களைக் காண்க:

"உறையூர் ...... யானையைக் கோழி முருக்கலால் கோழி யென்று பெயராயிற்று. யானையைச் சயித்த கோழி தோன்றின

விடம் வலியுடைத்தென்று கருதி அவ்விடத்து அதன் பெயராலே சோழன் ஊர் காண்கின்ற பொழுது சிறையும் கழுத்துமாக ஆக்கிய வதனால், புறம்பே சிறையையுடைய கோழியென்றாயிற்று."

"உம்மையிற் செவ்விய மனமில்லாத தோர்க்கு அக்காலத்துச் செய்த வினை வந்து பலிக்குங் காலத்து முன்பு செய்த நல்வினை யாதும் உதவாது; இத்தீவினை வந்து கெடுப்பதற்கு முன்னே வந்துதவுதல் பின்புதவுதல் செய்யுமித்தனை; அந்நல்வினையும் உதவாமற் போகாது; பாவமானதும் தனியே அனுபவிக்க வேண்டும்."

**யாப்பருங்கல விருத்தியுரையாசிரியர்**

இவர் எண்ணற்ற யாப்பு விகற்பங்களை விளக்க முற் பட்டமையால், அளவில்லாத மேற்கோளை எடுத்துப் பெய் கிறார். இலக்கணச் செய்திகளைத் தெளிவு படுத்தியும் பொருத்தி யும் உரைப்பதே இவர் நோக்கம். ஆதலால் இவர் உரையில் நடை என்பதைக் காண்பது அரிது எனினும் பின்வரும் எடுத்துக் காட்டுக்கள் காண்க:

"ஆனந்தப்பையுள் என்பதும் ஒன்றுண்டு அஃதாவது, களவினுளாயினும் கற்பினுளாயினும் தலைவனுந் தலைவியுந் தம்மிற்பிரிவாற்றாது கையறு துயரமொடு காட்சிக்கு அவாவி, மெய்மெலிவுற்று அழிவுழி யிரங்கிப் பாட்டுடைத் தலைவனது நாடானும் ஊரானுங் குறித்து அவனூர் மேல் அன்றில் ஏங்கினும், குயில் கூவினும், ஆயர் குழலிசை கேட்பினும், ஏற்றின் மணிக்குரல் கேட்பினும், அவனாடு சூழ்ந்து கிடந்து அவளேங்கினும், என்னுயிர் கழியும் என்று இவ்வாறு கூறினும், அவனூரனையாள் நாடனையாள் உயிர் கழிகின்ற தெனினும், பிறவாற்றானும், குணமேம்பட்டன ஊரும் நாடும் பார்த்துச் சார்த்திக் கூறினும், உவப்பினும், அவை ஆனந்தப்பையுள்."

"கவியே கமகன் வாதி வாக்கி யென்றவர் கடன்மையும் என்பது - கவியும், கமகனும், வாதியும், வாக்கியும் என்று இந் நால்வரது தன்மையும் என்றவாறு. அவருள் கவியென்பார் நான்கு வகைப் படுவார் - ஆசுகவியும், மதுரகவியும், சித்திர கவியும், வித்தார கவியும் என. அவரைக் கடுங்கவி, இன்கவி, அருங்கவி, பெருங்கவி என்று வேண்டுவாரும் உளர். ஆசுகவி

யாவான், தொடுத்த பொருளும், தொகுத்த சூழலும், அடுத்த தொடையும் வழுவாமற் கடுத்துப் பாடுவான். மதுர கவியாவான், சொற் செல்வமும் பெருமையும் உடைத்தாய்த் தொடையும் தொடை விகற்பமுந் துதைந்து உருவக முதலாகிய அலங்காரங் களை யுட்கொண்டு ஓசைப் பொலிவுடைத்தாய் உய்த்துணரும் புலவர்கட்கு ஒலிகடலமிழ்தம் போன்று இன்பம் பயக்கப்படு வான். சித்திர கவியாவான், மாலைமாற்று முதலாகிய அருங்கவி பாடும் நன்மையுடையான். வித்தார கவியாவான், மும்மணிக் கோவையும், பன்மணி மாலையும், மறமும், கலிவெண்பாவும், மடலூர்ச்சியும் முதலாகிய நெடும்பாட்டும், கோவையும், பாசண் டமும், கூத்தும், விருத்தமும், கதை முதலாகிய செய்யுளும், இயலிசை நாடகங்களோடுங் கலை நூல்களோடும் பொருந்தப் பாடும் பெருங்கவி எனக்கொள்க" இவரும் எதுகை.மோனை பொருந்த எழுதுகின்றாரென்று இப்பகுதியிலிருந்து விளங்கு கின்றது.

குணசாகரர்

யாப்பருங்கல விருத்தி என்ற பேருரையினால், காரிகை என்ற சிறு நூல் உரைகாரரான இவர் முழுதும் மறைக்கப் பட்டுள்ளார். ஆயினும் அவ்வுரைப் பயிற்சி அருகிப்போய், இவ்வுரையே பயிலப் பெறுவதனால், இவர் பெயரும் ஓரளவு பிரசித்தமாயுள்ளது. இவரும், விருத்தியுரைகாரர் போலவே, மூலத்தை விளக்க மட்டும் நினைக்கிறாரே ஒழிய, உரையை அழகுபடுத்தவோ, தம் புலமையை எடுத்துக் காட்டவோ நினைக்கவில்லை.

ஒரு சிறு எடுத்துக்காட்டு: 'இந் நூலாற் பயன் யாதோ எனின், யாப்பராய்தல் பயன். யாப்பாராயவே, பா, தாழிசை, துறை விருத்தங்களால் ஆக்கப்பட்ட அறம் பொருள் இன்பம் வீடு என்னும் இவற்றின் மெய்ம்மையறிந்து, விழுப்பம் எய்தி, இம்மை மறுமை வழுவாமல் நிகழ்வர். அதனால் இருமைக்கும் உறுதி பயப்பது யாப்பு எனக் கொள்க."

பரிப்பெருமாள்

இவருடைய உரையின் தன்மை முன்னமே நன்கு விளக்கப் பட்டது. இவர் தருக்கரீதியாகவும் கடா விடைகளோடும், கூற்று மறுப்புக்களோடும் எழுதுவார். தம் கருத்து விளங்க வேண்டும்

என்பதற்காக முயன்று தெளிவுபடுத்தி எழுதுவார்; அலங்காரம் செய்யும் வழக்கம் இவரிடம் இல்லை. சில எடுத்துக் காட்டுக் களைக் காணலாம். "மனையாளை அஞ்சித் தாழ்ந்து ஒழுகு வனாயின், அவளைக் கடியும் தன்மை இலன் ஆவன். அதனாலே நல்லார் முன் நாணி நிற்கும். ஆகையால் காம நுகர்ச்சியும் பெறான் என்றது" (903) "அன்பு உடையனாகப் பிறர் வருத்தத் திற்குப் பரிதலும், கலந்து ஒழுகுதலும், கொடுத்தலும் முதலாயின உளவாம். குடிப்பிறப்பினானே பழிப்படுவ செய்யாமையும் புறங்கூறாமையும் முதலாயின உளவாம். ஆதலால் இவ்விரண் டிலேயும் உடைமை பண்புடைமை என்று கூறப்பட்டது" (993).

"குறிப்பறிதலாவது, தலைமகள் உள்ளக் கருத்துத் தலை மகன் அறிதல். இது தலைமகற்கே உரித்து. பெண்டிர் நாண முடையரன்றே! அவரது உள்ளக் கருத்து வெளிப்படுமாறு என்னை யெனின், மேலை அதிகாரத்துத் தலைமகனைக் கண்ட தலைமகள், 'காமம் போல் கண்டார் மகிழ் செய்தல் இன்று' (திருக்குறள் 1090) என்று நினைத்தாளாகக் கூறினாரன்றே; அத னானே கண்ணும் முகமும் வேறுபாடும்; அதனானே அறியலா கும். மனக்குறிப்பு அறிதல் கூறியது எற்றுக்கு? பிறவாற்றானுங் கூடுதற்கு நெறியுளவாலெனின், பிறவாற்றாற் கூடுங்கால், குரவ ராற் கூடின் பெருந்திணையாம்; பொருள் கொடுத்துச் சாரின் அசுரமாம்; வலியிற் சாரின் இராக்கதமாம்; மறவியிற் சாரின் பசாசமாம்; ஆதலின் இக்கூட்டத்துக்குக் குறிப்பறிந்தே புணர வேண்டுதலின் இது கூறப்பட்டது. மேலதனோடு இயைபும் இது. இது தலைமகற்கு உரித்தன்றோவெனின் அவன் வெளிப் பட இரத்தலான் வேண்டா என்க."

### சாசனங்கள்

உண்மையான உரைநடை ஆராய்ச்சிக்குக் கருவியாக இன்று கிடைப்பன சாசனங்கள். இவை புலவர்களால் விரிந்த மெய்க்கீர்த்தியோடு தொடங்கி அமைக்கப்பட்டுள்ளன. ஓரள வுக்கு அன்றைய பேச்சு நடையையும் தழுவி இவை செய்யப் பட்டிருந்தன. படிப்பில்லாத கல்தச்சர் இவற்றைக் கல்லில் பொறித்தபோது எழுத்துப் பிழைகள் ஏற்பட்டன என்பது உண்மை. சிறு பிழைகள் நீக்கி, எடுத்துக் காட்டாகச் சில சாச னங்களைக் கீழே தருகிறோம்.

## இராசராச சோழன் I (985 – 1014)

கோ ராச கேசரி பந்மரான ஸ்ரீ ராஜ ராஜ தேவர்க்கு யாண்டு இருபத்தாறாவது நாள் இருபதினால், உடையார் ஸ்ரீ ராஜ ராஜ தேவர் தஞ்சாவூர்க் கோயிலினுள்ளால், இருமடி சோழனின் கிழைத் திரு மஞ்சன சாலை செய்தருளா விருந்து, பாண்டிய குலாசனி வளநாட்டு, தஞ்சாவூர்க் கூற்றத்துத் தஞ்சாவூர் நாம் எடுப்பிச்ச திருக்கற்றளி ஸ்ரீ ராஜ ராஜீச்வர முடையார்க்கு நாம் கொடுத்தனவும், அக்கன்கொடுத்தனவும், நம் பெண்டுகள் கொடுத்தனவும் மற்றும் கொடுத்தார் கொடுத்தனவும், ஸ்ரீ விமானத்தில் கல்லிலே வெட்டுக என்று திருவாய்மொர்ழிந் தருள, வெட்டின யாண்டு இருபத்தைந்தாவது நாள் முன்னூற் றொருபத்திரண்டினால், உடையார் ஸ்ரீ ராஜ ராஜ தேவர் கொடுத்த ஸ்ரீ பலி எழுந்தருளும் பொன்னின் கொள்கை தேவர் ஒருவர், ஆட வல்லான் என்னும் கல்லால் நிறை எண்ணூற்றிரு பத்தொன்பதின் கழஞ்சே முக்காலே மூன்று மஞ்சாடி.

## இராசேந்திரசோழன் I (1012 – 1044)

கோப் பரகேசரி வன்மரான உடையார் ஸ்ரீ ராஜேந்திர சோழ தேவர்க்கு யாண்டு 24ஆவது ஜனநாதவள நாட்டுக் குறுக்கைக் கூற்றத்து பிரம்மதேயம், திருக்கோவலூர் ஆன ஸ்ரீ மதுராந்தகச் சதுர்வேதி மங்கலத்து, திருவிடைகழி ஆழ்வார்க்கு இவ் ஊர் சபையோம் விற்றுக் கொடுத்த நிலமாவது இவ் ஊர் மேல் வாய்ப்புலத்துக் கொல்லை நிலம் தடி மூன்றினால் கருத்து நிலம் எழுமா வரைக்கும் கீழ்பாற்கு எல்லை, இத்தேவர் தேவ தாநத்துக்கு மேற்கும்; தென்பாற்கு எல்லை பெருந்தூம்பி னின்றும் கிழக்கு நோக்கிப் பாய்ந்த வாய்க்காலுக்கு வடக்கும்; மேல் பாற்கு எல்லை பெருங்களத்துக்குப் பாய்ந்த வாய்க் காலுக்குக் கிழக்கும்; வடபாற்கு எல்லை பெருங்களத்துச் செய்க்கும் இத் தேவ தானத்துக்கும் தெற்கும் - இவ் இசைத்த பெரு நான்கு எல்லைக்கு உட்பட்ட நிலம் மிகுதிக் குறை உள்ளடங்கக் கருத்து நிலம் எழுமா வரை. இந்நிலம் எழுமா வரையும் இத் தேவற்கு விற்றுக் கொடுத்தோம் சபையோம். இந்நிலம் விற்றுக் கொடுத்துக் கொள்ள உடைய விலைத் திரவிய மும் இறை திரவியமும் இத்தேவர் பண்டாரத்தே தேவகன்மி கள் பக்கல் கைச் செல்லக் கொண்டு, இறையிலி விற்றுக் கொடுத்தோம், திருக்கோவலூர் சபையோம். இந்நிலமும் இத் தேவர் பண்டா்ரத்துப் பொன்னிட்டுக் கொண்ட பசு ஆறும்

*கைக் கொண்டு, இத்தேவர் ஐப்பசித் திருநாள் சேவிக்க வந்த ஸ்ரீ வைஷ்ணவருக்கு ஒன்பது நாளும் சோறிடக் கடவோமாகவும். இத் தேவர் பண்டாரத் தேவகன்மிகள் பக்கல் நாங்கள் கொண்ட பொன் பதின் கழஞ்சுக்கு விட்ட நத்தமாவது ...*

## குலோத்துங்க சோழன் I (*1070 – 1120*)

*கோ இராசகேசரிபன்மரான சக்கரவர்த்திகள் ஸ்ரீ குலோத் துங்கசோழ தேவர்க்கு யாண்டு 20 ஆவது -*

*ஆயிரத்தளியான ஆகவ மல்ல குலகால புரத்துக் கோயிலி லுள்ளால், திரு மஞ்சன சாலையில், பள்ளிப்பீடம் காலிங்க ராசனில் எழுந்தருளியிருக்க, கிடாரத்தரையன் கேய மாணிக்க வளநாட்டுப் பட்டணக்கூற்றத்து சோழ குலவல்லி பட்டணத்து எடுப்பித்த ராஜேந்திர சோழப் பெரும் பள்ளிக்கும் ராஜராஜப் பெரும் பள்ளிக்கும், பள்ளிச் சந்தமான ஊர்கள் பழம்படி யந்தராயமும் வீர சேஷையும் பன்மை பண்டை வெட்டியும் குந்தாலியும் சுங்கமேருமும் உள்ளிட்டன வெல்லாம் தவிர்ந் தமைக்கும், முன்பு பள்ளிச் சந்தங்கள் காணியுடைய காணி ஆளரைத் தவிர இப்பள்ளிச் சங்கத்தார்க்கே காணியாகப் பெற் றமைக்கும், தாம்ர சாசனம் பண்ணித் தர வேண்டும் என்று கிடாரத் தரையர் தூதன் ராஜ வித்யாதர ஸ்ரீ சாமந்தனும் அபிமானோத்துங்க ஸ்ரீ சாமந்தனும் விண்ணப்பம் செய்ய, இப்படி சந்தி விக்கரசி ராஜவல்லபப் பல்லவரையனோடுங்கூட இருந்து, தாம்பிர சாசனம் பண்ணிக் குடுக்க என்று அதிகாரிகள் ராஜேந்திர சிங்க மூவேந்த வேளார்க்குத் திருமுகம் ப்ரஸாதஞ் செய்தருளி வரத் தாம்பிர சாசனஞ்செய்தபடி.*

## வீர ராசேந்திர சோழன் (*1063 – 1070*)

*வீரமே துணையாகவும் தியாகமே யணியாகவும் செங்கோ லோச்சிக் கருங்கலி கடிந்து கூடல் சங்கமத்து ஆகமல்லனை அஞ்சுவித்து விக்கலனையும் சிங்கணனையும் உடைபுரங் கண்டு மற்றவன் மாதேவியரோடும் வஸ்து வாகனங் கைக்கொண்டு இரண்டாம் விசையிலும் குறித்த களத்து ஆகவமல்லனை அஞ் சுவித்து வேங்கை நாடு மீட்டுக்கொண்டு தன்னுடன் பிறந்த முன்னவர் விரதமுடித்து மூன்றாம் விசையிலும் சோமேசுவரன் கட்டிய கண்டிகை அவிழ்ப்பதன் முன்னம் கம்பிலி சுட்டுக் கரடிக்கல்லில் செயத் தம்பம் நாட்டித் தேவநாதன் முதல்*

சாமந்தைச் சக்கரக் கோட்டத்துத் துரத்தியவர்கள் உரிய தாரம் பிடித்துக்கொண்டு கன்னக்குச்சி மீட்டு எல்லைகெடாது நிலையிட்டு விசய சிம்மாசனத்து உலக முழுதுடையாளோடும் வீற்றிருந்தருளிய கோ ராச கேசரி வர்மரான உடையார் ஸ்ரீ வீர ராசேந்திரசோழ தேவர்க்கு யாண்டு.

## கொங்குக் கலிமூர்க்க விக்கிரம சோழன் (11 நூ.)

ஸ்வஸ்தி ஸ்ரீ கோக் கலிமூர்க்க ஸ்ரீ விக்கிரம சோழதேவற்குத் திரு வெழுத்திட்டுச் செங்கோலோச்சி, வெள்ளி வெண்குடை மிளிர ஏந்தி, நாடு வளம் படுத்து, நையகுடி ஓம்பி, ஆறில் ஒன்றும் கொண்டு அல்லவை கடிந்து, கோவீற்றிருந்து, குடிபுறங் காத்து, பெற்ற குழவிக்கு உற்ற நற்றாய்போல, திருமிகு சிறப்பிற் செல்லா நின்ற திரு நல்லியாண்டு நாற்பத் தொன்றாவது: வட கரைத் திருக் கழுமலநாட்டு, நந்திய நல்லூருடையான் வீரசங் காதன் சூற்றிய தேவன் வானவன் உத்தர மந்திரியான நாநா தேசிய நாட்டுச் செட்டிபக்கல், தென்கரை நாட்டு பிரம்ம தேயம் ஸ்ரீ வீரசங்காத சதுர்வேதி மங்கலத்து ஸபையோம். இவர் பக்கல் கொண்ட பொன் பரகேசரிக்கல்லால், துளை நிறைச் செம்பொன் ஐம்பத்தைங் கழஞ்சு. இப் பொன் ஐம்பத் தைங் கழஞ்சினால் வந்த அளவாய் செல, கார் பசானம் ஆண் டெடுத்து, நூற்றொருபதின் கலமும் கொண்டு, திருவலஞ்சுழி பரமேச்வரர் கோயிலிலே, பிராம்மணர்க்கு உண்ண வைச்ச கலம் மூன்றுக்கு, நிசதம் பரகேசரிக்காலால் குறுணியாக மூன்று கலத்துக்கும் நிச்சம் மூன்று குறுணியால் நெல் ஆட்டெடுத்துத் தொண்ணூற்றுக் கலமும், நிச்சம் அடும் பிராம்மணனுக்கு நிச்சம் பரகேசரி அஞ்ஞாழியால் ஆண்டெடுத்து பதினெண் கலனே இருதூணிக் குறுணியும், ஆட்டொரு புடவைக்கு நெல்கலனே முக்குறுணியுமாக, நெல் நூற்றொருபதின் கலத் தாலும், இக்கலம் மூன்றுக்கும் கும்மாய முள்ளிட்டு, மூன்று கரியும் ஒரு கலத்துக்கு காணத்தால் அரை ....ம் ஒரு பிடி அரை நெய்யும் கிழாநம் பேரால் இரண்டு பாக்கும் அஞ்சு வெற்றிலை யும், இப்படி சந்திராதித்தியவத் நிற்க மூன்று கலமும் ஊட்டுவ தானோம், ஸபையோம், வானவன் உத்தர மந்திரியார்க்கு. தர்மம் ரக்ஷிப்பான் ஸ்ரீபாதம் என் தலை மேலே. இது பந் மாஹேச்வர ரக்ஷை.

○○○

# ஆதார நூல்கள்

## அத்தியாயம்

1. கல்லாடம்: திருவள்ளுவ மாலை: சரவணப் பெருமாள் ஐயர் உரை 1860.

2. திருக்குறள் உரைகள்: தி.பொ. பழனியப்பப்பிள்ளை பதிப்புக்கள். தருமபுரம், தண்டபாணி தேசிகர் திருக்குறள் உரை வளம் 1957. திருக்குறள் உரைக்கொத்து, காசிமடம், மூன்று பாகம் 1957, 1960, 1958. திருமுருகாற்றுப்படை உரைக்கொத்து, காசிமடம் 1959

3. யாப்பருங்கலம் மூலமும் விருத்தியுரையும் பவானந்தம் பிள்ளை, இரண்டு பாகம் 1916. வீரசோழியம்.

4. யாப்பருங்கல விருத்தியுரை 1916. யாப்பருங்கலக் காரிகை.

5. தொல்காப்பியம் இளம்பூரணம்: எழுத்து சொல்: வ.உ. சிதம்பரம் பிள்ளை, கா. நமசிவாய முதலியார், கு. சுந்தரமூர்த்தி பதிப்புக்கள். பொருள்: வ.உ. சிதம்பரம் பிள்ளை பதிப்பு 1928, 1936; தொல் காப்பிய உரைகள், செந்தமிழ் 1922, 1945.

6-7. ஒன்பதாந் திருமுறை - சமாஜப் பதிப்புக்கள், காசி மடத்துப் பதிப்பு. கருவூர்த்தேவர்: சி.கே. சுப்பிரமணிய முதலியார். பன்னிரு திருமுறை வரலாறு II: க. வெள்ளை வாரணனார், அண்ணாமலைப் பல்கலைக் கழகம், 1969.

8. குருபரம்பரை நூல்கள் - 13ஆம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கிய வரலாறு.

9. ஒட்டக்கூத்தர் உலாக்கள், வீரசோழியவுரை, கலிங்கத்துப் பரணி.

10. களவியல்: மதுரைத் தமிழ் சங்கம், ரா. ராகவ ஐயங்கார் பதிப்பு 1920.

## பிற நூல்கள்

ஐயரவர்கள் பதிப்புக்கள்; மு. ராகவையங்கார் தொகுத்த பெருந் தொகை, எழுதிய ஆராய்ச்சித் தொகுதி, சாசனத் தமிழ்க்கவி சரிதம்; பேரறிஞர் தஞ்சை சீனிவாசப் பிள்ளை எழுதிய தமிழ் வரலாறு, இரு பாகங்கள்; மு.வை. அரவிந்தன்: உரையாசிரியர்கள், 1968.

ooo

## தொல்காப்பிய உரைப் பதிப்புக்கள்

| எண் | அதிகாரம் | இயல் தொகை | உரையாசிரியர் | காலம் நூற்றாண்டு | பகுதி | பதிப்பித்தோர் | பதிப்பு ஆண்டு |
|---|---|---|---|---|---|---|---|
| 1 | எழுத்து அதிகாரம் | 9 | இளம்பூரணர் | 11 | முழுமையும் | சுப்பராயச் செட்டியார் | 1868 |
| | | | | | முழுமையும் | வ. உ. சிதம்பரம் பிள்ளை | 1928 |
| | | | | | முழுமையும் | சை. சி. கழகம் | 1955 |
| | | | | | முழுமையும் | கு. சுந்தரமூர்த்தி | 1969 |
| | | 9 | நச்சினார்க்கினியர் | 14 | முழுமையும் | மழவை மகாலிங்கையர் | 1849 |
| | | | | | | தாமோதரம் பிள்ளை | 1901 |
| | | | | | | கனகசுந்தரம் பிள்ளை | 1929 |
| | | | | | | கணேசையர் | 1937 |
| | | | | | | கழகம் | 1944 |
| | | | | | | கு. சுந்தரமூர்த்தி | 1965 |
| | | | | | | தஞ்சை சரசுவதி மகால் | 1967 |
| 2 | சொல் அதிகாரம் | 9 | இளம்பூரணர் | 11 | முழுமையும் | கா. நமசிவாய முதலியார் | 1924 |
| | | | | | முழுமையும் | கு. சுந்தரமூர்த்தி | 1963 |
| | | | சேனாவரையர் | 13 | முழுமையும் | ராசகோபாலப் பிள்ளை | 1868 |
| | | | | | முழுமையும் | தாமோதரம் பிள்ளை | 1886 |
| | | | | | முழுமையும் | கழகம் | 1923 |

| எண் | அதிகாரம் | இயல் தொகை | உரையாசிரியர் | காலம் நூற்றாண்டு | பகுதி | பதிப்பித்தோர் | பதிப்பு ஆண்டு |
|---|---|---|---|---|---|---|---|
| | | | | | முழுமையும் | கணேசையர் | 1938 |
| | | | | | முழுமையும் | கு. சுந்தரமூர்த்தி | 1966 |
| | | | நச்சினார்க்கினியர் | 14 | முழுமையும் | பவானந்தர் கழகம் | 1941 |
| | | | | | | கழகம் | 1962 |
| | | | | | | தஞ்சை சரசுவதி மகால் | 1962 |
| | | | கல்லாடர் | 15 | இயல் 1-6 அடுத்த இடையியல் 10 சூ. வரை | கு. சுந்தரமூர்த்தி | 1964 |
| | | | வேறுரை | 15 | இயல் 1-3 | கு. சுந்தர மூர்த்தி | 1964 |
| | | | தெய்வச்சிலையார் | 15 | முழுமையும் | கரந்தைத் தமிழ்ச்சங்கம் | 1929 |
| | | | | | முழுமையும் | கு. சுந்தரமூர்த்தி | 1963 |
| 3 | பொருளதிகாரம் | 9 | இளம்பூரணர் | 11 | இயல் 1-2 | நமசிவாய முதலியார் | 1920 |
| | | | | | முழுமையும் | வ.உ. சிதம்பரம் பிள்ளை | |
| | | | | | இயல் 1-2 | வ.உ. சிதம்பரம் பிள்ளை | 1928 |
| | | | | | இயல் 3-9 | வ. உ. சிதம்பரம் பிள்ளை | 1936 |
| | | | | | முழுமையும் | சைவ. சி. கழகம் | 1953 |

| எண் | அதிகாரம் | இயல் தொகை | உரையாசிரியர் | காலம் நூற்றாண்டு | பகுதி | பதிப்பித்தோர் | பதிப்பு ஆண்டு |
|---|---|---|---|---|---|---|---|
| | | | நச்சினார்க்கினியர் | 14 | இயல் 1 - 5 மட்டும் | தாமோதரம் பிள்ளை | 1885 |
| | | | | | 1 - 5 | பவானந்தம் பிள்ளை | 1916 |
| | | | | | 1 - 5 | கனக சபாபதிப் பிள்ளை | 1934 |
| | | | | | 1 - 5 | கழகம் | 1947 |
| | | | | | 1 - 5 | கணேசையர் | 1948 |
| | | | | | இயல் 8 செய்யுளியல் மட்டும் | ரா.ராகவையங்கார் | 1917 |
| | | | பேராசிரியர் | 13 | இயல் 6 - 9 | தாமோதரம் பிள்ளை | 1885 |
| | | | | | | பவானந்தம் பிள்ளை | 1917 |
| | | | | | | கனக சபாபதிப் பிள்ளை | 1935 |
| | | | | | | கழகம் | 1951 |
| | | | | | | கணேசையர் | 1948 |
| | பொதுப் பாயிரம் | | ஆத்திரையன் பேராசிரியன் | 10 | - | சதாசிவ பண்டாரத்தார் | 1923 |

**சோழ அரசர் பரம்பரை : 9 - 11 நூற்றாண்டுகள்**

1. பரகேசரி விஜயாலய சோழன் 845 - 881

2. இராசகேசரி ஆதித்த சோழன் 871 - 907

3. பரகேசரி பராந்தக சோழன் I 907 - 953 | கன்னரதேவன்

* இராசாதித்தன் | 4. இராசகேசரி கண்டராதித்தன் 950 - 957 | 5. பரகேசரி அரிஞ்சயன் 957

7. பரகேசரி உத்தம சோழன் 970 - 985 | 6. இராசகேசரி பராந்தகன் II என்னும் சுந்தர சோழன் 957 - 970

* பரகேசரி ஆதித்த கரிகாலன் | குந்தவை I | 8. இராசகேசரி இராசராசன் I 985 - 1014

9. பரகேசரி இராசேந்திரன் I (கங்கைகொண்டசோழன்) 1012 - 114 | குந்தவை II

10. இராசகேசரி இராசாதிராசன் II 1018 - 54 | 11. பரகேசரி இராசேந்திரன் II 1053 - 63 | *இராச மகேந்திரன் | 12. இராசகேசரி வீரராசேந்திரன் 1063 - 70 | அம்மங்காதேவி

13. பரகேசரி அதிராசேந்திரன் 1070 | 14. இராசகேசரி குலோத்துங்கன் I 1070 - 1120

குறிப்பு: சதாசிவப் பண்டாரத்தார் சோழர் வரலாறு I பார்க்க

* பட்டத்துக்கு வராமல் இறந்த அரசகுமாரர்.

1 - 14 முறையாக முடிசூடி ஆட்சி புரிந்த அரசர் வரிசை.

## ஸ்ரீ வை ணவ ஆசாரிய பரம்பரை

ஸ்ரீய: பதியான பெரிய பெருமாள்

|

பெரிய பிராட்டியார்

|

சேனை முதலிகள்

|

**நம்மாழ்வார்**

(மதுரகவியாழ்வார், பராங்குதாசர்)

|

**நாதமுனிகள் (9 நூ.)**

|

உய்யக் கொண்டார் (10 நூ.)

|

மணக்கால் நம்பி (10 நூ.)

|

யமுனைத் துறைவர் என்னும் ஆளவந்தார் (10 - 11 நூ.)

|

சீடர் ஐவர்; திருக்கோட்டியூர் நம்பி, திருமாலையாண்டான், பெரிய நம்பி, பெரிய திருமலைநம்பி, திருவரங்கப் பெருமாளரையர் - ஐவரிடமும் சீடரானார் எம்பெருமானார் என்னும் **இராமானுசர்** 1017 - 1137

|

சீடர் பலர்: எம்பார், கூரத்தாழ்வார், திருக்குருகைப்பிரான் பிள்ளான், முதலியாண்டான், அருளாளப் பெருமாள் எம்பெருமானார், கிடாம்பி யாச்சான் முதலானோர். ஆசாரிய பரம்பரை வருவது எம்பார் வழி.

**தென் கலையார் பரம்பரை**

இராமானுசர்

|

எம்பார் (11 - 12)

|

பட்டர் (12)

|

நஞ்சீயர் (12 - 13)

|

நம்பிள்ளை (12 - 13)

|

வடக்குத் திருவீதிப் பிள்ளை (12 - 13)

|

**பிள்ளை லோகாசாரியர்** (13 - 14)

|

திருவாய்மொழிப் பிள்ளை 14

|

**மணவாள மாமுனி** (14 - 15)

இந்த அட்டவணையில் எல்லாச் சீடர்களையும் எல்லாத் தொடர்புகளையும் காட்டவில்லை. ஆசாரியத் தொடர்பு ஒன்றை மட்டுமே காட்டினோம். நாதமுனிகளின் பெயரர் ஆள வந்தார். வடக்குத் திருவீதிப் பிள்ளையின் புதல்வர் பிள்ளை லோகாசாரியர். ஏனையோர் உறவுகள் குரு சிஷ்ய பரம்பரை. பிள்ளை லோகாசாரியர் தொடங்கி, வைஷ்ணவ பரம்பரை தென்கலை வடகலை என இரு பிரிவாகப் பிரிந்து விடுகிறது. மேலே காட்டியது தென்கலை வரலாறு.

**வடகலையார் பரம்பரை**

**இராமானுசர்**

|

*திருக்குருகைப்பிரான் பிள்ளான்*
*(இவர் இராமானுசரின் ஆசாரியரான பெரிய திருமலை நம்பியின் புதல்வர்)*

|

*எங்களாழ்வான்*

|

*நடாதூரம்மாள்*
*(இவர் இராமனுசர் சீடரான நடாதூரம்மாள் பெயரர்)*

|

*சுருதப் பிரகாசிகா பட்டர்*

|

*கிடாம்பி அப்புள்ளான்*

|

**தூப்புல் பிள்ளை என்னும் வேதாந்த தேசிகர்**

வேதாந்த தேசிகர் தொடங்கி வடகலை தனியாகப் பிரிந்து வளர்ந்தது. இவரும் தென்கலை ஆசாரியரான பிள்ளை லோகா சாரியரும் சமகாலத்தவரென்பர்.

இவ்வாசாரியர்களையும் இவர்கள் செய்த நூல்களையும் இவர்கள் காலத்தையும் இங்கு விளக்கிக் காட்டுவதானால் மிக விரியும்; உரியவற்றை நூலகத்துக் காண்க.

○○○

## ஆசிரியர் பெயர் - கால அட்டவணை

| எண் | ஆசிரியர் | நூல் | உடன் காலத்தவர் | காலம் | பக்கம் |
|---|---|---|---|---|---|
| 1. | அமிதசாகரர் | யாப்பருங்கலம், காரிகை | விருத்திகாரர், குணசாகரர் | 1000 - 15 | 78 |
| 2. | இளம்பூரணர் | தொல்காப்பிய உரை | | 1070 - 95 | 161 |
| 3. | இராமானுசர் | | | 1017 - 1037 | 279 |
| 4. | இராசராசேசுவர நாடக ஆசிரியர் | இராசராசேசுவர நாடகம் | இராசராசன் | 1010 | 314 |
| 5. | கருவூர்த்தேவர் | திருவிசைப்பாப் பதிகம் பத்து | இராசராசன் I<br>கங்கைகொண்ட சோழன்<br>நம்பியாண்டார் நம்பி | 1000 - 1040 | 215 |
| 6. | கல்லாடர் | கல்லாடம் | திருவள்ளுமாலையாசிரியர் | 1050 | 2 |
| 7. | கவிகுமுத சந்திர பண்டிதன் | குலோத்துங்க சோழ சரிதை | குலோத்துங்கன் I | 1095 | 316 |
| 8. | குணசாகரர் | யாப்பருங்கலக்காரிகையுரை | அமிதசாகரர் | 1015 - 1040 | 153 |
| 9. | | கூடல் சங்கமத்துப் பரணி | வீரராசேந்திரன் | 1065 | 307 |
| 10. | | கொப்பத்துப் பரணி | இராசேந்திரன் II | 1055 | 304 |
| 11. | சிலப்பதிகார அரும்பதவுரையாசிரியர் | | | 1025 | 37 |
| 12. | சேதிராயர் | திருவிசைப்பா | நம்பியாண்டார் நம்பி | 1010 - 1030 | 213 |
| 13. | திருக்கச்சி நம்பி | தனியன் | இராமானுசர் | 1050 | 275 |

| எண் | ஆசிரியர் | நூல் | உடன் காலத்தவர் | காலம் | பக்கம் |
|---|---|---|---|---|---|
| 14. | திருவள்ளுவ மாலையாசிரியர் | திருவள்ளுவமாலை | கல்லாடர் | 1050 | 17 |
| 15. | நம்பியாண்டார் நம்பி | ஆளுடைய பிள்ளையார் பிரபந்தங்கள் முதலிய பத்து. | இராசராசன் I. திருவிசைப்பா ஆசிரியர் | 1000 - 1040 | 238 |
| 16. | நாராயாணன் பட்டாதித்தன் | இராசராச விசயம் | இராசராசன் I | 1010 | 314 |
| 17. | பரிப்பெருமாள் | திருக்குறள் உரை | | 1050 - 75 | 57 |
| 18. | புத்தமித்திரனார் | வீரசோழியம் | வீர ராசேந்திரன் | 1060 - 75 | 90 |
| 19. | புருடோத்தம நம்பி | திருவிசைப்பா | நம்பியாண்டார் நம்பி | 1020 | 211 |
| 20. | பூங்கோயில் நம்பி | வீரணுக்கவிசயம் | வீர ராசேந்திரன் | 1070 | 315 |
| 21. | பூந்துருத்தி நம்பி காட நம்பி | திருவிசைப்பா | நம்பியாண்டார் நம்பி | 1030 | 206 |
| 22. | பொன்னவன் | கனா நூல் | | 1050 | 310 |
| 23. | மருதத்தூருடையான் குன்றன் திருச்சிற்றம்பல முடையான் | கவிதை | குலோத்துங்கன் I | 1083 | 315 |
| 24. | யாப்பருங்கல விருத்தியுரையாசிரியர் | யாப்பருங்கலவிருத்தி | அமிதசாகரர், குணசாகரர் | 1015 - 40 | 99 |

## ஆசிரியர் கால ஒப்புமை அட்டவணை

| காலம் | இலக்கியம் இலக்கணம் உரை | சைவம் | வைணம் | பிற |
|---|---|---|---|---|
| 1000 - 1025 | யாப்பருங்கலம் | | | இராசராசேசுவர |
| | யாப்பருங்கலக் காரிகை | சேதிராயர் | | நாடகம் |
| | | பூந்துருத்தி | | ஓவிய நூல் |
| | | நம்பி காட நம்பி | | |
| | யாப்பருங்கல விருத்தி | புருடோத்தம நம்பி | | |
| | சிலப்பதிகார அரும்பதவுரை | | | |
| 1025 - 1050 | யாப்பருங்கலக் காரிகையுரை | கருவூர்த் தேவர் | | கனா நூல் |
| | | நம்பியாண்டார் நம்பி | | |
| 1059 - 1075 | கல்லாடம் | | திருக்கச்சிநம்பி | கொப்பத்துப்பரணி, |
| | திருவள்ளுவ மாலை | | | கூடல் சங்கமத்துப் |
| | பரிப்பெருமாள் | | | பரணி |
| | புத்தமித்திரனார் | | | |
| 1075 - 1100 | இளம்பூரணர் | | இராமானுசர் | |

## மேற்கோள் செய்யுள் அகராதி

○○○

# பொருள் அகராதி

○○○

## சொல்லாட்சியும் பொருளும்

○○○

## சிறப்புப் பெயர் அகராதி

○○○



நூலகத்துப் பலவிடத்தும்,
வரலாற்றறிவுக்கும்
நூலறிவுக்கும்
இலக்கியவுணர்வுக்கும்
அவசியமான
அனேகம் பாடல்களைப்
பயன் கருதிச் சேர்த்திருக்கிறோம்.
கால ஆராய்ச்சி என்பது
ஒரு வறண்ட முயற்சி என்று
பலர் நினைப்பதற்கு மாறாக,
அது சுவையும் உணர்வும் ததும்பும்
ஒரு சிறந்த தனியுலகு
என்று காட்டும் ஒரு சிறு பலகணியாக
இவற்றைக் கருதலாம்.
காலத்தில்
பின்நோக்கிச் செல்லச்செல்ல,
கால விளக்கம் பெறாத பகுதிகள்
இதனுள்ளும் பல உள்ளன.
இழந்துபோன பழந்தமிழ் நூல்கள்,
பல துறைகளுக்குரியவை,
எத்துணை அதிகம் என்பதையும்
இங்கு காண்கிறோம்.



The PARKAR